63

உ

சிவமயம்

ஸ்ரீ அப்பய்யதீக்ஷிதரவர்களால்

வடமொழியில் செய்யப்பட்டதும்

அதற்கு

கிருஷ்ணானந்ததீர்த்தர்

என்னும் சுவாமிகளால்

செய்யப்பட்ட வியாக்கியானத்தோடு

கூடியதுமான

# வேதாந்த சித்தாந்த லேச சங்கிரகம்

என்னும் இந்நூலானது

கோவிலூர் மடாலயம் ஸ்ரீ சாலிவாடீஸ்வரீ பீடம்

ஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிகர்

அவர்களின் மாணாக்கரும்

வேதாரண்யம் புனவாசல் மடங்களின்

தலைவருமான

மஹேஸ்வரானந்தகிரி சுவாமிகளால்

தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு

சென்னை முத்தமிழ்ச் செல்வி அச்சகத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1964

[ காபிரைட் ரிஜிஸ்டர் ]




விலை ரூ. 3-00

(63)

உ

சிவமயம்

ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரவர்களால்

வடமொழியில் செய்யப்பட்டதும்

அதற்கு

கிருஷ்ணானந்ததீர்த்தர்

என்னும் சுவாமிகளால்

செய்யப்பட்ட வியாக்கியானத்தோடு

கூடியதுமான

# வேதாந்த சித்தாந்த லேச சங்கிரகம்

என்னும் இந்நூலானது

கோவிலூர் மடாலயம் ஸ்ரீ சாலிவாடீஸ்வரி பீடம்

ஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிகர்

அவர்களின் மாணாக்கரும்

வேதாரண்யம் புனவாசல் மடங்களின்

தலைவருமான

மஹேஸ்வரானந்தகிரி சுவாமிகளால்

தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு

சென்னை முத்தமிழ்ச் செல்வி அச்சகத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1964

[ காபிரைட் ரிஜிஸ்டர் ]




விலை ரூ. 3-00



ஸ்ரீ அண்ணுமலை ஞான தேசிக சுவாமிகள்
ஆருவது சன்னிதானம்,
கோவிலூர் மடாலயம்.



ஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள்
ஏழாவது சன்னிதானம்,
கோவிலூர் மடாலயம்.

உ

சிவமயம்

திருப்பூவணம் வேதாந்த மடம்,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்.

# முகவுரை

சீரும் சிறப்பும் மிக்த பூலோகத்தில், வட ஆற்காடு ஜில்லா வில், ஆரணியிலிருந்து வேலூர் செல்லும் மார்க்கத்தில், அடையப்பலன் என்று ஒரு ஊர் இருக்கிறது. அந்த ஊரில் இற்றைக்கு முந்நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர் அதாவது கி. பி. 1600-ம் ஆண்டில் பிராமண குலத்தில் அப்பய்ய தீக்ஷிதர் தோன்றினர். கல்வி அறிவு அற்றவராக இருந்தார். மதினியார் வார்த்தையின் வியாஜமாகக், காசிப்பதியை அடைந்து, சம்ஸ்கிருத வித்தையில் ஷட்தெரிசந வேத்தாவானர். அதனோடு சகுணப் பிரஹ்ம சிவார்ச்சநா பரருமாக இருந்தார். சிவாத்வைத ஐக்கியவாத சைவாசாரம் உடையவராக விளங்கினர். சிவரஹ்ஸ்யம் நவம அம்சத்தில், "சிவ அவதாரமாக தீக்ஷிதர் என்னும் பெயருடன் அவதரித்து சைவ சாஸ்திரங்களை வெளியிடுவார்" என்று கூறும் பெருமையுடையவர்.

அவரோஹணக் கிரமப்படியே, ஆரோஹணம் ஆகும் என்பார். அதாவது, மகாகாசம், மடாகாசம், கடாகாசம், ஜலாகாசம் என உண்டாய், ஜலாகாசம், கட. ஆகாசத்திலும், கடாகாசம், மட ஆகாசத்திலும், மட ஆகாசம், மகா ஆகாசத்திலும் கிரமமாக விலீநம் ஆகும் என்று சொல்லுவார். ஜல ஆகாசம் நேரே மட ஆகாசத்திலும், கட ஆகாசம் நேரே மகா ஆகாசத்திலும் ஐக்கியம் ஆகாது என்பார்.

கிரஹஸ்தம் சந்யாசம் என இரண்டு மார்க்கம்போல், ரிஜு-மார்க்கம், குடில-மார்க்கம் என இரண்டும் இருப்ப ஒன்றையே அங்கரீகரிப்பவர்.

சம்ஸ்கிருத பாஷையில், நூலும், நூலும் உரையும், உரையும், ஆக 104 கிரந்தங்கள் அதி அத்புதமாகச் செய்தவர். நடராஜ உபாசகர். ஷட் தெரிசந சம்பந்தமாக பல சாஸ்திரங்கள்

இயற்றி யிருக்கின்ருர். சிதம்பர க்ஷேத்திரத்தில் பிகுதியாக வாசஞ் செய்தவர். மதுரையில், மந்திரியாக இருந்து, சிவ லீலார்ணவ முதலிய பல சம்ஸ்கிருத நூல்கள் இயற்றிய நீல கண்ட தீக்ஷிதர் தகப்பனர் உடன்பிறந்த இளைஞர், நீணள் தூல சரீரத்தோடு விளங்கியவர்.

வித்யாரண்ய சுவாமிகள் சம்ஸ்கிருதத்தில், சர்வ தெரிசந சங்க்ரகம் இயற்றியது போன்றே, இவ்வளவு பெருமைவாய்ந்த அப்பய்ய தீக்ஷிதரும், சிந்தாந்த லேச சங்க்ரகம் என ஒரு நூலை சம்ஸ்கிருதத்தில், பல மதங்களையும் அவலோடனம் பண்ணி அதியத்புதமாக எழுதினர்கள்.

அந்நூலுக்கு, ஸ்ரீ மத் பரம ஹம்ஸ பரிவி ராஜகாசாரிய கிருஷ்ண நந்த-தீர்த்தரென்னும் சுவாமிகளால் கிருஷ்ணலங்கார மென ஓர் விரிவான உரையியற்றி யிருக்கின்ருர்கள்.

இந்த சம்ஸ்க்ருத நூலை ஆதாரமாகக்கொண்டே, ஸ்ரீ சதா சிவப்ரஹ்மேந்த்ர சரஸ்வதிகள் (சித்தாந்த லேச சார சங்க்ரக) மென்று ஐம்பத்தாறு மதவிசார ரூபமாக ஒரு நூல் செய்திருக் கின்ருர்களென்ருல் இதன் பெருமை சொல்லாமலே விளங்கும்.

இந்த நூலையும், உரையினையும், புனல்வாசல் மடம், வேதா ரண்ய மடம் அதிபதியும், கோவிலூர் மடாதிபதி, ஸ்ரீ அண்ண மலை ஞான தேசிகரவர்கள் மாணக்கரும், பஞ்சதசி, தமிழுரை யாசிரியருமாகிய, மகேஸ்வரானந்தகிரி சுவாமிகள், தமிழில் மொழி பெயர்த்து அச்சிட்டிருக்கின்ருர்கள்.

ஆனதால், இந்நூலை யறிஞர்கள் யாவரும் ஆதரித்து, மதங் களுடைய கடல் முடியை யுணர தெப்பம் போலும், தோணி போலும், கருதிக் கைக்கொள்ள வேண்டுமென்று விரும்பு கின்றனம்.

(பொங்கு மங்களம் எங்குந் தங்குக)

சிவமயம்

## திருப்பூவணம் வேதாந்த மடம்.

## காசிகாநந்த ஞாநச் சார்ய ஸ்வாமிகளால் இயற்றப்பட்ட

### சாற்றுக்கவி.

ஆரியரா மப்பய்ய தீக்ஷிதரென் பேர்நல்
அடையப்ப லன்னூரி லவதரித்தே,
ஆரியத்து ளிரண்டைம்பத் திரண்டரிய நூல்கள்
அதிகாரி களுக்காக ஆக்கு வித்துப்,
பேரிசையைச் சிவாத்வைதி யெனவே தோன்றிப்
பெருமையுட னீணாள்வீற்றிருந்து மேன்மை,
தேர்வரிய சித்தாந்த லேசசங் கிரகஞ்
செய்தனர்நூ லொன்றதற்குச் செவ்விதாக. (1)

அந்நூற்கச் சுதகிருஷ்ண நந்த ரென்பேர்
அரியவுரை யொன்றுமிக வழகாய்ச் செய்தார்,
இந்நிலத்தோர் கிருஷ்ணலங் கார மென்றே
யிசைப்பரதன் பெயருமே யினிமை யாக,
தந்நிலைமை தனை நன்கு யுணரு மாறு
தக்கபிர மாணமுடன் சமைத்தான் போற்ற,
எந்நிலையு மில்லாத பிரம மாக
விலங்கியவன் பெருமைதனை யிசைக்கலாமோ. (2)

அதுதனையு முரையினையு மறிந்து போற்றும்
ஆற்றலிலார் தமிழ் மொழியில் உணரு மாறு,
நதிபுனவா சல்மடத்தும் நல்வேதா ரணியத்தும்
நலமாக வாழ்ந்தரிய ஞான மிக்கோன்,
நிதி கொண்மகேஸ் வரா நந்தப் பெயரும் பெற்றோன்
நிலமிசையோர் புகழுவணம் நிழற்றி னானல்,
திதியுறவே மூவருநீ டூழி வாழ்ந்து
திவ்வியமா மான்மாவை யடைவர் தாமே.

உ

சிவமயம்

# நூன்முகம்

அறிஞர்களுக்குப் பணிவுடன் அறிவித்துக்கொள்ளும் விக்ஞாபனம் ஒன்று.

இந்நில வுலகில் முமூட்சுக்கள் ஆன்ம ஞானத்தை யடைந்து மோக்ஷ மடைதற்பொருட்டு அடையப்பலம் என்னும் ஓர் சிறு கிராமத்தில் மகா பண்டிதரான அப்பைய தீக்ஷிதர் என்னும் ஓர் மகாநுபாவர் அவதாரஞ் செய்து மகா மேதாவியாக விளங்கி படிப்பவருடைய மனதைக் கவர்ச்சி செய்யும்படியான அதி அற்புதமாகிய பல கிரந்தங்களை யியற்றி உத்தமமான கிரகஸ்த ஆஸ்திரமத்தை நெறி முறை வழுவாது நடாத்தி வந்தார். அவரது வாழ்க்கைக் காலம் மதுரையில் திருமலை நாயக்கர் அரசாண்டுவந்த காலமென்றும் அவ்வூரில் நடந்த சைவவைணவ வாதத்தில் இவர் கலந்துகொண்டவரென்றும் பல மேதாவிகள் கருதுகின்றார்கள். அப்பைய தீக்ஷிதர் பூர்வ மீமாம்சையில் மகா வல்லுநரென்றும் அதற்குச் சான்றாக இவருக்கு மீமாம்சக மூர்த் தண்ணியர் என்றும் வழங்குவதுண்டு. இவர் ஜீவிய காலம் 72 ஆண்டுகள். இந்த ஆண்டுகளுக்குள் இவரால் செய்யப்பட்ட அதியற்புத கிரந்தங்கள் 104 இவைகளுள் சித்தாந்த லேச சங்க்ரகம் என்ற பெயருடன்கூடிய இக்கிரந்தமும் ஒன்றாகும். (நிற்க)

சகல மும்மூட்சுக்களும் ஆன்ம ஞானத்தை யடைந்து மோட்சமடைதற் பொருட்டு அநேக வேதாந்த சாஸ்திரங்களிருக்கின்றன. அந்தச் சாஸ்திரங்களெல்லாம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பிரக்கிரியை யையே உடையன.

இந்த அப்பைய தீக்ஷிதர் இயற்றிய சித்தாந்த லேச சங்க்ரகம் என்னும் இந்நூலோ கிரந்தங்களெல்லாவற்றிலும் சொல்லப்பட்ட பிரக்கிரியைகள் எல்லாவற்றையும் உடையது. ஆதலால் அநேக வேதாந்த நூல்களை அறியும் வேட்கையுடைய முமுக்ஷு-களுக்கு இந்த சித்த்ாந்த லேச சங்கிரகம் உபயோகமாகு மென்பதை யுத்தேசித்தும் என் மனமானது நிரந்தரம் பிரம்மாநு

சந்தானத்தில் ஈடுபடும் என்பதை யுத்தேசித்தும் இந்த நூலை தமிழில் மொழிபெயர்த்தேன். இத்நூலை படிப்பதனல் வெவ் வேறு பிரக்கிரியைகளைப் பிரதிபாதிக்கின்ற கிரந்தங்களை எல்லாம் படித்தவர்களாவார்கள். அதாவது ஆபாசவாதம், அவச்சேத வாதம், ஏக ஜீவவாதம், நாநாஜீவவாதம், சிருஷ்டி திருஷ்டி வாதம், திருஷ்டி சிருஷ்டி வாதம், முதலிய அநேக வாதங்களின் ஞானமுண்டாகும்.

ஏற்கனவே வீர-சுப்பைய சுவாமிகளால் இதன் மூலமாத் திரம் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது அதை ஆராய்ந் தறிதல் மிகக் கடினமாய் இருத்தலை யுத்தேசித்து முக்கியமாக வேண்டுமிடங்களில் கிருஷ்ணலங்காரமென்னும் வியாக்கியா னத்தையும் சேர்த்து தமிழில் மொழிபெயர்த்தேன். இந்தநூலின் கண் மொழிஏதேனும் எழுத்துப் பிழையாவது பொருட் பிழையா வது இருப்பின், இந்நூலை படிப்பவர்கள் தயவுசெய்து தெரிவித் தால் அடுத்த பதிப்பில் பிழைகளை களைந்து திருத்தி போட சௌ கரியமாக இருக்குமென்று அறிஞர்களைப் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த வேதாந்த சித்தாந்த லேச சங்கிரகத்தைச் செய்த அப்பைய தீக்ஷிதரின் பெருமை உலகில் அறியாதார் இல்லை யாதலின் அப்பெரியார் வரலாற்றை விரிவாக எழுதுவதற்குயான் முயலவில்லை.

இந்நூலுக்கு சித்தாந்த லேச சங்கிரகம் என்று சம்ஸ்கிருதத்தில் பெயரிடப்பட்டுளது. அந்தப் பெயரைக் கேட்பவர்க்கு சைவமத சித்தாந்த லேச சங்கிரகத்தை பிரதி பாதிக்கின்ற நூல் என சந்தேகமுண்டாகலாம். ஆதலால் அவ்வையப்பாட்டை நிவர்த்திததற்பொருட்டு வேதாந்தமென ஒரு விசேஷணபதம் முன்னல் சேர்க்கப்பட்டது.

இந்த நூலை அச்சிடும்படி பிரவிர்த்திப்பித்து ஆன்மாநு சந்தானத்தில் ஈடுபடுத்திய ஸ்ரீ காசிகாநந்த ஞானசாரிய சுவாமி களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள் கிறேன்.

சங்க்ஷேப சாரீரகம் என்னும் கிரந்தம் மூலமும், உரையும் இனி தமிழில் வெளிவரும்.

இங்ஙனம் மஹேஸ்வரானந்தகிரி சுவாமி.

௳

மணிவண்ணன் துணை

துறையூர் சின்னமடம்.

பெருமாளையா இயற்றிய

**சாற்றுக்கவி**

1. அருமறைகண் மிகமுழங்கு மந்தணர்த மரபி
லழிவிலடை யப்பலமென் னருப்பமதிற் ரேன்றி
இருமையினும் புகழ்மணக்க வப்பைய னென்னே
எவருமகிழ்ந் தழைத்துவரு மிணையில்பெய ராளன்
பெருமைபெறு வடமொழியிற் பிறங்குபல பனுவல்
பிராமிதிரு வருட்டுணையாற் பிழையறக்கற் றுணர்ந்தோன்
உரிமைபெறு மனைவியுள முவகைகொள வையன்
ஒருவாமே யில்லறம்வாழ்ந் துறுநெறியிற் சிறந்து.

2. வெறிகமழுங் கடுக்கைமுடி வியாளவுரிப் பெருமான்
விசைமலர்ச்சே வடிவணங்கும் வேட்கைகொளு மவன்ருள்
அறிஞருளத் தமுதூறச் செவிகுளிரப் பயில்வா
ரற்புதத்தின் சிகரமென வதிசயிக்க மீக்கோள்
செறிதரப்பல் சுவைபொதுத் தேவர்திரு மொழியிற்
செய்தமைத்த சிலபனுவ லொருநூற்று நான்காம்
நெறியுரையந் நூல்களிலே நிமலமுத்தி மார்க்கம்
நிகழ்த்துமொரு சித்தாந்த லேசசங் கிரகம்.

3. அப்பனுவல் பயில்பவர்க ளாரியரே யன்றி
யஃதுணராத் தமிழறிஞர்க் காகாமை கருதி
செப்பரிய வேதாந்தத் திறமுரைக்கு மிதனைப்
செந்தமிழில் வாசகமாச் சிறுவறுக்கும் விளங்கத்
துப்புரவிவ் வுலகநசை துறந்தவரை மீண்டுந்
தொடராமைக் கிஃதொருசா தனமாகத் துலங்க
வைப்புறழ வறிஞருக்கு வகுத்துணர்வு தந்த
மாதவன்ற னியல்பொருசார் மதிந்துச் சோறும்,

4. இளமையிற்கல் லெனவெளவை யியம்புமொழிக் கிணங்க
இதமுறுநல் லிளம்பருவத் தினியதமிழ் பயின்ரேன்
வளமுறுகா சிப்பதியில் வடமொழியுந் தெளிந்தோன்
வந்தடைந்த மாணவர்தம் மனமறுக்க மாற்றிப்

பளகறவீ டடையுநெறி பரிந்தவர்க்குத் தெருட்டிப்
பார்புகழ விரும்புணுநீர் பான்மைபெறச் செய்தோன்
களிகொண்மறைக் காடுபுன வாசன்மடங் களுக்குங்
கருணைமொழி தேசிகனுய்க் காட்சியளித் தருளவோன்.

5. சுழுத்தியிலுந் தொழுமவர்க்குத் துணைப்பதங்க ளளித்த
தோமறுமண் ணுமலையெங் குரவனரு கன்போ
டிழுந்தறிவு கொளுந்திவட வெண்ணில் பலகலையும்
எச்சமறத் தெளிமதியென் றென்புருகின்சொல்லே
பழுத்தநல சித்தாந்த லேசசங்க்ர கத்தைப்
பார்புகழ மொழிபெயர்த்த பான்மை போலும்
தொழத்தரும கேசுவார னந்தகிரித் தூயோன்
துணிந் தெழுதிப் பனுவலொடு துறவறமும் வாழி.

கட்டளைக் கலிப்பா

6. வாழி பஞ்ச தசிக்குரை வல்லுநன்
வாழி சித்தாந்த லேசசங் க்ரகமும்
வாழி மாமறைக் காட்டுண் மடாலயம்
வாழி நற்புன வாயி லறப்புறம்
வாழி நீடும கேஸ்வரா னந்தப்பேர்
வாழி யப்பையன் வாய்வந்த நூல்களும்
வாழி யண்ணு மலைக்குர வன்னருள்
வாழி கோவிலூர் வாசமும் வாழியே.

வெண்பா

7. வாழ்க மகேசுவரா னந்தகிரி வந்தவனி
வாழ்க தமிழில் வரைபனுவல்—வாழ்கவட
சொல்லாண்ட நூல்க டொடர்ந்துதமி ழாகவவன்
பல்லாண்டு வாழ்க பரிந்து.

திருமறைக்காடு, மேலைப்புனல் வாசலிவற்றிலமைந்து விளங்கும் வேதாந்த மடங்களின் தலைவரும் வடமொழி தென் மொழிகளில் வல்லுநரும் வேதாந்தம் நியாயம் மிமாஞ்சை முதலிய நூல்களிற்றெளிந்த அறிவு சான்றவரும் கோயிலூர் ஸ்ரீலஸ்ரீ அண்ணுமலை ஞான தேசிக சுவாமிகளின் சீடர்களுளொருவருமாகிய ஸ்ரீலஸ்ரீ மகேசானந்த சுவாமிகள் மொழிபெயர்த்த சித்தாந்த லேசசங் கிரகத்தைக் குறித்த சாத்துக்கவிகள்.

அப்பைய தீக்ஷிதர் நல் லாரியத்தி னூல்கள்பல
செப்பியிசைகொண்ட சீரியர்சொல்—ஒப்பரிய
வேதாந்த சித்தாந்த லேசமெய்ச் சங்கிரகம்
ஈதாந்தமிழறிவீ ரென்று.

நற்றமிழி லேவருமே நன்குளத்திற் கொண்டுணரத்
தெற்றெனவே யின்றுரைத்தான் தெய்வமொழி—
கற்றுணர்ந்து
மன்னு மகேச மாமுனிவன் செந்தமிழும்
நன்னர்த்தெளிந்த நலோன்.

அறிவு நிறையு மான்றமைந்த கல்வி
செறியவுறையுந் திருவன்—பொறையுளத்திற்
கொண்டமுனி மெய்ப்பொருளைக் கோதறத்தா—
னென்றுரமாக்
கண்டமுனி கொள்வீர் களித்து.

இங்ஙனம்

பண்டித, சிநு. நாராயணசாமி
அறுபத்துமூவர் மடம்
திருவையாறு.

உ

சிவமயம்

# வேதாந்த சித்தாந்த லேச சங்கிரகம்

| விஷயாநுக்கிர மணிகை | | பக்கம் |
|---|---|---|

| விஷயாநுக்கிர மணிகை | | பக்கம் |
|---|---|---|

| விஷயாநுக்கிர மணிகை | | பக்கம் |
|---|---|---|

உ

ஓம் கணபதி துணை

# வேதாந்த சித்தாந்த லேச சங்கிரகம்

# முதற் பரிச்சேதம்

## 1. மங்கலமும் சிரவண விதியும்

இயற்ற விரும்பிய நூல் விக்கினமின்றி முடியும் பொருட்டும் இடையீடின்றி பிரவிர்த்தித்தற்பொருட்டும் பகவற்பாதரது பாஷியத்தைத் துதித்தல் வாயிலாக பிரஹ்ம தத்துவத்தின் அநுசந்தான வடிவ மங்கலாசரணத்தைச் செய்கின்றார்.

ஸ்ரீமகாவிஷ்ணுவின் பாதாரவிந்தத்தினின்றுமுதயமான கங்கையானது பூமிபேதங்களையடைந்து எப்படி ஆயிரக் கணக்கான பேதமுடையதாகின்றதோ அப்படி பகவற்பாதருடைய முகாரவிந்தத்தினின்று முதயமான பாஷிய வடிவ வாக்கும் அத்வயப்பிரமத்தின்கண் தாற்பரியமுடையதாய் ஜனனத்தை நிவர்த்தி செய்கின்றதாய் வியாக்கியான கர்த்தாக்களாகிய பூர்வாசாரியர்களையடைந்து ஆயிரக்கணக்கான பேதமுடையதாய் விளங்குகின்றது.

[இப்போது இயற்ற விரும்பிய பொருளை பிரதிஞ்ஞை செய்கின்றார்.]

ஆன்மாவின் ஐக்கிய சித்தியில் மிகவும் தாற்பரியமுடையவர்களான பிராசீன ஆசாரியர்களால் ஜீவேஸ்வர ஜகத் வடிவ வியாவகாரிக பதார்த்தங்களில் ஆதரமின்மையால் நானாவிதமான மார்க்கங்கள் தரிசிப்பிக்கப்பட்டன. அதாவது ஒன்றுக்கொன்று விரோதமாக அநேக பிரகரண கிரந்தங்கள் இயற்றப்பெற்றுள்ளன. அவைகளை மூலமாகவுடையனவும் எனது பிதாவின் வியாக்கியான வசனங்களால் அறிவிக்கப்பட்டனவுமாகிய சில சித்தாந்த பேதங்களை எனது புத்தியின் சுத்தியின் பொருட்டு இந்த கிரந்தத்தின்கண் சுருக்கமாய் கூறுகின்றேன்.

இந்த கிரந்தந்தின்கண்ணே சிந்தாந்தத்தின் பேதங்களைக் கூறுகின்றேனென்று சொன்னதையே விஸ்தரிக்கின்றவராய்

பிராசீன கிரந்த சித்தாந்தங்களின் சங்கிரகமே தனது கிரந்தத்தில் சொல்லப்பட்டதென்பது பொருந்தாது. பிராசீன கிரந்தங்களில் இல்லாதனவாகிய யுக்திகளால் பிரதிபாதனம் தனது கிரந்தத்தில் ஆண்டாண்டு காணப்படுதலின் என்னும் சங்கையை நிவர்த்தி செய்கின்ருர்.

மேற்கூறிய சித்தாந்த பேதங்களில் உபபாதனஞ் செய்வதில் அபேக்ஷிக்கப்பட்ட பக்ஷங்களை என் புத்திக்கு எட்டின வளவு பெரும்பாலும் யுக்தியினுல் உபபாதனம் செய்கின்ற வனுகியே சுருக்கமாக எழுதுகின்றேன்.

[தனது கிரந்தத்தின்கண் முதலில் சிரவண விதி விசாரிக்கப்படுகின்றதெனக் கூறுகின்றவராய் சிரவண விதியின்கண் அதிகாரியை நிர்த்தேசஞ் செய்கின்ருர்.]

ஆண்டு முதலில் "ஹே மையித்திரேயி ஆன்மா தரிசனம் செய்யத்தக்கது" சிரவணம் செய்யத்தக்கது. மனனம் செய்யத்தக்கது" என அங்கசகிதமாக வேதங்களை அத்தியயனஞ் செய்த புருஷனும் வேதாந்தங்களினுலே போலியாக அறியப்பட்ட பிரஹ்ம வடிவ ஆன்மாவின் கண்ணே சிஞ்ஞாசை உற்பன்னமானவனுமாகிய புருஷனுக்கு ஆன்ம ஞானத்தின் பொருட்டு வேதாந்த சிரவணத்தின்கண் தோற்றுகின்ற விதியானது எத்தகைய விதியாமென விசாரிக்கப்படுகின்றது.

## 2. விதித்திரய விசாரம்

விதியானது அபூர்வவிதி நியமவிதி பரிசங்கியா விதியென மூன்று வகையினதாம். அவற்றுள் மூன்று காலத்தின் கண்ணும் எவ்விதத்தாலும் அறியப்படாததை அறிவிக்கும் விதி அபூர்வவிதியாம். "விரீஹீன்புரோக்ஷதி" நெற்களில் சம்புரோக்ஷணம் செய்க என்பது போன்று ஈண்டு நெற்களில் புரோக்ஷண வடிவ சமஸ்கார கர்மத்திற்கு மேற்கூறிய விதியின்றி வேறு பிரமாணத்தால் எவ்வாற்ருனும் அறியப்படுவதின்ரும்.

### நியம விதி

பக்ஷத்தில் பிராப்தமானதினுடைய அப்பிராப்த அம்ஸத்தை பூரணம் செய்யும் விதி நியமவிதியாம். "விரீஹீன் அவஹன்யாத்" நெற்களைக் குத்துக என்பது போன்று. ஈண்டு

மேற்கூறிய விதியில்லாவிடினும், புரோடாசத்தின் பிரகிருதி திரவியமாகிய நெற்களுக்கு குத்துதலின்றி அரிசியினடைவு சம்பவியாதென்னும் அர்த்தாபத்தியினுலேயே குத்துதலின் அடைவு உண்டாமாதலின் குத்துதலைப் போதிக்கும் பொருட்டு நியம விதியின்ரும். மற்ரே அர்த்தாபத்தியினுல் குத்துதல் அடைவுறுங்கால் அது போன்றே உலகின்கண் அறியப்பட்ட காரணத்தன்மை சமானமாயிருத்தலால் நகத்தால் கிள்ளுதல் முதலியதும் ஒரு பக்ஷத்திலடைவுறும் இவ்வாருக குத்து தலுக்கு அப்பிராப்த அம்சம் சம்பவித்தலால் அந்த அம்சத்தை பூரணம் செய்யும் பயனுடையது நியம விதியாம்.

### பரிசங்கியா விதி

இரண்டு அங்கிகளின்கண் ஒரு அங்கம் நித்தியம் பிராப்தமாகுங்கால் ஒரு அங்கியை நிவர்த்தி செய்வது அதாவது ஒரு அங்கியினின்றும் அங்கத்தை நிவர்த்தி செய்வது பரிசங்கியா விதியாம் அல்லது ஒரு அங்கியின்கண் இரண்டு அங்கங்கள் நித்தியம்பிராப்தமாகுங்கால் ஒரு அங்கத்தை நிவர்த்தி செய்வது பரிசங்கியா விதியாம், முதல் இலக்கணத் திற்கு உதாரணம்; "வருமாறு, அக்கினி சயனத்தின்கண்" "இமாம் அகிருப்ணன் ரசனும்ருதஸ்ய" சத்திய சம்பந்தியாகிய இக்கயிற்றை கிரகித்தார்கள் என்னும் மந்திரத்தால், "அஸ் வாபிதானீமாதத்தே" குதிரையின் கயிற்றைக் கவர்க என் பது போன்று. அதாவது அக்கினி சயனத்தின்கண் குதிரை யின் கயிற்றின் கவர்ச்சியும் கழுதையின் கயிற்றின் கவர்ச்சியும் இரண்டும் அநுஷ்டிக்கத்தக்கதாம், அவற்றுள் குதிரையின் கயிற்றின் கவர்ச்சியில் சத்திய சம்பந்தியாகிய இந்தக் கயிற்றை கிரகித்தார்கள் என்னும் மந்திரம், கயிற்றின் கவர்ச்சி யைப் பிரகாசஞ் செய்கிற சாமர்த்திய வடிவ லிங்கத்தாலேயே நித்தியமடைவுறுகின்றது. ஆதலின் அதனடைவின் பொருட்டு விதி இன்ரும். அதாவது மேற்கூறிய லிங்கத்தாலேயே மேற்கூறிய மந்திரம் குதிரைக் கயிற்றின் கவர்ச்சியில் சாதன மாக நித்தியம் அடையப்பட்டிருத்தலின் அபூர்வ விதியுமன்ரும் நித்தியமடையப்பட்டிருத்தலினுலேயே குதிரைக் கயிற்றின் கவர்ச்சியின் அடையப்படாத அம்ஸத்தை பூரணம் செய்யும் நியம விதியுமன்ரும். மற்ரே அர்த்தத்தைப் பிரகாசஞ் செய் கின்ற சாமர்த்திய வடிவ லிங்கம் சமமாயிருத்தலின். கழுதைக்

கயிற்றின் கவர்ச்சியின்கண்ணும் மேற்கூறிய மந்திரம் சாதன மாயடைவுறும் அதன் நிவர்த்தியின் பொருட்டு பரிசங்கியா விதியாம். அதாவது குதிரையின் கயிற்றை கவர்க என்னும் விதிக்கு மேற்கூறிய மந்திரத்தால் கழுதையின் கயிற்றை கவரற்க என்பது பொருளாம். மந்திர உச்சாரணமின்றியே கழுதையின் கயிற்றை கவரற்பாலது என்பது பொருள்.

இரண்டாவது இலக்ஷணத்திற்கு உதாரணம் வருமாறு சாதுர்மாசத்தினுள்ளடங்கிய கிருகமேதீயமெனப் பெயரிய யாகத்தின்கண் "ஆஜ்ய பாகங்களை யஜிக்குக" என்பது போன்று. அதாவது கிருகமேதீயமென்னும் விகிருதியாகத்திற்கு தெரிச. பூரணமாச யாகம் பிரகிருதி யாகமாக விருத்தலால் பிரகிருதி யாகம் போன்று விகிருதியாகஞ் செய்யத் தக்கது என்னும் அதிதேச வாக்கியத்தானேயே ஆஜ்ய பாகங்கள் நித்தியம் அடைவுறுகின்றனவாதலால் ஆண்டு அதன் அடைவின்பொருட்டு அபூர்வ விதியுமன்றும். நித்தியம் பிராப்தமாதலினனேயே அப்பிராப்த அம்சத்தைப் பூரணம் செய்யும் நியம விதியுமன்றும். மற்றோ அதிதேச வாக்கியத்தால் பிரயாஜாதி அங்கயாகங்களுமடைவுறுமாதலின் அந்தப் பிரயாஜாதி அங்க யாகங்களின் நிவர்த்தியின் பொருட்டாம். அதாவது ஆஜ்ஜிய பாகங்களை யஜிக்குகவென்னும் பரிசங்கியா விதிக்கு பிரயாஜாதி அங்க யாகங்கள் அநுஷ்டிக்கத்தக்கன வன்று என்பது பொருள். பூர்வ மீமாம்சையில் கிருக மேதீய அதிகரணத்தில் பூர்வ பக்ஷீதியினல் இந்த உதாகரணமாம். எங்கேயாவது உதாரணம் கொடுக்க வேண்டுமென்பது கருதி உதாகரிக்கப்பட்டது.

சங்கை

பரிசங்கியா விதியிற் போன்று நியம விதியின்கண்ணும் பக்ஷத்திலடைவுற்ற குத்துதலின் அடைவுருத வங்கிசம்பூர்ணம் செய்யப்படும்போது குத்துதலினலேயே தடுக்கப்பட்டிருத்தலின் பக்ஷத்திலடைவுற்ற வேறு சாதனமாகிய நகத்தால் கிள்ளுதல் முதலானதின் நிவர்த்தியுஞ் சித்திக்கின்றதாகலின் பிறவற்றின் நிவர்த்தியாகிய பயனையுடையதாந்தன்மை சமானமாயிருத்தலால் நியம விதிக்கும் பரிசங்கியா விதிக்கும் பயனல் பேதம் பொருத்தமன்றும் எனின்.

சமாதானம்

குத்துதலின் நியமமின்றி ஆக்ஷேபத்தால் அடைவுற்ற. (அதாவது நகத்தால் கிள்ளுதலின்றி அரிசியின் சம்பாதனம் பொருந்தாது என்னும் அர்த்தாபத்தியால் அடைவுற்ற) நகத் தாற் கிள்ளுதல் முதலானவற்றை நிவர்த்திக்கக் கூடாமையால் அடையப்படாத அம்சத்தை நிறப்புதல் வடிவ நியமத்திற்கு முதலாவதாந் தன்மை உண்மையாலும்.விதி விஷயமான குத்து தலை சம்பந்தித்திருத்தலால் அத்தியந்தம் சமீபித்திருத்தலா லும் கூறிய நியமத்திற்கே நியம விதியின் பயனுந்தன்மை அங்கீகரித்திருத்தலால். அதன் பின்னுண்டாவதும் விதேய மல்லாததன்கண் (பிறவற்றின் நிவர்த்தியின்கண்) சம்பந்தித் திருத்தலால் தூரத்தது மாயபிறவற்றின் நிவர்த்திக்கு சமீபத்தி லுள்ளதற்கு பயனுந்தன்மை சம்பவிக்கும்போது பயனுந் தன்மை பொருத்தமின்மையின். இவ்வாறு விதிகள் மூன்று விதமாக பகுக்கப்பட்டபோது சிரவண விதியானது எத்தகையதாக அங்கீகரிக்கப்படுகின்றது.

## 3. சிரவணம் அபூர்வ விதியாம் எனல்

ஈண்டுப் பிரகடார்த்தகாரர் முதலிய சில பெரியோர் கூறுவதாவது.

சிரவணம் அபூர்வ் விதியாம் வேறு பிரமாணத்தாலறியப் படாமையின்.

அற்றேல் வேறு பிரமாணத்தால் அறியப்படாமை அசித்த மாம் அன்வய வியதி ரேகங்களால் அதன் ஞானம் சம்பவித்த லின் அஃதாமாறு வேதாந்த சிரவணம் உண்டாகுங்கால் பிரம சாக்ஷத்காரம் காணப்படுகின்றது அஃதில்லாதபோது காணப்படுகிறதில்லை என்னுமிடத்துக் கூறுகின்றூர்.]

வேதாந்த சிரவணம் பிரம்ம சாக்ஷாத்காரத்தின்கண் ஏது வாம் என்பதன்கண் நீ கூறிய அன்வய வியதி ரேகப் பிரமாணம் சரியின்மையின் என்க.

[இதனையே வெளிப்படுத்துகின்றூர்.]

உலகின்கண் சிரவணஞ் செய்தவனுக்கும் அநேகமாக சாக்ஷாத்காரமுண்டாகாமையினாலும் சிரவணம் செய்யாத

வரும். கர்ப்பத்தின் கண்ணுள்ளவருமாகிய வாமதேவ ரிஷிக்கு சாக்ஷாத்காரமுண்டானமையினலும் அன்வயத்தானும் வியதிரேகத்தானும் வியபிசாரம் இருத்தலின் என்க.

[அற்றேல் காந்தர்வ சாஸ்திர சிரவணம் இருக்குங்கால் ஷட்ஜாதி ஸ்வரசாக்ஷத்காரமுண்டாம் அஃதில்லாதபோது அஃதின்றும் எனக் காணப்பட்டுளது ஆண்டு சிரவணம் செய்யத்தக்க அர்த்த விசேடஸ்வரத்தின் சாக்ஷாத்காரத்தைக் குறித்து காந்தர்வ சாஸ்திரத்தின் விசார வடிவ சிரவண விசேடத்திற்கு காரணத்தன்மை கிரகிக்குங் காலத்தில் இலாகவத்தால் சிரவணம் செய்யப்பட்ட அர்த்தத்தின் சாக்ஷாத்கார மாத்திரத்தைக் குறித்து சிரவண மாத்திரத்திற்கு காரணத் தன்மை கிரகிக்கப்படுகின்றது இவ்வாருகவே பிரம்ம சாக்ஷாத்காரத்திற்கும் வேதாந்த சிரவணத்திற்கும். விசேடித்துக் காரியகாரணத் தன்மைக் கிரகணம் இன்ருயினும் பிரம சாக்ஷாத்காரத்திற்கும் சிரவணம் செய்யத்தக்க அர்த்தத்தின் சாக்ஷாத்காரத் தன்மை உண்மையால் வேதாந்த சிரவணத்திற்கும் சிரவணத் தன்மை உண்மையால் கூறிய சாமான்ய ரூபத்தால் வேதாந்த சிரவணத்திற்கு பிரம சாக்ஷாத்காரத்தின் ஏதுத்தன்மை அறியப்பட்டதேயாம். ஆதலின் அபூர்வ விதியன்ரும் என்னுமிடத்துக் கூறுகின்ருர்.]

சிரவண மாத்திரம் சிரவணம் செய்யத்தக்க வஸ்துவின் சாக்ஷாத்கார ஏதுவாம் என இதர சாஸ்திர சிரவணத்தின் கண் கிரகிக்கப்பட்ட சாமான்ய வியாப்தியுமின்ரும், எதனுலீண்டு விசேஷமாய் ஏதுத்தன்மையின் ஞான ஜனக மின்மையாயினும் சாமான்ய வாயிலாகவே ஏதுத்தன்மை அடையப்படுகின்றது† என சங்கிக்கக்கூடும் அதாவது சாமான்ய வியாப்தி சித்திக்கின் அதனுல் விசேஷ வியாப்தியும் சித்திக்கும்.

பிரசங்கத்தில் சாமான்ய வியாப்தி சித்தியாமையின் விசேஷ வியாப்தியுமின்ருமென்பது கருத்து, சாமான்ய வியாப்தியின் அசித்தியின்கண் ஏதுவைக் கூறுகின்ருர்.

காந்தர்வம் முதலிய சாஸ்திர சிரவணத்திற்கு ஷட்ஜம் முதலிய ஸ்வரங்களின் சாக்ஷாத்காரத்தின் ஏதுத்தன்மை

† எதனுல் சங்கிக்கூடும் என்பதனேடு அன்வயம் செய்க.

யுடன்படினும். கர்மகாண்டம் முதலியவற்றின் சிரவணத் தால் அதன் பொருளாகிய தர்மம் முதலியவற்றின் சாக்ஷாத் காரம் காணப்படாமையால் வியபிசாரம் வருதலின் என்க. ஆகையால் சிரவண விதி அபூர்வ விதியேயாம். இப்பொரு ளின்கண் சம்மதியைக் கூறுகின்றார். †பாஷியத்தின் கண்ணும் சககாரியந்தர விதி என்னும் அதிகரணத்தின்கண் வித்தையின் சஹ காரியாய நிதித்தியாசனத்திற்கு பால்ய (மனன) பாண் டித்தியங்கட்குப் போன்று விதியே அங்கீகரிக்கத்தக்கதாம் அபூர்வமாதலால் என்று பாண்டித்திய சப்தத்தால் சொல்லப் பெற்ற சிரவணத்தின்கண் அபூர்வ விதியே அங்கீகரிக்கப்படு கின்றது என்க.

## 4. சிரவணம் நியம விதியாமெனல்

சில நூலாசிரியர் கூறுவதாவது வேதாந்த சிரவணத் திற்கு நித்திய வபரோக்ஷ பிரம சாக்ஷாத்காரத்தின் ஏதுத் தன்மை அறியப்படாததன்றும்.

யாது யாது அபரோக்ஷ வஸ்து விஷயகப் பிரமாணமாமோ அது அது தனது விஷயக சாக்ஷாத்காரத்தின் ஏதுவாமென சாப்த அபரோக்ஷ வாதத்தின்கண் நிலை நிறுத்துதலின் என்க.

ஈண்டு அநுமான மிதுவாம்.

வேதாந்த சிரவணம் ஸ்வ விஷயக பிரம சாக்ஷாத்காரத் தின் ஏதுவாம். அபரோக்ஷ வஸ்து விஷயக பிரமாணமாத லால், பத்தாமவன்நீ, என்னும் வாக்கியம் போன்று. வேதாந் தங்கட்கு பிரஹ்ம அபரோக்ஷப் பிரமிதியின் ஏதுத்தன்மை சித்தியின் பொருட்டே சாப்த அபரோக்ஷ வாதத்தின் ஆரம்பமாம்.

### சங்கை

இத்துணையால் பிரஹ்ம விஷயக வேதாந்த பிரமாணத் திற்கு போலி ஞான சாதாரண பிரஹ்ம சாக்ஷாத்கார ஏதுத் தன்மை அடைவுறினும் அவித்தையின் நிவர்த்தியின் பொருட்டு விரும்பப்படுகிற பிரஹ்மத்தின் நிச்சய வடிவ சாக்ஷத்காரத்

† பாஷியத்தின்கண்ணும் என்பதை அபூர்வ விதியே அங்கீகரிக்கப்படு கின்றது என்பதனோடு அன்வயம் செய்க.

தின் ஏதுத்தன்மை சிரவணத்திற்கு அடையப்பட்டதின்ரும் எனின்.

## சமாதானம்

விசாரமாத்திரத்திற்கு விசாரிக்கத்தக்க வஸ்துவின் நிச்சய ஹேதுத் தன்மையும் பிரஹ்மப் பிரமாணத்திற்கு பிரஹ்ம சாக்ஷாத்காரத்தின் ஹேதுத்தன்மையுமடைவுறுங் கால், விசாரிக்கப்பட்ட வேதாந்த சப்த ஞான வடிவ சிரவணத் திற்கு பிரஹ்மத்தின் திட நிச்சய சாக்ஷாத்கார ஹேதுத் தன்மை அடைவுறுதலின். முற்கூறிய இருவித வியபிசாரமு மின்ரும் சித்தத்தின் ஏகாக்கிரம் முதலிய சக காரியின் குறை வால் அந்வய வியபிசாரம் தோஷமின்மையின். பூர்வ ஜன் மத்தை ஸ்மரணஞ் செய்கின்றவாமதேவ ரிஷிக்கு ஜன்மாந்தர சிரவணத்தால் பயன் சம்பவித்தலால் வியதி ரேக வியபிசார மின்மையின். இங்ஙனங் கொள்ளாக்கால் வியபிசாரத் தாலேயே ஏதுத்தன்மை பாதமாயின் சுருதியினுலும் அதன் சாக்ஷாத்கார சாதனத் தன்மையின் ஞானஞ் சம்பவியா தென்க. கடத்தின் சாக்ஷாத்காரத்தில் நேத்திரத்தின் வேருக தொக்கிந்திரியமிருப்பதுபோன்று பிரஹ்ம சாக்ஷாத்காரத்தின் கண் சிரவணத்தின் வேருக வேறு உபாயமுளது என்று சங்கையுண்டாகுங்கால் வியதிரேகவியபிசாரமும் தோஷ மின்ருமாதலின் ஆகவே அறியப்பட்டிருத்தலின் சிரவணம் அபூர்வ விதியின்ரும். சிரவண முதலிய விதிகட்கு நியம விதித் தன்மையை கொள்ளும்போதுதான் ஆவிருத்தியதி கரணம் பொருத்தமாகின்றதெனக் கூறுகின்ருர்.

சிரவணத்திற்கு அபூர்வ விதித்தன்மை சம்பவியாமையினு லேயே "சிரவணத்தை அப்பியாசஞ் செய்ய வேண்டும் அநேகந் தடவை உபதேசித்திருத்தலால்" என்னும் அதிகரண பாடியத்தின் கண் சிரவண முதலியவை ஆவிர்த்தி செய்யப் படுகின்றனவாய் சாக்ஷாத் காரத்தின்கண் பரியவசானமுடை யன (முடிவுடையன) வாய் திருஷ்டப் பிரயோஜனமுடையன வாயாகின்றன, குத்துதல் முதலியவை அரிசியின் சம்பாதனத் தில் பரியவசானமுடையனவாயிருப்பது போன்று, என பிரஹ்மசாக்ஷாத்காரத்தைப் பயனுகவுடைய சிரவணத்திற்கு திருஷ்டார்த்தத் தன்மையுண்மையால். தர்ச பூரணமாசயாக சம்பந்தி குத்துதல் நியாயமடைவுறுங்கால் ஆவிர்த்தியின்

உபதேசமாம், அபூர்வ விதித் தன்மையின்கண்ணே அது பொருந்தாது, எல்லா ஓஷதிகளையும் உரலில் போட்டு குத்து தல் போன்று.

திருஷ்டாந்தத்தை வெளிப்படுத்துகின்றார்.

அக்கினி சயனத்தின்கண் சர்வ ஓஷதிகளையும் உரலில் நிரப்பி குத்துக. பின்பு இதனை உபதானஞ் செய்கிறது என உரலின் சமஸ்காரத்தின் பொருட்டு விதிக்கப்பட்ட குத்து தலுக்குத் திருஷ்டார்த்தத் தன்மையின்மையின் ஆவிர்த்தி யின்றாம். மற்றோ ஒரு தடவையே அநுஷ்டிக்கத் தக்கது யென, பூர்வ மீமாம்சையின்கண் கூறப் பெற்றுளது. ஆதலால் அதாவது வேதாந்த சிரவணம் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தைக் குறித்து ஏது வென்பது அறியப்பட்டிருத்தலால் சிரவண விதி நியம விதியேயாம். நியமவிதியைக் கொள்ளற்பால தென் பதன்கண் ஏதுவைக் கூறுகின்றார்.

சிரவண விதியை நியம விதியாகக் கொள்ளாக்கால் †இரத்தினம் முதலிய ஒரு வஸ்துவை சொற்பம் நேத்திரத் தால் காண்கின்றவனைப் இரத்தின முதலியவற்றில் தன்னால் கிரகிக்கப்படாத சூக்ஷ்மமான வேறு விசேஷமுளதாமென ஒருவனால் சொல்லப்பட்டபோது அதனையறியும் பொருட்டு அதே நேத்திரத்தின் வியாபாரத்தில் மீண்டும் சாவதானமாக எப்படி புருடன் பிரவிர்த்திக்கிறானோ அப்படி மனதினாலே நான் என்று ஜீவன் (ஆன்மா) கிரகிக்கப்படுங்கால் அத்திய யனத்தால் கிரகிக்கப்பட்ட வேதாந்தங்களினால் உபதேசிக்கப் பட்ட நிர்விசேஷ பிரஹ்மசைதன்ய வடிவத்தைக்கேட்டு அதனை யறியும் பொருட்டு அவ்வான்மாவின்கண் சாவதான மாய் மனதை நிலை நிறுத்துவதிலேயே ஒருபொழுது புருஷன் பிரவிர்த்திப்பன். ஆகவே வேதாந்த சிரவணத்தின்கண் பிரவிர்த்தியானது, பக்ஷத்தில் பிராப்தமாம்.

சங்கை

நான் என பிரத்தியகான்மா கிரகிக்கப்படுங்கால் நிர்விசேஷ வடிவத்தை கேட்டதன் பிறகு வேதாந்த சிரவணத் திற் போன்று புருடன் வேதாந்த விசார நிரபேக்ஷமான மனோ

---

† சாவதானமாய் மனதை நிலைநிறுத்துவதிலேயே ஒரு பொழுது புருஷன் பிரவிர்த்திப்பன் என்பதனோடு அந்வயம் செய்க.

வியாபாரத்தின்கண்ணும் முயலுவன் என்பது பொருந்தாது. சுருதியினுலே பிரஹ்மத்தின்கண் மனே வியாபாரத்தை நிஷேதித்திருத்தலின் அங்க சகிதமாகவேதாத்யயனஞ் செய்த புருடனுக்கு மனே வியாபாரத்தின் நிஷேத ஞானம் சம்பவித்திருத்தலின்.

சமாதானம்

மனதோடு கூடவாக்கு பிரமத்தை விஷயம்செய்யாததாய் திரும்புகின்றது என்னும் நிஷேத †சுருதியானது மனத்தினுலேயே தரிசிக்கத் தக்கது, சூக்ஷ்ம புத்தியினுலே காணத்தக்கது என்பதுங் கேட்கப்படுவதால் சாவதான (ஏகாக்கிர) மின்றிய மனதை விஷயஞ் செய்வதாமென சங்கை சம்பவித்தலின், மற்ருெரு சாதனத்தின் நீக்கத்தைக் கூறுகின்ருர்.

"எப்போது பெரியோர்களால் சேவிக்கப்பட்டவனும் அன்னியனுமாகிய பரமேஸ்வரனை தெரிசிக்கின்ருனே. அப்போது சோகமற்றவனுகின்ருன்" என்பது முதலியவற்றின் சிரவணத்தால் பின்னன்ம (ஈஸ்வரனினும் ஆன்மா வேறு என்னும்) ஞானத்தால் மோக்ஷமாமென பிராந்தி சம்பவிக்கின்றது. அதனுல் மோக்ஷ சாதன ஞானத்தின் பொருட்டு பின்னன்ம (ஈஸ்வரனினும் ஆன்மா வேறு என்னும்) விசார வடிவ நியாய சாங்கியம் முதலான சாஸ்திர சிரவணங்களிலும் ஒரு பக்ஷத்தில் பிரவிர்த்திப்பன் ஆகவே அத்வைத ஆன்மபர வேதாந்த சிரவணத்தின்கண் பக்ஷத்தில் அப்பிராப்தமாம் அதை பூரணம் செய்யும் பொருட்டு நியம விதியாம்.

அற்றேல் சிரவணம் செய்யத்தக்கது என்னும் வாக்கியத்தின்கண் ஆன்ம விசாரமாத்திரம் பிரதீதியாகின்றது. அத்துவிதீய ஆன்ம விசாரத்தின் பிரதீதி இன்ரும். ஆதலால் இச்சிரவண விதியால் சாங்கியர் முதலிய மதத்தின் பின்னுன்மாவின் விசாரத்தின் வியாவிருத்தி எங்ஙனம் கூடுமெனிற் கூறுகின்ருர்.

ஈண்டு ஆன்ம சத்தம் "இவ்வெல்லாம் இவ்வான்மாவே" என்பதாதி பிரகரணத்தின் பரியாலோசனையால் அத்துவிதீய பிரஹ்மத்தின்கண் தாத்பரியமுடையதாதலின்.

† சுருதியானது சாவதானமின்றிய மனதை விஷயஞ் செய்வதாமென்பதனேடு அன்வயம் செய்க.

### சங்கை

அரிசியின் சம்பாதனத்தில் குத்துதல் சாதனமாயிருப்பது போன்று நகத்தால் கிள்ளுதல் முதலியதும் சாதனமாக உள்ளது ஆகவே அதன் நிவர்த்தியின் பயனுக நியமவிதி பொருந்தும் ஈண்டு அத்துவிதீய பிரமசாக்ஷாத்காரத்தின்கண் நியாயம் முதலான சாஸ்திர விசாரத்திற்கு சாதனத் தன்மையேயின்ரும் ஆதலின் அதன் நிவர்த்தியின் பொருட்டு நியமவிதியைக் கூறுதல் பொருந்தாது.

### சமாதானம்

வாஸ்தவமாக வேறு சாதனம் பிராப்தமாகும்போதுதான் நியமவிதியாமென்பது குல தருமமன்று. ஆதலின் வேதாந்த சிரவணத்தின் நியமம் பயனுடையதாம் பொருட்டு நியம அதிருஷ்டத்தால் ஜன்னியமான. (சாக்ஷாத்காரத்தின்) பிரதி பந்தக பாவ நிவர்த்திவாயிலாக திட நிச்சய வடிவ பிரஹ்ம சாக்ஷாத்காரம் வேதாந்த சிரவண மாத்திரத்தால் சாதிக்கத்தக்கதாக அங்கீகரிக்கத்தக்கதாய் இருத்தலால் அச்சாக்ஷாத்காரத்தின்கண் வாஸ்தவமாய் வேறு சாதனமின்மையின் நியமவிதி பொருந்ாதென்று †எங்ஙனம் சங்கிக்கக்கூடும். மற்ருேயாண்டு சாதனுந்தரமாக (வேறு சாதனமாக)ப் பாவிக்கப்படுகிறதற்குப் பக்ஷத்தில் பிராப்தியினுல் விதிக்க இச்சிக்கப்பட்ட சாதனத்திற்கு பக்ஷத்திலப் பிராப்தியை நிவர்த்திக்க முடியாதோ. ஆண்டு நியமவிதியாம். அப்பிராப்தாம்ஸத்தின் பிராப்தி மாத்திரத்தாலேயே அப்பிராப்த அம்சத்தின் பரிபூரண வடிவ அதன் பயன் சித்தித்தலின்.

மற்றொரு சாதனத்தின் நீக்கத்தைக் கூறுகின்ருர் அல்லது குருமுக அதீனமான அத்தியயனத்தாற் போன்று நிபுண புருடனுக்கு தனது பிரயத்தன மாத்திரத்தால் சாதிக்கத் தகுந்த வேதாந்த விசாரத்தாலும் திடநிச்சய வடிவ பிரமத்தின பரோக்ஷ ஞானம் சம்பவிக்கின்றது ஆனுல் குருமுகத்தினதீனமான வேதாந்த வாக்கிய சிரவணத்தின் நியமத்தால் ஜன்னியமான அதிர்ஷ்டம் அவித்தையின் நிவர்த்தியைக் குறித்துப் பாவ நிவர்த்தியின் வாயிலாக உபயோகமாகிறது.

† குலதர்ம மின்ருமாகலின் எங்ஙனம் சங்கிக்கக்கூடும் என அன்வயம் செய்க.

ஆகலின் அவ்வதிர்ஷ்டமின்மையால் தடைபண்ணப்பட்டதாகி கூறிய ஞானமானது அவித்தையின் நிவர்த்தியைச் செய்யாததாய் பரோக்ஷ ஞானம் போன்று நிலை பெறுகின்றது, ஞானமுதயமாகுங்கால் அஞ்ஞானத்தின் நீக்கமின்மை பொருந்தாது என்னற்க. அதாவது அவசியம் நீங்கிவிடுமென்று சொல்லற்க. பிரதி பந்தகாபாவம் யாண்டும். அதாவது காரிய மாத்திரத்தைக் குறித்து அபேக்ஷிக்கப்படுவதால். பிரத்தியக்ஷ விசேஷ தரிசனம் உளதாயினும் உபாதியினால் தடைபடுவதால் பிரதி பிம்பப் பிராந்தியின் நிவர்த்தியின்மை போன்று அதன் நிவர்த்தியின்மை அதாவது அஞ்ஞானத்தின் நிவர்த்தியின்மை பொருந்துதலின். சிரவண நியமவிதியை திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றார்.

இவ்வாறாகவே எழுதிப்படித்தல் முதலானவற்றாலும் தனது வேதத்தின் கிரகணம் பிராப்தமாகுங்கால் குருமுகத்தின தீனமான அத்தியயனத்தின்கண் நியமவிதி போன்று, தனது பிரயத்தின மாத்திரத்தால் சாதிக்கத்தக்க வேதாந்த விசாரத்திற்கும். திட நிச்சய வடிவ பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரத்தின் ஏதுத்தன்மை, பக்ஷத்தில் பிராப்தமாகுங்கால் குரு முகத்தின தீனமான சிரவணத்தின் நியமவிதி ஆகும்.

சங்கை

பிரஹ்மத்தை அறியும் பொருட்டு அதிகாரி புருடன் பிரஹ்ம நிஷ்ட குருவையே சரணமடைக. என குருவினடைவைப் போதிக்கும் விதியினாலேயே குருவின்றிய விசாரத்தின் நீக்கம் சித்தித்தலின் நியமவிதி பயனற்றதாமெனின்.

சமாதானம்

குருவினடைவு சிரவணத்திற்குஅங்கமாதலால் சிரவண விதியின்றேல் குருவின் அடைவுவிதியேயின்றாகும். ஆதலின் அதனாலதற்குப் பயனற்ற தன்மையின்றாம். அதாவது—குருவினடைவைப் போதிக்குமங்க விதியினால் சிரவணத்தைப் போதிக்குமங்கி விதிக்குப் பயனற்றதன்மை பிராப்தமாகாமையின், அங்ஙனம் கொள்ளாக்கால் அத்தியயனத்தினங்கமாயுள்ள குருவினடைவுவிதியினாலேயே எழுதிப் படித்தல் முதலானவற்றின் நீக்கம் சித்திக்கும். ஆதலின் அத்தியயனத்தின் நியமவிதியும் நிஷ்பலமாம்.

மற்றொரு சாதன நிவர்த்தியைக் கூறுகின்றார்.

அல்லது அத்வைத ஆன்ம பரமான பாஷாப் பிரபந்தங்களின் சிரவணத்திற்கு பக்ஷத்தில் பிராப்தியாவதால் வேதாந்த சிரவணத்தின்கண் நியமவிதியிருக்குக.

சங்கை

மிலேச்ச சப்தத்தாற் சொல்லப்பட்ட பாஷா கிரந்தத்தை உச்சரிக்கலாகாது என்னும் நிஷேத வசனத்தினாலேயே பாஷாக் கிரந்தத்தின் சிரவணம் அப்பிராப்தமாமெனின்.

சமாதானம்

சாஸ்திரத்தை யறியும் புத்தியின் மந்தத்தன்மையால் வேதாந்த கிரந்தங்களின் சிரவணம் அசக்கியமாம் என புருஷார்த்த நிஷேதத்தைக் கடந்தும் பாஷாப்பிரபந்தத்தால் அத்வைத பிரஹ்மத்தை அறியும் வேட்கையுள்ளவனுக்கு ஆண்டு பிரவிருத்தி சம்பவித்தலால் நியமவிதிக்குப் பயனுடையதாந்தன்மை பொருந்துதலின்.

பூர்வ மீமாம்சையின்கண் கர்த்திரு அதிகரணத்தில் †பிரதி பாதனஞ் செய்யப்பட்ட புருஷார்த்தத்தின் பொருட்டுப் "பொய் புகலற்க" என்னும் நிஷேதமிருப்பினும் தர்ச பூரண மாச யாகத்தின் மத்தியில் யாதேனுமொரு நிமித்தத்தால் நிஷேதத்தின் உல்லங்கனத்தை அங்கீகரித்தவனும் குறைவற்றதாக யாக சித்தியை விரும்புகின்றவனுமாய புருடனுக்குப் பொய் புகலுவதில் பிரவிர்த்தியுண்டாம் ஆகவே மீண்டும் யாகத்தின் பொருட்டாக தர்ச பூரண மாசப் பிரகரணத்தில் "பொய் புகலற்க" என்னும் நிஷேதமாம் என யாகத்தின் பொருட்டாக நிஷேதத்திற்குப் பயனுடையதாந்தன்மை அங்கீகரிக்கப்படுகின்றது.

[மற்றொரு சாதன நீக்கத்தைக் கூறுகின்றார்.]

அல்லது பூர்வ மீமாம்சை 2வது அத்தியாயம் முதலாவது பாதம் 6வது அதிகரணத்தின்கண் எங்ஙனம் "மந்திரங்களாலேயே மந்திரப் பொருள்களின் ஸ்மிருதி சாதிக்கத்தக்கதாம்" என நியமம் செய்யப்பட்டிருக்கின்றதோ மந்திரத்தை மூலமாக உடைய கல்பசூத்திரம் முதலிய பௌருஷேய

† பிரதி பாதனஞ்செய்யப்பட்ட பயனுடையாந் தன்மை அங்கீகரிக்கப் படுகின்றது என அன்வயம் செய்க.

வாக்கியங்களுக்கும் பக்ஷத்திலடைவுறுதலின் அங்ஙனம் வேதாந்தத்தை மூலமாகவுடைய இதிகாசம் புராணம் முதலிய பௌருஷேய கிரந்தங்கட்கும் பக்ஷத்தில் பிராப்தி சம்பவித்தலால் இது நியமவிதியாகுக. இது சருவப் பிரகாரத்தாலேயும் நியமவிதியேயாம் "ஸஹகாரியந்தரவிதி" என்னுமதிகரண பாஷியத்தின்கண் அபூர்வவிதியாகக் கூறினதோ, நியமவிதியின்கண்ணும் பக்ஷத்தில் அப்பிராப்தி யிருத்தலால் அதனபிப்பிராயமாமென அவ்விடத்திலேயே பக்ஷத்தாலென, பக்ஷத்தில் அப்பிராப்தியைக் கூறுகின்ற சூத்திர பதத்தைப் பொருத்துதலால் ஸ்பஷ்டம் செய்யப்பட்டது என விவரண கிரந்தத்தை அனுசரித்தவர்கள் கூறுகின்றார்கள்.

### அவதாரிகை

சிரவணம் செய்கத்தக்கது என்னும் வாக்கியத்தால் சந்தேகமற்ற பரோக்ஷசாப்த ஞானத்தை உத்தேசித்தே சிரவணம் விதிக்கப்படுகின்றது சாப்த சாக்ஷாத்காரத்தை யுத்தேசித்து அன்றாம் சப்தத்திற்கு இயற்கையாக பரோக்ஷ ஞானத்தை யுண்டுபண்ணும் தன்மை சுபாவமாதலினாலும் விசாரத்தால் உபகரிக்கப்பெற்ற சப்தத்திற்கும் ஓரிடத்தும் சாக்ஷாத்காரத்தின் ஏதுத்தன்மை காணப்படாமையானும் என்க. இந்த சிரவணம் பரோக்ஷ ஞானத்தைப் பயனாக உடையதேனும் அபூர்வ விதியன்றாம், விதியின்றியும் சப்தத்தின்கண் சாப்தஞானத்தின் ஏதுத்தன்மையும் விசாரத்தின்கண் விசாரிக்கத்தக்க வஸ்துவின் நிச்சய ஏதுத்தன்மையும் பிராப்தியாகும்போது அவ்விரண்டன் வலிமையால் விசார விசிட்ட வேதாந்த வடிவ சிரவணத்திற்குச் சந்தேகமற்ற சாப்த ஞானத்தின் ஏதுத்தன்மையின் பிராப்தி சாதிக்கப்பட்டமையின். ஆனால் முற்கூறிய நீக்கத்தகுந்த பக்ஷங்களையே கொண்டு நியமவிதியே யாமென்னும் மதத்தைக் கூறுகின்றார்.

சிரவணம் செய்த புருடனுக்கு முதலில் சப்தத்தால் சந்தேகமற்ற பரோக்ஷ ஞானமே உண்டாகின்றது. சப்தத்திற்கு பரோக்ஷ ஞானத்தை யுண்டுபண்ணுஞ் சுபாவமாக நிச்சயிக்கப்பட்ட சாமர்த்தியத்தைக் கடவாமையின் பின்னரோ மனன நிதித்தியாசனங்களைச் செய்த புருடனுக்குச் சககாரி விசேஷத்தோடு கூடிய சப்தத்தானேயே அபரோக்ஷ ஞானமுண்டாகின்றது. அது என்னும் அம்சத்தை விஷயம் பண்ணு

கின்ற ஞானத்தை உண்டுபண்ணுவதில் இந்திரியத்திற்கு சாமர்த்தியமின்ருயினும் அந்த ஞானத்தை உண்டுபண்ணுவதில் சாமர்த்தியமுள்ள சமஸ்காரத்தின் சகாயத்தால் பிரத்திய பிஞ்ஞாப் பிரத்தியக்ஷத்தை உண்டு பண்ணுந்தன்மையிருப்பது போன்று சுபாவமாக அபரோக்ஷ ஞானத்தை உண்டு பண்ணுவதில் அசமர்த்தமாயினும் சப்தத்திற்கு விதுரனுல் அதாவது பிரிய ஸ்திரீயின் வியோகமுள்ளவனுல் பாவனை செய்யப்பட்ட பிரிய ஸ்திரீயின் சாக்ஷாத்கார ஸ்தலத்தில் சாக்ஷாத்காரத்தை உண்டு பண்ணுவதில் சாமர்த்தியமுடையதாய் நிச்சயிக்கப் பட்ட பாவனைத் தொடர்ச்சியின் சகாயத்தால் அபரோக்ஷ ஞானத்தை உண்டு பண்ணுந்தன்மை பொருத்தமாம் ஆதலால் சப்தத்திற்கு சுபாவமாகத் தனது விஷயத்தின்கண். பரோக்ஷ ஞானத்தை உண்டு பண்ணுந்தன்மையும் பாவனைத்தொடர்ச்சி யினுல் சகாயம் செய்யப்பட்ட ஞான காரணத்தன்மையின் வரைவால் விதுரனது அந்தக்கரணம் போன்று அபரோக்ஷ ஞானத்தை உண்டு பண்ணுந்தன்மையும் பிராப்தமாதலால் பூர்வம் போன்று நியமவிதியேயாமென விவரணத்தின் ஏக தேசிகள் கூறுகின்ருர்கள்.

இதனுலிவ் வநுமானம் பெறப்படுகின்றது. பாவனையால் உபகரிக்கப்பட்ட வேதாந்தம் தனது விஷயக சாக்ஷாத் காரத்தின் ஏதுவாம். பாவனையால் உபகரிக்கப்பட்ட ஞானத்தின் கரணமாவதால். விதுரனது அந்தக் கரணம் போன்று

மற்ருேர் மதத்தைக் கூறுகின்ருர். வேதாந்த சிரவணத்தால் பிரஹ்ம சாக்ஷாத்கார முண்டாவதின்ரும். மற்ருே மனதினுலேயே யுண்டாம் "மனதினுலேயே தரிசிக்கத் தக்கது" என்னுஞ் சுருதியினுலும் "தத்துமசி முதலிய சாஸ்திரம் ஆசாரியருடைய உபதேச வடிவ வாக்கியார்த்தத்தின் விவரணம் சமம் தமம் முதலியவற்ருல் சமஸ்காரத்தை அடைந்த மனமே ஆன்ம சாக்ஷாத்காரத்தின்கண் கரணமா" மென கீதா பாஷிய வசனத்தானும் என்க. சிரவணமோ சந்தேகமற்ற பரோக்ஷ ஞானத்தின் பொருட்டே யாமாதலின், சந்தேகமற்ற பரோக்ஷ ஞானத்தின் பொருட்டே நியமவிதியா மெனச் சிலர் கூறுகின்றனர்.

[மற்ருேர் மதத்தைக் கூறுகின்ருர்.]

அபரோக்ஷ ஞானத்தின் பொருட்டாகவே சிரவணத்தின்கண் நியமவிதியாம். "தரிசிக்கத்தக்கது" எனப் பயனைக் கூறுதலின்

அற்றேல் தருக்க வடிவ விசாரமாகிய சிரவணத்திற்கு சுயமாக சாக்ஷாத்காரத்தை உண்டு பண்ணுந் தன்மை பொருந்தாமையின் அச்சிரவணத்தால் அநுக்கிரகிக்கத் தகுந்த பிரமாணம் சொல்லத்தக்கதாம். அஃது யாதென்னும் சங்கை யுண்டாகக் கூறுகின்றார்.

வேதாந்த சிரவணத்திற்கு அபரோக்ஷ ஞானத்தின் பொருட்டாந் தன்மையும் பிரஹ்மசாக்ஷாத்காரத்திற்கு காரணமாயுள்ள மனதின் சககாரித்தன்மையினனேயாம், நேரேயன்றும் சப்தத்தால் அபரோக்ஷ ஞானத்தை அங்கீகரியாமையின்.

சங்கை

வேதாந்த சிரவணத்திற்கு சாக்ஷாத்காரத்தின் கரணமான மனதின் சக காரித்தன்மையினல் சாக்ஷாத் காரத்தின் பொருட்டாந் தன்மை பிராப்த மின்மையின் அபூர்வ விதியாமெனின்.

சமாதானம்

சுரோத்திர இந்திரிய ஜன்னிய பிரத்யக்ஷ விஷயமான ஷட்ஜ முதலான சுரங்களில் காந்தர்வ சாஸ்திர சிரவணமின்றிய புருடனுக்கு ஆரோபிக்கப்பட்ட பரஸ்பர அவிவேகத்தை நிவர்த்திக்கும் பொருட்டு காந்தர்வ சாஸ்திர சிரவணத்தால் உபகரிக்கப்பட்ட சுரோத்திரத்தால் பரஸ்பரம் விலக்ஷணமாக அதன் யதார்த்த அபரோக்ஷ தரிசனம் உண்டாவதால் பிரகாசமுள்ள வஸ்துவின்கண் ஆரோபிக்கப்பட்ட அவிவேக நிவர்த்தியின் பொருட்டு சாஸ்திர மிருக்குங்கால் அச்சாஸ்திர சிரவணம் பிரகாசமுள்ள வஸ்துவின் சாக்ஷாத் காரத்தை யுண்டுபண்ணுகின்ற இந்திரியத்தின் சககாரித்தன்மையால் உபயோகமாம் என நிச்சயிக்கப்பட்டிருத்தலின்.

அதாவது சாக்ஷாத் காரத்தின் கரணமாயுள்ள இந்திரிய சககாரித்தன்மை வேதாந்த சிரவணத்தின்கண் விதியின்றியே பிராப்தமாதலால் அபூர்வ விதியின்றும் என்பது பொருள்.

ஈண்டு அநுமானமிதுவாம் வேதாந்த சிரவணம் அப ரோக்ஷ ஞானத்தை யுண்டுபண்ணுகின்ற இந்திரியத்திற்கு சககாரியாம், ஆரோபிக்கப்பட்ட அவிவேக நிவர்த்தியின் நிமித்தமான சாஸ்திர சிரவணமாதலால், காந்தருவ சாஸ்திர சிரவணம் போன்று.

இப்போது பிரதிபந்த நீக்கத்தினை உத்தேசித்தே நியம விதியாமென மற்றோர் மதத்தைக் கூறுகின்றார். வேதாந்த வாக்கியங்கட்கு அத்துவிதீய பிரஹ்மத்தின்கண் தாத்பரிய நிச்சயத்திற்கு அநுகூலமான நியாய விசாரவடிவ சித்த விருத்தி விசேஷமான சிரவணத்திற்கு பிரஹ்மத்தின் பரோக்ஷ ஞானமாவது அபரோக்ஷ ஞானமாவது பயனன்றாம் அந்த ஞானம். சப்தம் முதலிய பிரமாணத்தின் பயனாதலின்.

[ஞானத்தை உத்தேசித்தே சிரவணம் விதிக்கப்படுகின் றது என்னும் மதத்தின்கண் சம்மதமான சிரவண சப்தத்தின் பொருளை அநுவாதஞ் செய்து நீக்குகின்றார்]

கூறிய வடிவினதாகிய விசாரத்தால் நிச்சயம் செய்யப் பட்ட தாத்பரிய விசிட்ட சப்த ஞானமே சிரவண மாகுக. அதற்கு பிரமஞானம் பயனாதல் கூடும் என்று சொல்லற்க. ஞானத்தின்கண் விதி பொருந்தாமையானும் சிரவண விதிக்கு விசாரத்தின் கர்த்தவ்வியத் தன்மையை விதிக்கின்ற "அதாதோ பிரமஜிஞ்ஞாசா" என்னும் சூத்திரத்தின் மூலத் தன்மையை யங்கீகரித்தமையானும் என்க.

அபிப்பிராயமிதுவாம்.

சூத்திரத்திலுள்ள ஜிஞ்ஞாசை பதத்திற்கு விசாரத்தில் லக்ஷணையாதலின் அச்சூத்திரத்திற்கு சிரவணம் செய்யத்தக்க தென்னும் வாக்கியம் மூலமாம் அக்காரணத்தால் சிரவணம் செய்யத்தக்கதென்னும் வாக்கியத்திலுள்ள சிரவணம் ஞான வடிவமாமேல் அப்போது சிரவணம் செய்யத்தக்கதென்னும் வாக்கியத்திற்கு சிரவண வடிவ ஞானம் செய்யத்தக்கதா மெனப் பொருள்படும் இவ்வாறாகவே ஜிஞ்ஞாசை சூத்திரத் திற்கும் சிரவணம் செய்யத்தக்கதென்னும் சுருதி வாக்கியத் திற்கும் மூல மூலித்தன்மை சித்திக்காது ஓர் பொருளை போதிக் கும் தன்மையின்மையின்.

நல் நியாயத்தைக் கொள்ளுதல் துர்நியாயத்தை தள்ளுத லாகிய மானசக்கிரியா வடிவ விசாரத்திற்கே சிரவணத் தன்மை உசிதமாதலின் என்க. விசாரத்திற்கே தாத்பரிய நிச்சய வாயிலாகவாவது தாத்பரிய †நிச்சய ஜன்னிய தாத் பரிய பிராந்தி முதலிய புருஷனது அபராத வடிவ பிரதிபந்தக நீக்க வாயிலாகவாவது பிரமஞானம் பயனுகுக என்று சொல் லற்க. தாத்பரிய ஞானத்திற்கு சாப்தஞானத்தின் காரணத் தன்மையை அங்கீகரியாமையினுலும் காரியத்தைக் குறித்து ஓரிடத்தும் பிரதிபந்தகா பாவத்திற்கு காரணத்தன்மை உடன் படாமை யானும் தாத்பரிய நிச்சயத்திற்கும் அதனுலுண்டாய பிரதிபந்தக நீக்கத்திற்கும் துவாரத் தன்மை பொருந்தாமை யின். பிரம ஞானத்திற்கு விசார வடிவ மற்ெறுரு கரண ஜன் னியத் தன்மையுடன்படின் அதன் பிரமாண்யத்திற்கு பிறிதாற் பெறப்படுந் தன்மை அடைவுறுதலினுலும் என்க. ஆதலால் தாத்பரிய நிச்சய வாயிலாக புருஷனுடைய அபராத நீக்கத் தின் பொருட்டே விசாரணை வடிவ சிரவணத்தின்கண் நியம விதியாம்

அற்றேல் தெரிசிக்கத் தக்க தென சிரவணத்தின் பயனைக் கூறுதல் எங்ஙனம் பொருந்து மெனில் கூறுகின்ருர்.

தரிசிக்கத் தக்கது என்னும் பல சுருதியோ, தரிசன யோக்கியத் தன்மையால் ஆன்மாவின் ஸ்துதி மாத் திரமாம் சிரவணத்தின் பயனைக் கூறுதலன்ருமென சம்க்ஷேப சாரீரகத்தை அநுசரித்தவர்கள் கூறுகின்றனர்.

## 5. சிரவணம் பரிசங்கியா விதியாமெனல்

சிரவணம் பரிசங்கியா விதியென்னும் பக்ஷத்தைக் கூறு கின்ருர். பிரம ஞானத்தின் பொருட்டு வேதாந்த சிரவணத் தின்கண் பிரவிர்த்தித்த புருடனுக்கு ஔஷத ஞானத்தின் பொருட்டு சரகம்சுருதம் முதலிய வைத்திய கிரந்த சிர வணத்தின்கண் பிரவிர்த்தித்த புருடனுக்கு இடை இடையே இதர வியாபாரத்தின்கண் பிரவிர்த்தி உண்டாவது போன்று இடையில் வேறு வியாபாரத்தின்கண்ணும் பிரவிர்த்தியுண்டா மாதலின் அதன் நிவர்த்தியின் பயனையுடைய தாய் சிரவணம் செய்யத் தக்கது என்பது பரிசங்கியா விதியாம்.

† நிச்சயஜன்ய நீக்க வாயிலாக என அன்வயம் செய்க.

அற்றேல், சுஸ்ஸுருதம் முதலிய கிரந்தத்தின் சிரவணத்தின்கண் பிரவிர்த்தித்த புருடனுக்கு இதர வியாபாரமிருந்த போதிலும் ஔஷதத்தின் ஞானம் தடையற்றதாய் எப்படியுண்டாகின்றதோ அப்படி தினந்தோறும் வேதாந்த சிரவணத்தை அநுஷ்டிக்கின்ற புருடனுக்கு இடையிடையே இலௌகீக வைதீக வியாபாரங்கள் உண்டான போதிலும் பிரம ஞானத்தின் உற்பத்தி சம்பவித்தலால் பரிசங்கியா விதி பயனற்றதாம் என்ருசங்கித்து சிரவண விதிக்கு பயனுடையதாந் தன்மை சித்திக்கும்பொருட்டு இடை விடாமல் அநுஷ்டிக்கப் படுகின்ற சிரவணத்திற்கு ஞான சாதனத் தன்மையாம் ஒவ்வோர்போது அநுஷ்டிக்கப்படுகின்ற சிரவணத்திற்கு ஞானசாதனத் தன்மையின்ரும். ஆதலின் விதிக்குப் பயனற்றதாந்தன்மையின்ருமென்னும் சமாதானத்தை மனதில் வைத்துக் கொண்டு கூறிய பொருளின்கண் சுருதி ஸ்மிருதி வாக்கியங்களை உதாகரிக்கின்ருர்.

''பிரமத்தின்கண் நன்ருய் நிலைபெற்றவன் அமிருதத் தன்மையை அடைகின்ருனென'' சாந்தோக்ய சுருதியின்கண் அன்னிய வியாபாரம் இல்லாத் தன்மைக்கு முத்தியின் உபாயத் தன்மை யறியப்படுதலின் நன்கு நிலைத்தலென்னுஞ் சொல் சமாப்தி (நல்ல அடைவு) வாசக மாதலால் பிரமத்தின்கண் நன்கு நிலைத்தல் என்னும் சப்தத்தால் சொல்லப்பட்ட பிரமத்தின்கண் சமாப்திக்கு அன்னிய வியாபாரத் தன்மை அற்றிருத்தல் வடிவமாதலின். 'அவ்வான்மா ஒன்றனையே அறியுங்கள் அந்நிய வாக்கியங்களை விட்டுவிடுங்க''ளென்னும் அதர்வண சுருதியின்கண் முகத்தாலேயே வேறு வியாபாரம் நிஷேதிக்கப்பட்டிருத்தலாலும் சாக்கிரந் தொடங்கி சுழுத்தி வரையும் மரணம் வரையும் வேதாந்த சிந்தனையினுல் காலத்தைக் கழிக்க வேண்டுமென்னும் ஸ்மிருதியினுலும் என்க.

நியமவிதி வாதியின் சங்கை.

பிரம ஞானத்திற்கு சாதனமின்றிய வேறு வியாபாரத்திற்கு ஒரு சாத்தியத்தின்கண் சிரவணத்தோடு சமுச்சயமாய் பிராப்தியின்மையின் அதன் நிவர்த்தியின் பொருட்டு பரிசங்கியாவிதி பொருந்தாது என்னற்க. பிரதிவந்தியால்

சமாதானஞ் செய்கின்றார் "சககாரியந்தர விதி" யென்பதாதி சூத்திரத்தின்கண்ணும் யாதொரு காரணத்தால் பக்ஷத்தின் கண் பேததரிசன வலிமையாலடைவுறுதோ அக்காரணத்தால் நியமவிதியாமென்னும் அதன் பாஷியத்தின்கண்ணும்" சிர வணம் செய்தவனும் சாப்தஞான மாத்திரத்தால் கிருதகிருத் தியம் தன்மையைக் கருதியவனும் வேறு வியாபாரத்தின்கண் ணும் பிரவிர்த்தித்தவனுமாய புருடனுக்கு அவித்தையின் நிவர்த்தியைச் செய்கின்ற சாக்ஷாத்காரத்திற்கு உபயோகமா யுள்ள நிதித்தியாசனத்தின்கண் பிரவிருத்தி உண்டாகாது. ஆகவே அதன் சாதனமல்லாததன் பக்ஷப் பிராப்திமாத்திரத் தால் நிதித்தியாசனத்தின்கண் நியமவிதி அங்கீகரிக்கப்பட் டிருத்தலால் அந்தநியாயத்தாலீண்டுஞ் சாதனமல்லாத இதர வியாபாரத்திற்கு சமுச்சயமாய் பிராப்தியாகுங்கால் அதன் நிவர்த்தியின் பொருட்டு பரிசங்கியாவிதி சம்பவித்தலி னென்க.

கூறிய பொருளின்கண் வார்த்திக வசனத்தைப்பிரமாண மாகக் கூறுகின்றார்.

சுரோதவ்விய வாக்கியத்தின்கண் நியம விதியாவது பரிசங்கியா விதியாவது பொருத்தமாகும் எதனு லெனின் அனுன்மதர்சனத்தின் வியா விருத்தியைச் செய்தே பரமான்மாவை உபாசிக்கின்றோம் என இங்ஙனம் வார்த்திகவசனத்தை அநுசரித்த சிலர் கூறுகின்றனர்.

## 6. சிரவணதிகட்கு விதியின்றெனல்

[சிரவணதிகட்கு விதி பட்சத்தை மத பேதத்தால் காண் பித்து இனி அவைகட்கு விதியினபாவ பக்ஷத்தைக் கூறு கின்றார்]

ஆன்ம விஷயமாக சொல்லப்படுகின்ற மனன நிதித்தியா சனமும் எங்ஙனம் ஞான வடிவமோ அங்ஙனம் ஆன்மா சிரவ ணம் செய்யத் தக்கது என ஆன்ம விஷயகமாக சேர்க்கப்படு கின்ற சிரவணமும், ஆகம ஆசாரிய உபதேசத்தால் ஜன்னி யமாய் ஆன்ம ஞானமேயாம் தாத்பரிய விசார வடிவ மன்றும். ஆதலினதன்கண் யாதொரு விதியுமின்றும் இதனுனேயே அதாவது விதியின் யோக்கிய மின்மையினுனேயே சமன்வய சூத்திரத்தின்கண் ஆன்ம ஞான விதியை நிராகரித்ததன்

பின்பு "சிரவணுதிகட்கு விதியின் அயோக்கியத் தன்மையிருப் பின் ஆன்மா தெரிசனம் செய்யத் தக்கது சிரவணம் செய்யத் தக்கது என்பது முதலிய விதிவாக்கியத்திற்கு சமானமான வசனங்கள் எதன் பொருட்டாமெனின், சுவாபாவிகப் பிரவி ருத்தி விஷயத்தினின்றும் திருப்பும் பொருட்டாமெனக் கூறு கின்ருேம்" என்பது முதலிய பாஷியமும் பொருந்துகின்றது சிரவணமானது வேதாந்த தாத்பரிய விஷயமாமேல் அப் போது சிரவணத்திற்கு தாத்பரிய நிச்சய வாயிலாக வேதாந்த தாத்பரிய பிராந்தி, சம்சய வடிவ பிரதி பந்தக நீக்கமே பய னும். வேறு பிரதிபந்த (பாவ)த்தின் நீக்கமாவது பிரமசா க்ஷாத்காரமாவது பயனன்ரும். பிராந்தி முதலிய பிரதிபந்த நீக்கப் பயனும் சிரவணத்திற்கு உலகத்திலேயே பிராப் தமாம். வேறு சாதனமோ சிறிது விகற்பமாகவாவது சமுச்ச யமாகவாவது பிராப்தமின்ருமாதலின் ஆண்டு சிரவணத்தின் கண் விதித்திரயங்களுக்கும் அவகாசமின்ரும்.

அற்றேல் குருவினதீனமான விசாரத்தோடு குருவின்றிய விசாரத்திற்கு விகற்பமாக பிராப்தியிருக்கின்றதெனின் கூறு கின்ருர்.

விசாரத்தின் விதியின்றேனும் விஞ்ஞானத்தின் பொருட் டாக விதிக்கப்படுகின்ற குருவினடைவு திருஷ்டத்துவாரஞ் சம்பவிக்கும்போது அதிர்ஷ்ட கற்பனை பொருந்தாமையால் குருமுகத்தினதீனமான வேதாந்த விசார வாயிலாகவே விஞ் ஞானத்தின் பொருட்டு பரியவசானமாகின்றது ஆதலின் இதனையே (குருவின் அடைவின் விதியினையே) தனது பிரயத்தன சாத்திய விசாரத்தின் நீக்கம் சித்திக்கின்றது.

முற்கூறிய அதிப்பிரசங்கத்தைப் பரிகரிக்கின்ருர்.

அத்தியயனவிதியின்ருயினே குருவினடைவு விதிக்கப் படுகின்றதாய் அக்ஷரப் பிராப்தியின் பொருட்டு விதிக்கப் படாமையினல் அக்ஷரப் பிராப்தியின் பொருட்டு குருமுகத் தின் உச்சாரண அநுச்சாரண (பின்னுச்சரித்தல்) வடிவ அத்தி யயனத்தைத் துவாரமாகச் செய்கின்றதில்லை ஆதலின் எழுதிப் படித்தல் முதலானவற்றின் நீக்கம் சித்தியாமையின் அத்தியயனத்தின் நியமவிதி பயனுடையதாம்.

### சங்கை

தாத்பரியாதி பிராந்தி நீக்கத்தின் பொருட்டு வேதாந்த விசாரத்தை விரும்பும் புருடனுக்கு ஓர் போதுதுவித சாஸ்திரத்தின் கண்ணும் பிரவிருத்தியுண்டாம். ஆண்டும் அதன் கருத்தின்படி பொருத்துதலால் வேதாந்த விசாரமிருத்தலின். ஆகவே அத்வைத ஆன்ம பரமான வேதாந்த விசாரத்தின் நியமவிதி பயனுடையதாமெனின்.

### சமாதானம்

இயற்கையாகவே தாத்பரிய பிராந்திக்கு ஏதுவாயுள்ள துவித சாஸ்திரத்திற்கு அதனை நீக்குந் தன்மையின்மையினால் வேறு சாதனமாகப் பிராப்தி இன்மையின் என்க. அதன் நிவர்த்தகத் தன்மையின் பிராந்தியினால் துவைத சாஸ்திரத்தின் கண்ணும் ஒருவனுக்குப் பிரவிர்த்தியுண்டாம் என்னுமித் துணையானே சிரவணம் செய்யத் தக்கது என்னும் நியம விதியின் அங்கீகாரமாமென்பதுஞ் சரியன்று. ஈஸ்வர அநுக்கிரகத்தின் பயனான அத்வைத சாஸ்திரத்தின்கண் சிரத்தையின்றிய புருடனுக்கு சிரவணஞ் செய்யத் தக்கது என்னும் வாக்கியத்தின்கண்ணும் பிறமதஸ்தரது கருத்தின்படி பொருத்துதலால் சத்விதீய ஆன்ம விசார விதிபரத் தன்மை பிராந்தி சம்பவிக்கின்றது. ஆதலால் பிராந்தியின் அதீனமான துவைத சாஸ்திரத்தின்கண் பிரவிருத்தியை நூற்றுக் கணக்கான விதிகளாலும் நிவர்த்திக்கக் கூடாமையின்.

இதர வியாபார நிவர்த்தியின் பொருட்டு பரிசங்கியா விதியாமென்னற்க. சன்னியாசமின்றிய கிரகஸ்தர் முதலியோருக்கு இதர வியாபாரத்தின் நிவர்த்தி கூடாமையின் சன்னியாசமுள்ள புருடனுக்கு இதர வியாபாரத்தின் நிவர்த்தி பிரமத்தில் நன்கு நிலை பெறுதலோடு சன்னியாசத்தை விதிக்கின்ற "பிரமத்தின்கண் நன்கு நிலை பெற்றவன் அமிருதத் தன்மையை அடைகிறான்" என்னும் வேறு சுருதியினால் சித்தித்திருத்தலின் சன்னியாசத்தை விதிக்கின்ற வேறு சுருதியை யபேக்ஷித்து சிரவணஞ் செய்யத் தக்கது என்னும் வாக்கியத்தால் சன்னியாசிக்கு இதர வியாபாரத்தின் நிவர்த்தியின் உபதேசம் வியர்த்தமாகலின்.

### சங்கை

விசாரவிதி சம்பவியாதேனும் விசார விஷயக வேதாந்தத்தின் நியமவிதி சம்பவிக்கின்றது பாஷாக் கிரந்த முதலியவற்றின் நீக்கமிருத்தலின் எனின்.

### சமாதானம்

சன்னிதானத்தினுலேயே வேதாந்தத்தின் நியமமடையப் பட்டிருத்தலால் விதி விஷயத் தன்மை பொருந்தாமையின். அதாவது அங்க சகிதமாக வேதத்தை அத்தியயனஞ் செய்தவனும் வேதாந்தங்களால் போலியாக அறியப்பட்ட பிரஹ்மான்மாவின்கண் சிஞ்ஞாசையுடையவனுமாகிய புருடனுக்கு சிஞ்ஞாசையை நிவர்த்தி செய்யும் நிச்சயத்தின் பொருட்டு கர்த்தவ்வியமாக விசாரம் பிராப்தமாகும்போது விசாரத்தின் விஷயத்தைத் தேடுகின்ற புருடனுக்கு வேதாந்தங்கள் புத்தியின்கண் இருத்தலால் வேதாந்தங்களே என்னுல் விசாரிக்கத் தக்கன என்னும் ஞானமுண்டாகின்றது இவ்வாருகவே விதியின்றியே வேதாந்தத்தினியமமடையப் பட்டிருத்தலால் விதியினுல் அதன் நியமனம் வியர்த்தமாமென்பது பொருள்

விதியின்றியே வேதாந்த நியம அடைவின்கண் வேருெரு ஏதுவைக் கூறுகின்ருர்.

தனது வேதம் அத்தியயனஞ் செய்யத்தக்கதென்னுமர்த்த ஞானத்தின் பொருட்டாயுள்ள நியம விதியின் வலிமையாலேயே அத்தியயனத்தால் கிரகிக்கப்பட்ட வேதத்தாலுற்பன்னமான வேதார்த்த ஞானம் பயனின்கண் முடிவுடையது. பிற காரணத்தால் உற்பன்னமான வேதார்த்த ஞானம் பயனின்கண் பரியவசானமுடையதன்றென்னும் பொருள் அடையப்பட்டிருத்தலால் வேதார்த்தமாகிய பிரம்மம்மோக்ஷத்தின் பொருட்டு அறியப்படும்போது பாஷாக்கிரந்த முதலியவற்றிற்குப் பிராப்தியின்மையினுனும் என்க.

"சககாரியந்தரவிதி" யென்னுமதிகரணத்தின்கண் பால்ய பாண்டித்திய மௌன சப்தங்களால் பகரப்பெற்ற சிரவண மனன நிதித்தியாசனங்களில் சூத்திரக்கார பாஷ்யக்காரர்களால் விதியங்கீகரிக்கப்பட்டுளது என்று சொல்லற்க.

விசாரத்தின்கண் விசாரிக்கத்தக்க வஸ்துவின் தாத்பரிய நிச்சயத்தின் ஏதுத் தன்மையும் வஸ்து சித்திக்கு அநுகூலமான யுக்தியினுல் அநுசந்தான வடிவ மனனத்தின்கண்ணும் வஸ்து ஞானத்தின் அப்பியாச வடிவ நிதித்தியாசனத்தின் கண்ணும் வஸ்து ஞானத்தின் பரிசுத்தி யேதுத் தன்மையும் உலகின்கண் சித்தித்திருத்தலால் அவைகளில் (சிரவணுதிகளில்) விதிய பேக்ஷிக்கப் படாமையின்.

அவதாரிகை

சூத்திர பாஷியங்களில் சிரவணுதிகட்கு விதித் தன்மையின் வியவகாரம் கௌணமாம் முக்கியார்த்தத்தின் அசம்பவம் தரிசிப்பிக்கப் பட்டமையின் என விரோதத்தைப் பரிகரிக்கின்ருர்.

விதிபோன்றுள்ள அர்த்தவாத வாக்கியத்திற்குப் போன்று துதிவாயிலாகப் பிரவிருத்தியின் மிகுதியைச் செய்தல் மாத்திரத்தாலாண்டு விதியின் வியவகாரமாதலின். இவ்வாருகவே, சிரவணவிதியின்மையின், கரும காண்ட விசாரம் போன்று பிரமகாண்ட விசாரமும் அத்தியயன விதியை மூலமாகவுடையதே யாமென, ஆசாரிய வாசஸ்பதி பக்ஷத்தை அனுசரித்தவர்கள் கூறுகின்றனர்.

## 7. (இனி) பிரஹ்மத்தின் லட்சண விசாரம்

சிரவணம் செய்யத்தக்கதென்னும் வாக்கியார்த்தத்தின் பொருள் சங்கிரகிக்கப்பட்டது கிரமத்தால் பிராப்தமான இரண்டாவது சூத்திரத்தின் பொருளை சங்கிரகிக்கின்ருர். விசாரிக்கத் தக்க பிரஹ்மத்திற்கு உலகின் உற்பத்தி ஸ்திதி லய காரணத் தன்மை லக்ஷணமாக "எதில் நின்று மீப்பூதங்கள் உண்டாகின்றனவோ" வென்பதாதி சுருதியால் கூறப்பட்டுளது. ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி லயங்களில் ஒவ்வொன்றன் காரணத் தன்மையும் வியபிசாரமின்மையால் லக்ஷணமாதற்குத் தகுதியாமெனின் உண்மைதான்.

இது பரஸ்பர நிரபேக்ஷமாய் மூன்று லக்ஷணமேயாகும் இம் மூவித லக்ஷண அபிப்பிராயத்தானேயே "புசிப்பவன் சராசரங்களை கிரகித்தலா"லென்பது முதலிய அதிகரணங்களில் சர்வசம்மார காரணத் தன்மை முதலியன தனித்தனி

பிரமலிங்கமாகக் கூறப்பட்டுளது என கௌமுதிக்காரர் கூறுகின்றனர்.

வேறுஞ் சிலர் உற்பத்தி காரணத் தன்மையும் ஸ்திதி காரணத் தன்மையும் நிமித்த காரணத்திற்குப் பொதுவாயிருத்தலால் உபாதானத் தன்மையை அறிவிக்கும் பொருட்டு பிரபஞ்சத்திற்கு பிரமத்தின்கண் லயம் தரிசிப்பிக்கப்பட்டது.

பிரமம் ஜகத்தினுபாதான மாகுக ஜகத்தினுற்பத்தியில் கடோற்பத்தியில் குலாலன் போன்றும் ஜகத்தின் ஸ்திதியில் ராஜ்ய ஸ்திதியின்கண் அரசன் போன்றும் உபாதானத்தினு மன்னியமாகவே நிமித்த காரணமிருக்கலா மென்னும் சங்கையை நீக்கும் பொருட்டு பிரமத்திற்கே ஜகத்தினுற்பத்தி ஸ்திதி நியாமகத் தன்மை கூறப்பட்டது. இவ்வாருகவே இஃது ஒரே லக்ஷணமாய் அபின்ன நிமித்தோ பாதானத் தன்மையால் அத்விதீய பிரமத்தை அறிவிக்கின்றது எனக் கூறுகின்றனர்.

## 8. பிரமத்தின் காரணத் தன்மை விசாரம்

பிரமத்திற்கு ஜகத்தின் உபாதானத் தன்மையும் பரமாணுவுக்குப் போன்று ஆரம்பகத் தன்மை வடிவமன்ரும் பிரகிருதிக்குப் போன்று பரிணமித் தன்மை வடிவமுமன்ரும் அத்துவிதீய கூடஸ்த சைதன்னிய வடிவமாதலால். மற்ருே அவித்தையால் ஆகாசாதிப் பிரபஞ்ச வடிவமாக விவர்த்திக்குந் தன்மை வடிவமாம்.

## 9. பரிணும விவர்த்தங்களின் இலக்கணம்

உபாதானமாகக் கருதப்பட்டுள்ள வஸ்துவின் சமான சத்தையுடையதாய் அதன் அவஸ்தா விசேஷ வடிவம் அதன் பரிணுமமாம். விவர்த்தத்தில் அதிவியாப்தியை நீக்கும் பொருட்டு விசேஷணமாம் கடத்திற்குதந்துவின் பரிணுமத் தன்மையை நீக்கும்பொருட்டு விசேஷியமாம்.

விவர்த்தத்தின் இலக்கணம்.

உபாதானமாகக் கருதப்பட்டுள்ள வஸ்துவின் விஷமசத்தை யுடையதாய் அதன் அவஸ்தாவிசேஷ வடிவம் அதன் விவர்த்தமாம். கடத்திற்கு உபாதானமாகக் கருதப்பட்டுள்ள

மண்ணின் விஷமசத்தையுடைய சைதன்னியத்தின்கண் அதிவியாப்தியை நீக்கும் பொருட்டு விசேஷியமும் பரிணமத்தில் அதிவியாப்தியை நீக்கும் பொருட்டு விசேஷணமுமாம்.

[இங்ஙனம் மூன்று சத்தையை உடன்பட்ட மதத்தின் அநுசாரமாக லக்ஷணம் கூறப்பட்டது இனி பிரமத்தின்கண்ணும் கடாதிகளின்கண்ணும் சுத்திரஜதாதிகளின்கண்ணும் பிரமத்தின் சொருப வடிவ சத்தை ஒன்றேயாமென்னும் மதத்தின் அநுசாரமாக வேறு லக்ஷணங் கூறப்படுகின்றது]

உபாதானமாகக் கருதப்பட்டுள்ள வஸ்துவின் சமான சுபாவமுடையதாய் அதன் அவஸ்தாவிசேஷம் அதன் பரிணமம் என்பது பரிணமத்தின் இலக்ஷணமாம் ஈண்டு சமான சுபாவமென்பது சடத் தன்மையாம் பரிணம பரிணமிகட்கு சடத்தன்மை நியமமாதலின். பிரபஞ்சத்தின்கண் சம்வித் பரிணமத் தன்மை ஆபத்தியை நீக்கும் பொருட்டு விசேஷியமாம்.

விவர்த்தத்தின் இலக்ஷணம்.

உபாதானமாகக் கருதப்பட்டுள்ள வஸ்துவின் விலக்ஷண சுபாவமுடையதாய் அதன் அவஸ்தாவிசேஷம் அதன் விவர்த்தமாம் ஈண்டு சித்துத் தன்மை சடத்தன்மை விலக்ஷண சுபாவமாம் ஆகாசாதி பிரபஞ்சத்திற்குப் போன்று சுத்தி ரஜதாதிக்கும் அவ்வவற்றால் அவச்சின்ன சைதன்னியத்தின்கணேயே அத்தியாசத்தை அங்கீகரித்தலால் சைதன்னியத்தின் விவர்த்தமான சடமாத்திரத்தின்கண் அதன் விலக்ஷணத் தன்மையுளதாதலின் இலக்ஷணம்பொருத்தமாம்.

மண்ணின் பரிணம வடிவ கடாதியின்கண் அதிவியாப்தியை நீக்கும் பொருட்டு விசேஷணமாம் உபாதானமாகக் கருதப்பட்டுள்ள சடத்தின் விலக்ஷண சுபாவமுள்ள சேதனத்தின்கண் சடவிவர்த்தத் தன்மை ஆபத்தியை நீக்கும் பொருட்டு விசேஷியமாம்.

[மற்றோர் பிரகாரத்தால் விவர்த்த பரிணமங்களின் இலக்ஷணத்தைக் கூறுகின்றார்]

காரணமாகக் கருதப்பட்டுள்ள வஸ்துவின் அபின்னமாய் அதன் காரியம் அதன் பரிணமமாம். ஆகாசாதியின்கண் பிர

மத்தின் காரியத் தன்மையுளது அதன் பரிணமமோ இன்றும் ஆகலின் அதனை நீக்கும் பொருட்டு விசேஷணமாம் பிரமத்திற்கும் பிரபஞ்சத்திற்கும் ஆரோபிக்கப்பட்ட அபேதம் இருப்பினும் லக்ஷணத்தின்கண் விவக்ஷிக்கப்பட்ட இருதருமிகளின் சமான சுபாவ அபேதமின்மையால் அதிவியாப்தியின்றும் பரிணமவாதத்தின்கண் மண்ணிற்கும் கடாதியோடு அபின்னத் தன்மையுளதாதலின் மண்ணிற்கு கடாதியின் பரிணமித் தன்மை ஆபத்தியை நீக்கும் பொருட்டு விசேஷியமாம்.

வாஸ்தவமாக காரணத்தோடு அபேதமின்றிய அதனினும் வேருக நிரூபிக்க முடியாத காரியம் விவர்த்தமாம். இவ்விலக்கத்தின்கண் காரியத் தன்மை விவக்ஷிக்கப்பட்டதின்றும் அநாதி அவித்தை முதலியவற்றிற்கும் விவர்த்தத்தன்மை அங்கீகரித்தலால் அல்லது காரிய வடிவ விவர்த்தத்திற்கே இவ்விலக்கணமாம்.

இவ்வாருக உபாதானமாய்க் கருதப்பட்டுள்ள வஸ்துவினின்றும் வாஸ்தவமாக பேதமாகவும் அபேதமாகவும் நிரூபிக்க முடியாததாய் உள்ள காரியம் காரிய வடிவ விவர்த்தத்தின் இலக்கணமாம். ஈண்டு அவித்தையைக் குறித்து உபாதானமாகக் கருதப்பட்டுள்ள சைதன்னியத்தினின்றும் வாஸ்தவமாக பேதமாகவும் அபேதமாகவும் நிரூபிக்க முடியாத அவித்தையின்கண் அதிவியாப்தியை நீக்கும் பொருட்டு விசேஷியமாம்.

ஆரம்ப வாதத்தில் உபாதானத்தோடு அபேதமாக நிரூபிக்க முடியாத காரியத்தின்கண் அதிவியாப்தியை நீக்கும் பொருட்டு பேதமாக என்று கூறப்பட்டது.

பரிணமவாதத்தில் உபாதானத்தோடு பேதமாக நிரூபிக்க முடியாத காரியத்தில் அதிவியாப்தியை நீக்கும் பொருட்டு அபேதம் என்று கூறப்பட்டது. இவ்வாறு விவர்த்த பரிணமங்கட்கு வேறுபாட்டை அறிக.

## 10. உபாதான காரணங்களின் சொரூப விசாரம்

சுத்தப்பிரமம் பிரபஞ்சத்தின் உபாதானமாக அங்கீகரிக்கப்படுகின்றதா, அல்லது ஈசுவர வடிவம் உபாதானமாக

அங்கீகரிக்கப்படுகிறதா, அல்லது ஜீவ வடிவம் உபாதான மாக அங்கீகரிக்கப்படுகின்றதா?

ஈண்டு சம்க்ஷேப சாரீரகத்தை அநுசரித்தவர்கள் சிலர் முதற் பக்ஷத்தை அநுசரித்து இங்ஙனங் கூறுகின்றனர்.

## 11. சுத்தப்பிரமமே உபாதானமாம்

ஜன்மாதி சூத்திரத்தின்கண்ணும் அதன் பாஷியத்தின் கண்ணும் உபாதானத் தன்மையினை ஞேயப்பிரமத்தின் இலக்ஷணமாகக் கூறியிருத்தலின் இவ்வாறாகவே ஆன்மாவினின்றும் ஆகாசம் உண்டாயிற்று என்பது முதலிய காரண வாக்கியங்களிலுள்ள சபல (விசிட்ட) வாசகமாகிய ஆன்மா முதலிய சப்தங்கட்கு சுத்தப் பிரமத்தின்கண் இலக்ஷணையே யாம் என்க.

## 12. ஈஸ்வரனே உபாதானகாரணமா மெனல்

விவரணாநுசாரிகள் இரண்டாவது பக்ஷத்தை அநுசரித்து இங்ஙனங் கூறுகின்றனர் "எவன் சர்வஞ்ஞனோ, சர்வவித்தோ, எவனுக்கு ஞான மயந்தபசோ, அவனிடத்திலிருந்தும் இந்த இரண்ணிய கர்ப்பன் நாமம் ரூபம் அன்னமுண்டாகிறது" என்னுஞ் சுருதியினால் சர்வஞ்ஞத்வாதி விசிட்டமும் மாயா சபலமும் ஆகிய ஈஸ்வர வடிவ பிரம்மமே உபாதான மாம். இதனானேயே அதாவது ஈஸ்வரனுக்கு ஜகத்துபாதானத்தன்மை அங்கீகரித் தமையினானேயே "அந்தம் (உள்) அதன் தருமோபதேசத்தால்" யாண்டும் பிரசித்தோபதேசத்தால் என்பதாதி அதிகரணங்களில் "அதுவேரிக்கு அதுவே சாமம் அது உக்தம் அது யஜுர் அநுபிரமம் சர்வ கர்மன் சர்வ காமன் சர்வ கந்தன் சர்வ ரசன்" என்பது முதலிய சுருதியிற் கூறப்பட்ட சர்வான்மகத்தன்மை சர்வோ பாதானத்தன்மையினதீனமாய் ஜீவனில் நின்றும் வியாவர்த்தமாய் ஈஸ்வர லிங்கமாமென்று பாஷியத்தின்கண் வருணிக்கப்பட்டுள்ளது, ஜீவேஸ்வரர்களி லநு சூதமாயுள்ள சைதன்னிய மாத்திரத்திற்கு சர்வோ பாதானத்தன்மையாமேல் அது ஜீவ வியாவர்த்தமாய் ஈஸ்வரலிங்கமாகாது, சம்க்ஷேப சாரீரகத்தின்கண் மாயா சபலத்தில் உபாதானத்தன்மை நிராகரணமும் மாயா விசிட்டத்தின்கண் உபாதானத்தன்மை நிராகரண அபிப்

பிராயமாம் நிஷ்கிருஷ்ட (மாயாவுபகித) ஈஸ்வர வடிவ சைதன் னியத்தின் கண் உபாதானத்தன்மை நிராகரண பரமன்றும்.

சம்க்ஷேப சாரீரகத்தின்கண்ணேயே முதலாவது அத்தி யாயத்தினந்தத்தில் ஜகத்துபாதானத்தன்மைக்கு தத் தார்த்த விருத்தித்தன்மை கூறப்பட்டிருத்தலின்.

இவ்வாருகவே ஈஸ்வரனிடத்து இருப்பினும் காரணத் தன்மை அதனனுகதமான அகண்டசைதன்லியத்தை சாகை நுனி சந்திரனை யறிவிப்பது போன்று தடஸ்த லக்ஷணமாக இருந்து அறிவிப்பதில் சமர்த்தமாகின்றது ஆதலின் அதற்கு ஞேயப் பிரமத்தின் லக்ஷணத்தன்மைக் கூற்றும் என்க.

## 13. சீவேஸ்வரரிருவரும் உபாதானமாமெனல்

[மாயை அவித்தைகளின் பேதம் சுருதி சம்மதமாமெனக் கருதுகின்றவரது மதத்தைக் கூறுகின்றூர்]

ஆகாசாதிப் பிரபஞ்சம் ஈஸ்வரனை ஆசிரயித்த மாயை யின் பரிணமமாதலின் அதன்கண் ஈஸ்வரனே உபாதானமாம்.

அந்தக் கரணம் முதலியவையோ ஈஸ்வரனை யாசிரயித்த மாயையின் பரிணமமாயுள்ள மகா பூதங்களை ஆசிரயித்துள்ள ஜீவனது அவித்தையினுல் பண்ணப்பட்ட பூத சூக்ஷ்ம (பரிச் சின்ன)ங்களின் காரியமாம். ஆதலின் அதன்கண் இருவருக் கும் உபாதானத்தன்மையாம்.

இதனுனேயே அதாவது அந்தக் கரணுதிகளில் ஜீவனது அவித்தையின் பரிணமமான சூக்ஷ்ம பூதங்கட்கு அதன் ஆதாரத்தன்மையாலும் மாயையின் பரிணமமான மகா பூதங் கட்கு உபாதானத்தன்மையாலும் பிரவேசமிருத்தலினுலேயே.

"இவ்வாறே இந்த திருஷ்டாவினிந்தப் பதினறு கலைகள் புருஷ வடிவமாய் புருஷனை அடைந்து லயத்தினை யடைகின் றன" என்னுஞ்சுருதியின்கண் கலாசப்தத்தின் வாச்சியமான பிராணன் மனம் முதலானவைகளுக்கு தத்துவக் ஞானிக்கு விதேககைவல்ய (மோக்ஷ) சமயத்தில் வித்தையினுல் நிவர்த் திக்கத்தக்க அவித்தையின் காரியாம்ச அபிப்பிராயத்தால் வித்தையினுல் நாசம் தெரிசிப்பிக்கப்பட்டுளது.

"பதினைந்து கலைகள் பிரதிஷ்டையை அடைந்தன" அதாவது பஞ்சமகா பூதங்களில் இலயமாயின என்னும் வேறு சுருதியின்கண் வித்தையினால் நிவர்த்திக்கத்தகாத மாயையின் காரியமாகிய மகா பூதங்களின் பரிணாம வடிவ உபஷ்டம்பக(ஆசிரயம்)அம்ச அபிப்பிராயத்தாலவைகளுக்குத் தத்தங் காரணங்களில் லயந்தரிசிப்பிக்கப்பட்டது. என்று மாயை அவித்தைகளின் பேத வாதிகள் கூறுகின்றனர்.

## 14. அந்தக்கரணாதிகட்கு ஜீவனே உபாதானமாமெனல்

[அந்தக்கரணாதிகளிலிருவருக்கும் உபாதானத் தன்மை அசித்தமாம் இரு சுருதிகளின் வியவஸ்தை பாஷ்யக்காரராலேயே வேறு பிரகாரமாகவே பிரதிபாதனம் பண்ணப்பட்டிருத்தலாலென வேறு மதத்தைத் தெரிசிப்பிக்கின்றார்]

எங்ஙனம் ஆகாசாதிப் பிரபஞ்சம் ஈஸ்வரனையாசிரயித்த மாயையின் பரிணாமமாதலின் அதன்கண் ஈஸ்வரனுபாதானமோ அங்ஙனம் அந்தக்கரண முதலியவை ஜீவனை யாசிரயித்த அவித்தை மாத்திரத்தின் பரிணாமமாம் ஆதலின் அந்தக்கரணாதிகளின்கண் ஜீவனே உபாதானமாம், அந்தக்கரணாதிகளில் மாயையின் காரியமாகிய மகா பூதங்கட்குப் பிரவேசம் உடன்படாவிடின் கூறிய (புருஷனிடத்திலயத்தைக் கூறுகின்ற சுருதியும் மகா பூதங்களில் லயத்தைக் கூறுகின்ற சுருதியுமாகிய) இரு சுருதிகளின் வியவஸ்தை பொருந்தாதென்னற்க. கலைகளுக்கு ஞானத்தால் நாசத்தைக் கூறுஞ் சுருதி, தத்துவ வேத்தாவின் திருஷ்டி விஷயமாம். "கலைகள் பூதங்களில் லயத்தை அடைந்தன." வென்னுஞ் சுருதியோ தத்துவ வேத்தா மரணமாகுஞ் சமயத்தில் சமீபத்திலுள்ள புருடர்கள் நாசமாகுங் கடத்திற்குப் போன்று அவனுடைய சரீராதிகளுக்கும் பூமி முதலானவைகளில் லயத்தைக் கருதுகின்றனர். ஆதலின் தடஸ்த புருடர்களின் பிரதீதி விஷயமாமென வியவஸ்தை கலைகளின் லயத்தை விசாரிக்குமதிகரண பாடியத்தின்கண் ஸ்பஷ்டமாதலின் என. மாயா அவித்தைகளின் பேதவாதிகளுள் ஏக தேசிகளிங்ஙனம் கூறுகின்றனர்.

மாயை அவித்தைகளின் அபேதவாதிகளுள் சிலர்

ஆகாசாதிப் பிரபஞ்சங்கட்கு ஈஸ்வரனுபாதானமாமாயினும் அந்தக்கரணுதிகட்கு ஜீவனேடு தாதாத்மியப் பிரதீதியாதலால் ஜீவனே உபாதானமாம். இதனுனேயே அத்தியாச பாஷியத்தின்கண் அந்தக்கரணுதிகட்கு ஜீவனிடத்திலேயே அத்தியாசஞ் தெரிசிப்பிக்கப்பட்டுள்ளது.

விவரணக் கிரந்தத்தின் கண்ணும் பிரதி கர்ம வியவஸ்தையின்கண் அதாவது பிரமத்திற்குச் சொரூப சைதன்யத்தால் எப்போதும் எல்லாவற்றையும் விளக்குந் தன்மை வடிவ சர்வஞ்ஞத்தன்மை கூறப்பட்டபோது ஜீவனுக்குஞ் சொரூப சைதன்னியத்தாலேயே எப்போதும் எல்லாவற்றையும் பார்க்குந்தன்மை உண்டாக வேண்டுமென்னுந் தோஷம் பிராப்தமாகுங்கால் ஜீவனைக் குறித்து விஷய வியவஸ்தையை பிரதிபாதிக்கின்ற கிரந்தத்தின்கண் பிரம சைதன்னியத்திற்கு உபாதானத் தன்மையால் கடாதிகளோடு சம்பந்தமும். ஜீவ சைதன்னியத்திற்கு கடாதிகளோடு சம்பந்தமின்றேனும் அந்தக்கரணுதிகளோடு சம்பந்தம் வருணிக்கப்பட்டுளது எனக் கூறுகின்றனர்.

## 15. ஈஸ்வரன் வியாவகாரிகப் பிரபஞ்சத்திற்கும் ஜீவன் பிராதிபாசிகப் பிரபஞ்சத்திற்கும் உபாதான காரணமாமெனல்

[ஈஸ்வரனுக்கு அந்தக் கரணுதிகளின்கண் ணுமுபாதானத் தன்மையை யங்கீகரிக்கினும் அவனுக்கு காரியமாத்திரத்தின் கண் உபாதானத் தன்மையின்ரு மென்னும் விசேஷத்தைக் கூறும் பொருட்டு மற்ரோர் மதத்தை ஆரம்பிக்கின்ருர்]

"இந்த பரமாத்மாவினின்றே பிராணன் மனது சருவ இந்திரியங்களும் ஆகாசம் வாயு அக்கினி ஜலம் சர்வத்தையும் தாங்கும் பிருதிவியாதியவனைத்து முண்டாகின்றது" என்பது முதலிய சுருதியால் சம்பூர்ணமான வியாவகாரிகப் பிரபஞ்சத்திற்கு பிரமமே உபாதானமாம்.

ஜீவனே பிராதிபாசிக சுத்தி ரஜதாதிகட்கும் சொப்பனப் பிரபஞ்சத்திற்கும் உபாதானமாம் "சம்பூரணத்தின் அடைவாம் அல்லது நிரவயவத்வ சப்த விரோதமா" மென்னுமதிகரணத்தின்கண் பிரமத்திற்கு ஜகத்துபாதானத்தன்மை

ஆமேல் அதற்குச் சம்பூரணமாக ஜகத்தாகாரமாக பரிணாம முடன்படின் காரியத்தின் வேருக பிரமத்தின் அபாவம் பிராப் தமாம். ஏகதேசத்தால் பரிணாமத்தையுடன்படின் நிரவயவத் தன்மையைக் கூறுஞ் சுருதிக்கு விரோதம் பிராப்தமாம் என பூர்வபக்ஷம் உண்டாகுங்கால் "ஆன்மாவின்கண் எங்ஙனம் விசித்திரமான சிருஷ்டிகளோ அங்ஙனம்" என்னும் சூத்திரத் தால் விவர்த்தவாத அபிப்பிராயத்தினாலே சொப்பன சிருஷ் டாவாகிய ஜீவாத்மாவின் கண்ணே சொரூபத்திற்கு நாசமில் லாமலே அநேகவாகார சொப்பனப் பிரபஞ்சத்தின் சிருஷ்டி போன்று, பிரமத்தின்கண் ஆகாசாதிசிருஷ்டி பொருந்துகின்ற தென சித்தாந்தம் பண்ணப்பட்டிருத்தலின் எனச் சிலர் கூறு கின்றனர்.

## 16. ஜீவனே சர்வத்திற்கும் உபாதானமா மெனல்

சுத்தப் பிரமம் உபாதானமா? என்பது முதலிய மூன்று வினாக்களில் மூன்றாவது பக்ஷத்தை அங்கீகரித்து உத்தரங் கூறுகின்றார்.

ஜீவனே சொப்பன திருஷ்டா போன்று தன்னிடத்து ஈஸ் வரத் தன்மை முதலிய எல்லாவற்றையுங் கற்பனைசெய்வதால் சர்வ காரணமா மென்பதனையுஞ் சிலர் கூறுகின்றனர்.

## 17. ஜகத்தின் காரணத் தன்மை விசாரம்

அற்றேல் மாயையை பிரகிருதி (உபாதான) யென அறிக என்னும் சுருதியாலும் மாயையின் ஜடத்தன்மை கடாதிகளில் தொடர்ந்திருத்தலாலும் மாயையே ஜகத்திற்கு உபாதான காரணமாகத் தோற்றுகிறது ஆதலின் பிரமம் எங்ஙனம் உபா தானமாம்.

## 18. பிரமத்தின்கண் உபாதானத் தன்மையின் லக்ஷணத்தைப் பொருத்துதல்

ஈண்டு பதார்த்த தத்துவ நிர்ணயக்காரர் இங்ஙனம் சமா தானம் கூறுகின்றனர். பிரமமும் மாயையுமாகிய இரண்டு முபாதானமாமாதலினிரண்டு சுருதியும் பொருத்தமாம். சத் தையும் ஜடத் தன்மையுமாகிய இரு தருமங்களின்

தொடர்ச்சியும் பொருத்தமாம். அவற்றுள் பிரமம் விவர்த்தத் தன்மையாலுபாதானமாம். அவித்தை பரிணமித் தன்மை யாலுபாதானமாம், விவர்த்த அதிஷ்டானத்தின்கண் உபா தானத் தன்மை பாரி பாஷிகமா மென்னற்க.

தனது சொரூபத்தில் (காரியத்தின் ஆதாரமாய்) காரி யோற்பத்தியின் ஏதுத் தன்மை வடிவ உபாதானத்தின் லக்ஷ ணம் அதன்கண்ணுஞ் சமானமாயிருத்தலின். சிலர் கூறிய பிரக்கிரியையினையே ஆசிரயித்துவிவர்த்த உபாதானம் பரி ணம உபாதான மென்னு மிரண்டற்கும் பொதுவாக வேறு லக்ஷணத்தைக் கூறுகின்றனர்.

அஃதாமாறு தன்னிலும் அபின்னமாய காரியத்தையுண்டு பண்ணுந் தன்மையு பாதானத் தன்மையாம் பிரபஞ்சத்திற்கு விவர்த்தமாகின்ற சத்ரூப பிரமத்தோடும் பரிணமிக்கின்ற ஜட மான அஞ்ஞானத்தோடும் அபேதமிருக்கின்றது. கடம்சத்து கடம் ஜடம் என்னும் சமானதி கரண்ய அநுபவமுளதா தலின்.

சங்கை

"அதன் அனன்னியமாம் ஆரம்பண சப்தாதிகளால்" என்னும் சூத்திரத்தின்கண் அனன்னியத் தன்மை என்பது வேருக இல்லாமையாம். அனன்னிய மென்பதற்கு அபேத மென பொருள் கூறிலேம் மற்றோ பேதத்தை நிஷேதிக்கின் ரேம். என்னும் பாஷியபாமதி கிரந்தங்களால் பிரபஞ்சத் திற்கு பிரமத்தோடு அபேதம் நிஷேதிக்கப்பட்டிருத்தலால் அபேதத்தை அங்கீகரிக்கின் அபசித்தாந்தமாமெனில்.

சமாதானம்

பாஷிய பாமதி கிரந்தங்கட்கு பிரம வடிவ தர்மியின் சமானசத்தையினையுடைய அபேதத்தை நிஷேதித்தலின்கண் தாற்பரியமாதலால் சுத்தி ரஜதங்கட்குப் போன்று பிராதீதி கவபேதத்தை யங்கீகரிக்கினும் விரோதமின்மையின்.

## 19. பிரமத்தின் உபாதானத்தின் அசம்பவ சங்கையை வேறு பிரகாரமாக நிராகரித்தல்

[இப்போது பிரமமே உபாதானமாம் மாயை யன்று ஆத லால் லக்ஷணத்தின் அசம்பவ சங்கைக்கு அவகாசமின்று மென்று கருதுகின்றவரது இரண்டு மதங்களைக் கூறுகின்றார்]

சம்க்ஷேப சாரீரகத்தை அநுசரித்தவர்கள் பிரமமே உபாதானமாம் நிர்விகார பிரமத்திற்கு சொரூபத்தால் காரணத்தன்மை பொருந்தாமையின் மாயை துவார காரணமாம். துவாரம் காரணமன்றாயினுங் காரியத்தின்கண் தொடர்ந்திருக்கின்றது. மண்போன்று அதன் கண்ணுள்ள மிருதுத்தன்மை முதலியவற்றிற்கும் கடத்தின்கண் தொடர்ச்சி காணப்படுதலினெனக் கூறுகின்றனர்.

## 20. வாசஸ் பதியின் மதப்படி உபாதானத்தைக் கூறல்

[ஜெகத்தின் கண்ணுள்ள ஜடத்தன்மை காரணத்தின் குணமன்றும் மற்றோ சகத்தின் இயற்கையாகிய குணமாமாதலாலதன் சித்தியின் பொருட்டு மாயையின்கண் உபாதானத்தன்மையாவது காரியஅனுகத, துவார காரணத்தன்மை யாவது கற்பிக்கத்தக்கதன்று மென்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

வாசஸ்பதி மிசிரரோ ஜீவனையா சிரியித்த மாயையால் விஷயஞ் செய்யப்பட்ட பிரமம் இயற்கையாகவே ஜடத்தன்மைக்கு ஆசிரயமான பிரபஞ்ச வடிவமாக விவர்த்திக்குந் தன்மையாலு பாதானமாம் ஆதலின் மாயை சககாரி மாத்திரமாம் காரியத்தின்கண் அநுகத மானதுவார காரணமன்றும். என்று கூறுகின்றார்.

## 21. சித்தாந்த முக்தாவலிகாரர் மதப்படி உபாதானத்தைக் கூறல்.

[இப்போது மாயைக்கு முக்கிய உபாதானத்தன்மையாமென அங்கீ கரித்தும் பிரம லக்ஷணத்தின் அசம்பவத்தைப் பரிகரிக்கின்றார்.]

சித்தாந்த முக்தாவலிக்காரரோ மாயாசத்தியே ஜகத்தின் உபாதானமாம் பிரமமன்றும். அந்தவிந்த பிரமம், அபூர்வம், (காரணமற்றது) அநபரம் (காரியமற்றது) பாஹியமற்றது அதற்கு காரியமும் கரணமும் இன்றும். என்பதாதி சுருதியினால் ஜகத்து பாதானமான மாயையின் அதிஷ்டானத்தன்மையால் உபசாரத்தாலுபாதானமாம் அத்தகைய

உபாதானத்தன்மையே லக்ஷணத்தின்கண் கருதப்பட்டதாம் எனக் கூறுகின்றனர்.

## 22. ஜீவேஸ்வரர்களின் சொரூபத்தைப்பற்றிய வினவும் ஜீவஈஸ்வரர்களின் சொரூபவிசாரமும்

[இப்போது சீவேஸ்வரர்களின் சொரூபத்தை நிர்ணயம் செய்வதற்கு சங்கிக்கத் தொடங்குகின்றார்]

அற்றேல் ஈஸ்வரன் யார்? ஜீவனென்பவன் யாவன், ஈண்டுப் பிரகடார்த்த விவரணக்கிரந்தத்தின்கண் கூறப்பட்டுள்ள சமாதானம்

அனாதியும் அநிர்வாச்சியமும் பூதங்களின் காரணமும் சின்மாத்திர சம்பந்தியுமாயிருப்பது மாயையாம். அதன்கண் சேதனத்தின் பிரதிபிம்பம் ஈஸ்வரனும் அந்த மாயையினது பரிச்சின்ன அனந்த பிரதேசங்களாயும் ஆவரண விட்சேப சக்திகளை யுடையனவாயுமுள்ள அவித்தைகளில் சித்தின் பிரதிபிம்பம் ஜீவனும் பிரதேசங்கள் = அவயவங்கள். பரிச்சின்ன அனந்த பிரதேசங்கள் என்பதின் விளக்கம் ஆவரண விக்ஷேப சக்திகளை உடையனவென்பது, அபிப்பிராயம் இதுவாம் படத்திற்கு ஆரம்பகமாக தந்துக்கள் இருப்பனபோன்று மாயைக்கு பிரதேசங்கள் இன்றாம். மாயை அனாதியாதலின், மற்றோ மாயையின்கண் விக்ஷேப ஆவரணசக்திகள் அளவின்றியிருத்தலின் விக்ஷேப ஆவரணசக்திகளை உடைய பாகங்களே பிரதேசங்களௌன விவக்ஷிக்கப்பட்டன

ஈண்டு விக்ஷேபபதத்தால் அவ்வவ் ஜீவர்களது அசாதாரணதுக்கம் முதலியவை விவக்ஷிக்கப்பட்டன அவற்றின் அனுகூலமானசக்தி விக்ஷேபசக்தி [ஒரேமூலப் பிரகிருதியின்கண் பிரதேச பிரதேசி பாவத்தால் (அம்சாம்சி பாவத்தால் அல்லது அவயவ அவயவி பாவத்தால்) அநிர் வசனீய பேதத்தைக் கற்பித்து ஜீவேஸ்வரர்கட்கு பிரதிபிம்பத் தன்மை கூறப்பட்டது, இப்போது அதன்கண்ணேயே வேறு பிரகாரத்தால் வடிவ (சொரூப) பேதத்தைக் கற்பித்து அதனை உபபாதனஞ் செய்கின்றார்.]

தத்துவ விவேககிரந்தத்தின்கண்ணே முக்குண வடிவினதாகிய மூலப் பிரகிருதிக்கே "ஜீவேஸ்வரர்களை ஆபாசமாகச்

செய்கின்றது. மாயையு மவித்தையுந்தானேயாகின்றது" என்னுஞ் சுருதியால் இரண்டு வடிவங்கள் சித்தித்துள்ளன, ரஜோகுணதமோ குணங்களால் அமிழ்த்தப்படாத சுத்த சத்துவப் பிரதானம் மாயையாம் அவைகளால் அமிழ்த்தப் பட்ட மலின சத்துவம் அவித்தையாமென மாயை அவித்தை களின் பேதத்தைக் கற்பித்து மாயையில் பிரதிபிம்பம் ஈஸ்வர னும் அவித்தையிற் பிரதிபிம்பம் ஜீவனுமென்று கூறப்பட்டுள் ளது சத்துவ குணத்தின் சுத்தியால் மாயை எனவும் அசுத்தி யால் அவித்தையெனவுங் கூறி இப்போது ஆவரண சத்திப் பிரதானத் தன்மையால் அவித்தை எனவும் விக்ஷேப சத்திப் பிரதானத் தன்மையால் மாயை எனவுங் கூறுகின்றனர்.

ஒரு மூலப் பிரகிருதியே விக்ஷேபப் பிரதானத் தன்மை யால் மாயை எனப் பெயரிய தாய் ஈஸ்வர உபாதியாம் ஆவ ரணப் பிரதானத் தன்மையால் அவித்தையெனப் பெயரிதாய் ஜீவ உபாதியாம் இதனையேயே அதாவது ஜீவனுக்கு ஆவரண சக்தியையுடைய உபாதியையுடையதாந் தன்மையாலேயே ஜீவேஸ்வரர்களுக்கு உபாதியாயுள்ள மூலப் பிரகிருதிக்கு ஜீவேஸ்வரர்கட்குப் பொதுவான சின்மாத்ரசம்பந்தித் தன் மையிருப்பினும் ஜீவனுக்கே நானஞ்ஞன் என்னும் அஞ்ஞான சம்பந்தத்தினனுபவமாம் ஈஸ்வரனுக்கு இன்றாமென ஜீவேஸ் வரர்கட்கு வேற்றுமை சிலவிடத்து பிரதிபாதனம் செய்யப் பட்டது.

வேறு மதத்தினைக் கூறுகின்றார்.

சம்க்ஷேப சாரீரகத்தின்கண்ணே காரியோபாதியையுடை யவன் ஜீவன் காரண உபாதியையுடையவன் ஈஸ்வரன் என் னுஞ் சுருதியை அநுசரித்து அவித்தையின்கண் சித்தின் பிரதி பிம்பம் ஈஸ்வரனும் அந்தக்கரணத்தின்கண் சித்தின் பிரதி பிம்பம் ஜீவனும், சங்கை அவித்தையினால் அவச்சின்ன சைதன்னியமே ஈஸ்வரனாகுக. அங்ஙனமே அந்தக்கரணவச் சின்ன சைதன்னியமே ஜீவனாகுக. அவையினும் வேறாக பிரதி பிம்பத்தைக் கற்பிப்பதன்கண் கௌரவ தோஷம் வருதலா லென்னுங் கருத்தாலவச்சேதவாதி வினவுகின்றான் அற்றேல் அந்தக் கரண வடிவ திரவியத்தால் கடத்தாலாகாசத்திற்குப் போன்று. சைதன்னியத்திற்கு அவச்சேதம் சம்பவித்தலால் அதனவச்சின்ன சைதன்னியமே ஜீவனாகுக எனின் சமாதா

னம் இவ்வுலகத்தும் பரலோகத்தும் ஜீவபாவத்தால் வரைந்து கொள்ளப்பட்ட சைதன்னியப் பிரதேசம் வெவ்வேருய் இருத்தலால், செய்ததின் அழிவும் செய்யாததினடைவுமாகிய தோஷம் பிராப்தமாதலின் பிரதிபிம்பமோ உபாதியின் கமனு கமனங்களில் அவச்சேத்தியம் போன்று வேறுபடுகிறதில்லை ஆதலின் பிரதிபிம்ப பக்ஷத்தின்கண் கூறிய தோஷமின்ரு மென்று கூறப்பட்டுள்ளது இங்ஙனங் கூறிய, ஜீவேஸ்வரர் களுக்குப் பிரதிபிம்பத் தன்மை பக்ஷங்களில் பிம்பஸ்தான மான யாதொரு பிரமமுண்டோ அது முத்த புருஷராலடையப் பட்ட சுத்த சைதன்னியமாம்.

சித்திரதீபத்தின் கண்ணே ஜீவன் ஈஸ்வரன் விசுத்த சேதனமென்று மூவிதப் பிரக்கிரியையை பரித்தியாகஞ் செய்து, எங்ஙனம் கடாவச்சின்ன வாகாசம் கடாகாசம் கடத்தை ஆசிரயித்துள்ள ஜலத்தில் மேகநக்ஷத்திரங்க ளோடுகூடி பிரதிபிம்பித்துள்ள ஆகாசம் ஜலாகாசம். அனவச் சின்ன ஆகாசம் மகாகாசம் மகாகாச மத்தியி லுள்ள மேகமண்டலத்தின் கண் விருஷ்டிவடிவகாரியத்தால் அநுமிக்கத்தக்கவையும் துஷாரவடிவினதுமான (ஜலவடிவ) அதன் அவயவங்களில் பிரதிபிம்பித்துள்ள ஆகாசம் மேகாகாச மாம் என வாஸ்தவமாக ஒன்ருயிருப்பினும் ஆகாசத்திற்கு நான்குவகையோ அங்ஙனம் தூலசூக்ஷும இரு தேகங்கட்கு அதிஷ்டான மாயிருப்பது மவற்ருல்வளை பட்டதுமான சைதன்னியம் கொல்லன் அடைகல் போன்று நிர்விகாரமா யிருப்பதால் கூடஸ்தனும், அதன்கண் கற்பிக்கப்பட்ட அந்தக்கரணத்தின்கண் பிரதி பிம்பித்துள்ள சைதன்னியம் சம்சாரசம்பந்தி ஜீவனும் அனவச்சின்ன சைதன்னியம் பிரமமாம், பிரமத்தை ஆசிரயித்துள்ள மாயையின் கண் ணுள்ள சர்வ பிராணிகளின் புத்தி வாசனைகளில் பிரதி பிம்பித் துள்ள சைதன்னியம் ஈஸ்வரனுமென சைதன்னியத்திற்கு நான்கு வகையைக்கற்பித்து அந்தக்கரணமும் புத்தி வாசனை யோடு கூடிய அஞ்ஞானமுமாகிய உபாதிகளின் பேதத்தால் ஜீவேஸ்வரர்களின் வேற்றுமை தெரிசிப்பிக்கப்பட்டுளது. சித்திர தீபத்தின்கண் கூறப்பட்ட மற்ருேர் விசேஷ மிதுவாம் நான்குவித சைன்னியங்களுள் ஜீவன் நானென விளங்குகிறவனுய் கூடஸ்தனிடத்தில் அசங்க ஆனந்தரூப விசேஷாம்சம் அவித்தையால் மறைக்கப் பட்டபோது சுத்தியில் ரஜதம்போன்று அத்தியஸ்தனும் இதனுனேயே

அதாவது ஜீவனுக்குகூட ஸ்தனிடத்து அத்தியஸ்தத் தன்மையைக் கற்பித்தலினுலேயே இதந்தை ரஜதத்தன்மைகட்குப் போன்று அதிஷ்டானத்தின் சாமான்ய அம்ச வடிவினதும் அத்தியஸ்தத்தின் விசேஷாம்ச வடிவினதுமாகிய. தானென்னும் தன்மை நான் என்னுந் தன்மைகளுக்கு நான்தான் செய்கின்றேனென்பது முதலியவிடங்களில் தொடர்ச்சியாகவே விளக்கமாம் நானென்னுந் தன்மை அத்தியஸ்தத்தின் விசேஷாம்ச வடிவமாம் ஒரு புருஷனுக்கு மற்ருேர் புருஷனிடத்தில் நானென வியவகார மின்மையால் வியாவர்த்த மாதலின் (நீக்கப்பட்டதாதலின்) தானெனுந்தன்மை பிறவற்ருேடும் சம்பந்தித்திருப்பதால் அதிஷ்டானத்தின் சாமான்ய அம்ச வடிவினதாம் தேவதத்தன்தான் செல்கின்ருனென மற்ருேர் புருஷனிடத்தும் வியவகரித்தலால்அநுவிர்த்தமாயிருத்தலின். இவ்வாறு பரஸ்பரம் அத்தியாசத்தினுலேயே உலகருக்கு, கூடஸ்தஜீவர்களின் பேத அனுபவமின்ரும். அவர்கட்கு பேதமோ பிரகதாரண்யக உபநிடதத்தின்கண் பிரஞ்ஞான கனவான்மாவே இந்தப் பூதங்களினின்று முற்பன்னமாகி அதாவது தேகேந்திரியாதிகளின் சங்காதவடிவ உபாதிகளின் உற்பத்தியால் உற்பத்தியை யடைந்து அவைகளை பின்பற்றியே அதாவது அவைகளின் நாசத்தால் நாசத்தை அடைகின்றன. என ஜீவனது அபிப் பிராயத்தால் உபாதிநாசத்தின் பின் நாசத்தை பிரதிபாதித்தலாலும் இவ்வான்மா அவிநுசியென கூடஸ்த அபிப்பிராயத்தால் விநாசமின்மையைப் பிரதிபாதித்தலாலும் ஸ்பஷ்டமாம். கூறிய சுருதியால் பிரதிவிம்ப ஜீவனுக்கு விநாசத்தை அங்கீகரிக்கில் வேறு சுருதியோடு விரோதமாமென வினவுகின்ருன்.

நானென்னும் சொற்பொருளாய ஜீவனுக்கு விநாசத்தை யுடன்படின் அவிநாசியாகிய பிரமத்தோடு அபேதம், நான் பிரமமாயிருக்கிறேனென்னும் வாக்கியத்தா லெங்ஙனம் பிரதிபாதிக்கப் படுகின்றது.

### சமாதானம்

இஃது முக்கிய சாமாநுதிகரண்யமன்ரும். மற்ருே பாத சாமாநுதிகரண்யமாம். எங்ஙனம் யாதொரு இக்கட்டை கள்வனுமென கள்ளத் தன்மை ஞானத்தால் கட்டைத் தன்மை ஞானம் நிவர்த்திக்கப்படுகின்றதோ அங்ஙனம் நான் பிரமமாகின்றேனென கூடஸ்த பிரம சொரூப ஞானத்தாலத்தியஸ்த ஜீவத் தன்மை நிவர்த்திக்கப்படுகின்றது யாதொரு

இந்ததாணு உண்டோ அது புருஷனே என புருஷ ஞானத்தால் ஸ்தாணு ஞானம் நிவர்த்தியாவது போன்று நான் பிரமமாகின்றேனென்னும் ஞானத்தால் சம்பூரணமான அகம்புத்தி நிவர்த்தியாகின்றது என்னும் நைஷ்கர்மிய சித்தியின் வசனத்தாலென்க. விவரணம் முதலிய கிரந்தத்தில் கூறிய முக்கிய சாமானுதி கரண்யத்தையுடன்படினே அப்போது ஜீவ வாசகமாகிய அகம் சப்தத்திற்கு லக்ஷணையினுல் கூடஸ்த பரத் தன்மையாகுக. அத்தியஸ்தமின்றிய கூடஸ்தனுக்கு பிரம அபேதத்தில் யோக்கியத் தன்மையிருத்தலின்.

மேகாகாசத்திற்குச் சமானமாய் புத்தி வாசனைகளில் பிரதிபிம்ப வடிவமாய் யாதொரு ஈஸ்வரன் சொல்லப்பட்டானே அவன் சுழுத்தியவஸ்தையுடையவன் அபேதமாயிருப்பவன் பிரக்ஞானகனன் ஆனந்தமயன் ஆனந்தத்தை புஜிப்பவனென மாண்டுக்கிய சுருதியால் சித்தித்துள்ள சுழுத்தி காலத்திலுள்ள ஆனந்தமயனும். [சுழுத்தி காலத்திலுள்ள ஆனந்தமயன் ஜீவனுதலாலவனுக்கு ஈஸ்வரத் தன்மை யசித்தமாமென்னுஞ் சங்கைக்கு சுழுத்தி காலத்திலுள்ள ஆனந்தமயனுக்கே ஈஸ்வரத் தன்மையை வாக்கிய சேஷமானது தெரிசிப்பிக்கின்றதெனக் கூறுக்கின்ருர்] அம்மாண்டுக்கிய சுருதியின்கண்ணேயே ஆனந்தமயனை பிரதிபாதித்ததின் பின்பு. 'இவனே சர்வேஸ்வரன் இவனே சர்வக்ஞன் இவனே அந்தர்யாமி இவனே எல்லாவற்றிற்கும் உபாதானன். பூதங்களினுடைய உற்பத்தி நாசமிவனிடத்தினின்றேவுண்டாகின்றனவாதலின்" என்னுஞ் சுருதியாலும் சகல வஸ்துக்களையும் விஷயஞ் செய்கின்ற சகல பிராணிகளின் புத்திவாசனைகளையுபாதியாக உடைய ஈஸ்வரனுக்குச் சர்வக்ஞத்தன்மையும் அதனுனேயே சர்வ கருத்துருத்தன்மை முதலியதும் பொருந்துதலினுலுமென்க.

அநுபவ விரோதமாமென வினவுகின்ருன் நமது புத்தி வாசனையோடு கூடிய ஒருவனுக்கும் சர்வக்ஞத்தன்மை அனுபவிக்கப்படவில்லையே எனின். அற்றன்று வாசனைகள் பரோக்ஷமாதலால் வாசனையுபகிதமான ஆனந்தமயனுக்கும் பரோக்ஷத்தன்மையா மாதலின், பஞ்சதசியில் பிரமானந்தமெனப் பெயரிய பிரகரணத்தின்கண்ணே சுழுத்தி சம்பந்தத்தால் மாண்டுக்கிய உபநிடதத்தில் கூறப்பட்ட ஆனந்தமயன் ஜீவனென்று கூறப்பட்டுள்ளது ஆண்டுகூறிய பிரகாரத்தை

தரிசிப்பிக்கின்ருர் எப்போது ஜாக்கிராவஸ்தை முதலியவைகளில் போகத்தைக் கொடுக்குங் கருமங்கள் க்ஷயமாகுங்கால் நித்திரை வடிவமாக விலீனமான அந்தக்கரணம் மீண்டும் போகத்தைக் கொடுக்கும் கருமவசத்தால் விழிப்புண்டாகுங் காலையில் கனமாகின்றதோ அப்போது அவ்வந்தக்கரணத்தை உபாதியாக உடைய ஜீவன் விக்ஞானமயனென்று கூறப்படுகின்ருன் அவனே முன்பு சுழுத்தி காலத்தில் விலீன அவஸ்தையோடு கூடிய அந்தக் கரண உபாதியுடையவனுகி ஆனந்தமயனென்று சொல்லப்படுகின்ருன்.

அவனே மாண்டுக்கியத்தின்கண் சுழுத்தியவஸ்தையுடையவனென்பதாதி வசனத்தால் போதிக்கப்பட்டுளன் என்க. இவ்வாருகும்போது அவனுக்கு சர்வேஸ்வரத்தன்மை முதலியவற்றைக் கூறுதல் எங்ஙனம் பொருந்துமெனின், சுழுத்திகால சம்பந்தி ஜீவவடிவ ஆனந்தமயனுக்கு வாஸ்தவமாக ஈஸ்வரத்தன்மை யின்றேனும் ஈஸ்வரனேடு அபேத அபிப்பிராயத்தால் அவனுக்கு ஈஸ்வரத்தன்மை கூறுதல் பொருந்துகின்றதெனப் பரிகரிக்கின்ருர்.

இங்ஙனம் பரமான்மாவிற்கு அதிதெய்வம் அத்தியாத்மம் †என சவிசேஷமாக மூன்று மூன்று வடிவங்கள் இருக்கின்றன அவற்றுள் அதிதெய்வம் மூன்றும் சுத்தசைதன்னியமுமென நான்கு வடிவங்கள் சித்திர படதிருஷ்டாந்தத்தால் சித்திர தீபத்தின்கண் சமர்த்தனம் செய்யப்பட்டுள்ளன அஃதாமாறு எங்ஙனம். இயற்கையாக வெண்மையாயுள்ள வஸ்திரம் தௌதமெனவும் அன்னத்தால் பூசப்பட்டதாகி கட்டிதமெனவும் மைமுதலான விகாரத்தோடு கூடினதாகி லாஞ்சிதமெனவும் வர்ணத்தால் பூர்ணம் செய்யப்பட்டதாகி இரஞ்சிதமெனவும் நான்கு அவஸ்தைகள் ஒரே சித்திரபடத்திற்கு இருப்பது போன்று. பரமான்மா மாயையதன் காரிய வடிவ உபாதியற்றதாகி சுத்தமெனவும் மாயையோடு கூடியதாகி ஈஸ்வரனெனவும் அபஞ்சீகிருத பூதகாரிய சமஷ்டி சூக்ஷும சரீரத்தோடு கூடினதாகி இரண்யகர்ப்பனெனவும் பஞ்சீகிருதபூதங்களின் காரியமாகிய சமஷ்டிதூலசரீரத்தோடு கூடினதாகி விராட்புருடனெனவும் நான்கு அவஸ்தைகள்

† அதிதெய்தம் என்பதற்கு தேவதை வடிவங்கள் என்பது பொருள். அத்யாத்மமென்பதற்கு ஜீவவடிவங்கள் என்பது பொருள்.

ஓரே பரமான்மாவிற்குப் பொருந்துகின்றது இந்த சித்திர படஸ்தானத்திலுள்ள இப்பரமான்மாவின்கண் சித்திரஸ்தானத்திலுள்ளது. தாவரஜங்கமவடிவ சகல பிரபஞ்சமாம்.

எங்ஙனம் சித்திரத்திலுள்ள மனிதர்களுக்கு சித்திரத்தின் ஆதாரவஸ்திர சமானமாக போலிவஸ்திரங்கள் எழுதப் படுகின்றனவோ அங்ஙனம் பரமான்மாவில் அத்தியஸ்தமான தேகிகட்கு அதிஷ்டான சைதன்னியத்தின் சமானமாகச் சிதா பாசர்கள் கற்பிக்கப்படுகின்றார்கள். அவர்கள் ஜீவனென்னும் நாமமுடையவர்களாய்ச் சமுசாரத்தில் சுழலுகின்றார்கள்.

அத்தியான்மமோ விசுவன் தைஜசன் பிராக்ஞன் என்னும் பேதத்தால் மூன்று வடிவங்களாம் அவற்றுள் சுழுத்தியின்கண் அந்தக் கரணம் லீனமாகுங்கால் அஞ்ஞான மாத்திரத்திற்குச் சாக்ஷி பிராக்ஞனும் இவன்தான் ஈண்டு ஆனந்தமயனுகக் கூறப்பட்டுள்ளான். சொப்பனத்தில் வியஷ்டி சூக்ஷ்ம சரீர அபிமானி தைஜசன் ஜாக்கிரத்தில் வியஷ்டி நூல சரீர அபிமானி விசுவன். ஆண்டு மாண்டுக்கிய சுருதி நான் என்னும் அநுபவத்தில் விளங்குகின்ற ஆன்மாவிற்கு விசுவ தைஜச பிராக்ஞ துரியங்களாகிய அவஸ்தாவிசேஷ வடிவங்களான நான்கு பாதத்தை "அந்த இவ்வான்மா நான்கு பாதமுடையது" என்று ஆரம்பித்து பூர்வ பூர்வ பாதங்களை லயம் செய்வதால் நிஷ்பிரபஞ்ச பிரம வடிவ துரிய பாதத்தின் ஞானம் அனுயாசமாய் உண்டாகும் பொருட்டு தூலம் சூக்ஷ்மம் சூக்ஷ்ம தரம் என்னும் உபாதிகளின் சமத் தன்மையால் விராட் புருடனை விசுவனிடத்தும் இரண்ய கர்ப்பனை தைஜசனிடத்தும் அந்தர் யாமியை பிராக்ஞனிடத்தும் அடக்கி சாக்கிராவஸ்தையை உடையவன் வெளி ஞானமுள்ளவன் என்பதாதியால் விசுவன் முதலிய பாதங்களை நிருபணஞ் செய்தது. ஆகையால் பிராக்ஞ சப்தத்தால் பகரப் பெற்ற ஆனந்தமயனிடத்தில் மாயா விசிட்ட பரமேஸ்வரனுக்கு அந்தர்ப்பாவத்தை அபிப்பிராயஞ் செய்து அவனுக்குச் சர்வேஸ்வரத் தன்மை முதலிய ஈஸ்வர தர்மங் கூறினதாம் என்க. இவ்வாறே பகவற் பாதரான பாஷியக்காரரால் கௌட பாதரால் செய்யப்பட்ட மாண்டுக்கிய காரிகையின் வியாக்யானத்தில் கூறப் பெற்றுள்ளது.

[சித்திரதீபத்தில் கூறப்பட்ட சேதனத்தின் நால் வகையை விடுத்து வேறு கிரந்தத்தின்கண் ஜீவன் ஈஸ்வரன் விசுத்த சேதனமெனப் பெரியோரது வசனத்தால் சித்தித் துள்ள சேதனத்தின் மூவிதத் தன்மையை ஆசிரயித்தே ஜீவ னுக்கு மூவிதவிசேஷம் கூறப்பட்டதெனக் கூறுகின்றார்]

திருக்கு திருசிய விவேகத்தின்கண்ணே சித்திரதீபத்தில் பிரதிபாதனம் செய்யப்பட்ட கூடஸ்தனை ஜீவகோடியிலுள் ளடக்கி சித்தின் மூவித பிரக்கிரியையே ஆசிரயிக்கப்பட்ட தென்பது விசேஷமாம்.

ஆண்டு கூறப்பட்டதாவது சமுத்திர முதலியவற்றில் ஜலத்தின்மேல் அலையும் அலையின்மேல் குமிழியும் இருப்பன போன்று ஒன்றின் மேலொன்றைக் கற்பித்தலால் அதாவது பாரமார்த்திக ஜீவன்மீது வியாவகாரிக ஜீவனையும் வியாவ காரிக ஜீவன்மீது பிராதிபாசிக ஜீவனையும் கற்பித்தலால் ஜீவன் பாரமார்த்திகன் வியாவகாரிகன் பிராதிபாசிகனென மூன்று விதமாம் அம்மூவித ஜீவருள் இருதேகங்களுக்குள் வளைபட்ட சைதன்னியம் பாரமார்த்திக ஜீவனும், அதன்கண் அவச்சேதகமாகிய தேகங்களுக்கு கற்பிதத் தன்மையிருப்பி னும் அவச்சேத்தியமாகிய கூடஸ்தனுக்கு அகற்பிதத் தன்மை யிருத்தலால் பிரமத்தோடு அபேதமிருத்தலின், கூடஸ்த ஆன் மாவை மாயை மறைத்திருக்கின்றபோது அவ்வான்மாவின் கண்ணே கற்பிக்கப்பட்ட அந்தக் கரணத்தின்கண் யாதொரு சிதாபாசனுண்டோ அவன் அந்தக் கரணத்தோடு தாதாத்மிய மாயிருத்தலால் நான் என்று அபிமானஞ் செய்கின்றவனும் வியாவகாரிக ஜீவனும். அவன் கற்பிதனுயினும் வியவகார முள்ள வரை தொடர்ந்திருத்தலின். சொப்பனத்தில் வியாவ காரிக ஜீவனை மறைத்திருக்கின்ற மாயையின் அவஸ்தா விசேஷ வடிவ நித்திரையால் கற்பிக்கப்பட்ட சொப்பனதே காதிகளில் நான் என்னும் அபிமானமுடையவன் பிராதிபாசிக ஜீவனும் சொப்பனப் பிரபஞ்சத்தோடுகூட அதன் திருஷ்டா வாகிய பிராதிபாசிக ஜீவனுக்கும் சாக்கிர காலத்தில் நிவர்த்தி யுண்டாதலின் என்க. இவ்வாறு ஈஸ்வரனைப் பிரதிபிம்ப மாகக் கொண்ட வாதிகளுடைய பக்ஷங்கள் தெரிசிப்பிக்கப் பட்டன.

விவரணத்தை அநுசரித்தவர்களோ இங்ஙனம் கூறுகின் றனர் "பேதஹேதுவாய் அஞ்ஞானமானது அத்தியந்தம் நாச

மடையுங்கால் பிரமத்திற்கும் ஆத்மாவிற்கும் மூன்று காலத்திலும் இல்லாத பேதத்தை எவன் செய்வான்" என்னும் ஸ்மிருதியால் ஒரே அஞ்ஞானத்திற்கு ஜீவேஸ்வர வேற்றுமையின் நிமித்தத் தன்மையை பிரதிபாதித்திருத்தலால் பிம்பப் பிரதிபிம்ப பாவத்தால் ஜீவேஸ்வரர்களுக்கு வேற்றுமையாம் இருவருக்கும் பிரதிபிம்ப பாவத்தால் வேற்றுமை இன்றும் இரண்டு உபாதிகளின்றி இருவருக்கும் பிரதிபிம்பத் தன்மை பொருந்தாமையின் அவர்களுள்ளும் பிரதிபிம்பன் ஜீவனும் பிம்பஸ்தானத்திலுள்ள சேதனம் ஈஸ்வரனும். இவ்வாறாகும் போதுதான் இலௌகிக பிம்பப் பிரதி பிம்ப திருஷ்டாந்தத்தால் ஈஸ்வரனுக்கு சுதந்தரத் தன்மையும் சீவனுக்கு பரதந்திரத்தன்மையும் பொருந்துகின்றது, எங்ஙனம் உலகின்கண் உள்ள ஒரு புருடனானவன் தனது பிரதிபிம்பத்தின்கண்ணுள்ள நேர்கோணல் முதலான விகாரங்களை பிம்பபூத தன்னுடைய அதீனமாகக் காண்கின்றவனாய் விளையாடுகின்றனனோ அங்ஙனம் பிரமமும் ஜீவனிடத்திலுள்ள விகாரங்களைப் பிராணிகளின் கன்மானு சாரத்தால் தன்னால் பிரேரிக்கப்பட்டவையாகக் காண்கின்றதாய் விளையாடுகின்றது என கல்பதருவில் கூறிய பிரகாரத்தால் லோகம் போன்று (சார்வபௌமனுக்குப் போன்று) கேவலம் லீலா மாத்திரமா மென்னும் சூத்திரமும் பொருந்துகின்றது.

[அஞ்ஞானம் ஜீவனுக்கு உபாதியாயிருக்குமானால் அந்தக்கரணத்தை ஜீவனுக்கு உபாதியாக வர்ணித்தல் வியர்த்தமா மென்னுமிடத்துக் கூறுகின்றார்]

அஞ்ஞானத்தில் பிரதிபிம்பித்துள்ள ஜீவனுக்கு அஞ்ஞானத்தின் பரிணாம விசேஷமான அந்தக்கரணம் விசேஷ அபிவியக்திஸ் தானம், எங்கும் பரவியுள்ள சூரியப் பிரகாசத்திற்குக் கண்ணாடி அபிவியக்திஸ்தான மாயிருப்பது போன்று அந்தக்கரணத்திற்கு ஜீவனது உபாதித்தன்மை வியவகாரமும் நிகழ்கின்றது இத்துணையால் அஞ்ஞானவடிவ உபாதியின் பரித்தியாகமுமின்றாம். அந்தக் கரணமாகிய உபாதியினால் பரிச்சின்னமாகிய சைதன்னியத்திற்கே ஜீவத்தன்மையுடன்படின்யோகிக்கு காய வியூகத்தின் அதிஷ்டானத் தன்மை பொருந்தாமையின்.

காயவியூக அதிஷ்டானத்தன்மையாவது ஒரே காலத்தில் அநேக சரீரங்களின் நியந்திருத்தன்மையாம் அது யோகி

யின் யோகப் பிரபாவத்தாலுண்டு பண்ணப்பட்டசர்வ சரீரங்களில் ஒரே காலத்தில் நிலைபெற்றிருக்கின்ற யோகிக்குச் சொல்லத்தக்கதாம். அந்தக் கரணவைச்சின்ன சைதன்னிய வடிவ யோகிக்கு அதுபொருந்தாது. அதற்குப் பரிச்சின்னத் தன்மை உண்மையின் அஞ்ஞானத்தை ஜீவ உபாதியாக உடன் படிவே அது பொருந்தும் அதற்கு வியாபகத் தன்மை யுண்மையால் அதனை உபாதியாக உடைய யோகி ஜீவனுக்கும் ஒரே காலத்தில் சர்வ சரீரங்களிலும் சான்னித்தியம் பொருந்துதலின். இவ்வாருகவே சுருதியின் அபேக்ஷயால் ஸ்மிருதிக்கு துர்ப்பலத் தன்மை யிருப்பினும் காய வியூகத்தின் அதிஷ்டானத் தன்மையின் அநுபபத்தியோடு கூடிய ஸ்மிருதிக்கு பிரபலத் தன்மை யிருத்தலால் அதனை யநுசரித்து காரியோபாதி யுடையவன் ஜீவனென்னுஞ் சுருதியின் கண் காரியோபாதி பதமானது சொருபத்தைக் கூறுதல் மாத்திரத்திற்ருற்பரியமாம் காரண உபாதியை நிவர்த்தி செய்கின்ற விசேஷண பரமன்ரும்.

### சங்கை

யோகப்பிர பாவத்தால் யோகியினந்தக் கரணம் காய வியூகங்களில் அபிவியத்தியின் யோக்கியமாய் வியாபகத் தன்மையை அடைகின்றது ஆதலின் அவ்வந்தக் கரணவைச் சின்ன யோகி ஜீவனுக்குகாய சமூகங்களின் பிரேரகத்தன்மை பொருந்துகின்றது எனின்.

### சமாதானம்

“தீபம் போன்று பிரவேசமாம் அங்ஙனமே தெரிசிப்பிக்கின்றது” என்னும் சூத்திர பாஷ்யாதிகளில் காய சமூகத்திலுள்ள ஒவ்வொரு தேகத்தின்கண்ணும் சக்ஷுராதி போன்று வேறு வேறந்தக் கரணத்திற்கே யோகப்பிர பாவத்தால் சிருஷ்டியை வருணித்திருத்தலின். அதாவது ஒரே அந்தக் கரணத்திற்கு காய சமூகங்களில் அபிவியத்தி யோக்கியமான விபுத் தன்மையை அங்கீகரிக்கின் பாஷ்யம் முதலிய வற்றிற்கு விரோதமாம் என்பது கருத்து. பிரதிபிம்பத்தின்கண் பிம்பத்தினின்றும் பேதமாத்திரம் அத்தியஸ்த மாதலால் சொருபமாக அதற்கு (பிரதிபிம்பத்திற்கு) சத்தியத் தன்மை யுண்மையின் பிரதிபிம்ப ரூப ஜீவனுக்கு முத்தியினடைவு அசம்பவமின்ருமாதலின் பிரதிபிம்பத்தினும் வேருக முத்திப்

பிராப்தியின் பொருட்டு அவச்சின்ன வடிவ வேறு ஜீவனவது பிரதிபிம்ப ஜீவனினும் வேருய் ஜீவேஸ்வர விலக்ஷணமாய் கூடஸ்தமெனப் பெயரியதாயுள்ள வேறு சைதன்னியமாவது கற்பிக்கத் தக்கதின்ரும் "ஹேமைத்திரேயி? இவ்வான்மா அவினசி" என்னுஞ் சுருதி ஜீவனுக்கு அதனது உபாதி நீங் குங் காலத்தில் பிரதிபிம்பத்தன்மை நீங்கினும் சொரூபம் நாசமாகின்றதில்லை யென்று தாற்பரியமுடையதாம் அதனி னும் வேருககூடஸ்தனெனப் பெயரிய வேறு சைதன்யமுள தென்பதில் தாற்பரியமுடையதன்ரும் ஜீவனது உபாதியாகிய அந்தக் கரணதியால் அவச்சின்னமான சைதன்யமே பிம்ப பூத ஈஸ்வரனும் "எவன் விக்ஞானத்தில் (ஜீவனிடத்திலிருந்து கொண்டு)" என்பதாதி சுருதியால் ஈஸ்வரனுக்கே ஜீவனது சமீபத்திலிருந்து அவனை பிரேரிக்குந் தன்மையால் காரியத்தி னுள் இருப்புக் கேட்கப்படுதலின் என்க.

[இவ்வாறு சைதன்னியத்திற்கு பிரதிபிம்பத் தன்மையை அங்கீகரிக்கின்றவரது மத பேதத்தினல் ஜீவேஸ்வர வேற் றுமை தெரிசிப்பிக்கப்பட்டது இப்போது பிரதிபிம்பத் தன் மையை அங்கீகரியாதவரது மதத்தால் ஜீவேஸ்வர சொரூ பத்தை தெரிசிப்பித்தற்குச் சைதன்னியத்தின் பிரதிபிம் பத்தை நிராகரிக்கின்ருர்]

சில நூலாசிரியரோ உருவமின்றிய சைதன்னியத்திற்குப் பிரதிபிம்பம் பொருத்தமின்ரும். உலகின்கண் உருவமுடைய சந்திரன் முதலானவைகட்கே பிரதிபிம்பம் காணப்படுதலின்.

உருவமின்றிய வாயுவாதிகட்குப் பிரதிபிம்பம் காணப் படாமையின். உருவமின்றிய அவித்தை அந்தக் கரணதி களின்கண் சைதன்னியத்திற்கு பிரதிபிம்பம் அத்தியந்தம் பொருத்தமின்ரும். ஆகாசத்தின் பிரதிபிம்ப திருஷ்டாந்தமும் பொருத்தமின்ரும். ஆகாயத்தில் வியாபித்துள்ள சூரியகிரண மண்டலம் ஜலத்தில் பிரதிபிம்பிக்கும் போது ஆகாசத்தின் பிரதிபிம்ப வியவகாரம் பிராந்தி மாத்திரத்தை மூலமாக உடைமையின்.

அற்றேல் உருவமற்றதாயினுந் தொனியின்கண் உருவ மின்றிய திரவிய வடிவ வர்ணஙகளுக்குப் பிரதிபிம்ப முளது எனக்கூற வேண்டும் பிரதிபிம்பத்தை அங்கீகரிக்கும்போது தான் கண்ணடியிலுள்ள கருமை நிறம் கண்ணடியின் கண் ணுள்ள பிரதிபிம்ப வாயிலாக பிம்ப முகத்தில் சம்பவிப்பது

போன்று தொனியிலுள்ள தார‌த்தன்மை முதலியவை தொனியின் கண்ணுள்ள வர்ணங்களின் பிரதிபிம்ப வாயிலாக வர்ணங்களில் ஆரோபம் சம்பவிக்கின்றது. வேறு பிரகாரத்தாலன்று இங்ஙனமுருவமற்ற அந்தக் கரணாதிகளில் உருவமற்ற ஆன்மாவிற்கு பிரதிபிம்பம் சம்பவமா மென்று ஆசங்கித்து திருஷ்டாந்தத்தை நிராகரிக்கின்றார்.

தொனியின்கண் வர்ணத்தின் பிரதிபிம்பம் கூறுதலும் பொருத்தமின்றும் வியஞ்சகத்தன்மையால் சன்னிதான மாத்திரத்தால் தொனியின் தர்மங்களான உதாத்தாதி சுரங்கட்கு வர்ணங்களில் ஆரோபம் பொருந்துதலின் தொனியின் கண்வர்ணங்களின் பிரதிபிம்ப கவற்சியைக் கற்பித்தல் பிரமாணமற்ற தாமாதலின்.

[அற்றேல் படக மெனப் பெயரிய வாத்திய விசேஷாதியின் சப்த உற்பத்தி காலத்தில் பாஷாண விசேஷாதியின் சன்னிகித ஆகாசப் பிரதேசங்களில் பிரதித் தொனிகேட்கப் படுகின்றது அஃது பூர்வசப்தத்தின் பிரதிபிம்பமேயாம் முக்கியத் தொனியன்றும். அதனுற் பத்தியில் காரணமின்மையின். இவ்வாறாகவே எங்ஙனம் உருவமற்ற ஆகாசப் பிரதேசங்களில் உருவ மற்ற தொனிக்கு பிரதித் தொனிவடிவ பிரதிபிம்ப முண்டாகின்றதோ அங்ஙனம் பிரகிருதத்தில் ஏறாகாது என்னுமிடத்துக் கூறுகின்றார்]

பிரதித் தொனியும் பூர்வ சப்தத்தின் பிரதிபிம்பமன்றும் பஞ்சீகரண பிரக்கிரியையால் படகம் பயோநிதி (சமுத்திரம்) முதலியவற்றின் சப்தங்கட்கு பூமி ஜலம் முதலியவற்றின் சப்தத்தன்மை உண்மையால், பிரதித்தொனியே ஆகாசத்தின் சப்தமாதலாலதற்கு அன்னிய சப்தத்தின் பிரதிபிம்பத் தன்மைப் பொருந்தாமையின்.

[அற்றேல் வர்ணவடிவ பிரதிசப்தத்திற்கு வர்ணத்தின் பிரதிபிம்பத் தன்மை அவசியம் கூறவேண்டும் சாக்ஷாத் வர்ண வடிவத்தன்மையின்றும். பிரதிவர்ணங்களின் அபிவியக்திஸ்தலத்தில் வர்ண வியஞ்சக கண்டம் நாக்கு முதலியவைகளின்மையின் இவ்வாறாகவே எங்ஙனம் ஆண்டு பர்வத குகை முதலான சன்னிகிதமாகிய உருவமற்ற ஆகாசப் பிரதேசங்களில் உருவமற்ற வர்ணங்கட்குப் பிரதிபிம்பமாமோ. அங்ஙனம் பிரகிருதத்தில் ஏறாகாது என்னு மிடத்துக் கூறுகின்றார்]

வர்ணவடிவ பிரதிசப்தமும் பூர்வ வர்ணங்களின் பிரதிபிம்ப மன்றும் வர்ணங்களின் அபிவியஞ்சகமான தொனியை நிமித்தமாக உடைய பிரதித்தொனிக்கு மூலத்தொனிபோன்று பிரதிவர்ண அபிவியஞ்சகத் தன்மைப் பொருந்துதலின் ஆதலால் கடாகாசம் போன்று அந்தக்கரண அவச்சின்ன சேதனம் ஜீவனும் அதனன வச்சின்ன சைதன்னிய மீசுரனும்.

சங்கை

[அந்தக்கரண அனவச்சின்ன சைதன்னியம் ஈஸ்வரனுயின் அந்தக்கரணம் முதலிய சர்வ விகாரங்களிலும் பரமேஸ்வரனுக்கு அந்தர்யாமித் தன்மையால் ஸ்திதியைப் பிரதிபாதிக்குஞ் சுருதிக்கு விரோதமாம் என்று வினவுகின்றான்]

இவ்வாறயின் பிரமாண்டத்திலுள்ளிருக்கின்ற சைதன்னியத்திற்கு அவ்வவ் அந்தக்கரண வடிவ உபாதிகளால் சர்வப்பிரகாரத்தாலுஞ் ஜீவ பாவத்தால் அவச்சின்னத்தன்மையிருத்தலின் அவ்வந்தக் கரணத்தால் அவச்சேத மின்றிய சைதன்னிய வடிவ ஈஸ்வரனுக்கு பிரமாண்டத்தின் புறம்பிலேயே இருப்பு சம்பவிக்குமாதலால் எவன் விஞ்ஞானத்திலிருந்து கொண்டு என்பதாதி சுருதியில் அந்தர்யாமித் தன்மையால் காரியத்தினுள் இருப்பைக் கூறுதல் விருத்தமாம். பிரதிபிம்ப பக்ஷத்தின்கண்ணே ஜலத்திலுள்ள இயற்கையான ஆகாயமிருக்குங் காலத்திலேயே பிரதிபிம்ப ஆகாயம் காணப்படுதலின் ஓரிடத்தில் இருமடங்காய் இருத்தல் பொருத்தமாமெனின்.

சமாதானம்

பிரதிபிம்ப பக்ஷத்தின்கண்ணும் உபாதியின்கண் உள்ளடங்காத சைதன்னியத்திற்கே ஆண்டு பிரதிபிம்பம் சொல்லத்தக்கதாம். ஜலத்தில் பிரதிபிம்பித்துள்ள சந்திரன் போன்று சம்பூரணமாகப் பிரதிபிம்பமின்றும். உபாதியினுள்ளடங்கிய சைதன்னிய பாகத்திற்கு ஆண்டு பிரதிபிம்பஞ் சம்ப வியாமையின். மேகாவச்சின்ன ஆகாசத்திற்காவது ஆலோகத்திற்காவது ஜலத்தின்கண் பிரதிபிம்பம் காணப்படுவது போன்று ஜலத்தினுள்ளடங்கிய ஆகாசத்திற்கும் ஆண்டு பிரதிபிம்பங் காணப்படுவதில்லை யாகலின் அன்றியும் முகம் முதலியவைகட்கு வெளியிலிருக்குங் காலத்தில் பிரதி

பிம்பம் உண்டாவது போன்று ஜலத்தின்கண் மூழ்கிய காலத்தும் பிரதிபிம்பங் காணப்படுவதில்லை. ஆதலால் ஜலத்தில் பிரதிபிம்பத்தைக் குறித்து மேகா காசத்திற்குப் போன்று அந்தக் கரணாதி உபாதியில் பிரதிபிம்பத்தைக் குறித்து அதனுள்ளடங்காத சைதன்னியத்திற்கே பிம்பத் தன்மையாம் ஆகவே பிம்பவடிவ ஈஸ்வரனுக்கு அந்தக் கரணத்தின்கண் இருக்குந்தன்மை பொருந்தாமையின் ஈஸ்வரனிடத்து அந்தர்யாமி பிராஹ்மணத்தின் அசங்கதத் தன்மைச் சமானமேயாம் இதனால் (இனிக் கூறப்படுந் தோஷ சமத்தன்மையால்) அந்தக் கரணவச்சின்ன சைதன்னியஞ் ஜீவனாயின் கருமம் செய்யும் காலத்தும் போகத்தைப் புசிக்குங் காலத்தும் ஆண்டாண்டு அந்தக் கரணவச்சின்ன சைதன்னியப் பிரதேசம் வேறாயிருத்தலால். செய்ததினழிவும் செய்யாததினடைவும் ஆகிய தோஷம் பிராப்தியா மென்பது கண்டிக்கப்பட்டது

பிரதிபிம்ப பக்ஷத்தின்கண்ணும் தன்னுள் அடங்காததும் தனது சமீபத்திலுள்ளதுமான சைதன்னியப் பிரதேசத்திற்கு அந்தக் கரணத்தின்கண் பிரதிபிம்பம் கூறத்தக்கதாயிருத்தலால் ஆண்டாண்டு அந்தக் கரணத்திற்கு கமனமுண்டாகுங்கால் பிம்பம் வேறுபடுதலால் அதன் பிரதிபிம்பத்திற்கும் வேற்றுமை அவசியம் சம்பவித்தலால் [கூறியதோஷம் சமமாயிருத்தலின்.

[அவித்தையின்கண் சித்தின் பிரதிபிம்பம் ஈஸ்வரனும் அந்தக் கரணத்தின்கண் சித்தின் பிரதிபிம்பம் ஜீவனுமென முன் தரிசிப்பிக்கப்பட்ட சம்க்ஷேப சாரீரக பக்ஷத்தின்கண் தோஷம் சமமாயினும் விவரண பக்ஷத்தின்கண் கூறிய தோஷத்தினடைவின்மையின் அஃது கொள்ளத்தக்கதா மென்று வினவுகின்றான்.]

அந்தக் கரணப் பிரதிபிம்பம் ஜீவனுமென்னும் பக்ஷத்தின் கண் தோஷம் சமான மாயினும் அவித்தையாப் பிரதிபிம்பம் ஜீவனும் அவனுக்கு ஆண்டு ஆண்டு செல்லும் சுபாவ முள்ள அந்தக் கரணம் தடாகத்தின் வியாபகமாயுள்ள மகா மேக மண்டல பிரதிபிம்பத்திற்கு தடாகத்தின்மேல் செல்லும் சுபாவமுள்ள ஸ்பஷ்டமான ஆலோகம் அபிவியக்திக்கு

ஏதுவாதல் போன்று ஆண்டாண்டு விசேஷ அபிவியத்திக்கு ஏதுவாமென்னும் பக்ஷத்தின்கண் கூறிய தோஷமின்ரும் அந்தக் கரணத்திற்குப் போன்று அவித்தைக்கு கமனமின்மையால் பிரதிபிம்ப பேதத்தினடைவு இன்மையின் எனின்.

## சமாதானம்

அவ்வாறே அவச்சேத பக்ஷத்தின்கண்ணும் அவித்தையினுல் அவச்சின்ன சேதனன் ஜீவனுமென்று அங்கரித்தல் சம்பவித்தலின் அவித்தையா பிரதிபிம்பன் ஜீவனென்னும் பக்ஷத்தின்கண்ணும் ஒரு ஜீவனுக்கே பிராம்மணுதி சரீரத்திலுள்ள அந்தக்கரண அவச்சின்ன பிரதேசத்தில் கர்த்திருத் தன்மையும் தேவாதிசரீரத்திலுள்ள அந்தக்கரண அவச்சின்ன பிரதேசத்தில் போக்துருத் தன்மையும் என இவ்வாறு செய்ததினழிவு முதலிய தோஷ நீக்கப் பொருட்டு வாஸ்தவமாக ஜீவனது ஏகத்தன்மையை சரணடையவேண்டியிருத்தலால். அது போன்று அந்தக்கரண உபாதி பக்ஷத்தின்கண்ணும் வாஸ்தவமாகச் சைதன்னியத்தினேகத் தன்மையினையும் அதன் அவச்சேதக உபாதியின் ஏகத் தன்மையினையும் ஆண்டு நியாமகமாக அங்கீகரித்தலால் கூறிய தோஷத்தின் நிராகரணம் சம்பவித்தலின் என்க.

## சங்கை

"அவச்சேதக பக்ஷத்தில் ஜோதி வடிவ சூரியனுனவன் ஒருவனுயிருந்தே பாத்திர பேதத்தால் நானுவிதமான ஜலங்களில் பிரதிபிம்பித்தவனுகி அநேக பிரகாரமாக உபாதியினுலெங்ஙனம் பேதஞ் செய்யப்படுகின்ருனே அங்ஙனம் சுயம் பிரகாச வடிவ ஆன்மாவும் ஒருவனுயிருந்தே உபாதிகளில் பிரதிபிம்பத்ததாகி நாநாத் தன்மையை அடைகின்றது. அதாவது ஒரு சூரியனுக்கு அநேக உபாதிகளில் பிரதிபிம்பங்களினதீனமாகப் பேதமெவ்வாருே அவ்வாறு ஆன்மாவிற்கும் உபாதிகளில் பிரதிபிம்பங்களினதீனமாகவே பேதத்தில் கருத்தாமென்று சொல்லக் கருதியதாம். இங்ஙனங் கொள்ளாக்கால் திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களுக்கு சமத் தன்மையின்மையால் அவைகட்குப் பொருத்தமின்மை பிராப்தமாமாதலின் அவச்சேத பக்ஷம் சுருதி விரோதமாமென்பது பொருள்.

"இதனுனேயே உவமை சூரியகாதி போன்று" அதாவது' சிதான்மாவிற்கு இயற்கையாக ஏகத் தன்மையும் உபாதி களால் நாநாத் தன்மையும் சுருதிகளில் சொல்லக் கருதியபடி யால். அச்சிதான்மாவிற்கு ஔபாதிக நாநாத் தன்மையால் ஜலாதிகளில் பிரதிபிம்பித்த சூரியாதிகள் திருஷ்டாந்தமாகக் கிரகிக்கப்படுகின்றன என்னுஞ் சுருதி சூத்திரங்களோடு விரோதமாமெனின்.

### சமாதானம்

அற்றன்று உருவ முருவ மென்னுஞ் சுருதியின்கண் பிரதி ரூப சப்தம் பிரதிபிம்ப வாசகமன்றும் ஏனெனின் வாயு எங்ங னம் ஒன்றுயிருந்தே புவனத்தில் பிரவேசித்ததாகி ஒவ்வொரு வுருவத்திலும் பிரதி ரூபமாயிற்று என்பது முதலிய இடங் களில் வியபிசாரமாதலின். ஆதலால் சூரியாதி பிரதிபிம்ப திருஷ்டாந்தத்தின் சுவாரஸ்யத்தால் சைதன்னியத்திற்கு பிரதிபிம்பஞ் சொல்லத்தக்கதாம். அத்தகைய பிரதிபிம் பத்தை சூத்திரக்காரர்தானே கண்டிக்கிருர் "ஜலம் போல கிரகியாமையால் அங்ஙனமன்று." என முற்கூறிய சூத்திரத் தின் அடுத்த சூத்திரத்தால், எங்ஙனம் உருவமுடைய சூரிய னுக்கு பிரதிபிம்ப உதயயோக்கியதையுடையதாகவும் பிம்ப சூரியன் அபேக்ஷையால் தூர தேசமும் உருவமும் உடையதா கவும் ஜலங் கிரகிக்கப்படுகின்றதோ அவ்வாறு சர்வகதமா யுள்ள ஆன்மாவிற்கு பிரதிபிம்ப உதயயோக்கியமாகவும் அதனினும் தூர தேசத்துள்ளதாகவும் யாதொரு வஸ்துவு மின்றும். என பிரதிபிம்பத்தின் அசம்பவத்தைக் கூறி "நிறைவு குறைவுகளையுடையதாந் தன்மை அதன் உள்ளிருத்த லால் இரண்டின் நேர்மையால் இங்ஙனம்" என முற்கூறிய சூத்திரத்தின் அடுத்த சூத்திரத்தால் எங்ஙனம் ஜலத்தில் பிரதிபிம்பித்த சூரியன் ஜலம் விருத்தியாகும்போது விருத்தி யாகின்றது போலவும் ஜலம் குறையும்போது குறைகின்றது போலவும் ஜலம் அலையும்போது அலைகின்றது போலவும் என அதற்கு ஆத்யாசிகமாக ஜலத்தினை அனுசரித்து விருத்தி குறைவுகளையுடையதாந் தன்மையோ. அங்ஙனம் ஆன்மா விற்கு அந்தக்கரணுதி அவச்சேதத்தால் உபாதியினுள்ளிருத்த லால் ஆத்யாசிகமாக அந்தக் கரணத்தை யனுசரித்து வளர்ச்சி குறைவு முதலியவைகளையுடையதாந் தன்மையுமாம் என. இவ்வாறு திருஷ்டாந்ததாஷ்டாந்தங்களுக்குப்

பொருத்தமிருத்தலின் விரோதமின்றுமென சூத்திரக்காரரே அவச்சேத பக்ஷத்தில் அச்சுருதி சூத்திரத்திற்கு தாத்பரியத்தைக் கூறியிருத்தலின்.

அவச்சேத பக்ஷத்தில் சுருதி சூத்திரங்களில் விரோதம் இன்மை மாத்திரமன்றும். மற்றே சுருதி சூத்திரங்களினனுக்கிரகமுமுளது என்று கூறுகின்றார்.

எங்ஙனம் கடாவச்சின்ன ஆகாசம் கடம் கொண்டு போகப்படும்போது கொண்டு போகப்படுகிறதில்லையோ. கடமே கொண்டுபோகப்படுகிறதோ அது போன்று ஆன்மா ஆகாசத்திற்குச் சமானமாயுள்ளது. ஜீவன் ஈஸ்வரனுடைய அம்சமாம் எதனுலெனின் எவன் ஆன்மாவின் உள்ளிருந்து நியாமகம் பண்ணுகின்றனே என்பதாதி சுருதிகளில் நியம்மிய நியாமக பாவத்தால் ஜீவேஸ்வரர்கட்கு பேதங் கூறியிருத்தலால் என்னுஞ் சுருதி சூத்திரங்களால் அவச்சேத பக்ஷத்தினையே கிரகித்திருத்தலின். ஆதலால் சர்வகதமாகிய சைதன்னியத்திற்கு அந்தக் கரணுதியினுல் அவச்சேதமானது அவசியமுளது. ஆகவே ஆவஸ்யகமாதலால் அவச்சின்னன் ஜீவனென்னும் பக்ஷத்தை விரும்புகின்றனர்.

ஈஸ்வரன் யாவன் ஜீவன் யாவன் என்னும் வினக்களின் பிரதி வசனமாக மற்றோர் மதத்தை எழுப்புகின்றார்.

சில நூலாசிரியரோ ஜீவன் பிரதிபிம்பனுமன்று அவச்சின்னனுமன்று மற்றேருகுந்தி புத்திரனுகிய கர்னனுக்கு வேடத்தன்மையைப் போன்று விகாரமற்ற பிரமத்திற்கே அவித்தையினுல் ஜீவத்துவமாம்.

வேடர் குலத்தில் வளர்க்கப்பட்ட இராஜ குமாரனது திருஷ்டாந்தத்தால் பிரமமே தனதவித்தையினுல் சம்சாரத்தில் சுழல்கின்றது. தனது வித்தையால் விடுபடுகின்றது என பிரகதாரண்யக பாஷ்யத்தின்கண் பிரதிபாதித்திருத்தலினுலும் இராஜ குமாரனுகிய கர்ணனுக்கு நான் இராஜ குமாரன் என்னும் நினைவுண்டாகியபோது வேடத் தன்மை நிவர்த்தியாவது போன்று. அஞ்ஞனுகிய ஆன்மாவிற்கு தத்துவமசி முதலிய வாக்கியத்தால் அஞ்ஞானம் நீங்கி விடுகின்றதென்னும் வார்த்திகக்காரர் வசனத்தாலு மென்க.

இவ்வாறு ஜீவனை நிருபித்து ஈஸ்வரனை நிருபணம் செய்கின்றார்.

இங்ஙனம் பாஷ்ய வார்த்திகங்களின் பரியாலோசனையால் பிரதிபிம்பத் தன்மை முதலியவை அற்ற பூர்ண பிரமத்திற்கே ஜீவத் தன்மை சித்தித்தபோது தனது அவித்தையால் ஜீவத் தன்மையடைந்த பிரம்மத்திற்கே சர்வப் பிரபஞ்சத்தைக் கற்பிக்குந் தன்மை உண்மையான் ஈஸ்வரனும் சர்வஞ்ஞத் வாதி தர்மங்களோடு கூட சொப்பனத்திலறியப்பட்ட (கற்பிக் கப்பட்ட) தேவதையைப் போன்று ஜீவ கற்பிதனென்று கூறுகின்றனர்.

## 23. ஜீவர்களின் ஏகத் தன்மை அநேகத் தன்மை விசாரம்

ஜீவேஸ்வர நிருபண பிரசங்கத்தால் வேறு விசாரத்தை ஆரம்பிக்கின்றார்.

அற்றேல் இச்சீவன் ஏகனா? அல்லது அநேகனா?

சமாதானம்

[சமீபத்திற் கூறிய பக்ஷத்தை யாசிரியித்தவர்களாகிய சிலர் இங்ஙனம் கூறுகின்றார்கள்]

ஜீவன் ஏகன் அவ்வேக ஜீவனால் ஒரு சரீரமே ஜீவனோடு கூடியது மற்றைய சரீரங்கள் சொப்பனத்திற் காணப்பட்ட சரீரங்கள் போன்று ஜீவனற்றவைகளாம் அவனது அஞ்ஞா னத்தால் சர்வ சகத்தும் கற்பிதமாம் அவனுக்குச் சொர்ப்பன தெரிசனம் போன்று அஞ்ஞானமுள்ளவரை சகல வியவகார மும் நிகழுகின்றது ஜீவனேகனாதலால் பந்தமோக்ஷ வியவஸ் தையின்றும். சுகர் முதலானோரது முத்தியும் சொப்பனத் தில் தோற்றுகின்ற இதர புருஷர்களது மோக்ஷம் முதலியது போன்று கற்பிதமாம்.

அற்றேல் ஜீவன் ஏகனென்னும் மதத்தில் வித்தையை உபதேசிப்பவரின்மையால் வித்தையின் உற்பத்தி நிகழாது ஜீவேஸ்வர வேற்றுமையில்லாமையால் ஜீவனுக்கு ஈஸ்வர உபாசனை முதலிய வியவகாரமும் நிகழாது என்று ஆசங் கித்துக் கூறுகின்றார்.

ஏகஜீவ பக்ஷத்தின்கண்ணே சம்பாவிக்கப்பட்ட சகல சங்கைகளாகிற சேற்றை சொப்பன திருஷ்டாந்தமாகிய ஜலத்தினாலேயே கழுவவேண்டும் அதாவது எப்படி சொப்

பனத்தில் சொப்பன திருஷ்டாவானவன். குருவையும் ஈஸ்வரனையும் கற்பித்து அவர்களை உபாசித்து அவர்களால் வித்தை முதலானவைகளை அடைகின்றானோ அது போன்று சகலமும் பொருந்துமென வறிக.

ஏகஜீவ வாதத்தின்கண்ணேயே மற்றொரு மதத்தைக் கூறுகின்றார்.

சில நூலாசிரியர் ஒரு சரீரம் சீவனையுடையது என்னுமிப் பக்ஷத்தின்கண் விசுவாசத்தை அடையாதவர்களாய் அதாவது ஒரு சரீரமே ஜீவனோடு கூடியது மற்றைய சரீரங்கள் ஜீவனின்றியவைகள் என்பதன்கண் வினிகமகம் (ஒன்றை சாதிக்கும்யுக்தி) இன்மையால், உபாதியினால் ஜீவனினும் வேறானபிரமம் ஜகத்தின் சிருஷ்டிக்குந்தன்மை முதலிய குணமுடையதாக அங்கீகரிக்கப்படுகின்றது. நியம்யநியாமக பாவத்தால் பேதத்தைக் கூறியிருத்தலின் "சார்வ பௌமனுக்குப் போன்று கேவலம் லீலாமாத்திரமாம்" என்பது முதலிய சூத்திரங்கள் ஜீவனினும் விலக்ஷணமான ஈஸ்வரனே ஜகத்தைச் சிருஷ்டிப்பவன் ஜீவனன்று அவ்வீசுவரனுக்கு எல்லாப்பயன்களு மடையப் பட்டிருத்தலால் பிரயோசன மின்றேனும் கேவலம் லீலையினாலேயே ஜகத்தின் சிருஷ்டியாம் என்பது முதலிய வற்றைப் பிரதிபாதித்தலால். கூறிய சூத்திரங்களோடு விரோதத்தைக் கருதுகின்றவராய் இரண்யகர்ப்பன் பிரமத்தின் பிரதிபிம்பமாய் ஏகமுக்கிய ஜீவனாம். மற்றையரோ அவனது பிரதிபிம்பர்களாய்ச் சித்திரபடத்திலெழுதிய மனுஷிய தேகங்களில் கற்பிக்கப் பட்ட ஆபாச படத்திற்குச் சமானமாய் ஜீவஆபாசங்களாய் சம்சாராதியை அடைகின்றனரென சீவர்களோடு கூடிய அநேக சரீரங்களையுடைய ஏகஜீவ வாதத்தை அங்கீகரிக்கின்றனர்.

இப்பக்ஷத்தின்கண்ணும் அருசியையுடையவராய் ஏக ஜீவவாதத்தினையே வேறு பிரகாரமாக கூறுகின்றார் சில நூலாசிரியரோ இரண்யகர்ப்பனுக்கு கற்பந்தோறும் பேத மிருத்தலால் எவ்விரண்ய கர்ப்பனுக்கு முக்கிய ஜீவத்துவமா மென்பதன்கண் நியாமகமின்றா மெனக் கருதுகின்றவராய் ஒரு ஜீவனே சமமாக எல்லாச் சரீரங்களையுமாசிரயித்துளன் அதாவது ஜீவர்கள் பேதமாயின் ஒருவன் முக்கிய சீவன்

ஒருவன் அமுக்கியன் ஜீவாபாசன் என்னும் விபாகம் சம்பவிக்கும். ஜீவபேதமோ இன்றும் ஜீவனொருவனாதலால் என்பது கருத்து.

அற்றேல் சிரசு கைகால்களை ஆசிரயித்திருக்கின்ற ஒரு தேவதத்தனுக்கு எங்ஙனம் என்னுடைய சிரசில் வேதனை என்னுடைய பாதத்தில் சுகமென்பதாதி அநுசந்தானம் காணப்படுகின்றதோ அங்ஙனமொரு ஜீவனுக்கே சர்வ சரீரங்களையுமாசரியித்திருக்குந் தன்மையாமேல் என்னுடைய தேவதத்த சரீரத்தில் சுகம் என்னுடைய ஏக்ஞதத்த சரீரத்தில் துக்கம் என்பதாதி வடிவத்தால் எல்லோருக்கும் எல்லாத் தேகங்களிலு மனுசந்தான முண்டாக வேண்டுமென வினவுகின்றான்.

ஒரு ஜீவனே சர்வசரீரங்களிலும் சமமாயிருப்பின் சரீர அவயவ பேதங்களின் சுகாதி அனுசந்தான முண்டாவது போன்று சரீர பேதங்களிலும் பரஸ்பர சுகாதி அனுசந்தான முண்டாதல் வேண்டுமெனின் அற்றன்று.

அதீத தேகங்களிலும் வர்த்தமான தேகத்திலும் ஜீவன் ஒருவனாயினும் அவனுக்கு பூர்வ ஜன்மத்திலுள்ள சுகாதி அனுசந்தானங் காணப்படாமையின் சரீரபேதம் சுகாதிகளின் அனனுசந்தானப் பிரயோஜகமாக நிச்சயிக்கப்பட்டிருத்தலின் அற்றேல் யோகிக்கு தேகபேத மிருக்கினும் அனுசந்தானங் காணப்படுதலால் வியபிசாரமாம் என்னும் சங்கைக்குக் கூறுகின்றார். யோகிக்கு தேகசமுதாயத்தில் சுகாதிகளின் அனுசந்தானமோ மறைவுபட்ட பொருளின் ஞானமுண்டாவது போன்று யோகப்பிரபாவத்தினாலுண்டாமாதலின் அவனை உதாகரணமாகக் கூறுதல் சரியன்று என சமானமாக அநேக சரீரங்களில் ஏகஜீவ வாதத்தை விரும்புகின்றனர்.

[அநேக ஜீவவாதத்தினை யாரம்பிக்கின்றார்]

சில நூலாசிரியர் மேற்கூறிய பக்ஷத்தின்கண்ணும் பந்த மோக்ஷங்களின் வியவஸ்தையின் அபாவம்,சமான மாயிருத்தலால் "தேவர்களுள் எந்த எந்த தேவர் அந்த பரமாத்மாவை சாக்ஷாத்கரித்தனரோ அவரவர் அந்த பரமான்ம வடிவமாவர் என்பது முதலிய சுருதிக்கும்" நிஷேதித்திருத்தலால் என்னுமதிகரணத்தின் கண்ணுள்ள பந்த மோக்ஷவியவஸ்தை யைப் பிரதிபாதிக்கும் பாஷ்யத்திற்கும் பொருத்தமின்மை

பிராப்தமாமென சந்தோஷமின்றியவராய் அந்தக்கரணங்கட்கு ஜீவஉபாதித்தன்மையை அங்கீகரித்தலால் அநேக ஜீவ வாதத்தை அங்கீகரித்து பந்தமோக்ஷ வியவஸ்தையைக் கூறுகின்றனர்.

## 24. பந்த மோக்ஷ வியவஸ்தையின் நிருபணம்.

நாநா ஜீவ வாதத்தின்கண் மதபேதத்தால் பந்த மோக்ஷ வியவஸ்தையை உபபாதனஞ் செய்தற்கு ஆரம்பிக்கின்றூர். அநேக சீவ வாதிகளுள்ளும் சிலர் இங்ஙனம் கூறுகின்றனர். சுத்தப் பிரம ஆசிரய விஷயகமாய் அஞ்ஞானமொன்றே. அதன் நாசமே மோக்ஷமாம் எனினும். ஜீவன் முத்தியவஸ்தையில் அஞ்ஞானலேசசத் பாவத்தை அங்கீகரித்திருத்தலால் அஞ்ஞானத்திற்கு அம்சம் உடையதாந் தன்மை சித்திக்கின்றது. அதனுல் அவ்வஞ்ஞானமே சில உபாதியின்கண் பிரம சாக்ஷாத்கார முதயமாகுங்கால் அம்சத்தால் நிவர்த்தியாகின்றது. மற்றைய உபாதிகளில் முன் போலவே மற்றை அம்சங்களால் தொடர்ந்திருக்கின்றது என்க.

[அஞ்ஞானத்தின் சத்துவம் பந்தமாம் அதன் நாசம் மோக்ஷமாம் என்னும் மதம் கூறப்பட்டது. இப்போது சைதன்னியத்திற்கு அஞ்ஞானத்தின் சம்பந்தம் பந்தமாம். அதன் அசம்பந்தம் மோக்ஷமாம் அதன் நிவர்த்தி மோக்ஷமன்ரும் அசம்பந்தமாத்திரத்தினுலேயே பந்த நிவர்த்தி சித்தித்தலின் ஞானத்தாலஞ்ஞான நிவர்த்தியைப் பிரதி பாதிக்கும் சாஸ்திரத்திற்கும். அதன் அசம்பந்தத்தின்கண்ணேயே தாத்பரியம் பொருந்துதலின். அங்ஙனம் கொள்ளாக்கால் மூலா ஞானத்திற்கு விரோதியாகிய தத்துவ ஞான முதயமாகுங்கால் பஞ்சுப் பொதிக்கு விரோதியாகிய அக்கினி சம்பந்தம் போன்று அவசேஷம் (மிஞ்சுதல்) சம்பவியாமையால் பந்த முத்தி வியவஸ்தையைக் கூறுஞ் சாஸ்திரத்திற்கும் ஜீவன் முத்தியைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரத்திற்கும் நிர்விஷயத் தன்மைப் பிராப்தமாதலினெனக் கருதுகின்றவருடைய மதத்தைக் கூறுகின்ரூர்.

[முதலில் பிரகிருதத்தில் உபயோகமான திருஷ்டாந்தத்தைக் கூறுகிரூர்.]

சில நூலாசிரியர் எங்ஙனம் நையாயிகரது ஏகதேசி மதத்தின்கண் பூதலத்தின்கண் கட அத்தியந்தா பாவத்தின்

இருப்பில் கடசம் யோகா பாவம் நியாமகமாம் ஆதலின் கடசம் யோகா பாவமுடைய அநேகப் பிரதேசங்களில் சம்பந்தித் திருக்கின்ற கட அத்தியந்தா பாவம் ஓர் பிரதேசத்தில் கடசம் யோகத்தின் உற்பத்தியால் கடசம் யோகத்தின் அபாவம் நிவர்த்தியாகுங்கால் சம்பந்திருக்கின்றதில்லையோ. அங்ஙனம் சைதன்னியத்தின்கண் அஞ்ஞானத்தினிருப்பில் மனம் நியாம கமாம். ஆதலின் அவ்வுபாதியினால் சைதன்னியப் பிரதேசங் களில் சம்பந்தித்திருக்குமஞ்ஞானம் ஓரிடத்து பிரம ஞானத் தின் உற்பத்தியால் இருதயக் கிரந்தி பிளவுபடுகின்றது என்று கூறப்பட்ட ரீதியால் மனது நிவர்த்தியாகுங்கால் சம்பந்தித்திருக்கின்றதில்லை வேறிடத்தில் முன்போலிருக்கின் றது. அஞ்ஞானத்தின் சம்பந்தமே பந்தமாம். அதன் சம் பந்தம் இன்மையே மோக்ஷமாமெனக் கூறுகின்றனர்.

சில நூலாசிரியரோ அஞ்ஞானம் சுத்தசைதன்னிய ஆசிர யமன்றும் மற்றோ ஜீவனை ஆசிரயித்து பிரமத்தை விஷயம் செய்வதாம். ஆதலால் அந்தக் கரணங்களில் பிரதிபிம்ப ரூபங்களான எல்லாஜீவர்களிடத்தும் வியத்திகளில் ஜாதி போன்று ஒவ்வொன்றிலும் பரியவசானத்தன்மையால் இருப்பதாகி ஞானோதயமுள்ள ஒரு புருஷனை விட்டு விடுகின்றது. நாசமடைதத வியக்தியை ஜாதி விட்டு விடுவதுபோன்று, அதுவே மோக்ஷமாம் அன்னியர்களை முன்போல ஆசிரயித்திருக்கின்றது என வியவஸ்தையைக் கூறுகின்றனர்.

[அஞ்ஞானசம்பந்தம் பந்தமாம் அதன் அபாவம் மோக்ஷமா மென்னுமிருமதமும் அவ்வஞ்ஞானத்திற்கு ஞானத்தால் நாச மாகுந் தன்மையைப் பிரதிபாதிக்கின்ற சுருதிஸ்மிருதி பாஷ் யாதிகட்கு விருத்தமாமெனக்கருதி அதனோடு விரோத மின்றிய மதத்தைக் கூறுகின்றார்]

சில நூலாசிரியர் ஒவ்வொரு ஜீவனிடத்தும் அவித்தை யின் பேதத்தை அங்கீகரித்தே அதனது அநுவிருத்தியினால் பந்தமும் நிவர்த்தியினால் மோக்ஷமும் என. பந்த மோக்ஷ வியவஸ்தையை சமர்த்தனம் செய்கின்றனர்.

இவ்வாறு நாநாஜீவ வாதத்தின்கண்ணே பந்த மோக்ஷ வியவஸ்தையை அநேகப் பிரகாரமாக உபபாதனஞ் செய்து அதன் உபபாதனத்தில் உபயோகியாக பிராப்தமான

அவித்தையின் நாநாத்துவத்தை ஆசிரயித்து ஆக்ஷேபத்தை ஆரம்பிக்கின்றார்.

அவித்தைநாநா என்னும் பக்ஷத்தின்கண் யாருடைய அவித்தையால் பிரபஞ்சம் செய்யப்பட்டதாமெனின். விநிகமகம் இன்மையால் எல்லோருடைய அவித்தையாலும் செய்யப்பட்டதாம். அநேக நூல்களால் ஆரம்பிக்கப்பட்ட வஸ்திரம் போன்று ஒருவனுக்கு முத்தி உண்டாகுங்கால் அவனது அவித்தை நாசமாகும்போது ஒருதந்து நாசமாகுங்கால் வஸ்திரத்திற்கு நாசம் உண்டாதல்போன்று அவனுக்குப் பொதுவாயுள்ள பிரபஞ்சத்தின் அழிவாம். அப்போதே இருக்கின்ற வேறு நூல்களால் வேறு வஸ்திரத்தினுற்பத்தி உண்டாவது போன்று மற்றையோரது அவித்தையாதிகளால் சகல இதர சாதாரணவேறு பிரபஞ்சத்தினுற்பத்தியாமெனச் சிலர் கூறுகின்றனர்.

[பிரபஞ்ச மெல்லோருடைய அவித்தையின் காரிய மாயினும் அவித்தையின் பேதத்தால் பிரபஞ்சமும் ஒவ்வொரு புருஷனைக் குறித்து பின்னமேயாம் என்னும் மதத்தினைத் திருஷ்டாந்த சகிதமாகக் கூறுகின்றார்]

சுத்திர ஜதஸ்தலத்தில் பத்துப்புருடரது அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட ரஜதம் ஒவ்வொரு புருடனுக்குந்தனித்தனியே இருப்பது போன்றும் நியாயமதத்தின்கண் அவ்வவ்வபேக்ஷாபுத்தி ஜன்னிய இருமை முதலியவை ஒவ்வொரு புருடனுக்குந் தனித்தனியாயிருப்பது போன்றும் அவனவனது அவித்தையாற் செய்யப்பட்ட ஆகாசாதிப் பிரபஞ்சம் அவனவனைக் குறித்து வெவ்வேறும்.

[அற்றேல் எங்ஙனம் அவ்வவ் சுத்திரஜதம் அவ்வப் புருடனுக்கே பிரத்தியக்ஷமோ மற்றையனுக்கின்றே அங்ஙனம் அவனவனது அவித்தையாற் கற்பிக்கப்பட்ட பிரபஞ்சமும் அவனவனுக்கே பிரத்தியக்ஷமாம். மற்றையனுக்கின்றாம். ஆகவே யாதொரு பிரபஞ்சம் உன்னால் அனுபவிக்கப்படுகின்றதோ அதுவே என்னாலும் அனுபவிக்கப்படுகின்றது என பிரத்தியபிஞ்ஞாப்பிரத்தியக்ஷ முண்டாகலாகாது என்னுஞ் சங்கையை திருஷ்டாந்தத்தால் பரிகரிக்கின்றார்]

சுத்திரஜதஸ் தலத்தில் உன்ஞல் யாதொரு ரஜதங் காணப்பட்டதோ அதுவே என்னுலும் காணப்பட்டதென ஐக்கியப் பிராந்தி உண்டாவது போன்று பிரபஞ்சத்தின் கண்ணும் ஐக்கிய ஞானம் பிராந்தி மாத்திரமாம் எனச்சிலர் கூறுகின்றனர்.

[ஆகாசாதிப் பிரபஞ்சம் ஜீவனது அவித்தையின் பரிணும மன்ரும். மற்ருே ஜீவர்களை ஆசிரயித்த அவித்தைக் கூட்டத்தினின்றும் வேருய் சர்வ ஜீவர்களைக் குறித்துப் பொதுவாயுள்ள மாயையானது ஆகாசாதிப் பிரபஞ்சத்தின் பரிணுமி உபாதானமாக அங்கீகரிக்கப்படுகின்றது. ஆதலால் ஆகாசாதிப் பிரபஞ்ச மொன்ருயிருத்தலின் அதன்கண் ஏகத் தன்மையின் பிரதீதி பிராந்தியன்ரு மென்னும் மதத்தைத் தரிசிப்பிக்கின்ருர்.

ஜீவனை யாசிரயித்துள்ள அவித்தைக் கூட்டத்தினின்றும் வேருய் ஈஸ்வரனை ஆசிரயித்ததாயுள்ள மாயையே பிரபஞ்சத்தின் காரணமாம். ஜீவர்களது அவித்தைகளோ ஆவரண மாத்திரத்தின்கண்ணும் பிராதிபாசிக சுத்திர ஜதாதி காரியத்தின் கண்ணும் உபயோகமாகின்றனவெனச் சிலர் கூறுகின்றனர்.

முன்பு பிரமத்திற்கு அபின்ன நிமித்தோ பாதானத் தன்மை வடிவ லக்ஷணங் கூறப்பட்டது. அதன்கண்ணுள்ள உபாதானத் தன்மை விவர்த்த அதிஷ்டானத் தன்மை வடிவமாமென சாதிக்கப்பட்டது. அதன் பிரசங்கத்தால் ஜீவேஸ்வரர்களின் நிருபணம் அடைவுற்றது. அதன் பின்பு ஜீவர்களின் ஏகத் தன்மை நாநாத் தன்மைகள் பந்தமோக்ஷங்கள் பிரபஞ்சத்தின் ஏகத் தன்மை நாநாத் தன்மைகள் ஆகிய இவைகளின் நிருபணமும் அடைவுற்றது. ஆதலின் இவ்வெல்லாமும் நிருபிக்கப்பட்டதென நிருபணம் செய்யப் போகின்ற அர்த்த ஞானத்தின் உபயோகியாக உபசம்மாரஞ் செய்கின்ருர்.

உபாதானத் தன்மை சமாப்தமாம் அதனைப் பற்றி வந்ததும் அதனைப் பின்பற்றி வந்ததும் ஆகிய எல்லாஞ் சமாப்தமாம். இனி இலக்ஷணத்திலுள்ளடங்கிய கர்த்திருத் தன்மையை நிருபணஞ் செய்தற்கு ஆக்ஷேபஞ் செய்கின்ருர்.

## 25. கருத்திருத் தன்மை விசாரம்

### சங்கை

கர்த்திருத் தன்மை எத்தகையது சிலர் அவர் ஈக்ஷணம் செய்தார் அவர் விரும்பினர் அவர் தன்னைத் தானே செய்தாரென கேட்கப்படுதலால் நியாய மதத்திற்போன்று காரியானுகூலமான ஞானம் இச்சை முயற்சி இவைகளையுடையதாந் தன்மை கர்த்திருத் தன்மையாமெனக் கூறுகின்றனர்.

வேறுஞ் சிலர் இச்சை முயற்சிகளுங் காரியமாதலால். அவைகளின் கருத்திருத் தன்மை நிர்வாகத்தின் பொருட்டு மற்றோர் இச்சை முயற்சிகளை அபேக்ஷிக்குங் காலத்தில் அனவஸ்தா தோஷம் பிராப்தமாமாதலின் காரியானுகூலமான ஞானமுடையதாந் தன்மையே பிரமத்தின்கண் கர்த்திருத் தன்மையாம். ஞானமுங் காரியமாதலால் அதன்கண்ணுமிவ் அதிப்பிரசங்கமுண்டாமென்னற்க அது பிரம சொரூபமாதலால் காரியமின்மையின் இவ்வாருகவே விவரண கிரந்தத்தில் ஜீவனுக்குச் சுகாதிகளின் கர்த்திருத் தன்மைக் கூற்றும் வீக்ஷணமாத்திரத்தால் சாதிக்கத் தக்கதாய் இருத்தலின் ஆகாசாதி வீக்ஷிதமாம். இரண்ணிய கர்ப்பன் வாயிலாக வீக்ஷணத்தினும் அதிக எத்தன சாத்தியமாய் இருத்தலால் பௌதிகம் ஸ்மிதமாம் (புன் சிரிப்பு) எனக் கற்பகத்தருக் கூற்றும் பொருந்துகின்றது எனக் கூறுகின்றனர்.

சில நூலாசிரியரோ காரியத்திற்கு அனுகூலமான சிருஷ்டிக்கத்தக்கதன் ஆலோசனை வடிவ ஞானமுடையதாந் தன்மைக் கர்த்திருத் தன்மையாம். காரியத்தினனுகூல ஞானமுடையாந் தன்மை மாத்திரமன்றும் காரியானுகூல ஞானமுடையாந் தன்மை மாத்திரம் கர்த்திருத்துவமாமெனின், சுத்திரஜத சொப்பனப் பிராந்தி முதலியவைகளில் அத்தியாசத்திற்கனுகூலமான அதிஷ்டான ஞானமுடையதாந் தன்மையால் ஜீவனுக்கு கர்த்திருத் தன்மை பிராப்தமாதலின். அது இஷ்டாபத்தியாம். "இரதங்களையும், குதிரைகளையும், மார்க்கங்களையும் சிருஷ்டிக்கின்ருனவனன்றோ கர்த்தா" என்பதாதி சுருதியினல் ஜீவனுக்குச் சொப்பனப் பிரபஞ்சத்தின் கர்த்திருத் தன்மைக் கூறியிருத்தலின். என்று சொல்லற்க, பாஷியக்காரரால் கலப்பை பசுக்களை வகிக்கின்றது என்னு

மிடத்து பசுக்களின் ஜீவன ஏதுவான வைக்கோல் முதலிய வற்றிற்கு ஏதுவாதலால் கலப்பையினிடத்து பசுக்களை வகிக் குந்தன்மை எங்ஙனம் உபசாரமாத்திரமோ அங்ஙனம் ஜீவ னிடத்து கர்த்திருத் தன்மை உபசாரமாத்திரமாம். இரதா திப் பிரதீதியின் நிமித்தமாயிருத்தலால் என வியாக்கியானஞ் செய்யப்பட்டிருத்தலின். எனக் கூறுகின்றனர்.

[ஜன்மாதி சூத்திரத்தால் சகலப் பிரபஞ்சத்தின் கர்த் திருத் தன்மையும் அதனுபாதானத் தன்மையும் பிரமத்திற்கு இலக்ஷணமாகப் பிரதிபாதிக்கப்பட்டபோது அதற்கு சர்வக் ஞத்தன்மைப் பொருளால் சித்திக்கின்றது. சர்வஜகத்தின் சிருஷ்டி ஸ்திதி சம்மாரங்களின் கர்த்திருத் தன்மை சர்வக்ஞத் தன்மையின்றி சம்பவியாமையின் எனக் கூறுகின்றார்]

சர்வப் பிரபஞ்சத்தின் கர்த்திருத் தன்மையினுனேயே பிரமத்திற்கு பொருளால் சித்தித்த சர்வஞ்ஞத் தன்மையே "சாஸ்திர யோனித் தன்மையால்" என்னும் அதிகரணத்தில் வேதங்களின் கர்த்திருத் தன்மையாலுஞ் சமர்த்தனம் செய்யப் பட்டது.

அற்றேல் பிரமத்திற்குச் சர்வஞ்ஞத் தன்மை எவன் சர் வஞ்ஞன் என்பதாதி சுருதியால் கண்டத்தாலேயே பிரதி பாதிக்கப்படுகின்றது. இதன்கண் சாதனத்தின் அபேக்ஷை எற்றிற்கெனின் வாஸ்தவம். சுருதியாற் கூறப்பட்ட சர்வஞ் ஞத் தன்மையில் ஞானத்தின் திடத்தன்மையின் பொருட்டு யுக்தியை சமர்ப்பித்தலின்

இவ்வாறு சுருதி யுக்திகளாற் சித்தித்த சர்வக்ஞத் தன் மையை நிருபணம் செய்தற்கு ஆக்ஷேபத்தை ஆரம்பிக் கின்றார்.

## 26. பிரமத்தின் சர்வக்ஞத்தன்மையின் சொருப விசாரம்

சங்கை

பிரமத்திற்குச் சர்வக்ஞத் தன்மையெங்ஙனம் பொருந் தும் ஜீவனுக்கு அந்தக் கரணம் இருப்பது போன்று ஈஸ்வர னுக்கு அந்தக் கரணமின்மையின் ஞாதுருத் தன்மையே பொருந்தாமையின்

அந்தக் கரணங்கட்கு ஜீவ உபாதித்தன்மையிருப்பினும் அதன்கண்ணுள்ள வாசனைகட்கு ஈஸ்வர உபாதித் தன்மையிருத்தலால் ஒருவாறு அவனுக்கு சர்வஞ்சத் தன்மைச் சம்பவிக்கின்றதெனப் பரிகரிக்கின்றார்.

ஈண்டு உத்திரம் சர்வ வஸ்து விஷயக சர்வப் பிராணிகளின் புத்திவாசனைகளோடு கூடிய அஞ்ஞான உபாதியையுடையவன் ஈஸ்வரன் ஆதலாலவனுக்கு சர்வ வஸ்து விஷயக வாசனைகளின் சாக்ஷித் தன்மையால் சர்வஞ்ஞத் தன்மையாமென பாரதீ தீர்த்தரது பக்ஷம் முன்பே தரிசிப்பிக்கப்பட்டது.

[கூறிய சமாதானத்தின்கண் முற்கூறிய அருசியை மனதில் வைத்துக்கொண்டு வேறு சமாதானத்தைக் கூறுகின்றார்.

பிரகடார்த்தக்காரர் இங்ஙனங் கூறுகின்றனர் எங்ஙனஞ் ஜீவனுக்கு தனது உபாதியாகிய அந்தக் கரணத்தின் பரிணமங்கள் சைதன்னியத்தின் பிரதிபிம்பத்தைக் கவர்வனவாய் உள்ளனவாதலின் அவற்றின் சம்பந்தத்தால் ஞாதுருத் தன்மையோ அங்ஙனம் பிரமத்திற்குத் தனது உபாதியாகிய மாயையின் பரிணமங்கள் சைதன்னியத்தின் பிரதிபிம்பத்தைக் கவர்வனவாயுள்ளன ஆதலின் மாயா விருத்தியின்கண் பிரதிபிம்பித்துள்ள ஸ்புரணங்களால் முக்காலத்தினுமுள்ள பிரபஞ்சத்தினை அபரோக்ஷமாக அறிதலால் சர்வஞ்ஞத் தன்மையாம் என மேற்கூறிய பிரகடார்த்தக் காரரது மதத்தின்கண் அதீதானுகதப் பிரபஞ்சவடிவ விஷயத்தின்கண்ணும் ஈஸ்வரனது மாயாவிருத்தியில் பிரதிபிம்பவடிவ ஞானம் அபரோக்ஷமாம்.

தத்துவ சுத்திக்காரரது மதத்தில் அதீதாதி விஷயத்தின்கண் ஜீவர்களுக்குப்போன்று ஈஸ்வரஞானமும் பரோக்ஷமேயாம். உலகின்கண் பிரத்தியக்ஷ ஞானத்திற்கு வர்த்தமான வஸ்துமாத்திரத்தை விஷயம் செய்யுந்தன்மை யியற்கையைக் காண்டலால் அதனது நிச்சயிக்கப்பட்ட இயற்கையைக் கடத்தலின்கண் காரணமின்மையின், சர்வஞ்ஞத்தன்மையைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரத்திற்கு ஈஸ்வரனது ஞானத்தின் கண்ணுள்ள பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத் தன்மைகளில் உதாசீனத்தன்மை யிருத்தலால் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றனர்.

தத்துவ சுத்திக்காரரோ மேற்கூறிய ரீதியால் பிரமத்திற்கு வர்த்தமான சர்வப் பிரபஞ்சத்தின் சாக்ஷத்காரம் சம்பவித்தலாலும் அதனாலுண்டாகிய சமஸ்காரத்தை உடையதாந் தன்மையால் ஸ்மிருதி பொருந்துதலினாலும் அதீத சகல வஸ்துவின் விளக்கஞ் சித்தியாம்.

[அனாகத வஸ்துவின் ஞானத்தை உபபாதனஞ் செய்கின்றார்]

சிருஷ்டிக்கு முன்பு மாயைக்கு சிருஷ்டிக்கப்படுகின்ற சகல பதார்த்தங்களின் ஸ்புரண ரூபத்தால் ஜீவர்களின் அதிர்ஷடத்தை அனுசரித்து பரிணமிக்குந் தண்மையுண்மையால் அதன் சாக்ஷித்தன்மையால் அதனை உபாதியாக உடைய பிரமத்திற்கும் மாயா விருத்தயின் கர்த்திருத்தன்மை சித்தித்தலால் அனாகதவஸ்து விஷயக விஞ்ஞானம் பொருந்துகின்றது என சர்வஞ்ஞத்தன்மையைச் சமர்த்தனஞ் செய்கின்றனர்,

[ஜீவனுக்குப்போன்று பிரமத்திற்கும் சைதன்னியப் பிரதிபிம்பத்தோடு கூடிய விருத்திஞானங்களால் சர்வஞ்ஞத் தன்மையாம் என, கூறிய இருமதத்தின் கண்ணும் நிரூபிக்கப்பட்டது. இப்போது சொரூப ஞானத்தாலேயே சர்வஞ்ஞத் தன்மையை நிரூபணம் செய்கின்றார்.]

கௌமுதிக்காரரோ இங்ஙனம் கூறுகின்றனர். சொரூப ஞானத்தாலேயே பிரமத்திற்குத் தன்னைச் சம்பந்தித்த சர்வ பதார்த்தங்களையும் விளக்குந்தன்மை யுண்மையால் சர்வஞ்ஞத் தன்மையாம்.

அற்றேல் அதீத அனாகதப் பிரபஞ்சங்கட்குப் பிரளய காலத்திலும் சிருஷ்டிக்குப் பூர்வகாலத்திலும் இருப்பின்கண் பிரமாண மின்மையின் அப்போது பிரமத்திற்குச் சர்வஞ்ஞத் தன்மைச் சித்தியாது. இல்லாதவைகளாகிய அவ்வதீத அனாகத பதார்த்தங்கட்குச் சைதன்னிய சம்பந்தஞ் சம்பவியாமையின் என்னுமிடத்துக் கூறுகின்றார்.

அதீத அனாகத பதார்த்தங்கட்கும் அவித்தையின்கண் சித்திரச் சுவரின்கண் துடைக்கப்பட்டதாய்த் தோற்றாமையா யுள்ளச் சித்திரம்போன்று சமஸ்கார வடிவமாயிருத்தலால் அவைகளின் சம்பந்தமும் பொருந்துதலின் விருத்தி ஞானங்

களால் பிரமத்திற்குச் சர்வக்ஞத் தன்மையின்ரும். விளங்குகின்ற அப்பரமான்மாவைப் பற்றியே எல்லாம் விளங்குகின்றது. எனத்தேற்றே காரத்தோடு கூடிய சுருதிக்கு விரோதம் வருதலின் சிருஷ்டிக்கு முன்பு ஏகமே'வாத்விதீயமென தேற்றேகாரத்தை யனுசரித்து மகா பூதங்கட்குப் போன்று விருத்திஞானங்கட்கும் பிரளயஞ் சொல்லத்தக்கதாய் இருத்தலால் பிரமத்திற்கு அப்போது சர்வஞ்ஞத்தன்மையின் அபாவமடைவுறுதலால் முதல்முதலிலுண்டாகின்ற மாயையின் பரிணமைவடிவ ஈக்ஷணத்தின்கண்ணும் அதன்பின் உண்டாகின்ற மகாபூதாதிகளின் கண்ணும் சிருஷ்டிகர்த்திருத்தன்மையினபாவம் பிராப்தமாதலினுலும் என்க.

சங்கை

இவ்வாருகவே அதாவது சொரூபஞானத்தாலேயே சர்வஞ்ஞத்தன்மையை சமர்த்தனஞ் செய்யின் பிரமத்திற்கு சர்வவிஷயக ஞானுன்மகமே சர்வஞ்ஞத்தன்மையாம் சர்வத்தையு மறியுந்தன்மை வடிவ சர்வஞ்ஞத்தன்மையின்ரும். எனின் வாஸ்தவம் சர்வ விஷயகஞானவடிவமே பிரமமாம் சர்வஞானங்களின் கருத்திருத்தன்மை வடிவ ஞாதுருத்தன்மையின்ரும். பிரமத்திற்கு ஞாதுருத்தன்மை யின்மையினுலேயே "வாக்கிய அன்வயத்தா" லென்னு மதிகரணத்தின்கண் பாஷியக்காரரால் விஞ்ஞாதுருத் (அறியுந்) தன்மை ஜீவலிங்கமாமென கூறப்பட்டுள்ளது. எவன் சர்வஞ்ஞனே என்பதாதி சுருதியும் அதற்கு ஞானருபத்தன்மையினபிப்பிராயத்தாலேயே பொருத்தத்தக்கதாம்.

அற்றேல் நித்தியசைதன்னிய மாத்திரத்திற்கு யாண்டும் லக்ஷியார்த்தத்தன்மை உண்மையால் "ஞா" தாதுவின் வாச்சியத்தன்மைப் பொருந்தாமையின் விசிட்ட சைதன்னியம் பகுதி (ஞாதாதுவின்) பொருளாமெனச் சொல்லத்தக்கது. இவ்வாருகவே விசிட்ட சைதன்னியத்திற்குக் காரியத்தன்மை சம்பவித்தலால், விகுதியின் பொருளான கர்த்திருத்தன்மைக்கு விரோதமின்ரும் பிரமத்திற்குச் சர்வஞானத்தின் கர்த்திருத்தன்மையைப் பிரதிபாதிக்குஞ் சுருதி விரோதத்தால் ஞாதிருத்தன்மை ஜீவலிங்கமாமென்னுங் கூற்றுக்கு உயர்வு மாத்திரத்தில் தாத்பரியம் பொருந்துதலினுலும். அவ்வதிகரண சித்தாந்த சம்மதமான நிர்வி சேஷப்பிரமத்தின்

வியாவிருத்தி மாத்திரத்தால் விஞ்ஞாதுருத்தன்மை. பூர்வ பக்ஷலிங்கமாமெனக் கூறுதல் பொருந்துதலினுலும் பாஷியக் காரராலேயே முக்கியார்த்தமாகிய சர்வவிஷயக ஞானகர்த் திருத் தன்மையிணை ஈக்ஷதி அதிகரணத்தின்கண் பிரதி பாதித்திருத்தலானும். விருத்திக்கு ஸ்வார்த்தபரத்தன்மை சம்பவிக்கும்போது அதன் தியாகம் பொருந்தாமையானும் என்னும் அருசியால் கூறுகின்ருர்.

பிரமம் சொரூப சைதன்யத்திலுலேயே தன்னை சம்பந்தித்துள்ள சர்வ பதார்தங்களையும் பிரகாசம் செய்வதாயினும் அதற்குச் சொரூபத்தால் அகாரியத்தன்மை யிருப்பினும் மாயைவடிவ திருசிய அவச்சின்ன ரூபத்தால் பிரமகாரியத் தன்மை உண்மையின் எவன் சர்வக்ஞனென்னும் ஞான உற்பத்தியின் கர்த்திருத்தன்மைச் சுருதிக்கும் யாதொரு விரோதமுமின்ருமென ஆசிரிய வாசஸ்பதி மிசிரர் கூறுகின்றனர்.

## 27. விருத்தியின் உபயோக விசாரம்

அற்றேல் ஈஸ்வரன்போன்று ஜீவனும் விருத்தியை அபேக்ஷியாமல் சொரூபசை தன்னியத்திலுலேயே ஏன் விஷயங்களை விளக்குகின்றதில்லை எனின் இச்சங்கைக்கு விவரணத்தில் கூறப்பட்ட சமாதானமிதுவாம்.

பிரமசைதன்னியம் சர்வத்திற்கும் உபாதான மாயிருத்தலால் சர்வத்தினுந்தாதான்மியத்தை அடைந்துள்ளதாகி தன்னைச் சம்பந்தித்துள்ள எல்லாவற்றையும் விளக்குகின்றது. ஜீவசைதன்னியம் அங்ஙனமன்ரும். அவனுக்கு அவித்தை உபாதியாயிருத்தலால் சர்வகதத்தன்மை யிருப்பினும் உபாதானத்தன்மையின்மையால் விஷயங்களோடு சம்பந்தமின்மையின் அவைகளை விளக்குந் தன்மையின்ரும் என்பது கருத்து.

அற்றேல் எங்ஙனம் ஜீவனுக்கு கடாதிவிஷயங்களோடு சம்பந்தமின்ரே அங்ஙனம் அந்தக்கரணுதியோடும் சம்பந்தமின்மைச் சமானமாம் உபாதானத்தன்மை இன்மையிலுலேயே இவ்வாருகவே அந்தக் கரணுதிகட்கு விருத்தியின்றி ஜீவசைதன்னிய ரூபசாக்ஷி பாஸ்யத்தன்மை உண்டாகலாகாதென்று ஆசங்கித்து உபாதானத்தன்மையின்றேனும் ஜீவ

சைதன்னியத்திற்கு அந்தக்கரணுதியோடு தாதாத்மிய சம்பந்தம் உளது என்பதன்கண் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்ருர்.

சர்வகதமாகிய கோத்து வஜாதி இயற்கையாகவே குதிரை முதலிய வியக்தியின்கண் சம்பந்தமின்றியதாயினும் அலேதாடியையுடைய கோவியத்தியின்கண் சம்பந்தித்திருக்கின்றது போல் விஷயத்தோடு சம்பந்தமின்றியவனுயினும் ஜீவன் இயற்கையாகவே அந்தக்கரணத்தின்கண் சம்பந்திக்கின்ருன். ஆதலால் அந்தக்கரணுதிகட்கு சாக்ஷி பாஸ்யத்தன்மை விரோதமின்ருும் ஜீவனுக்கு இயற்கையாக விஷய சம்பந்தமின்றேனும் எப்போது அந்தக்கரணத்தின் பரிணமமாகிய விருத்தி வடிவம் நேத்திர வாயிலாக வெளிப்போந்து விஷய பரியந்தம் நேத்திர ரஸ்மி போன்று சீக்கிரம் தீர்க்கப் பிரபை வடிவமாகப் பரிணமித்து விஷயத்தை வியாபிக்கின்றதோ அப்போது ஜீவ சைதன்னியம் அதனை ஆரோகணித்து அந்த விஷயத்தைக் கோசரிக்கின்றது. கேவல அக்கினியினுல் தகிக்கக்கூடாதாயினுந் திரணம் முதலியவற்றிற்கு அயப்பிண்டத்தின்கண்ணேறியுள்ள அக்கினியினுல் தாகமுண்டாதல் போல் கேவல ஜீவ சைதன்னியத்தால் அப்பிரகாசியமாயினும் கடாதிகட்கு அந்தக்கரணவிருத்தியின்கண்ணேறியுள்ள ஜீவ சைதன்னியத்தால் பிரகாசியத் தன்மை பொருத்தமாம்.

[ஜீவ சைதன்னியத்திற்கு அந்தக்கரண உபாதியால் பரிச்சின்னத் தன்மை பக்ஷத்தில் சர்வக்ஞத் தன்மையின் ஆபத்திச் சங்கையேயின்ருும் அதற்கு விஷயங்களோடு இயற்கையாக சம்பந்தமின்மையால். விருத்தியின்றி அதனைப் பிரகாசிப்பிக்குந் தன்மை சம்பவியாமையின் என மற்ருேர் பரிகாரத்தைக் கூறுகின்ருர்]

அல்லது அந்தக்கரண உபாதியால் ஜீவன் பரிச்சின்னனும் அதனுல் விஷயங்களோடு சம்பந்தமின்மையின் கடாதி விஷயங்களை விளக்குகின்றதில்லை விருத்திவாயிலாக அந்தக்கரணத்தை சம்பந்தித்த யாதொரு விஷயாவச்சின்ன பிரம சைதன்னியமுண்டோ அதற்கு அந்தக்கரண உபகித ஜீவ சைதன்னியத்தோடு அபேத அபிவியக்தியாகுங்கால் அந்த விஷயத்தை விளக்குகின்றது.

[அவித்தையாப் பிரதிபிம்பன் ஜீவனென்னும் முதற் பக்ஷத்தை அங்கீகரித்தே ஜீவனுக்கு உபாதானத் தன்மையின்றேனும் கடாதி விஷயங்களோடு சம்பந்தத்தை அங்கீகரித்துச் சமாதானத்தைக் கூறுகின்ருர்]

அல்லது ஜீவன் சர்வ கதனுயினும் அவித்தையால் மறைபட்டிருத்தலால் தானுமப் பிரகாசமாயிருத்தலால் விஷயங்களை விளக்காதவனுகி விஷய விசேஷத்தின்கண் விருத்திக்குச் சம்பந்தமுண்டாகுங்கால் ஆவரணம் திரோதானமாகின்றது ஆதலால் ஆண்டே அவ்விஷய விசேஷத்தின்கண்ணேயே அபிவியக்தமான ஜீவ சைதன்னியம் அவ்விஷயத்தையே விளக்குகின்றது. இவ்வாருகவே அதாவது ஜீவ சைதன்னியத்திற்கு விருத்தியின்றி விஷயங்களை விளக்கஞ் செய்யாமை சித்திக்குங்கால் சித்து பாரகத்தின்† பொருட்டாவது விஷய சைதன்னிய அபேத அபிவியக்தியின் பொருட்டாவது ஆவரண அபிபவத்தின் பொருட்டாவது விருத்தியின் வெளிப் போதலை யபேக்ஷித்து விருத்தியோடு சம்பந்தித்த விஷயமாத்திரத்தை விளக்குந் தன்மையுண்மையால் ஜீவனுக்கு கிஞ்சிக்ஞத் தன்மையும் பொருந்துகின்றது என்க.

## 28. விருத்தியோடு விஷயத்திற்குச் சம்பந்த விசாரம்.

### சங்கை

கூறிய மூன்று பக்ஷங்களுள் முதற் பக்ஷத்தில் சர்வகதனுகிய ஜீவனுக்கு விருத்தியின தீனமான விஷயத்தோடுள்ள சம்பந்தம் யாது அதாவது சொரூப சம்பந்தமா? தாதாத்மிய சம்பந்தமா? சம்யோக சம்பந்தமா?? என்பது சங்கையின் கருத்து.

விருத்தியினுலும் பூர்வமே சித்தித்துள்ளவைகளும் நிஷ்கிரியமானவைகளுமாகிய விஷய ஜீவ சைதன்னியங்கட்கு தாதாத்மிய சம்பந்தத்தின் உற்பத்தியாவது சம்யோக சம்பந்தத்தின் உற்பத்தியாவது சம்பவிக்கிறதில்லை. உலகின்கண் எந்தப் பதார்தங்கட்கு தாதாத்மிய சம்பந்தமனுபவிக்கப்படு

† உபராகம் = சம்பந்தம்

கின்றதோ அது அவைகளுக்கு முதலிலிருந்தே அனுபவிக்கப் படுகின்றது. இடையில் ஆகந்துக மாகவின்றும் என்னும் கருத்தால் பூருவமே சித்தித்துள்ள என்னும் விசேஷணம் கொடுக்கப்பட்டது. சம்யோகத்தின் உற்பத்தி ஒன்றன் கருமத்தாலாவது இரண்டன் கருமத்தாலாவது சொல்லவேண்டும் அவ்விரு கருமமும் பிரகிருதத்தில் சம்பவிக்கின்றதில்லை என்னுங் கருத்தால் நிஷ்கிரிய மென்னும் விசேஷணங் கொடுக்கப்பட்டது.

[விஷய தேசத்தில் சன்னிகிதமான ஜீவ சைதன்னியத்திற்கு விருத்தி உற்பத்திக்கு முன்பு விஷய விஷயீபாவ சம்பந்தம் இன்ருகுக விருத்தியுற்பத்தியின் பிறகு அஃது உண்டாகின்றது. அதிருக்கமாய் (வேருய்) அனிர்வசனீயமாய் அது சம்பவித்தலின் என்னுங் கருத்தால் கூறுகின்ருர்]

ஈண்டு சிலர் இங்ஙனம் கூறுகின்றனர். விஷய விஷயீபாவ சம்பந்தமேயாமென.

பரோக்ஷ ஸ்தலத்தில் அநுமிதி முதலிய விருத்தியுபகித ஜீவ சைதன்னியத்திற்கு அநுமேயாதி விஷயங்களோடு விஷய விஷயீபாவ சம்பந்தம் விருத்தி புறம்போதலின்றியே சித்தாந்தத்தின்கண் அங்கீகரித்தலால். விருத்தி புறம் போதலை அங்கீகரிக்கின்ற விவரணக்காரர்களுக்கு இச்சம்பந்தம் கருத்தன்ருமெனக் கூறுகின்ருர்.

சில நூலாசிரியர் விஷய விஷயீபாவ சம்பந்த மாத்திரத்தின் நியாமகமாக விருத்தியிருக்குமாயின் வெளிப் போதலின்றிய இந்திரிய ஜன்னிய விருத்திக்கும் அதன் நியாமகத் தன்மை சம்பவிக்கும் அதிப்பிரசங்கமும் உண்டாகாது ஆதலின் அதன் வெளிப் போதலை அங்கீகரித்தல் வியர்த்தமாமாதலின் அச்சம்பந்தம் கருதியதன்ரும். மற்ருே விஷய சமீபத்தை அடைந்துள்ள ஜீவ சைதன்னியத்தின் தாதாத்மியத்தை யடைந்துள்ள விருத்திக்கு விஷய சம்பந்தமுண்டாகும் போது விஷயத்தைச் சமீபித்த ஜீவ சைதன்னியத்திற்கும் அந்த விருத்தி விஷயங்களின் சம்பந்தத்தை துவாரமாகவுடைய பரம்பரா சம்பந்தமடையப்படுகிறது ஆதலாலதுவே அபிதுபராகம் எனக் கருதப்பட்டுள்ளதெனக் கூறுகின்ருர்.

[ஆந்தர பதார்த்தமாகிய சுகாதிகளின் அபரோக்ஷத் தன்மையின்கண் அதனை பிரகாசிப்பிக்கின்ற ஜீவசைதன்னியத்தோடு அதற்குச் சாக்ஷாத் சம்பந்தம் ஏதுவாக நிச்சயிக்கப் பட்டுள்ளது. இங்ஙனம் வெளியிலுள்ள கடாதிகளின பரோக்ஷத்தன்மையின் கண்ணும் சாக்ஷாத் சம்பந்தம் அங்கீ கரிக்கத் தக்கது அங்ஙனங் கொள்ளாக்கால் விஷய வபரோக்ஷத்தின்கண் ஓரிடத்தில் சாக்ஷாத் சம்பந்தமும் மற்றோரிடத்தில் பரம்பரா சம்பந்தமும் பிரயோஜகமாமென விலக்ஷணவடிவத்தன்மை அடைவுறும், சாக்ஷாத் சம்பந்தம் சம்பவிக்கும்போது பரம்பரா சம்பந்தத்தைக் கற்பித்தல் பொருத்தமுமன்றும். ஆதலால் இச்சம்பந்தமும் ஆசாரி யருக்குச் சம்மதமின்றுமெனக் கூறுகின்றார்.]

சில நூலாசிரியர் சாக்ஷாத் அபரோக்ஷ சைதன்னியத்தை சம்பந்தித்துள்ள சுகாதிகட்கே அபரோக்ஷத்தன்மையைக் காண்டலால் அபரோக்ஷ விஷயத்தின்கண் சாக்ஷாத் சம்பந்த மங்கீகரிக்கத் தக்கதாம். ஆதலால் விருத்திக்கு விஷயத் தோடு சம்யோக முண்டாகுங்கால் விருத்தி வடிவ அவச்சேதகத்தின் அடைவால் விருத்தியவச்சேதமாய் விருத்தியின் உபாதான காரணமான ஜீவசைதன்னியத்திற்கும் விஷயத் தோடு சம்யோக ஜன்னிய சம்யோகஞ் சம்பவிக்கின்றது.

காரணத்திற்கும் அகாரணத்திற்கும் உண்டாகும் சம்யோகத்தால் காரியத்திற்கும் அகாரியத்திற்கு முண்டாகும் சம்யோகம் போன்று. காரியத்திற்கும் அகாரியத்திற்கும் உண்டாகும் சம்யோகத்தால் காரணத்திற்கும் அகாரணத் திற்கும் முண்டாகுஞ் சம்யோகத்தினை யுத்தியின் சமத்தன்மை யால் அங்கீகரிப்பது உசிதமாதலினெனக் கூறுகின்றனர். ஈண்டு இது கூறப்பட்டதாகின்றது. ஜீவசை தன்னியத்தினது காரியம் விருத்தியாம் அகாரியம் விஷயமாம் விருத்திக்கு ஜீவ சைதன்னியமுபாதானகாரணம் அவ்விருத்திக்கு விஷயம் உபாதான காரணமன்றும். ஆகவே ஜீவசைதன்னியத்தைக் குறித்து விருத்திவடிவ காரியத்திற்கும் விஷயவடிவ அகாரியத் திற்குமுள்ள சம்யோகத்தால் விருத்தியைக் குறித்துக் காரண மாயுள்ள ஜீவசைதன்னியத்திற்கும் அகாரணமாயுள்ள விஷயத்திற்கும் உண்டாகும் சம்யோகம் ஈண்டு சம்யோக ஜன்னிய சம்யோகமாமென்று விவக்ஷிக்கப்பட்டது.

[அற்றேல் விஷய தேசத்தின்கண் சமீபித்திருக்கினும் ஜீவசைதன்னியத்திற்கு விருத்தியின் உபாதானத்தன்மை விவரணச்சாரியாருக்கு சம்மதமின்ரும். ஜீவனுக்கு அந்தக் கரணதிகளின் உபாதானத்தன்மை யின்றேனும் அலைதாடி யுடைய வியத்தியின்கண் கோத்துவ சாமான்யம் போன்று சுபாவமாகவே ஜீவனுக்கு அந்தக் கரணதிகளின்கண் சம்பந்த மாமென்னும் பொருளை இவ்வாறு விடயத்தோடு சம்பந்த மின்றியவனுயினுஞ் ஜீவன் சுபாவமாகவே அந்தக்கரணத்தில் சம்பந்திக்கின்ருன் என்றவிடத்தில் பிரதிபாதிக்கப்பட்டிருத்த லின். ஆதலால் ஜீவசைதன்னியத்திற்கு விருத்தியைக் குறித்து உபாதானகாரணத்தன்மையில்லாதபோது கூறிய சம்பந்தஞ் சித்திக்கின்றதில்லை ஆதலின் சம்யோக ஜன்னிய சம்யோகமோ ஆசாரியாருக்கு சம்மதமின்ரும் என்னும் அருசியால் கூறுகின்ருர்.]

ஏகதேசிகளோ அந்தக்கரண உபகிதமாகிய விஷயத்தை விளக்குஞ் சைதன்னியத்திற்கு விஷயத்தோடு தாதாத்மிய பாவத்தை யடைந்துள்ள பிரமசைதன்னியத்தோடு அபேத அபிவியக்திவாயிலாக விஷய தாதாத்மியத்தின் சம்பாதனமே சிதுபராகம் எனக் கருதியதாம். அதாவது கடாதி விஷயத்தை விளக்குஞ் ஜீவசைதன்னியத்திற்கு கடாதி விஷயத்தோடு தாதாத்மிய சம்பந்தத்தின் சம்பாதனமேசிது பராகத்தன்மையால் கருதப்பட்டதென்பது பொருள்.

அற்றேல் விருத்தியினுலும் முன்பேசித்தித்துள்ள விஷயத் திற்குஞ் சைதன்னியத்திற்கும் தாதாத்மியத்தின் உற்பத்தி சம்பவியாதென முன்கூறப்பட்டமையின் அதன் சம்பாதனம் எவ்வாரு மென்னும் † சங்கை விஷய தாதாத்மியத்தை அடைந்துள்ள பிரம சைதன்னிய அபேத அபிவியக்திவாயி லாக என்பதனுல் நிவர்த்திக்கப்பட்டது, அதாவது பிம்ப பூத பிரமசைதன்னியத்திற்கு கடாதி விஷயங்களின் உபா தானத் தன்மையுண்மையால் பிரமத்திற்கும் விஷயத்திற்கும் தாதாத்மிய சம்பந்தம் முன்னமே சித்தித்துள்ளது. இவ்வாருகவே விஷயத்தின்கண் தாதாத்மியத்தை அடைந் துள்ள பிரமசைதன்னியத்தோடு விஷயத்தை விளக்குகின்ற

† என்னுஞ் சங்கை நிவர்த்திக்கப்பட்டது என்பதனேடு அன்வயம் செய்க.

ஜீவசைதன்னியத்திற்கு விருத்தியினுல் அபேத அபிவியக்தி யாகுங் காலத்தில் ஜீவசைதன்னியத்திற்கு விஷயத்தோடு தாதாத்மியம் விருத்தியின் அதீனமாக அடையப்படுகின்றது, ஆதலால் தாதாத்மிய சம்பாதனத்தின் அனுபபத்தியின்றும்.

விஷயத்தை விளக்கும் ஜீவசைதன்னியத்திற்கு அந்தக்கரண உபகிதமா மென்னும் யாதொரு விசேஷணங் கூறப்பட்டதோ அதன்பயனைக் கூறுகின்ருர்.

சர்வகதத்தன்மையால் சர்வ விஷயங்களோடு சமீபித்திருக்கினும் ஜீவனுக்கு அவ்வடிவத்தால் விஷயத்தை விளக்குந் தன்மையுடன்படின் அச்சிவனுக்கு சர்வ புருஷரைக் குறித்துச் சாதாரணத் தன்மையுண்மையால் புருஷ விசேஷரைக் குறித்து அபரோக்ஷ வியவஸ்திதி பொருந்தாமையின். ஜீவனுக்கு அந்தக்கரண உபகிதத்தன்மை வடிவத்தாலேயே விஷயத்தை விளக்குந்தன்மையுண்மையின் இவ்வாருகவே விஷயாபரோக்ஷத்தின்கண் ஆத்யாசிக சம்பந்தம் நியாமகமா மென்னுஞ் சித்தாந்தம் பொருந்துகின்றது.

சங்கை

இவ்வாருயின் அதாவது சம்பந்தத்தின் பொருட்டு விருத்தியாமென்னும் முதற்பக்ஷத்தின் கண்ணும் விருத்தியினுல் அபேத அபிவியக்தியை அங்கீகரிக்கின் இரண்டாவது பக்ஷத்தோடு கலப்புண்டாமெனின்.

சமாதானம்

ஜீவனுக்கு சர்வகத்தன்மையின்கண்ணே சம்பந்தத்தின் பொருட்டு விருத்தியாமென முதலாவது பக்ஷமாம். அந்தக்கரண உபாதியுடையதாந்தன்மையால் பரிச்சின்னத்தன்மை பக்ஷத்தில் அபேத அபிவியக்தியின் பொருட்டு விருத்தியாமென இரண்டாவது பக்ஷமாம் என அவைகட்கு பேதமுண்மையின் எனக் கூறுகின்றனர்.

## 29. அபேத அபிவியக்தியின் சொரூப விசாரம்

சங்கை

இரண்டாவது பக்ஷத்தின்கண் அபேத அபிவியக்தி என்பதுயாது அதாவது அபிவியக்தியின் பொருட்டு விருத்தியாமென்னும் இரண்டாவது பக்ஷம் ஜீவனது பரிச்

சின்னத் தன்மை மதத்தின்கண்ணும் என கூறப்பட்டது. இம்மதத்தின்கண் அந்தக்கரண உபாதியுடைய ஜீவனுக்கும் விஷயாவச்சின்ன பிம்ப பூத பிரம்ம சைதன்னியத்திற்கும் விருத்தியினுல் அபேத அபிவியக்தி சம்பவியாது. அகண்டாகார விருத்தியினுல் உபாதி நிவர்த்தியாவது போன்று கடாதி கோசர விருத்தியினுல் உபாதியின் நிவர்த்தி யின்மையின் பேத ஏதுவாய அந்தக்கரணமும் விஷயமுமாகிய உபாதிகளிருக்குங் காலத்தில் ஜீவப் பிரம்மங்களின் அபேத அபிவியக்தி பொருந்தாமையின் என்பது பொருள்.

சமாதானம்

வியாவர்த்தக உபாதிகளிருந்த போதினும் அவைகட்கு ஓரிடத்திலிருக்குந்தன்மை சம்பவிக்கும்போது அதன்வலியால் அபேத அபிவியக்தி சம்பவிக்கின்றது. உலகின்கண் அவ்வாறு காணப்படுதலால் எனப் பரிகரிக்கின்றுர்.

சிலர் இங்ஙனங் கூறுகின்றனர் வாய்க்கால் வழியாக குளத்தின் ஜலத்திற்கும் வயலின் ஜலத்திற்கும் அபேதமிருப்பதுபோன்று விஷயாவச்சின்ன சைதன்னியத்திற்கும் அந்தக்கரணுவச்சின்ன சைதன்னியத்திற்கும் விருத்தி வாயிலாக யாதொரு ஒற்றுமை உண்டோ அதுவே அபேத அபிவியக்தியாம் இங்ஙனம் விஷயாவச்சின்ன பிரம சைதன்னியமே விஷயத்தை விளக்குவதாம் அங்ஙனமாயினும் அதற்கு விருத்திவாயிலாக ஒற்றுமை இருத்தலால் ஜீவத்தன்மை சம்பன்னமாதலின் ஜீவனுக்கு விஷயத்தின் விளக்கம் பொருத்தமாம் என்க.

சில நூலாசிரியர் இங்ஙனங் கூறுகின்றனர் பிம்பஸ்தானத்திலுள்ளதாய் விஷயாவச் சின்னமாயுள்ள பிரமத்திற்கு பிரதிபிம்பமாயுள்ள ஜீவனேடு ஒற்றுமை அபேத அபிவியக்தியன்ரும் வியாவர்த்தகமாகிய உபாதி, கண்ணுடி போன்று இருக்குங் காலத்தில் அவைகட்கு ஒற்றுமை பொருந்தாமையின் எங்ஙனம் கண்ணுடியின்கண் பிரதிபிம்ப மிருக்குங் காலத்தில் பிம்பப் பிரதிபிம்பங்கட்கு அபேத அபிவியக்தியின்ரே அப்போது அவைகட்குப் பேத அநுபவமிருத்தலால் அங்ஙனம் பிரகிருதத்தின்கண்ணும் விஷயாதி வடிவ வியாவர்த்தக உபாதியிருக்குங் காலத்தில் ஒற்றுமை பொருந்தாதென்பது கருத்து.

அற்றேல் தத்துவ சாக்ஷாத்காரத்தால் எல்லா உபாதியும் நிவர்த்தியாகுங் காலத்தில் எத்தகைய அபேத அபிவியக்தி உண்டாகின்றதோ? அத்தகைய அபேத அபிவியக்தி ஈண்டு விவக்ஷிதமின்றும் மற்றோ ஓர் பாத்திரத்தின் கண்ணுள்ள பாலுக்குஞ் சலத்திற்கும் போல விருத்திவாயிலாக அந்தக் கரணத்திற்கும் விஷயத்திற்கும் ஓரிடத்திலிருக்குந் தன்மைப் பிராப்தியாகுங்கால் அத்துணை மாத்திரத்தினதீனமாய் அவைகளால் அவச்சின்னமான சைதன்னியங்கட்கு ஔபசாரிக அபேத அபிவியக்தி விவக்ஷிதமாம். இத்தகைய அபிவியக்தியின்கண் வியாவர்த்தக உபாதியினதீனமான விரோதமின்றும். கண்ணடியின் கண் முகத்தின் பிரதிபிம்ப காலத்தும் என்னுடைய முகமே கண்ணடியில் தோன்றுகின்றதென பிம்பப் பிரதிபிம்பங்கட்கு அபேத அபிவியக்தி காணப்படுதலின் இம்மதத்தின் கண்ணும் இவ்வாறே நிருவாகஞ் செய்யத்தக்கதாம் அந்தக் கரணத்தின் கண்ணும் அதன் விருத்தியின் கண்ணுமுள்ள பிரதிபிம்பங்கட்கு அபேத அபிவியக்தி முக்கியமாக சம்பவிக்கிறதில்லை. காரிய காரணத் தன்மையை அடைந்துள்ள விருத்திக்கும் அந்தக்கரணத்திற்கும் ஐக்கியம் பொருந்தாமையால் அவைகளின் கண்ணுள்ள பிரதிபிம்பங்களுக்கும் ஐக்கியம் பொருந்தாமையின். ஐக்கியத்தை உடன்படினும் இவ்வாறு என்பதாதியால் பிரமாதா முதலியவைகட்கு இம்மதத்தின்கண் கலப்பின்மையை பிரதிபாதித்தலோடு விரோதம் வருதலின் என்னும் அருகியால் கூறுகின்றார்.

விருத்தியாற் செய்யப்பட்ட அபேத அபிவியக்தியால் விஷயாவச்சின்ன பிரமத்திற்கு ஜீவத் தன்மை அடைவுறுங்கால் பிரமத்திற்கு அப்போது அவ்விஷய சம்பந்தமின்மையாலதன் திருஷ்டிருத் தன்மை சம்பவியாத போது அதற்குச் சர்வக்ஞத் தன்மை யபாவமடைவுறுதலினாலும். மற்றோ விஷயாவச்சின்ன பிரம சைதன்னியம் விஷயத்தை சம்பந்தித்துள்ள விருத்தியினது அக்ர பாகத்தில் விஷயத்தைப் பிரகாசஞ் செய்யும் பிரதிபிம்பத்தை சமர்ப்பணம் பண்ணுகின்றது. ஆதலின் அந்தப் பிரதிபிம்பத்திற்கு ஜீவனோடு ஐக்கியமாம் இவ்வாறு அந்தக்கரணம். அதன் விருத்தி. விஷயமாகிய இவைகளால் அவச்சின்னமான சைதன்னியங்கட்கு பிரமாதா பிரமாண பிரமேய பாவத்தால் கலப்பின்மையும் பொருந்துகின்றது.

### அவதாரிகை

விருத்தி உபகித சைதன்னியத்திற்கு அதாவது பிரமை வடிவ விருத்தியின் கண்ணுள்ள பிரதிபிம்பத்திற்கு விஷயத்தின் உபாதானத் தன்மையின்மையால் அந்த பிரமைக்கும் விஷயத்திற்கும் தாதாத்மிய சம்பந்தம் சம்பவியாது இவ்வாருகவே விஷய அபரோக்ஷத் தன்மையின்கண் ஆத்யாசிக தாதாத்மிய சம்பந்தம் நியாமகமா மென்னும் சித்தாந்தத்திற்கு விரோதமுண்டாமென்னும் அபிப்பிராயத்தால் வினவுகின்ருன்.

### சங்கை

விருத்தி உபகித சைதன்னியத்தினை விஷயத்தின் பிரமையாக உடன்படின் அதற்கு விஷயாதிஷ்டான சைதன்னியத்திற்குப் போன்று விஷயத்தோடு ஆத்யாசிக சம்பந்தமின்மையின் விஷயாபரோக்ஷத்தின்கண் ஆத்யாசிக சம்பந்தம் நிமித்தமாமென்பது பொருந்தாதெனின்.

### அவதாரிகை

பிம்பப் பிரதிபிம்பங்கட்கு அபேதத்தை அங்கீகரித்தலால் பிம்ப சைதன்னியத்திற்கு விஷயத்தோடு யாதொரு தாதாத்மிய சம்பந்தமுண்டோ அதுவே பிரமை வடிவப் பிரதிபிம்பத்திற்குமாதலின் சித்தாந்தத்திற்கு விரோதமின்ருமென்னும் அபிப்பிராயத்தால் உத்தரங் கூறுகின்ருர்.

### சமாதானம்

விஷயத்தாலவச்சின்னமான விஷயாதிஷ்டான சைதன்னியத்திற்கே விருத்தியின்கண் பிரதிபிம்பத் தன்மை உண்மையால் பிரதிபிம்ப சைதன்னியத்திற்கு பிம்ப அபேதத்தால் ஆத்யாசிக சம்பந்தமிருத்தலின் என்க.

[பிம்பப் பிரதிபிம்பங்கட்கு அபேதமிருக்கினும் கற்பித பேதமிருத்தலால் பிம்பத்தின் சம்பந்தம் பிரதிபிம்பத்தின் சம்பந்தமாகாது என்னுமருசியை சாக்ஷாத் பதத்தால் சூசிப்பிக்கின்றவராய் அபேத அபிவியக்தியை வேறு பிரகாரத்தாற் கூறுகின்ருர்.]

சில நூலாசிரியர் இங்ஙனங் கூறுகின்றனர் பிம்ப வடிவ விஷயாதிஷ்டான சைதன்னியமே சாக்ஷாத் ஆத்யாசிக சம்பந்

தத்தினடைவால் விஷயத்தைப் பிரகாசம் செய்வதாமாதலின தற்கே பிம்பத் தன்மை விசிஷ்ட வடிவத்தால் பிரதிபிம்பத்வ விசிட்ட சைதன்னிய வடிவ ஜீவனோடு பேதமிருப்பினும். பிம்பத் தன்மை பிரதிபிம்பத் தன்மைகளால் உபலக்ஷிதமான சுத்த சைதன்னிய வடிவத்தால் யாதொரு ஒற்றுமையுண்டோ அதுவே அபேத அபிவியக்தியாம். உபலக்ஷித சைதன்னிய வடிவத்தால் அபேத அபிவியக்தியை அங்கீகரிக்கும்போது ஜீவப் பிரமங்கட்கு கலப்பு வடிவ தோஷமுமின்றாம். பிரமத்தின் சர்வக்ஞத் தன்மைக்கு விரோதமுமின்றாம் பிம்ப வடிவத்தாலதற்கு முன்போலவே இருப்புண்மையின்.

## 30. ஆவரணத்தின் அபிபவ சொரூப விசாரம்

சங்கை

மூன்றாவது பக்ஷத்தில் ஆவரண அபிபவமென்பது யாது அஞ்ஞான நாசமெனின் கடஞானத்தினாலேயே அஞ்ஞானத்தை மூலமாகவுடைய பிரபஞ்சம் நாசமாதல் வேண்டுமெனின்.

சமாதானம்

அஞ்ஞானம் ஒன்று என்னும் பக்ஷத்தை ஆசிரயித்தே சில நூலாசிரியர் இங்ஙனம் கூறுகின்றனர். சைதன்னியமாத்திரத்தை மறைக்குமஞ்ஞானத்திற்கு விஷயாவச்சின்ன பிரதேசத்தில் மின்மினிப் பூச்சியின் பிரகாசத்தால் மகாந்தகாரத்திற்குப் போன்று ஞானத்தாலேக தேசத்தில் நாசமாம் அல்லது பாய்போன்று சுருளுதலாம் அல்லது பயந்த வேலைக்காரன் போன்று தள்ளிப்போதலாம் இதுவே ஆவரணத்தின் அபிபவமாமென்க.

[கூறிய ஆவரண அபிபவத்தை தூஷிக்கின்றவராய் அதனை வேறு பிரகாரமாக நிர்வசனஞ் செய்கின்றார்.]

சில நூலாசிரியரோ அஞ்ஞானத்திற்கு ஏகதேசத்தால் நாசத்தையுடன்படின் உபாதானமின்மையால் மீண்டுமந்த இடத்தில் அதாவது அவ்விஷயாவச்சின்ன சைதன்னியத்தின் கண் ஆவரண உற்பத்தி பொருந்தாமையால் ஒரு தடவை ஆவரணம் நீங்குங் காலத்து வேறு சமயத்திலும் ஆவரணமின்மைப் பிராப்தமாதலினாலும். நிஷ்கிரிய ஆவரணத்திற்கு பாய்போல் சுருளுதலும் பயந்த வேலைக்காரனைப்போல் பயந்து

ஓடிப் போதலும் சம்பவியாமையாலும் மேற்கூறிய அபிபவம் சம்பவிக்கின்றதில்லை. (பொருந்தாது) ஆதலால் சைதன்னியத்தை மாத்திரம் மறைப்பதாயினும் அஞ்ஞானத்திற்கு அவ்வவ்வாகார விருத்தியோடு கூடியிருக்கிற யாதொரு விஷயாவச் சின்ன சைதன்னிய முண்டோ அதனை மறைக்காத் தன்மை சுபாவமே அபிபவமாம்.

[அற்றேல் எங்ஙனங் கடத்தை வியாபித்திருக்கின்ற வஸ்திரம் அதனை மறைக்கின்றதோ அங்ஙனம் விஷயாவச் சின்ன பிரம சைதன்னியத்தை வியாபித்திருக்கின்ற அஞ்ஞானமும் சைதன்னியத்தை மறைக்கின்றதேயாகும். ஆதலின் அதற்கு மறைக்காத்தன்மையைக் கற்பித்தல் பொருத்தமன்றும் என வினவுகின்றான்.]

விஷயத்தை மறைக்கும் வஸ்திரம் போல் விஷய சைதன்னியத்தை ஆசரியித்திருக்கின்ற அஞ்ஞானத்திற்கு அதனை மறைக்காத் தன்மை எங்ஙனம் பொருந்தும் எனின்.

### சமாதானம்

[அஞ்ஞானத்தின்கண் வஸ்திரத்தின் விலக்ஷணத்தன்மை அனுபவ சித்தமாதலால் சங்கைக்கு அவகாசமின்றெனக் கூறுகின்றார்.]

நானஞ்ஞன் என்னும் பிரதீதியால் நான் என்னும் அநுபவத்தின்கண் விளங்குகின்ற சைதன்னியத்தினை ஆசிரயித்திருக்கின்ற அஞ்ஞானத்திற்கே அதனை மறைக்காத் தன்மை அறியப்படுதலினால் எனக் கூறுகின்றனர்.

[பிரபஞ்சத்தின் உபாதானமாயுள்ள மூலாஞ் ஞானத்தை அபேக்ஷித்து விஷயாவச் சின்ன சைதன்னியத்தை மறைக்குமஞ்ஞானம் வேறேயாம் ஆதலின் கடாதி ஞானத்தால் அது நிவர்த்தியாகும்போது பிரபஞ்ச நிவர்த்தியின் பிராப்தியின்றும் அதனால் பிரபஞ்சத்தின் மூலாஞ்ஞானத்தின் நிவர்த்தியின்றும் என்னும் மதத்தைத் தரிசிப்பிக்கின்றார்.]

சில நூலாசிரியரோ கடத்தை அறிகின்றிலேனென கடஞானத்தின் விரோதித் தன்மையால் அநுபவிக்கப்படுகின்றதும் கடஞானமுண்டாகும் போது கட அஞ்ஞானம் நிவர்த்தியாயிற்று என அதன் நிவர்த்தியத் தன்மையால் அநுபவிக்கப்

படுகின்றதுமான அஞ்ஞானம் மூலாஞ்ஞானமன்றும். சுத்த சைதன்னியத்தை விஷயஞ் செய்வதும் அதன் ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்கதுமான அவ்வஞ் ஞானத்திற்கு கடாவச் சின்ன சைதன்னிய விஷயகத் தன்மையும் அதன் ஞானத் தால் நிவர்த்திக்கத் தக்கதாம் தன்மையும் பொருந்தாமை யின் மற்றோ கடாவச்சின்ன சைதன்னியத்தை விஷயம் செய் வதாய் மூலாஞ்ஞானத்தின் அவஸ்தா விசேஷ வடிவமாய் வேறு அஞ்ஞானமேயாம் ஆதலின் அதன் நாசமே அபிபவ மாம்.

### சங்கை

இவ்வாறுயின் ஒரு ஞானத்தால் அதன் நாசமாகும்போது அதனை விஷயமாகவுடைய வேறு ஞானங்கட்கு ஆவரணத்தை நாசஞ் செய்யுந் தன்மையின்றாகும்.

### சமாதானம்

எத்துணை ஞானங்கள் உளவாகின்றனவோ அத்துணை அஞ்ஞானங்களுளவென அங்கீகரித்தலால் எனக் கூறுகின்ற னர். சில நூலாசிரியர் இந்த அவஸ்தா வடிவ அஞ்ஞானங் கள் அநாதிகளாம் அஞ்ஞானமாதலால் மூலாஞ்ஞானம் போன்று எனக் கூறுகின்றனர்.

[அவஸ்தா அஞ்ஞானத்தை உற்பத்தியுடையதாமென சிலர் சாதிக்கின்றனரெனக் கூறுகின்றார்.]

வியாவகாரிகமாகிய உலகத்தினையும் உயிர்களையும் மறைத்து சொப்பனத்தில் உயிர்களையும் உலகத்தையும் உண்டுபண்ணுகின்ற நித்திரையானது ஆவரண விக்ஷேப சத்தி களின் சம்பந்தத்தால் அஞ்ஞானத்தின் அவஸ்தா விசேஷ வடிவமாம். அப்படியே சுழுத்தியவஸ்தையும் அந்தக் கரணாதி கள் இலீனமாகும் போது நான் சுகமாகத் தூங்கினேன் ஒன்று மறியேன் என ஸ்மிருதி காணப்படுதலால், மூலாஞ் ஞானம் போன்று சுழுத்தி காலத்தில் அநுபவிக்கப் படுகின்றதாய் அஞ்ஞானத்தின் அவஸ்தா விசேஷ வடிவமேயாம். நித்திரை யுஞ் சுழுத்தியுமாகிய அஞ்ஞானத்தின் அவஸ்தா விசேஷங் கட்கு சாக்கிர காலத்தில் போகத்தைக் கொடுக்குங் கர்மங்க ளின் உபராம (லய) காலத்திலேயே உற்பத்தியாவதால் எங் ஙனம் சாதித்தன்மையோ அங்ஙனம் அவஸ்தா விசேஷ வடிவ

மற்றைய அஞ்ஞானமும் அதாவது கடாதி விஷயாவச் சின்ன சைதன்னியாசிரய அஞ்ஞானமும் சாதியேயாம் எனச் சிலர் கூறுகின்றனர்.

**அவதாரிகை**

அவஸ்தா அஞ்ஞானங்கட்கு சாதித்தன்மை பக்ஷத்தில் முதலிலுண்டான கடஞானத்தினுலே அதன் உற்பத்திக்கு முன்பு கடத்தை மறைத்துக்கொண்டிருந்த அஞ்ஞானம் நாசமாகுங்கால் பின்னுற்பத்தியான அவஸ்தா அஞ்ஞானம் மீண்டும் அதனை மறைக்கின்றது என வியவஸ்தை சித்திக்கின்றது அவைகட்கு அனுதித்தன்மை பக்ஷத்தின் கண்ணே வியவஸ்தை சித்திக்கின்றதில்லை என சங்கிக்கின்ருர்.

அற்றேல் அனுதித்தன்மை பக்ஷத்தின்கண் கடத்தின்கண் முதலிலுண்டான ஞானத்தினுலேயே அதன் எல்லா அஞ்ஞானங்களும் நாசமாகும். ஒரு அஞ்ஞானம் நாசமாம் மற்றைய அஞ்ஞானம் நாசமாகாது என்பதன்கண் வினிகமகம் இன்மையானும். கடாவச்சின்ன சைதன்னியத்தை மறைக்கும் எல்லா அஞ்ஞானங்களும் நாசமாகாதாயின் விஷயத்தின் விளக்கம் பொருந்தாமையானும், ஆதலால் பின்னுண்டாகும் ஞானங்கட்கு ஆவரணங்களின் அபிபவம் செய்யாமையாகிய தோஷம் முன்போன்றே உளதெனின்.

**சமாதானம்**

இச்சங்கைக்கு சிலர் இங்ஙனங் கூறுகின்றனர். எங்ஙனம் ஞானப்பிராக பாவங்கள் அநேகமிருப்பினும் ஒரு ஞான முதயமாகும் போது † ஒரு பிராக பாவமே நிவர்த்தியாகின்றதோ. அற்றேல் திருஷ்டாந்தம் விஷமமாம் ஞானத்தின் பிராக பாவத்திற்கு மறைக்குந் தன்மையின்மையானும், பாவவடிவு அஞ்ஞானத்திற்கு விஷயத்தை மறைக்குந்தன்மையுண்மையானும் ஆவரணமிருக்குங் காலத்தில் விஷயத்தின் விளக்கம் பொருத்தமின்ரு மெனின் அதற்குக் கூறுகின்ருர்.

சம்சய விபர்யயங்களை உண்டுபண்ணும் சாமர்த்தியமுடையதாந் தன்மையால் அதன் ஆவரண வடிவ வேறு பிராக பாவங்கள் இருக்கும் போதும் எங்ஙனம் உனது மதத்தில்

---

† ஒரு பிராகபாவமே நிவர்த்தியாகின்றதோ அங்ஙனம் ஒரு ஞான முதயமாகும் போது ஒரு அஞ்ஞானமே நிவர்த்தியாகின்றது என அன்வயம் செய்க.

விஷயத்தின் விளக்கமோ அங்ஙனம் ஒரு ஞானம் உதயமாகும் போது ஒரு அஞ்ஞானமே நிவர்த்தியாகின்றது. வேறஞ்ஞானங் களிருக்கும் போது விஷயம் விளங்குகின்றது என்க.

அதாவது சித்தாந்தத்தின்கண் பாவ வடிவ அஞ்ஞானத் திற்கு மறைக்குந் தன்மை என்பது அஞ்ஞாதமாகக் கருதப் பட்ட வஸ்துவின்கண் சம்சயாதிகளை யுண்டுபண்ணும் சாமர்த் தியமுடையதாந் தன்மையாம். அது பிரமத்தின்கண் ஞானப் பிராக பாவ வடிவ அஞ்ஞானத்திற்கும் சமானமாம். ஆத லால் திருஷ்டாந்தம் விஷமமன்றும், அற்றேல் அனுதித் தன்மை பக்ஷத்தின்கண் என்பதாதி கிரந்தத்தால் செய்யப் பட்ட சங்கைக்கு வேறு பிரகாரமாக சமாதானங் கூறுகின்றார்.

சில நூலாசிரியர் மறைபட்ட வஸ்துவிற்கு அபரோக்ஷத் தன்மை விருத்தமாம், ஒரு ஞானம் உதயமாகும்போது இதரப் பிராக பாவமிருப்பினும் எல்லா விசேஷ ஞானங்களின் எவ்வ பாவங்களுண்டோ அவைகளின் சமுதாய வடிவ ஆவரணம் விசேஷ ஞானத்தாலின்றும் எனக் கருதுகின்றவராய்க் கூறு கின்றனர். எப்போது எவ்வஞ்ஞானம் மறைக்கின்றதோ. அப்போது அந்த ஞானத்தால் அந்த அஞ்ஞானத்திற்கே நாச மாம். எல்லா அஞ்ஞானமும் எல்லாக் காலத்தும் மறைக்கின் றதில்லை வியர்த்தமாதலின் மற்றோ மறைப்பைச் செய்கின்ற அஞ்ஞானம் விருத்தியால் நாசம் பண்ணப்பட்டபோது அவ் விருத்தி உபரமமாகுங் காலத்தில் வேறஞ்ஞானம் மறைக் கின்றது.

இவ்வாறாயின் அதாவது எல்லாக் காலத்தும் எல்லா அவஸ்தா அஞ்ஞானங்கட்கும் மறைக்குந் தன்மையின்றாயின் பிரம ஞானத்தின் உற்பத்தி காலத்தில் மறைக்காமலிருக்கின்ற அஞ்ஞானங்கட்கு பிரம ஞானத்தானும் நிவர்த்தியுண்டாகலா காது என்று சொல்லற்க. அவ்வவஸ்தா அஞ்ஞானங்கட்கு சாக்ஷாத் பிரம ஞானத்தின் விரோதித் தன்மையின்றேனும் அதனால் நிவர்த்திக்கத்தக்க மூலாஞ்ஞானத்தின் பரதந்திரமா யிருத்தலால் அஞ்ஞான சம்பந்தாதி போன்று அதன் நிவர்த்தி யினாலேயே நிவர்த்தி பொருந்துதலின்.

அற்றேல் அவஸ்தா அஞ்ஞானங்கட்கு மூலாஞ்ஞானத் தின் பரதந்திரத் தன்மை அசித்தமாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

இதன் பொருட்டே அவைகளுக்கு மூலாஞ்ஞானத்தின் அவஸ்தா விசேஷ வடிவமாக அதன் பரதந்திரத் தன்மை அங்கீகரிக்கப்படுகின்றது. எங்ஙனம் சம்சாரத்திற்கு அஞ்ஞானத்தின் நிவர்த்தியால் நிவர்த்தி சித்திக்கும் பொருட்டு அதனை மூலமாகவுடையதாந் தன்மையால் சம்சாரத்திற்கு அதன் பரதந்திரத் தன்மை சொல்லப்படுகிறதோ அது போன்று பிரகிருதத்தினும் என்பது கருத்து.

[அற்றேல் அனுதித் தன்மை பக்ஷத்தின்கண் என்பதாதியால் செய்யப்பட்ட சங்கைக்கே சமாதானத்தை மற்றோர் பிரகாரமாக தெரிசிப்பிக்கின்றார்.]

வேறுஞ் சில நூலாசிரியரோ அஞ்ஞானத்திற்கு சவிஷயகத்தன்மை இயற்கையாதலால் பெரும்பாலும் எல்லா அஞ்ஞானமும் எக்காலத்தும் மறைக்கின்றதே யாகும்.

[அற்றேல் எல்லா அஞ்ஞானமும் தமது ஸ்திதி காலத்தில் எப்போதும் விஷயத்தை மறைக்கின்றதேயாம் என்னும் நியமமின்றாம். ஒரு ஞானம் இருக்கின்ற காலத்தில் ஒரு அஞ்ஞானமே நாசமாம் மற்றைய அஞ்ஞானங்களிருப்பினும் ஆவரண சத்தியின் பிரதி பந்த வடிவ திரஸ்காரத்தினை இனி கூறப்படுவதால் ஒரு ஞான காலத்திலவைகளுக்கு மறைக்குந் தன்மையின்மையின் என்னும் சங்கையை நிவர்த்திக்கும் பொருட்டு பெரும்பாலும் எனப்பட்டது.]

அற்றேல் எல்லாம் எல்லாக் காலத்தும் மறைக்கின்றது என்று கூறினதால் கடாதி விஷயோற்பத்திக்குப் பூர்வ காலத்திலும் கடாதியவச்சின்ன சைதன்னியத்தை மறைக்குந்தன்மை அவஸ்தாஞ் ஞானங்களின்கண் தோற்றுகின்றது அது பொருந்தாது அப்போது அவச்சேதக விஷயமின்மையால் அவஸ்தாஞ் ஞானங்களாலே மறைக்கத்தக்க விஷயாவச்சின்ன சைதன்னியமின்மையின் என்னுஞ் சங்கையை நீக்குகின்றார். விஷயோற்பத்திக்கு முன்பு மறைக்கத்தக்க சைதன்னியமின்மையால் அவஸ்தாஞ்ஞானத்திற்கு மறைக்குந் தன்மை பொருத்தமின்றாம் என்னற்க.

அப்போது (உற்பத்திக்கு பூர்வ காலத்திலும்) சூக்ஷ்ம வடிவத்தால் அது இருத்தலின் எனக் கருதுகின்றவராய்க் கற்பிக்கின்றனர். எங்ஙனம் அநேக ஜனக் கூட்டமுள்ள பிர

தேசத்தில் ஒருவனுடைய சிரசின்கண் விழுகின்ற இடியானது மற்றவர்களையும் விலக்குகின்றதோ. எங்ஙனஞ் ஜன்னிபாத ஜுரத்தை நிவர்த்தி செய்யும் ஔஷதமானது ஒரு தோஷத்தை நிவர்த்தி செய்கின்றதாய் வேறு தோஷங்களையும் தூரமாகச் செய்கின்றதோ. அங்ஙனம் ஒரு அஞ்ஞானத்தை நாசஞ் செய்கின்றதாய் ஞானமானது இதர அஞ்ஞானங்களையும் திரஸ்காரம் செய்கின்றது திரஸ்காரமென்பது ஞானமுள்ளவரை ஆவரண சத்தியின் பிரதிபந்தமாம்.

ஞானமாத்திரம் அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்றது என்னும் நியமத்தை ஆக்ஷேபிக்கின்ருர்.

அற்றேல் இவ்வாருயின் தொடர்பாக ஞானமுண்டாகுமிடத்தில் இரண்டாவது முதலிய விருத்திகட்கு ஆவரணத்தை அபிபவம் செய்யும் தன்மையின்றேல் வியர்த்தத் தன்மையாம். முதல் ஞானத்தினுலேயே ஒரு அஞ்ஞானத்தின் நிவர்த்தியும் இதர அஞ்ஞானங்களின் திரஸ்காரமும் உண்டாவதால் ஆவரண மாத்திரத்தின் அபிபவமிருத்தலால் எனின்.

முதல் ஞானத்தால் சித்தித்ததாயினும் ஆவரணத்தின் திரஸ்காரத்திற்கு இரண்டாவது முதலிய ஞானங்களின் சாத்தியத்தன்மை சாத்தியத்தின் லக்ஷண விசேஷத்தை அநுசரித்து சம்பவிக்கின்றது, ஆதலால் இரண்டாவது முதலிய ஞானங்கட்குப் பயனற்ற தன்மையின்ரும். அஞ்ஞானத்தின் நாச வடிவப் பிரயோஜனமில்லாவிட்டாலும் அதனது திரஸ்கார வடிவ பிரயோஜனம் இருத்தலின் எனப் பரிகரிக்கின்ருர்.

ஈண்டுச் சில நூலாசிரியர் இங்ஙனங் கூறுகின்றனர். விருத்தியால் திரஸ்கரிக்கப்பட்டதாயினும் அஞ்ஞானம் விருத்தி ஒடுங்கும் போது மீண்டும் மறைப்பைச் செய்கின்றது தீபத்தால் திரஸ்கரிக்கப்பட்ட இருள் தீபம் ஒடுங்குங் காலத்து மீண்டும் மறைப்பைச் செய்வது போன்று விருத்தியின் உபரம காலத்தில் வேறு விருத்தி உதயமாயினே திரஸ்கரிக்கப்பட்ட அஞ்ஞானம் அப்படியே நிலைபெறுகின்றது தீபத்தின் உபரம காலத்தில் வேறு தீப முதயமாகுங்கால் இருள் போன்று. அதாவது இது கடமென்னும் பிரத்தியக்ஷ ஞானமொரு அஞ்ஞானத்தை நாசஞ் செய்கின்றதாய் மற்றைய வெல்லாவஞ்ஞானத்தையும் திரஸ்காரம் செய்கின்றது அந்த

திரஸ்கரிக்கப்பட்ட அஞ்ஞானம் கடஞானமுபரமமாகுங் காலத்து மீண்டுமதை மறைக்கின்றது. அறியும் வேட்கை வசத்தால் முதலில் உற்பன்னமான கடஞானத்தின் நாசக்ஷணத்தில் கடத்தின் மற்ருேர் பிரத்தியக்ஷ முதயமாயின் அப்போது திரஸ்கரிக்கப்பட்ட அஞ்ஞானமப்படியே நிலைபெறுகின்றது என்பது பொருள்.

இவ்வாருகவே எது இருக்குங் காலத்து அடுத்த க்ஷணத்தில் எதனதிருப்போ எது இல்லாதபோது எதற்கு இருப்பில்லையோ அது அதனுல் ஜன்னியமாம், என பிராக பாவத்தின் பரிபாலன சாதாரண லக்ஷணத்தை அனுசரித்து அநுவரணத்தின்கண் இரண்டாவது முதலிய விருத்தியின் காரியத்தன்மை அடைவுறுதலால் அவைகட்குப் பயனற்ற தன்மையின்ருும். அதாவது தண்டம் முதலியவை இருக்குங் காலத்து உத்தரக்ஷணத்தில் கடம் முதலிய காரியங்களினிருப்பாம் தண்டமுதலியவை யில்லை யாயின் கடமுதலிய காரியங்களின் இருப்பின்ருும் ஆதலால் கடமுதலியவை தண்டமுதலியவற்ருல் ஜன்னியமரம் அவ்வாறே பிராயச்சித்த மிருக்குங்கால் உத்தரக்ஷணத்தில் துக்கப்பிராக பாவத்தின் இருப்பாம் பிராயச்சித்தம் இல்லையாயின் துக்கத்தி னுற்பத்தியால் துக்கப் பிராக பாவத்திற்கு இருப்பின்ருும் என்னும் ரீதியால் அநுதியாயினும் துக்கப் பிராகபாவத்திற்கு பிராயச்சித்தத்தால் ரக்ஷிக்கப்படுந்தன்மையுண்மையால் பிராயச்சித்த சாத்தியத்தன்மை அங்கீகரிக்கப்படுகின்றது. இவ்வாறு பிரகிருதத்தின்கண்ணும் இரண்டாவது ஞானம் உதயமாகுங் காலத்து முதல் ஞானத்தால் சித்தித்த ஆவரணத்தின் திரஸ்காரத்திற்கு உத்தரக்ஷணத்திலிருப்பாம், முதல் ஞானத்தின் நாக்ஷணத்தில் இரண்டாவது ஞானமுதய மாகாதாயின் கூறிய திரஸ் காரத்திற்கு இருப்பின்ருும், ஆதலால் முதல் ஞான காலத்திலேயே சித்தித்ததாயினும் அந்த திரஸ்காரத்திற்கு இரண்டாவது ஞான ஜன்னியத்தன்மை யிருத்தலால் அதன் பயனுந் தன்மையாம், இவ்வாறு மூன்ருவது முதலிய ஞானங்கட்கும் ஆவரண திரஸ்கார வடிவபயனை உடையதாந் தன்மை பொருத்தத்தக்கதா மென்பது பொருள்.

ஞானமனைத்தும் அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்றதில்லை தொடர்பாக உண்டாகும் இரண்டாவது முதலிய ஞானத்தின்

கண் வியபிசார முண்டாவதாலென்னும் ஆக்ஷேபத்திற்கு மற்றோர் பிரகாரமாக பரிகாரத்தைக் கூறுகின்றார்.

நியாய சந்திரிகை என்னும் கிரந்தத்தின் ஆசிரியரோ இங்ஙனங் கூறுகின்றனர். ஒரு ஞானத்தாலொரு அஞ்ஞானத்தின் அழிவேயாம் மறைப்பைச் செய்கின்ற இதர அஞ்ஞானங்கட்கு திரஸ்காரமின்றாம் அதாவது தொடர்பாகவுண்டாகும் இரண்டாவது முதலிய ஞானங்கட்கும் ஒவ்வொரு அஞ்ஞானத்தை நாசஞ்செய்யுந் தன்மையால் பயனுடையதாந் தன்மையாம்.

அபிப்பிராயத்தை அறியாதவனது சங்கையை அநுவாதம் செய்து நிராகரிக்கின்றார். முதல் ஞானத்தால் மறைப்பைச் செய்யும் மற்றைய அஞ்ஞானங்களின் திரஸ்காரம் இலதாயின் ஞானமுதயமாயினும் ஆவரணம் சம்பவித்தலால் விஷயத்தின் விளக்க மின்றாம் என்று சொல்லற்க. அவஸ்தாவடிவ அஞ்ஞானங்களோ அவ்வக்காலத்தாலு பலக்ஷிக்கப்பட்ட சொருபத்தை மறைப்பனவாம். ஞானங்களும் தாமுள்ளவரை தமதுஸ்திதி காலத்தாலு பலக்ஷிக்கப்பட்ட விஷயத்தை மறைக்கு மஞ்ஞானங்களை நாசஞ் செய்வனவாம்

இவ்வாறாகவே ஒரு ஞான முதயமாகும்போது அந்தக் காலத்திலுள்ள விஷயத்தை மறைக்கு மஞ்ஞானத்தின் நாசத்தாலும் அப்போதுள்ள மற்றைய அஞ்ஞானக்கட்கு அன்னிய காலத்துள்ள விஷயத்தை மறைக்குந்தன்மை உண்மையானும் அக்காலத்திலுள்ள விஷயத்தின் விளக்கத்தின்கண் யாதொரு அநுபபத்தியுமின்றாம்.

[கால விசேஷம் உபலக்ஷணமாமென்பதன்கண் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்]

காரீரியாகத்தின் பயனான விருஷ்டியின்கண் சன்னிகித கால விசேஷமு பலக்ஷணமாவது போன்று அஞ்ஞான விஷய கடாதியின்கண் அவ்வக் காலமு பலக்ஷணமாதலால் விஷய கோடியின்கண் பிரவேசமின்று மாதலால் அதிசூக்ஷுமமான கால விசேஷத்தை விஷயம் செய்யாத தொடர்பாயுண்டாகும் இரண்டாவது முதலிய ஞானங்களால் அஞ்ஞானங்களின் நிவர்த்தியின்கண்ணு மியாதொரு அநுபபத்தியு மின்றாம்.

[ஞானம் தொடர்பாயுண்டாகும் ஸ்தலத்தின்கண் இரண்டாவது முதலிய ஞானங்கட்கு ஆவரணத்தை நாசஞ்செய்யுந் தன்மையின்ருகு மென்னுஞ் சங்கைக்கே சமாதானத்தை மூன்று வகையாகத் தெரிசிப்பிக்கின்ருர் முதலில் வஸ்துவின் இயற்கையைக் கூறுகின்ருர்]

சில நூலாசிரியர் முதல் ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்க அஞ்ஞானமே சொரூபத்தை மறைப்பதாம் இரண்டாவது முதலிய ஞான்ங்களால் நிவர்த்திக்கத்தக்க அஞ்ஞானங்களோ தேச காலாதி விசேஷண விசிட்ட விஷயங்களை மறைப்பனவாம்.

[கூறிய வியவஸ்தையின்கண் பிரமாணமாக அனுபவத்தைத் தரிசிப்பிக்கின்ருர்.]

கூறிய விபாகத்தை அங்கீகரித்த விஞலேயே சொருபத்தின் நிச்சய வடிவமும் அஞ்ஞானத்தை நிவர்த்தி செய்வதுமாகிய சைத்திர ஞானம் ஒருதடவை யுண்டாகுங் காலத்து சைத்திரனை அறிகின்றிலேனென சொரூபத்தின் ஆவரணம் அனுபவிக்கப் படுகின்றதில்லை மற்ருே இப்போது அவன் எங்குளன் என்பதை அறிகின்றிலேன் என்பதாதி வடிவத்தால் தேசகால விசிட்ட ஆவரணமே அனுபவிக்கப் படுகின்றது.

[அற்றேல் கூறிய விபாகஞ் சித்திக்கின்றதில்லை சில்விடத்து ஒருதடவை காணப்பட்ட வஸ்துவின் கண்ணும் முன்போன்று சொருபத்தினவரண மனுபவிக்கப் படுதலாலென்ரு சங்கித்துக் கூறுகின்ருர்]

மறதியுள்ள புருடனுக்கு ஓரிடத்தில் ஒருதடவை காணப்பட்ட வஸ்துவின் கண்ணும் அறிகின்றிலேனென சொருபத்தின் ஆவரணங் காணப்படுகின்றதே எனின்

ஆண்டு அவ்வாருகுக. அதாவது மீண்டுஞ் சொரூப ஆவரண அனுபவஸ் தலத்திலிரண்டாவது முதலிய ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்க அஞ்ஞானமும் சொருபத்தை மறைப்பதாக ஆகுக ஆகவே கூறிய விபாகஞ் சாமான்யமாமென்பது கருத்து மறதியின்றிய புருடர்களிடத்தில் ஒருதடவை காணப்பட்ட வஸ்துவின்கண் ஞானங்களும்

அஞ்ஞானங்களும் தேச கால விசிட்ட விஷயங்களே யாம். ஒருதடவை காணப்பட்ட விஷயத்தின்கண் சைத்திரனிப்போது இவ்விடமிருக்கின்றான் என்னும் வடிவினதாகிய ஞானங்களும் தேசகால விசிட்ட விஷயங்களாகவே யிருக்கின்றன என்பது கருத்து.

[அற்றேல் தாராவாகிகஸ்தலத்தில் இரண்டாவது முதலிய ஞானங்களில் வியபிசாரத்தைப் பரிகரிக்கும் பொருட்டு ஞானங்கட்கு விசிட்ட விஷயகத்தன்மை கற்பிக்கப் படுகின்றது. ஆகவே ஆண்டு ஞானங்கட்கு நாழிகை அரை நாழிகை முதலிய வடிவினதாகிய ஸ்தூலகால விசிட்ட கடாதி விஷயகத்தன்மை விவக்ஷிதமா? அல்லது க்ஷணத்மக சூக்ஷ்ம காலவிசிட்ட கடாதி விஷயகத்தன்மை விவக்ஷிதமா என்னும் விகற்பத்தை மனதில் வைத்துக் கொண்டு இரண்டு பிரகாரத்தாலும் தாராஸ்தலத்தில் இரண்டாவது முதலிய ஞானங்களில் வியபிசாரம் முன்போன்றே யாமென வினவுகின்றான்]

இரண்டாவது முதலிய ஞானங்கட்கும் அவைகளால் நிவர்த்திக்கத்தக்க அஞ்ஞானங்கட்கும் சாதாரணமாக விசிட்ட விஷயகத் தன்மையை உடன்படின் தொடர்பாயுண்டாகும் இரண்டாவது முதலிய ஞானங்கட்கு அஞ்ஞான நிவர்த்தகக் தன்மையின்றாகும். ஸ்தூலகால விசிட்ட அஞ்ஞானத்திற்கு ஸ்தூலகால விசிட்ட விஷயக முதல் ஞானத்திலேயே நிவர்த்தி சம்பவித்தலால் பூர்வாபர ஞான காலத்தினின்றும் வியாவர்த்தமான யாதொரு க்ஷணவடிவ சூக்ஷ்ம காலமுண்டோ அதனோடு கூடிய விஷயத்தினஞ்ஞானத்திற்கு அதனை விஷயஞ் செய்யாமையாகிய இரண்டாவது முதலிய ஞானங்களால் நிவர்த்தி பொருந்தாமையின் எனின்.

## சமாதானம்

தாராவாகிக ஸ்தலத்தில் முதலிலுற் பன்னமான ஞானத்திற்கே அவ்வளவு காலம் வரை ஸ்திரத் தன்மை சம்பவித்தலால் ஞான பேதத்தை யங்கீகரியாமையின். யாண்டு ஒரே மகாலக்ஷிமி முதலிய வடிவத்தின்கண் நீண்ட காலம் நிரந்தரமாக ஸ்புரணமிருக்கிறதோ. ஆண்டு லக்ஷிமி முதலிய வடிவத்தை கோசரிக்கின்ற ஞானமொன்றேயாம், அதன் பேதத்தில் பிரமாணமின்மையின், சித்தாந்தத்தின்கண் ஞானத்

திற்கு க்ஷணிகஸ்திதியை அங்கீகரியாமையின் ஆகவே ஆண்டு வியபிசார சங்கையின்றுமென்க.

[அற்றேல் ஆண்டு ஞானமொன்றுயின் தாராவாகிகத் தன்மையின் பிரசித்திக்கு விரோதமாகும். ஒரு ஞானத்தின்கண் தாரை பொருந்தாமையின் தியான சமாதிகட்கும் கூறிய ரீதியால் ஒரு ஞானத்தன்மை அடைவுறுங்கால் அவைகட்கு ஞானங்களின் பிரவாக வடிவத் தன்மையைப் பிரதிபாதிக்கும் பாஷியாதிகளுக்கு விரோதம் நேருதலாலும் என்று சங்கித்து தாரைக்கு அநேக ஞான வடிவத் தன்மையை அங்கீகரித்து வியபிசாரத்தைப் பரிகரிக்கின்றுர்.]

தாராஸ்தலத்திலனேக ஞானத்தை யங்கீகரிக்கினும் அநேக காலந்திதியுடைய ஐந்தாறு ஞான வடிவத் தன்மை சம்பவித்தலால் பரஸ்பரம் வியாவிர்த்தமான தூலகாலாதி விசேஷண விசிட்ட விஷயகத் தன்மை பொருந்துதலின். இரண்டாவது முதலிய ஞானங்கட்கு அஞ்ஞானத்தின் அநிவர்த்தகத் தன்மைத் தோஷமின்றும்.

[தாராவாகிக ஞானங்கட்கு நியாய மதத்திற் போன்று க்ஷணிக ஸ்திதியை அங்கீகரித்தும் வியபிசாரத்தைப் பரிகரிக்கின்றுர்.]

ஒவ்வொரு க்ஷணத்திலுதயமாகின்ற அநேக ஞானங்களின் பிரவாக வடிவத் தன்மையை அங்கீகரிக்கினும் இரண்டாவது முதலிய ஞானங்கட்கு அறியப்பட்ட அர்த்தத்தை மாத்திரம் விஷயமாகவுடையதாந் தன்மையால் பிராமாண்யமின்மையின் ஆவரணத்தை நிவர்த்திக்குந் தன்மையின்றேனும் குறைவின்றுமாதலின். விஷயத்தின் அபாத மாத்திரம் பிராமாண்யமன்றும் முன்பு அறியப்பட்டதும் அறியப்படாததுமான பர்வதமும் அதன்கண்ணுள்ள நெருப்புமாகிய அநுமிதி விஷயங்கட்கு அபாதஞ்சமமாயிருத்தலால் இரண்டின் கண்ணும் அநுமிதிக்கு பிராமாண்யம் பிராப்தமாதலின் அது இஷ்டந்தானென்று சொல்லற்க. நெருப்பின்கண் அநுமிதி பிரமாணமாமென்பது போன்று பருவதத்தின்கண்ணும் அநுமிதியானது பிரமாணமாமென வியவகாரங் காணப்படாமையின்.

[பிரமையின் லக்ஷணத்தின்கண் அஞ்ஞாதத் தன்மையின் பிரவேசமுளது என்பதில் மற்றேர் ஏதுவைக் கூறுகின்றுர்.]

விவரண கிரந்தத்தில் சாக்ஷியால் சித்தித்த அஞ்ஞானத்திற்கு அபாவத்தின் வியாவிருத்தியை போதிப்பதாயுள்ள அநுமானுதி விஷயத் தன்மையிருப்பினும் பிரமாண அவேத்தியத்தன்மையைக் கூறியிருத்தலினுலும் என்க. ஆதலால் இரண்டாவது முதலிய ஞானங்கட்குப் பிராமாண்யமின்மையினுல் உபாசனை முதலிய ஞானங்கட்குப்போன்று அஞ்ஞானத்தின் நிவர்த்தகத் தன்மையின்றேனுங் குறைவின்ரும். பிரமாஞானங்கட்கே அஞ்ஞான நிவர்த்தகத் தன்மை அங்கீகரித்தலால்.

[பிரமை மாத்திரம் அஞ்ஞானத்தின் நிவர்த்தகமாம் என்னும் நியமத்தின்கண்ணும் வியபிசாரத்தை சங்கிக்கின்ருன்.]

அற்றேல் கூறிய நியமமுஞ் சரியன்ரும் பரோக்ஷ ஞானத்திற்கு வெளிப் போதலின்மையால் அஞ்ஞானத்திநிவர்த்தகத் தன்மையின்மையின்.

இச்சங்கைக்கு சில நூலாசிரியர் கூறுஞ் சமாதானமிதுவாம். விஷயத்தை மறைக்குமஞ்ஞானம் இரண்டு விதமாம் ஒன்று விஷயத்தை ஆசிரயித்துள்ளதாய் இரச்சுவாதியின்கண் சர்ப்பாதி விக்ஷேபத்திற்கு உபாதானமாய்க் காரியத்தால் கற்பிக்கத் தக்கதாய் உள்ளது. மற்ருேரஞ்ஞானம் புருஷனை ஆசிரயித்துள்ளதாய் இதனை அறியேனென அனுபவிக்கப்படுவதாய் உள்ளது. புருஷனை ஆசிரயித்த அஞ்ஞானத்திற்கு இரஜ்ஜுவாதி விஷயத்தின்கண்ணுள்ள சர்ப்பாதிகளினுபாதானத் தன்மை சம்பவியாமையானும் விஷயத்தை யாசிரயித்த அஞ்ஞானத்திற்கு இதையானறியேனென சாக்ஷி வடிவ பிரகாச சம்பந்தம் பொருந்தாமையானும் இருவித அஞ்ஞானமும் ஆவசியகமாதலினென்க.

[இப்போது வியபிசாரத்தைப் பரிகரிக்கின்ருர்.]

இவ்வாருகவே பரோக்ஷ ஸ்தலத்தில் விருத்தி வெளியிற் செல்லாமையாலும் தூரத்திலுள்ள விருக்ஷத்தின்கண் ஆப்த வாக்கியத்தால் பரிமாண விசேஷமறியப்படினும் அதன் விபரீத பரிமாண வடிவ விக்ஷேபங் காணப்படுதலாலும் விஷயத்தின் கண்ணுள்ள அஞ்ஞானத்தின் நிவர்த்தியின்றேனும் புருஷனிடத்துள்ள அஞ்ஞானத்திநிவர்த்தியுளதேயாம்.

[பரோக்ஷ ஞானத்தால் புருஷனிடத்துள்ள அஞ்ஞான நிவர்த்தியில் ஏதுவைக் கூறுகின்றார்.]

சாஸ்திரார்த்தத்தை அறிகின்றிலேனென அனுபவிக்கப் படுகின்ற அஞ்ஞானத்திற்கு சாஸ்திர உபதேசத்தினனந்தரம் நிவர்த்தியின் அநுபவம் உண்டாதலால். கூறிய அனுபவத்தாலேயே அநுமேயாதிகளில் அஞ்ஞான நீக்க மென்னும் விவரணத்திற்கு அநுமேய விஷயத்திலுள்ள அஞ்ஞானத்தினீக்கம் பொருளாமென்று தத்துவ தீபனத்தின்கண் வியாக்கியானஞ் செய்யப்பட்டுள்ளது.

[அஞ்ஞானத்திற்கு இருவிதத் தன்மையின்றேனும் பிரமை மாத்திரம் அஞ்ஞான நிவர்த்தகமாமென்னும் நியமத்திற்கு வியபிசாரமின்றாமென்னும் மதத்தை தரிசிப்பிக்கின்றார்.]

புருஷனிடத்திலுள்ள அஞ்ஞானத்தின் வேறாக விஷயத்தின்கண் அஞ்ஞானம் விஷய ஆவரணத்தின் பொருட்டு அங்கீகரிக்கப்படுகின்றதா. சுத்திரஜதாதி உற்பத்தியின் பொருட்டு அங்கீகரிக்கப்படுகின்றதா? முதற் பக்ஷம் சரியன் றெனக் கூறுகின்றார். நேத்திரத்தின்கண் உள்ள படலம் போன்று புருஷனை யாசிரயித்த அஞ்ஞானமே விஷயத்தை மறைக்கின்றது இரண்டாவது பக்ஷமும் சரியன்றெனக் கூறுகின்றார். அதனினும் வேறாக விஷயத்தின் கண்ணுள்ள அஞ்ஞானத்தில் பிரமாணமின்றாம்.

[பிரமாணமின்மை அசித்தமாமென வினவுகின்றான்.]

புருஷனை ஆசரியித்த அஞ்ஞானத்திற்கு விஷயத்திலுள்ள சர்ப்பாதிகளின் உபாதானத் தன்மை சம்பவியாது. அது சம்பவமாயினும் தூரத்திலுள்ள விருக்ஷ பரிமாணத்தின்கண் பரோக்ஷ ஞானத்தால் அஞ்ஞானம் நிவர்த்தியாகுங்கால் விபரீத பரிமாணத் தோற்றம் சம்பிவியாது எனின்.

சமாதானங் கூறுகின்றார். வாசஸ்பதி மதத்தில் சர்வ பிரபஞ்சமும் ஜீவனை ஆசிரயித்த அஞ்ஞானத்தின் விஷயமாயுள்ள பிரமத்தின் விவர்த்தமாயிருத்தலால். அது போன்று சுத்திரஜாதியும் புருஷனை ஆசிரயித்த அஞ்ஞானத்தின் விஷயமாயுள்ள பிரமத்தின் விவர்த்தமாகப் பொருந்துதலின். பரோக்ஷ ஞானத்தால் ஒரு அவஸ்தை நிவர்த்தியாயினும் மற்றோரவஸ்தையால் புருஷனை யாசிரயித்துள்ள அஞ்ஞானத்

திற்கே விபரீத பரிணும வடிவ விக்ஷேபம் பொருந்துதலினுலும் என இங்ஙனம் சில நூலாசிரியர் கூறுகின்றனர்.

அவதாரிகை

[இவ்வாறு பிரதிபந்த மற்ற பிரமை மாத்திரம் அஞ்ஞானத்தினிவர்த்தகமாமென்னும் நியமத்தை அனுசரித்து அதன்கண் வியபிசாரத்தை நீக்கும் பொருட்டு பரோக்ஷ ஞானத்திற்கு அஞ்ஞானத்தினிவர்த்தகத் தன்மை உபபாதனம் செய்யப்பட்டது இப்போது அத்தகைய நியமமின்ரும். மற்ருே பிரதிபந்தமற்ற அபரோக்ஷ ஞானமே அஞ்ஞானத்தினிவர்த்தகமாம் ஆதலால் பரோக்ஷ ஞானத்தின்கண் வியபிசார சங்கையின்ருமென்னும் மதத்தை ஆரம்பிக்கின்ருர்.]

வேறு சில நூலாசிரியரோ, சுத்திரஜதாதி பரிணும உபபத்தியின் நேர்மையால் விஷயத்தை மறைக்கும் வஸ்திரம் போன்று விஷயத்தின்கண்ணுள்ள அஞ்ஞானமே அதன் ஆவரணமாம்.

சங்கை

விஷயத்தை மறைக்குமஞ்ஞானத்திற்கு விஷய சம்பந்தத்தையுடன்படின் அஞ்ஞானத்திற்கு சாக்ஷி சம்பந்தமின்மையால் சாக்ஷியினுல் பிரகாசம் பொருந்தாது. பரோக்ஷ ஞானநிவர்த்தியத் தன்மையும் சம்பவியாது பரோக்ஷ ஞானம் விஷயதேசத்தின்கண் செல்லாமையின் எனின்.

உத்தரம்

அவஸ்தா வடிவ அஞ்ஞானத்திற்கு சாக்ஷி சம்பந்தமின்றெனினும் சாக்ஷியை சம்பந்தித்த மூலாஞ் ஞானத்திற்கே சுத்தியை யானறியேனென்னும் பிரகாசம் பொருந்துதலின்.

[அற்றேல் மூலாஞ்ஞானம் பிரமத்தை விஷயஞ் செய்வதால் அவ்வஞ்ஞானத்தின்கண் சுத்தி விஷயகத் தன்மையினனுபவம் எங்ஙனம் சம்பவிக்கும். அவஸ்தா அஞ்ஞானத்திற்குத்தான் சுத்தி விஷயகத் தன்மையின் அனுபவமெப்படி சம்பவிக்கும் அதற்கும் சுத்தி அவச்சின்ன சைதன்னியமாத்திர விஷயகத் தன்மையுண்மையின். சுத்திக்கு அவஸ்தா அஞ்ஞான விஷய சைதன்னியத்தோடு தாதாத்மிய மிருத்தலால் சுத்தி விஷயகத் தன்மையின் அனுபவம் விரோதமின்ரும், எனின் உத்தரமும் சமமாமென்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.]

சுத்தியாதிகட்கும் மூலாஞ்ஞானத்தின் விஷயமாகிய சைதன்னியத்தோடு அபேதமிருத்தலால் அதன் விஷயத் தன்மையினனுபவத்திற்கு விரோதமின்மையின்.

[சுத்தியை யானறியேன் என்னும் அனுபவத்திற்கு மூலாஞ்ஞான விஷயகத் தன்மையின்கண் விவரணுசாரியருடைய சம்மதியைக் கூறுகின்றூர்.]

விவரணம் முதலிய கிரந்தங்களில் மூலாஞ்ஞானத்தினை சாதிக்கும் பிரசங்கத்தின்கண்ணேயே இதை யானறியேனென பிரத்தியக்ஷப் பிரமாணத்தைத் தெரிசிப்பித்தலாலும் நானஞ்ஞனென்னும் சாமான்ய வடிவினதாகிய அஞ்ஞானத்தினனுபவமே மூலாஞ் ஞானத்தை விஷயஞ் செய்வதாம். சுத்தியை யானறியேன் என்பதாதி விஷயவிசேஷத்தால் தழுவப் பெற்ற அஞ்ஞானத்தினனுபவமோ அவஸ்தாவஞ்ஞானத்தை விஷயஞ் செய்வதாம் என விசேஷத்தை அங்கீகரிக்கினும் அவஸ்தைக்கும் அவஸ்தையுடையதற்கும் அபேதமிருத்தலால் மூலாஞ் ஞானத்திற்கு சாக்ஷி சம்பந்தமிருத்தலாலாவது அல்லது சாக்ஷிக்கும் விஷய சைதன்னியத்திற்கும் வாஸ்தவ அபேதமுண்மையினுலாவது விஷயத்தின்கண்ணுள்ளதாயினும் அவஸ்தா அஞ்ஞானத்திற்கு சாக்ஷி விஷயத்தன்மை பொருந்துதலின்.

[அப்படியானுல் சாஸ்திரார்த்தத்தை யானறியேனென அநுபவிக்கப்படுகின்ற அஞ்ஞானத்திற்கு அதன் உபதேசத்திற்குப் பிறகு அதனிவர்த்தியினனுபவம் விரோதமாமேயெனின். அற்றன்றெனக் கூறுகின்றூர்.]

பரோக்ஷ ஞானத்திற்கு அஞ்ஞான நிவர்த்தகதன்மையின்றேனும் அதனுல் அதனிவர்த்தியினனுபவத்திற்கு சத்தையின் நிச்சய வடிவ பரோக்ஷஞான பிரதிபந்தத்தின் அதீனமான அனனுபவத்தின் நிவர்த்தியை முன்னிட்டு பிராந்தித் தன்மை பொருந்துதலின். அபரோக்ஷ ஞானத்திற்கே அஞ்ஞானத்தினிவர்த்தகத் தன்மை நியமத்தை அங்கீகரித்தலால் எனக் கூறுகின்றனர்.

அற்றேல் கூறிய நியமமும் சரியன்றும். அவித்தை அகங்காரம் அதனது தருமமாகிய சுகதுக்கம் முதலியவற்றின் பிரத்தியக்ஷத்திற்கு அஞ்ஞானத்தினிவர்த்தகத் தன்மையை அங்கீ

கரியாமையின் எனின். அற்றன்று, அவித்தையாதியின் பிரத்தியக்ஷம் சாக்ஷி வடிவமாதலால் விருத்தி வடிவ அபரோக்ஷ ஞானத்திற்கு ஆவரண நிவர்த்தகத் தன்மையின் நியமத்திற்குக் கேடின்மையின்.

## 31 சாக்ஷியின் சொரூப விசாரம்

சுகாதிகளின் தருமியாகிய அகங்காரத்திற்குச் சாக்ஷிப் பிரத்தியக்ஷ விஷயத்தன்மையைக் கூறினமையால் நானென்னுஞ் சொல்லுக்குப் பொருளான ஜீவனை யபேக்ஷித்து வேருக அதன்சாக்ஷி கூறப்படடது. சுகாதிகளின் தருமியாகிய அகங்காரத்திற்கே உலகின்கண் ஜீவத்தன்மை பிரசித்தியாதலால் ஜீவனினும் வேருக யாதொரு சாக்ஷி வியவகரிக்கப் படுகின்றதோ அஃதின்ரும் பிரமாண மின்மையின் என ஆக்ஷேபிக்கின்ருர்.

அற்றேல் ஜீவனினும் வேருக வியவகரிக்கப்படுகின்ற சாக்ஷியென்பது யாது.

இச்சங்கைக்குக் கூடஸ்த தீபத்தின்கண் கூறப்பட்ட சமாதானமிதுவாம். இருதேகங்கட்கும் அதிஷ்டான மாயுள்ள கூடஸ்த சைதன்னியம் தனது அவச்சேதகமான இரண்டு தேகங்களையும் நேரே பார்த்தலாலும் நிர்விகாரமாயிருத்தலாலுஞ் சாக்ஷியெனப்படுகின்றது. உலகின்கண்ணும் உதாசீன மாயிருந்தறிதலாலேயே சாக்ஷித்தன்மை பிரசித்தமாம்.

பிரகாசவடிவ அந்தக்கரண விருத்திகளாலேயே அது சித்தித்தலினென்னுங் கருத்தால் சங்கிக்கின்ருன். அந்தக்கரணத்தின்விருத்திக ளிருதேகங்களையும் விளக்குவனவாயுள்ளன. ஆதலால் சாக்ஷி எற்றிற் கெனின்.

### சமாதானம்

அந்தக்கரண விருத்திகட்கு தீபாதிபோன்று பிரகாச வடிவத்தன்மை யிருப்பினும் அவைகட்கு ஜடத்தன்மை யுண்மையாவிருதேகங்களை விளக்குந்தன்மை சம்பவியாது, சொப்பிரகாச நித்தியசைதன்னியத்தை யங்கீகரிக்கினே அதன் பிரதிபிம்பத்தோடு கூடிய விருத்திகட்கு இருதேகங்களை விளக்குந்தன்மை சம்பவிக்கின்றது ஆதலாலத்

தகைய சைதன்னிய மங்கீகரிக்கத்தக்கதாமென்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.

அங்ஙனமாயினும் எங்கும் பரவியுள்ளதும் இருதேகங்களால் அவச்சின்னமானதும் ஆகிய கூடஸ்த சைதன்னியத்தால் இரண்டு தேகமும் சொற்பம் எப்போதும் விளங்கப்படுவதாகியே ஜீவசைதன்னிய மாகிய பிரதிபிம்பத்தோடு கூடிய அந்தக்கரணத்தினின்றும் இடையில் விட்டு விட்டு எழுகின்ற விருத்தி ஞானங்களால் விளங்கப்படுகின்றது அந்தராள காலத்தின்கண்ணே விருத்தியின் அபாவங்களோடு கூட கூடஸ்த சைதன்னியத்தினுலேயே விளங்கப்படுகின்றது.

[இந்த சாக்ஷியின் சற்பாவத்தின்கண்ணேயே மற்ஞெரு யுக்தியையுந் தெரிசிப்பிக்கின்ருர்]

நித்திய சைதன்னிய வடிவ சாக்ஷியிருத்தலினுலேயே அகங்காராதிகட்கு எப்போதும் பிரகாச சம்பந்த மிருத்தலால் சம்சயாதியின் அவிஷயத்தன்மையாம்.

[சாக்ஷியின் சற்பாவத்தில் மற்ஞெரு யுக்தியைக் கூறுகின்ருர்]

இராமகிருஷ்ணுதி திவ்விய மங்கள மூர்த்திகளை விஷயஞ் செய்கின்ற ஞானங்களின் பிரவாக காலத்திலுள்ள அகங்காரத்திற்கும் அக்காலத்திலுள்ள விருத்திகட்கும் இவ்வளவு காலம் இதனைப்பார்த்துக் கொண்டே யிருந்தேனென்னும் அனுசந்தான வடிவஸ் மிருதியும் பொருந்துகின்றது.

அவதாரிகை

[அற்றேல் சாக்ஷிசைதன்னியத்தா லனுபவிக்கப்பட்ட அகங்கார அதன் விருத்திகளின் நான் பார்த்துக்கொண்டே இருந்தேனென்னும் ஸ்மரணம் ஜீவனுக்கு எங்ஙனம் சம்பவிக்கும்; பிரதி பிம்ப ஜீவனைப் பார்க்கிலும் பிம்பவடிவ கூடஸ்த சைதன்னியம் வேருன தால் ஒருவனுல் அனுபவிக்கப்பட்ட வஸ்துவின்கண் மற்ஞெருவனுக்கு ஸ்மிருதி பொருந்தாமையின் என வினவு கின்ருன்.]

கூடஸ்தனுல் பிரகாசிப்பிக்கப்பட்ட வஸ்துவின்கண் ஜீவனுக்கு வியவகாரம் ஸ்மிருதி முதலானவை யெங்ஙனமாமெனின்.

சமாதானம்

தன்ஞலாவது தன்னேடு தாதாத்மியத்தை அடைந்ததனலாவது அனுபவிக்கப்பட்ட வஸ்துவின்கண் தனக்கு ஸ்மரணமுண்டாகின்றது என்னுங் கருத்தாற் கூறுகின்ருர். அன்னியோன்யாத்தியாசத்தால் ஜீவனேடு ஏகத்தன்மையினடைவால் கூடஸ்தனுக்கு ஜீவனுள்ளாக இருக்குந் தன்மையுண்மையின்.

சங்கை

அங்ஙனமாயினும் ஜீவசைதன்னியமே சாக்ஷியாக யிருக்கட்டுமே கூடஸ்த னெற்றிற்கு எனின் அற்றன்று. லௌகீக வைதீக கருமங்களைச் செய்து கொண்டிருக்கும் ஜீவனுக்கு உதாசீனமா யிருந்தறியுந்தன்மை சம்பவியாமையால் "சாக்ஷீ சேதனம். கேவலம் நிர்க்குணம்" என்னுஞ் சுருதியிற் கூறப்பட்ட சாக்ஷித்தன்மை பொருந்தாமையாலும் "ஜீவன் கூடஸ்தனென்னு மிருவருள் ஒருவன் கரும பலத்தை நன்று நன்றெனப்புஜிக்கின்றனன் மற்ருெருவன் புஜியாதவனுகி விளங்குகின்ருன்" என கருமபலனை அனுபவிக்கும் ஜீவனைப் பார்க்கிலும் உதாசீனப் பிரகாச வடிவ சாக்ஷியை வேருகக் கூறியிருத்தலினுலும் என்க.

நாடக தீபத்தின்கண்ணும் நாடக சாலையின் கண்ணுள்ள தீப திருஷ்டாந்தத்தால் சாக்ஷி ஜீவனைப் பார்க்கிலும் வேறு பிரித்துத் தரிசிப்பிக்கப்பட்டுள்ளது, அஃதெப்படி எனின் நாடகசாலையிலுள்ள தீபமானது எஜமானனையுஞ் சபையிலுள்ளவர்களையும் நிர்த்தனம் செய்கின்ற தாசியையும் சமானமாகவே பிரகாசிப்பிக்கும், மேற்கூறிய ஒருவரு மில்லாத காலத்தும் சுயம்தானே விளங்குகின்றது, அதுபோல் சிதாபாச விசிஷ்ட அகங்கார வடிவனும் விஷய போகங்களின் மிகுதிக் குறைவுகளின் அபிமானத்தின தீனமான சந்தோஷ விஷாதங்களையுடையதாந் தன்மையால் நாடகசாலையின பிமானியாகிய எஜமானனுக்குச் சமான மானவனுமாகிய ஜீவனையும் ஜீவனது சமீபத்திலிருந்த போதிலும் சந்தோஷ விஷாதங்களின்மையால் சபையிலுள்ள புருஷர்கட்கு சமானமான விஷயங்களையும் நாநாவித விகாரங்களோடு கூடியிருத்தலால் நடனஞ் செய்கின்ற தாசிக்குச் சமானமான புத்தியையும் சாக்கிர முதலிய வற்றில் பிரகாசஞ்

செய்கின்றதாய் சுழுத்தி முதலியவற்றில் அகங்காராதிகளின் அபாவ காலத்தும் விளங்குகின்றதாய் சிதாபாச விசிஷ்ட அகங்கார வடிவ ஜீவப் பிராந்திக்கு அதிஷ்டானமாயுள்ள கூடஸ்த சைதன்னிய ஆன்மா சாக்ஷி எனப்படுகின்றது.

இவ்வாறு ஜீவனினின்றும் வேறு பிரிக்கப்பட்ட இந்த சாக்ஷியானது ஈஸ்வர கோடியுமன்றும். அதாவது ஜகத் சிருஷ்டி முதலிய வியாபார மின்மையின் ஈஸ்வரனுமன்றும், மற்றோ ஜீவேஸ்வர வேற்றுமையற்ற சைதன்னிய மாத்திரமா மென கூடஸ்த தீபத்தின்கண் கூறப்பட்டுளது. தத்துவப் பிரதீபிகையெனப் பெயரிய கிரந்தத்தின் கண்ணும் மாயாவி சிஷ்ட சகுண பரமேஸ்வரனிடத்தில் கேவலம் நிர்க்குண மென்னும் விசேஷணம் பொருந்தாமையின் சர்வ ஜீவர்கட்கும் பிரத்யக்வடிவ விசுத்தப் பிரமம் ஜீவனினின்றும் பேதமாக சாக்ஷி என அறியப்படுகின்றது என்று கூறப்பட்டுள்ளது.

### அவதாரிகை

கௌமுதி என்னுங் கிரந்தத்தின்கண்ணே ஏகனுந் தேவனும் சர்வ பூதங்களில் மறைபட்டவனும் சர்வ வியாபியும் சர்வ பூதங்களின் அந்தரான்மாவும், கர்மங்கட்கு அத்யக்ஷனும் (சாக்ஷி) சர்வ பூதங்கட்கு ஆசிரயனும் சாக்ஷியும் சித்தும் கேவலனும் நிர்க்குணனுமாம்'' என தேவத்வாதி சுருதியினால் பரமேஸ்வரனுடைய ஓர் உருவ விசேஷமே ஜீவனுடைய பிரவிருத்தி நிவர்த்திகளை நிரந்தரமாக அறிகின்றதாய் சுயம் உதாசீனமாய் சாக்ஷியென்னும் பெயருடையதாகின்றது. அதுவுங் காரணத்துவாதி தருமங்கட்கு ஆசிரயமாகாமையின் அபரோக்ஷமாய் ஜீவனிடத்துள்ள அஞ்ஞானாதிகளை விளக்குகின்றதாய் ஜீவனுக்கு அந்தரங்கமாம். சுழுத்தியாதிகளில் காரிய காரணங்கள் ஒடுங்கும்போது ஜீவனிடத்துள்ள அஞ்ஞான மாத்திரத்தைப் பிரகாசஞ் செய்வதாய்ப் பிராஞ்ஞசப்தத்தால் கூறப்பட்டுள்ளது.

[அற்றேல் ''சுழுத்தியிலும் உக்கிராந்தியி (மேற்கிளம் பிப்போதலி) லும் பேதத்தா''லென்னும் அதிகரணத்தின்கண் சுழுப்தியாதியை விஷயஞ் செய்கின்ற சுருதியின்கண்ணுள்ள பிராக்ஞ சப்தத்திற்கு சர்வேஸ்வரத் தன்மை பூதாதிபதித் தன்மை முதலியவற்றோடு கூடிய பரமான்மாவைப் பிரதி

பாதிக்குந் தன்மை கூறப்பட்டமையின் பிராக்ஞ சப்தத்திற்கு உதாசீன சாக்ஷிபரத் தன்மை எங்ஙனமாமெனின் கூறுகின்றார்.]

எப்படி பிரியமான ஸ்திரீயினால் ஆலிங்கனம் பண்ணப் பட்ட புருடனானவன் தெருவிலுள்ள வியவகாரத்தையும் வீட்டிலுள்ள வியவகாரத்தையும் அறிகின்றதில்லையோ அங்ஙனமிப் புருடனானவன் பிராக்ஞ ஆன்மாவினாற்றழுவப் பட்டவனாகி ஜாக்கிரப் பிரபஞ்சத்தையும் சொப்பனப் பிரபஞ்சத்தையுங் கிஞ்சித்துமறிகிறதில்லை. "பிராஞ்ஞ ஆன்மாவினாலே ஆசிரயிக்கப்பட்டவனாகி துன்ப வசத்தினால் சப்தத்தைச் செய்கின்றவனாகி சரீரத்தினின்றும் வெளிக்கிளம்புகின்றான்" என்னும் சுருதி வாக்கியங்களால் சுழுத்தி அவஸ்தையிலும் உத்கிராந்தியவஸ்தையிலும் ஜீவனில் நின்றும் பேதமாகப் பரமேஸ்வரன் பிரதிபாதிக்கப்பட்டானென சுழுத்தி உத்கிராந்தியதிகரண நிச்சயமும் சாக்ஷி பரமாமென்று வருணிக்கப்பட்டுளது.

## அவதாரிகை

[கௌமுதிக்காரரது மதத்தின் சம்வாதத்தின் பொருட்டு மற்றோர் மதத்தைக் கூறுகின்றார்.]

தத்துவ சுத்தியென்னுங் கிரந்தத்தின்கண்ணும் எங்ஙனமிது ரஜதமென்னும் பிராந்திஸ்தலத்தில் வாஸ்தவமாக சுத்தியின் பக்ஷத்தில் அந்தர்க்கதமாயினும் இதமம்சம் பிரதீதியினால் ரஜத பக்ஷத்திலுள்ளதோ அங்ஙனம் பிரம பக்ஷத்திலுள்ளதேயாயினும் சாக்ஷி பிரதீதியால் ஜீவ பக்ஷத்திலுளதாமென ஜீவனுடைய சுகாதி வியவகாரத்தின்கண் சாக்ஷிக்கு உபயோகமாமெனக் கூறி இப்பக்ஷமே சமர்த்தனஞ் செய்யப்பட்டுள்ளது.

ஜீவனுக்குஞ் சாஷிக்குமுள்ள பேத பக்ஷத்தை கூறியிப்போது அவர்களின் அபேத பக்ஷத்தை கூறுகின்றார்.

சில நூலாசிரியரோ அவித்தையை உபாதியாகவுடைய ஜீவனே நேரே பார்த்தலால் சாக்ஷியாம். உலகின்கண்ணும் அகர்த்தாவாயிருந்து பார்ப்பவன் சாக்ஷியாமென்பது பிரசித்தமாம், அதுவும் (சாக்ஷித் தன்மையும்) அசங்க உதாசீன பிரகாச வடிவ ஜீவனிடத்திலேயே நேரே சம்பவிக்கின்றது. ஜீவ

னுக்கு அந்தக் கரணத்தின் தாதாத்மிய அடைவால் கருத்துரூத்தன்மை முதலியவற்றிஞரோபமடைவுறினும் சுயம் உதாசீனத்தன்மை உண்மையின்.

அற்றேல் ஈஸ்வரனுக்கு சாக்ஷித்தன்மையை அங்கீகரியாவிடின் சுருதிக்கு விரோதமாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர், ஏகன் தேவனென்னும் சுருதியோ பிரமத்திற்கு ஜீவபாவ அபிப்பிராயத்தால் சாக்ஷித் தன்மையைப் பிரதிபாதனஞ் செய்வதாம். இரண்டு பக்ஷிகளென்னும் மந்திரம் குஹாதிகரண நியாயத்தால் ஜீவேஸ்வர உபயபரமாம் அல்லது குஹாதிகரண பாஷியத்தில் உதாகரிக்கப்பட்ட பைங்கிரகசியப் பிராம்மணத்தில் வியாக்கியானஞ் செய்யப்பட்ட பிரகாரத்தால் ஜீவன் அந்தக்கரணமிரண்டின் பரமாம். ஆதலின் யாதொரு விரோதமுமின்ருமெனக் கூறுகின்றனர்.

[அவித்தையின்கண் சைதன்னியத்தின் பிரதிபிம்ப வடிவ ஜீவனுக்கே சாக்ஷித்தன்மை அங்கீகரித்து அதன்கண் சொற்ப விசேஷத்தைக் கூறுவதற்கு வேருெரு மதத்தை ஆரம்பிக்கின்ருர்.]

சில நூலாசிரியரோ ஜீவனே சாக்ஷி என்பது வாஸ்தவந்தான் ஆனல் சர்வகத அவித்தையின் உபகித ரூபத்தால் சாக்ஷி அன்ரும். வேறு புருஷர்களின் அந்தக்கரணுதிகட்கும் வேறு புருஷரைக் குறித்து தனது அந்தக்கரணத்தை விளக்குஞ் சாக்ஷி சம்பந்தம் சமானமாயிருத்தலால் பிரத்தியக்ஷத் தன்மை அடைவுறுதலின். அந்தக்கரணத்தின் பேதத்தால் பிரமாதாக்கட்குப் பேதமிருத்தலால் பிரத்தியக்ஷத் தன்மையின் அடைவு இன்ருமென்னற்க. சாக்ஷிபாஸ்ய அந்தக்கரணுதிகளின்கண் யாண்டும் சாக்ஷி ஒன்ருயிருக்கும்போது பிரமாதாவின் பேதம் அப்பிரயோஜகமாதலின். ஆதலால் அந்தக்கரண உபாதியினுல் ஜீவன் சாக்ஷியாம். இவ்வாருகவே ஒவ்வொரு புருஷனைக் குறித்தும் சாக்ஷி வெவ்வேருயிருத்தலால் ஒரு புருஷனது அந்தக்கரணுதிகட்கு மற்ருெர் புருஷனுடைய சாக்ஷியின் சம்பந்தமின்மையினுல். அல்லது மற்ருெரு புருஷனைக் குறித்துப் பிரத்தியக்ஷ அயோக்கிய தன்மையைக் கற்பித்தலினுல் அப்பிரத்தியக்ஷத் தன்மை பொருந்துகின்றது.

அவித்தையில் பிரதிபிம்ப வடிவ ஜீவனுக்கு அவித்தை வடிவ உபாதியுடையதாந்தன்மை வடிவத்தாலேயே சாக்ஷித்

தன்மையை அங்கீகரிக்கின் அவனுக்கு சுழுத்தியின்கண்ணும் சாக்ஷித் தன்மை சம்பவிக்கும் ஒவ்வொரு தேகத்திலும் சாக்ஷியின் பேத சித்தியின் பொருட்டு அவனுக்கு அந்தக்கரண உபகித வடிவத்தால் சாக்ஷித் தன்மையை அங்கீகரிப்பினே அவனுக்கு சுழுத்தியின்கண் சாக்ஷித் தன்மை சம்பவியாது, சுழுத்தியின்கண் அந்தக்கரணலயம் கேட்கப்படுதலால் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர், சுழுத்தியின்கண்ணும் சூக்ஷ்ம ரூபத்தால் அந்தக்கரணமிருத்தலால் அதன் உபகிதமான சாக்ஷி அப்போதுமிருக்கின்றதேயாம்.

சங்கை

அந்தக்கரண உபகிதன் பிரமாதாவாதலால் அவனுக்குச் சாக்ஷித் தன்மையின்ரும். சுழுத்தியின்கண்ணே பிரமாதா இல்லையாயினும் சாக்ஷியிருத்தலால் அவைகட்கு பேதம் அவசியம் சொல்லத்தக்கதாமெனின்.

சமாதானம்

விசேஷணத்திற்கும் உபாதிக்கும் பேதம் சித்தாந்த சம்மதமாதலால் அந்தக்கரண விசிட்டன், பிரமாதா, அந்தக்கரண உபகிதன் சாக்ஷியென பேதம் பொருந்துதலின் எனக் கூறுகின்றனர்.

## 32. சாக்ஷிக்கு அஞ்ஞானத்தால் அநாவிருதத் தன்மையின் விசாரம்.

அற்றேல் கூறின வடிவினதாகிய சாக்ஷிக்கு சைதன்னிய மாத்திரத்தை மறைக்குமஞ்ஞானத்தால் மறைப்பு நீங்கத் தகாததாயிருக்கின்றது, ஆதலின் மறைபட்ட சாக்ஷியினல் அவித்தை அகங்காராதிகளின் விளக்கம் எவ்வாருமெனின் இராகுபோன்று அவித்தையானது தன்னல் மறைக்கப்பட்ட பிரகாசத்தினல் பிரகாசியமாம் எனச் சிலர் கூறுகின்றனர்.

[இராகுவினல் சர்வப் பிரகாரத்தாலும் மறைக்கப்பட்ட சந்திர மண்டலாதிகட்குத் தன்னை மறைக்கும் இராகுவை மாத்திரம் பிரகாசம் செய்யும் தன்மையிருப்பினும், அதனினும் வேருனதைப் பிரகாசஞ் செய்யுந் தன்மை காணப்படாமையின், ஈண்டும் மறைக்கப்பட்ட சாக்ஷிக்கு ஒருவாறு அஞ்ஞான

மாத்திரத்தை விளக்குந்தன்மை கூடும், அகங்காராதிகளை விளக்குந்தன்மை கூடாது, என்னும் அருசியால் கூறுகின்றார்.]

வாஸ்தவமாக அவித்தை அந்தக்கரணமதன் தருமங்களை விளக்குஞ் சாக்ஷிசைதன்னியத்தை விட்டே அஞ்ஞானம் சைதன்னியத்தை மறைக்கின்றது, என அநுபவ அநுசாரமாகக் கற்பித்தலால் யாதொரு தோஷமுமின்றாம். அஞ்ஞானத்திற்கு சாக்ஷிசைதன்னியத்தை விட்டு மறைக்குந் தன்மை சுபாவத்தைக் கற்பித்தலினாலேயே எப்போதும் அவைகட்கு மறைக்கப்படாத பிரகாச சம்பந்தமிருத்தலால் அஞ்ஞானத்திற்கும் விபரீத ஞானத்திற்கும் சம்சய ஞானத்திற்கும் அவைகள் விஷயமாகின்றதில்லை.

அற்றேல் அவித்தையினது பாவரூபத்தன்மை முதலியவற்றிலும் அகங்காரத்தினது அனன்மத்தன்மை முதலியவற்றிலும் சுக துக்காதி விருத்திகளின் அனன்மதர்மத் தன்மை முதலியவற்றிலும் அஞ்ஞான விபரீதஞான சம்சய ஞானங்கள் உண்டாகின்றமையின் அவைகளின்கண் எப்போதும் சம்சயாதி அவிஷயத்தன்மை அசித்தமாமெனின் அற்றன்று. அவித்தை முதலியவற்றின் ஸ்திதி காலத்தில் (இருப்பின் கண்ணே) எப்போதும் அவித்தை முதலியவற்றின் இருப்பு விஷயகமாக அஞ்ஞாநாதிகளின் அபாவம் விவக்ஷிக்கப்பட்டமையின். அதாவது அதன் கண்ணுள்ள விசேஷ விஷயக அஞ்ஞான விபரீத ஞாநாதிகளை அங்கீகரிக்கினும் தோஷமின்றாம்.

வினவுதல்

சாக்ஷிசைதன்னியத்திற்கு அநாவிருதத் தன்மையுடன்படின் அதன் சொரூபமாயுள்ள ஆனந்தத்திற்கும் பிரகாசமுண்டாதல் வேண்டுமெனின்.

அற்றன்று

இஷ்டத்தினடைவாமாதலின் ஆனந்தரூப பிரகாசத்தின் அதீனமாகத் தன்னிடத்து நிருபாதிகப் பிரேமை காணப்படுதலினானும் பரமப் பிரேமைக்கு விஷயமாயுள்ள சுகம் விளங்குகின்றதேயென விவரணாசாரியர் கூறியிருத்தலாலும் என்க.

## 33. சாக்ஷியானந்தத்திற்கு அனுவிருத்தத் தன்மையின் விசாரம்.

சங்கை

அங்ஙனமாகுக இப்போதும் (சம்சாரதசையிலும்) ஆனந்தம் விளங்குமாயின் மோக்ஷத்திற்கும் சம்சாரத்திற்கும் விசேஷமின்மை பிராப்தமாம்.

சங்கையில் சங்கை

அற்றேல் கற்பித பேதமுடைய சாக்ஷியானந்தம் விளங்குமாயினும் அனவச்சின்ன பிரமானந்தம் மறைவுபட்டதாய் சம்சாரதசையில் விளங்காமையால் விசேஷமுளதெனின்.

சங்கை அற்றன்று

ஆனந்தத்தின்கண் அனவச்சேதாம்சத்திற்குப் புருஷார்த்தத்தன்மையின்மையின் ஆனந்தாபரோக்ஷமாத்திரத்திற்கு இப்போதும் இருப்பு உண்மையின். அதாவது மோக்ஷத்திற்கும் சம்சாரத்திற்கும் பேதமின்றுமென்க.

சங்கையில் சங்கை அற்றேல்

அவச்சின்ன சாக்ஷியானந்தம் சாதிசயமாம் அவ்வானந்தம் சுழுத்தி சாதாரணமாயிருத்தலாலும் அதிகஸ்பஷ்டமின்மையாலும் அதைக் காட்டிலும் விஷய ஜன்னிய ஆனந்தங்களில் மேன்மை அனுபவிக்கப்படுகிறபடியாலும் என்க. அனவச்சின்ன பிரமானந்தமோ நிரதிசயமாம். தைத்திரீயோப நிடதத்தில் ஆனந்த வல்லியின்கண் மனுஷியானந்தந் தொடங்கி இரண்ணியகர்ப்பானந்தம்வரை உத்திரோத்தரம் நூறு மடங்கு அதிகத்தைக் கூறி பிரமானந்தத்தின்கண் முடிவைச் செய்திருத்தலினெனின்.

சங்கை—அற்றன்று

சித்தாந்தத்தில் சாக்ஷியானந்தம், விஷயானந்தம் பிர்மானந்தம் ஆகிய இவைகள் வாஸ்தவமாக ஒன்றுதலின் அவைகட்கு உயர்வு தாழ்வு சம்பவியாமையின்.

சங்கையிற்சங்கை

மநுஷியானந்தம் முதலியவைகட்கு உத்தரோத்தரம் உயர்வை சுருதி கூறுகின்றது எனின்.

சங்கை

சுருதி கூறவில்லை என எவன் சொல்லுகின்றான், ஆனால் அத்வைத வாதத்தின்கண் அவ்வுயர்வு தாழ்வைப் பிரதிபாதிப்பதற்கு அசக்கியமாமென்று சொல்லப்படுகின்றது. சங்கையில் சங்கை அற்றேல் ஒரே சூரியப்பிரகாசத்திற்கு உள்ளங்கை ஸ்படிகம், கண்ணாடி முதலிய அபிவியஞ்சகங்களாகிய உபாதிகளின் பேதத்தால் அபிவியக்தியின் தாரதம்மியத்தைக் காண்டலால் ஆனந்தம் ஒன்றாயினும் அபிவியஞ்சகங்களாகிய சுக விருத்திகளாகிற உபாதிகளின் பேதத்தால் அபிவியக்தியின் தாரதம்மிய வடிவ உயர்தாழ்வு பொருத்தமாமெனின்.

சங்கை அற்றன்று

திருஷ்டாந்தத்தை உடன்படாமையின் அதாவது எங்கும் பரவியுள்ள சூரியப் பிரகாசத்திற்கு ஆகாசத்தில் உள்ளங்கை முதலியவற்றின் சம்பந்தமின்றிய வழி அஸ்பஷ்டமாய் விளங்குவதாகி பள்ளத்திலோடுகின்ற ஜலத்திற்கு தடையுண்டாகுங்கால், உப்பலுண்டாவது போன்று உள்ளங் கையின் சம்பந்தத்தால் கமனம் தடுக்கப்படும்போது உப்பலுண்டாவதில் அதிகப் பிரகாசமாம். விளக்கமான கண்ணாடி முதலியவற்றின் சம்பந்தத்தால் கமனம் தடுக்கப்படும்போது உப்பலுண்டாவதாலும் அக்கண்ணாடி முதலியவற்றின் பிரகாசம் சேருதலினாலும் அதனினும் அதிகப் பிரகாசமாம். ஆதலின் ஆண்டு அபிவியஞ்சகமாகிய உபாதிகளின் பேதத்தால் அபிவியக்தியின் தாரதம்மியம் அங்கீகரியாமையின். திருஷ்டாந்தத்தையுடன்படினும் ஆகாசத்தில் பாகிய சூரியப் பிரகாசத்தில் போன்று அனவச்சின்ன ஆனந்தத்திற்கு அஸ்பஷ்டத் தன்மையாம் கை முதலியவற்றால் வளைபட்ட சூரியப் பிரகாசத்திற்குப் போன்று. சுகவிருத்தியால் வளைபட்ட ஆனந்தத்திற்கு அதிக அபிவியக்தியாம். இவ்வாறாகவே முத்தியைப் பார்க்கிலும் சம்சாரத்திற்கே உத்கிருஷ்டத் தன்மை அடைவுறுதலினாலும் என்க.

சங்கையில் சங்கை

சமுசார தசையின்கண் ஆனந்தம் விளங்குமாயினும்மித்தியா ஞானத்தாலும் அதன் சமஸ்காரத்தாலும் கலக்க முற்றிருத்தலால் கொடிய வாயுவினாற் கலக்கப்பட்ட தீபப்பிரபையைப் போன்று அஸ்பஷ்டமாக விளங்குகின்றது. மோக்ஷ

தசையில் அஃதின்மையினுல் உள்ளபடியே விளங்குகின்ற தெனின்.

சங்கை

நிருவிசேஷ சொருபானந்தம் விளங்கும்போது அதன் கண் விக்ஷேபதோஷத்தால் அப்பிரகாசமும் முத்தித்தசையில் பிரகாசத்தின் மேம்பாடும் சம்பவியாமையின். ஆதலால் சாக்ஷி ஆனந்தத்திற்கு அனுவிருதத் தன்மையைக் கற்பித்தல் பொருத்தமன்ரும். இவ்வாறுவாதி சங்கிக்க,

இச்சங்கைக்கு அத்வைத வித்தியாசாரியர் உத்திரங் கூறுகின்றனர். அஃதாமாறு மிகவும் உத்கிருஷ்டமான ஒரே வெண்மை வடிவத்திற்கு மலினத்தன்மையின் தார தம்மியத்தோடு கூடிய அநேக கண்ணுடிகளில் பிரதிபிம்ப முண்டாகும்போது உபாதிகளின் மலினத்தன்மையின் தார தம்மியத்தால் அந்தந்த பிரதி பிம்பங்களில் வெண்மையின் அபகருஷம் (குறைவு) தாரதம்மியமாக அத்தியாசம் செய்யப் படுகின்றது. அதுபோன்று வாஸ்தவமாக நிரதிசய ஒரே சொருபானந்தத்திற்கு அந்தக்கரணத்தின்கண் பிரதி பிம்பிக்கப்பட்ட தன்மையால் சாக்ஷியானந்தத்துவம் பிராப்த மாகும்போதும் பூர்வ புண்ணியவசத்தால் யாதொரு விசேஷ விஷயத்தின் சம்பந்தமுண்டோ அதனதீனமான சத்துவ குணத்தின் மிகுதி குறைவு வடிவ சுத்தியின் தாரதம்மியத் தோடுகூடிய சுகரூப அந்தக்கரண விருத்திகளில் பிரதி பிம்பிக்கப்பட்ட தன்மையால் விஷயாநந்தத்துவம் பிராப்த மாகும்போதும் தமோகுணவடிவ உபாதியின் மலினத்தன்மை தாரதம்மிய தோஷத்தால் குறைவு தாரதம்மியமாக அத்தியாசஞ் செய்யப்படுகிறது. ஆதலின் சம்சார தசையின் கண் ஆனந்தம் விளங்குமாயினும் அதன்கண் குறைவு தார தம்மியமாக அத்தியாசஞ் செய்யப்படுகிறது. ஆதலின் சம்சாரதசையின்கண் ஆனந்தம் விளங்குமாயினும் அதன்கண் குறைவு தாரதம்மியமாக அத்தியாசஞ் செய்யப்பட்டிருத் தலால் சாதிசயத் தன்மையுண்மையின் திருப்தியின்ரும். ஞானம் உதயமாயின் சம்பூரண அபகருஷத்தின் அத்தியாசம் நீங்குதலின் ஆரோபிக்கப்பட்ட சாதி சயத்தன்மை நிவர்த்தி யாம், அதனுல் கிருத கிருத்தியத்தன்மையாம். இவ்வாறு முத்தியிலும் சம்சாரத்திலும் விசேஷம் பொருந்துதலின்

நிருபாதிக பிரேமைக்கு விஷயமாந்தன்மையால் பிரகாசிக்கின்ற சாக்ஷியானந்தம் அநாவிருதமே யாமென்க.

மற்றோர் மதத்தைக் கூறுகின்றார் சாக்ஷிசைதன்னியம் அநாவிருதமாயின் அதன் அபின்னமான ஆனந்தத்திற்கும் அநாவிருதத்தன்மை அடைவுறுதலால் மோக்ஷத்திற்கும் சமுசாரத்திற்கும் பேதமில்லாமற்போம் எனப் பூர்வ பக்ஷம் பிராப்தமாகும்போது சொரூபானந்தம் அநாவிருதமாயினும் அவைகட்குப் பேதம் சம்பவிக்கின்றதென சித்தாந்தம் தெரிசிப்பிக்கப்பட்டது. இப்போது அதற்கு ஆவிருதத் தன்மையை யங்கீகரித்தே மோக்ஷத்திற்கும் சமுசாரத்திற்கும் பேதத்தைக் கூறுகின்றவராய் சித்தாந்தத்தை தெரிசிப்பிக்கின்றார்.

சில நூலாசிரியரோ இங்ஙனம் கூறுகின்றனர். ஆனந்தம் விளங்குமாயினும் எனக்கு வேதாந்தங்களிற் சொல்லப்பட்ட சொரூபானந்தமில்லை விளங்கவில்லை என ஆவரணத்தின் அநுபவமுண்டாவதால் ஆவிருதமேயாம்.

சங்கை

சாக்ஷி சைதன்னியத்தின் அபின்னமான சாக்ஷியானந்தம் ஆவிருதமாயின் சாக்ஷிசைதன்னியமும் ஆவிருதமாகும், ஓரிடத்தில் ஒரே காலத்தில் ஆவிருதத்தன்மை அநாவிருதத் தன்மைகளுக்கு விரோதமிருத்தலின் எனின்.

சமாதானம்

சாக்ஷி ஒன்றாயினும் அதன்கண் அவித்தையினாற் கற்பிக்கப்பட்ட உருவ பேதம் சம்பவித்தலால் சைதன்னிய ரூபத்தால் அநாவரணமும் ஆனந்த ரூபத்தால் ஆவரணமும் விரோதியாகாமையின். தாத்பரியமிதுவாம். எப்படி ஒரே சைதன்னியத்தின்கண் ஜீவத்தன்மை யவச்சேதத்தால் அஞ்ஞத்தன்மை முதலியதும். ஈஸ்வரத் தன்மை யவச்சேதத்தால் அதனபாவமும் கற்பிக்கப்படுகின்றதோ அப்படி ஆனந்தத் தன்மை அவச்சேதத்தால் ஆவிருதத்தன்மையும் சேதனத் தன்மை யவச்சேதத்தால் அகங்காராதியை விளக்கும் சைதன்னியத்தின்கண் அதனபாவமும் பயனின் வலிமையாற் கற்பிக்கப்படுகின்றது, ஆதலின் விரோதமின்றாம். ஜீவத்துவாதி பேதம் போன்று சேதனத்துவாதி வடிவ பேதமும்

அவித்தையால் கற்பிதமாக அங்கீகரிக்கப்பட்டமையின் அத்வைத விரோதமுமின்றும் என்பது பொருள்.

அற்றேல் ஒரே சாக்ஷியின்கண் உருவ பேதத்தால் ஆவிருதத்தன்மைக்கும் அதனபாவத்திற்கும் விரோதமின்றேனும் ஆனந்தம் விளக்குமாயினும் ஆவ்ருதமேயாம் என்பது விரோதமாம். பிரகாசத்திற்கு ஆவரணத்தின் விரோதித்தன்மையுண்மையின் எனின். அற்றன்று சொருபப் பிரகாசத்திற்கு ஆவரணத்தை நிவர்த்திக்குந் தன்மையின்மையால் பிரகாசத்தின்கண் ஆவரணத்திற்கு விரோதமின்மையினாலும்.

சொருபப் பிரகாசத்திற்கு ஆவரண விரோதமின்மையின்கண் மற்றோர் ஏதுவைக் கூறுகின்றார். நீ கூறிய பொருளை அறிகின்றிலேன் என பிரகாசிக்கின்ற (ஆப்த வாக்கியத்தின்) அர்த்தத்தின்கண்ணேயே ஆவரணம் காணப்படுதலானும்.

சங்கை

ஆண்டு அநாவிருத சாமான்யாகாராவச்சேதத்தால் விசேஷாவரணமே அனுபவிக்கப்படுகின்றது. அதாவது நீ கூறிய பொருளை யறிகின்றிலேனென்னும் அனுபவத்தின்கண் அஞ்ஞானத்தின் விசேஷணமாக விளங்குகின்ற சாமான்யாகாரத்திற்கு ஆவரண விஷயத் தன்மையின்மையானும், ஆவரணத்தின் விஷயமான விசேஷாகாரத்திற்குப் பிரகாசிக்குந் தன்மையின்மையானும், பிரகாசிக்கின்ற வஸ்துவின் ஆவிருதத்தன்மையில் இவ்வநுபவம் பிரமாணமின்றும் எனின்.

சமாதானம்

அன்னியத்தை மறைக்கும் அஞ்ஞானத்திற்கு அன்னியாவச்சேதத்தால் பிரகாசத்தை அங்கீகரிக்கின் அதிப்பிரசங்கமாம், அதாவது சைத்திரனை அறிகின்றிலேன் என்றனுபவிக்கப்படுகின்ற அஞ்ஞானத்திற்கு விஷ்ணுமித்திரனை விஷயஞ்செய்யுந்தன்மை நேருமாதலின்.

சங்கை

சாமான்ய விசேஷத் தன்மை நியாமகமாம் ஆதலின் அதிப்பிரசங்கமின்றாமெனின்,

### சமாதானம்

வியாப்பிய வியாபகத் தன்மையினும் வேறாக சாமான்ய விசேஷத் தன்மையின்மையினால், நெருப்பை அறிகின்றிலே னென புகையை மறைக்கும் அஞ்ஞானத்தினனுபவம் பிராப்தி யாதலின். அன்னியத்தை மறைக்குமஞ்ஞானத்திற்கு அன்னி யாவச்சின்னத் தன்மையால் விளக்கம் சம்பவியாமையின். எதனவச்சின்னமாக அஞ்ஞானம் விளங்குகின்றதோ அதனையே மறைக்கின்றது. இவ்வாறாகவே பிரகாசிக்கின்ற வஸ்துவின்கண்ணும் அஞ்ஞானம் பொருத்தமேயாம்.

### சங்கை

ஆனந்தம் ஆவிருதமாயின் விஷய சம்பந்த காலத்தில் விசேஷித்து ஆனந்தம் விளங்கலாகாதெனின்.

### சமாதானம்

அஞ்ஞானமெப்படி சாக்ஷி அம்சத்தை விட்டு சைதன்னி யத்தை மறைக்கின்றதோ அப்படி அவ்வச்சுக ரூப விருத்தி களால் விஷயஞ் செய்யப்பட்ட ஆனந்தத்தையும் விட்டே மறைக்கின்றது.

### சங்கை

விருத்திக்கு ஆவரணத்தை அபிபவஞ் செய்யுந்தன்மை அங்கீகரித்தலால் அஞ்ஞானத்திற்குச் சுகவிருத்திகளால் விஷயம் செய்யப்பட்ட ஆனந்தத்தின் மறைக்காத்தன்மை எங்ஙனம் சொல்லப்படுகின்றது.

### சமாதானம்

கூறிய அவ்விதுவே விஷயானந்தத்தின் ஆவரணாபிபவ மாம் அதாவது சுகவிருத்தியின் விஷயத்தன்மை அதீனமான மறைக்காத்தன்மை சுபாவமே விருத்தியினால் செய்யப்பட்ட ஆவரணத்தின் அபிபவமாம். அவ்வாவரண அபிபவமும் காலை நேரத்தில் பிரகாசத்தின் தாரதம்மியத்தால் வெளியிருள் தாரதம்மியமாக அபிபவம் ஆவது போன்று காரண விசேஷத் தின் அதீனமான விருத்தி விசேஷவசத்தால் தாரதம்மியமாக அபிபவமாகின்றது.

### சங்கை

இவ்வாறாயினும் ஆனந்தம் ஒன்றென அங்கீகரித்தலால் அதன் பேதப் பிரதீதி எங்ஙனம் சித்திக்கும் எனின்.

சமாதானம்

வாஸ்தவமாக ஆனந்தம் ஒன்ருயினும் உபாதியினதீன மாக பேதத்தை அங்கீகரித்தலால் சொரூபானந்தத்திற்கும் விஷயானந்தத்திற்கும் பரஸ்பரம் பேதமும் விஷயானந்தங் கட்கும் பரஸ்பரம் பேதமும் சித்தியாமெனக் கூறுகின்றனர். அதாவது வித்தையினுல் ஆவரணம் நிவர்த்தியாகும்போது விளங்குகின்ற ஆனந்தம் சொரூபானந்தமாம். ஆவரணம் நிவர்த்தியாகாதபோது விருத்தி சம்பந்தத்தால் விளங்கு கின்ற ஆனந்தம் விஷயானந்தமாம், என சொரூபானந்த விஷயானந்தங்கட்கு பேதம் அறியத்தக்கது. அப்படியே விருத்திகளின் பேதத்தால் ஆனந்தத்திற்கு பேதத்தை அங்கீ கரித்தலால் விஷயானந்தங்கட்கு பரஸ்பரம் பேதப் பிரசித்தி யும் பொருந்துகின்றது என்பது பொருள்.

அவதாரிகை

அகங்காராதிகட்குக் கேவல சாக்ஷிபாஸ்யத் தன்மை முன்பு ஆரம்பிக்கப்பட்டது அஃது சித்தித்தது என்னுங் கருத் தால் கூறுகின்ருர். சர்வப் பிரகாரத்தாலும் அதாவது சொரூ பானந்தம் அனுவிருதமென்னும் பக்ஷத்திலும் ஆவிருதமென் னும் பக்ஷத்திலும் சாக்ஷி சைதன்னியத்திற்கு மறைப்பு இன் மையினுல் ஆவரண அபிபவத்தின் பொருட்டு விருத்தியை அபேக்ஷியாமலேயே சாக்ஷி சைதன்னியத்தால் அகங்காராதி யின் விளக்கமாமென்பது சமானமேயாம்.

## 34. அகங்காராதியினநுசந்தான விசாரம்

அவதாரிகை

சங்கை

சித்தாந்தத்தில் சமஸ்காரத்திற்கு அநுபவ நாச வடிவத் தன்மையை அங்கீகரித்தலால் சமஸ்காரத்தின் பொருட்டு சாக்ஷிசைதன்னியத்திற்கு அகங்காராதி விஷயக விருத்தியின் அபேக்ஷையுளதே என வினவுகின்ருன். அற்றேல் மேற்கூறிய வண்ணம் அகங்காராதியின் சாக்ஷிக்கு விருத்தியின் அபேக்ஷை இன்றிய வழி அகங்காராதிகளின் ஸ்மிருதி எங்ஙனம் உண் டாம். ஞானத்தின் சூக்ஷ்ம அவஸ்தை வடிவ சமஸ்காரம் ஞானமிருக்கும்போது பொருந்தாமையால் நித்திய சாக்ஷியி னுல் அதன் உற்பத்தி சம்பவியாமையின்.

சமாதானம்

அகங்காராதி விஷயக விருத்தியில்லாமலே சமஸ்காரம் பொருந்துதலின் சித்தாந்தத்திற்கு விரோதமின்றெனச் சமாதானம் கூறுகின்றனர். ஈண்டு சில ஆசிரியர் கூறுவதாவது தனது (அகங்கார) சம்பந்தமான சாக்ஷியினுலேயே எப்போதும் விளங்குகின்ற அகங்காரம், அவ்வக்கடாதி விஷயக விருத்தி வடிவத்தால் பரிணமிக்கப்பட்ட தன்னுல் வளைபட்ட சாக்ஷியினுலும் விளங்குகின்றது. இவ்வாருகவே அது (கடாதி விஷயக விருத்தி அவச்சின்ன சாக்ஷிசைதன்னியம்) அநித்யமாவதால் அதனுல் கடாதி விஷயக சமஸ்காரத்தின் உற்பத்தி எங்ஙனம் சம்பவிக்கின்றதோ, அங்ஙனம் விருத்தி அவச்சின்ன சாக்ஷிசைதன்னியத்தினுலேயே அகங்காராதியின்கண்ணும் சமஸ்காரத்தின் உற்பத்தி சம்பவிக்கின்றது. ஆகலின் அகங்காராதி விஷயக விருத்தியின் அபேக்ஷையின்ரும் என்பது கருத்து.

சங்கை

அகங்காரத்தின் வேருன கடம் முதலிய எல்லாவிடங்களிலும் தனதாகார விருத்தியினுல் வளைபட்ட சைதன்னியத்தாலேயே கடாதி விஷயக சமஸ்காரத்தின் உற்பத்தியைக் காண்டலின். தனது விஷயக விருத்தியினுலே தனது விஷயக சமஸ்காரத்தின் உற்பத்தியாமென்னும் நியமம் நிச்சயிக்கப்படுகின்றது. இவ்வாருகவே அகங்காரமாத்திரத்தின்கண்ணே மற்ருென்றை விஷயஞ் செய்யும் விருத்தியால் சமஸ்காரத்தின் உற்பத்தி எங்ஙனமாம் எனின்.

சமாதானம்

தனதாகார விருத்தியவச்சின்ன சாக்ஷியினுலேயே சுவ விஷயக சமஸ்காரத்தின் உற்பத்தியாமென்னும் நியமம் இன்மையின் அத்தகைய நியமத்தின்கண் பிரமாணமின்மையினுலும் என்பது கருத்து.

அவதாரிகை

கூறிய நியமத்தை அங்கீகரிப்பதில் பாதகத்தைக் கூறுகின்ருர். அவ்வாருயின் விருத்தி விஷயக சமஸ்காரம் சம்பவியாமையால் விருத்தியின் ஸ்மிருதி உண்டாகாமல் போம்.

அற்றேல் ஞான வடிவ விருத்தியின் சமஸ்காரம் முதலியவை சித்திக்கும் பொருட்டு விருத்தி விஷயக வேறு விருத்தி உளதாம் எனின்.

அற்றன்று அனவஸ்தையின் ஆபத்தியால் விருத்தி விஷயக வேறு விருத்தியினை அநுவியவசாய ஞானத்தைக் கண்டித்தலால் கண்டிக்கப்பட்டமையின். ஆனால் எவ்வஸ்து விஷயக விருத்தி அவச்சின்ன சைதன்னியத்தால் எவ்வஸ்து விளங்குகின்றதோ அவ்விருத்தியால் அவ்விருத்தி விஷயக சமஸ்காரத்தின் உற்பத்தியாம் என்னும் இதுவே நியமமாம். அதாவது எவ்வஸ்து விஷயக விருத்தி அவச்சின்ன சைதன்னியத்தின்கண் எவ்வளவு பதார்த்தங்கள் விளங்குகின்றனவோ அவ்வஸ்து விஷயக விருத்தியால் அவ்வளவு பதார்த்தங்களின் சமஸ்காரம் உற்பத்தியாம் என்பது நியமமாம். இவ்வாறாகவே அந்தக்கரணத்தின் விருத்திகளான ஞான சுகாதிகளும் தப்தாய பிண்டத்தினின்று வெளிப்படுகின்ற பொறிகள் தம்மால் வளைபட்ட நெருப்பினால் விளங்குவன போன்று தம்மால் வளைபட்ட அனித்திய சாக்ஷியினால் விளங்குகின்றன. ஆதலின் அவைகளின் சமஸ்காரோற்பத்தியும் பொருத்தமாம்.

கூடஸ்த தீபத்தின்கண் கடாகார விருத்தியிலுள்ள சேதனம் கடத்தையே விளக்கும், கடத்தின்கண் உள்ள ஞாததை பிரமசைதன்னியத்தால் விளங்கும் என விஷயத்தின் விசேஷணமான ஞானத்திற்கு விஷயாவச்சின்ன பிரமசைதன்னியத்தால் விளங்கப்படுந்தன்மை கூறப்பட்டுள்ளது. தத்துவப் பிரதீபிகை என்னும் நூலில் ஞானம் இச்சை முதலியவைகட்கு அனவச்சின்ன சுத்தசைதன்னிய வடிவ நித்திய சாக்ஷியினால் விளங்கப்படுந்தன்மை கூறப்பட்டுள்ளது. அவ்விரு பக்ஷத்தின்கண்ணும் இருவித சைதன்னியத்திற்குத் தம்மை சம்பந்தித்த அவைகளின் ஞானம் இச்சை முதலியவைகளின் அபரோஷ வடிவத்தன்மை உண்மையின் விருத்தி சம்பந்தம் அவசியம் சொல்லத்தக்கதாம். ஆகவே அவ்விருத்தி வடிவ ஞான முதலானவற்றோடு சம்பந்தித்த சாக்ஷிக்கு அனித்திய வடிவ மிருத்தலின் அந்த ஞானம் இச்சை முதலியவைகளின் சமஸ்கார உற்பத்தியின் கண் யாதொரு அனுபபத்தியும் இன்றாம்.

அவதாரிகை

தனது விஷயக விருத்தியினாலேயே தனது சமஸ்காரத்தின் உற்பத்தி அவசியம் சொல்லத்தக்கதாம் என்னும் நியமத்தை உடன்படினும் அனுபபத்தியின்றாம் அகங்காரத்

தையும் அதன் தருமத்தையும் விஷயஞ் செய்கின்ற அவித்தையின் விருத்திகளால் அகங்காரதிகளில் சமஸ்கார உற்பத்தி சம்பவித்தலின் விருத்தி விஷயக விருத்தியை அங்கீகரிக்கின் முற்கூறிய அனவஸ்தாதோஷம் பிராப்தியாம் என்னற்க. அவித்தையின் விருத்திகள் அனுபவத்திற்கு யோக்கிய மின்மையால் அவைகளின் ஞானத்தின் பொருட்டாவது சமஸ்காரத்தின் பொருட்டாவது ஞான இச்சை முதலியவற்றின் அனுபவ காலத்தில் வேறு அவித்தையா விருத்தியை உடன்படாமையின். அவித்தையின் விருத்திகட்கு புதிதாக சமஸ்காரத்தை உண்டுபண்ணும் தன்மை கற்பிப்பதில் கௌரவமாம் என்னற்க. சுழுத்தி அவஸ்தையின்கண் அவித்தையின் விருத்திகட்கு சமஸ்காரத்தை உண்டுபண்ணும் தன்மை நிச்சயிக்கப்பட்டிருத்தலின் என்னுங் கருத்தால் மற்றொரு மதத்தைக் கூறுகின்றார்.

சில நூலாசிரியரோ தூங்கி எழுந்தவனுக்கு அவித்தை முதலியவற்றின் ஸ்மிருதி சித்திக்கும் பொருட்டு சுழுத்தியின் கண்ணும் கற்பிக்கபபட்ட (அவித்தியா கோசர) அவித்தியா விருத்திபோன்று அகமாகார அவித்தையா விருத்தியை அங்கீகரித்து அகம் பதார்த்தத்தில் சமஸ்காரத்தை உபபாதனம் செய்கின்றார்கள்.

அவதாரிகை

அற்றேல் இப்பக்ஷத்தின்கண் அன்னிய ஞானத்தின் தாரைகாலத்திலுள்ள அங்காராதிகளில் அகங்காராதிகளை விஷயஞ் செய்யும் அவித்தியாவிருத்தி சம்பவியாமையால் சமஸ்காரத்தினுற்பத்தி சம்பவியாது. தாரை காலத்தில் அவித்தையா விருத்தியை அங்கீகரிக்கின் ஒரே காலத்தில் இரண்டு விருத்திகள் பிராப்தியாமென்னுஞ் சங்கையை அனுவாதஞ் செய்து திருஷ்டாந்தத்தால் பரிகரிக்கின்றார்.

இப்பக்ஷத்தில் (அவித்தியா விருத்திகளால் சமஸ்காரத்தின் உற்பத்தியாமென்னும் பக்ஷத்தில்) இவ்வளவு காலம் இந்த வஸ்துவை நான் பார்த்துக் கொண்டேயிருந்தேன்என அன்னிய ஞானத்தின் தாரை காலத்திலுள்ள அகங்காராதிகளில் ஸ்மிருதி பொருந்தாது என்னற்க. அவச்சேதக பேதத்தால் எனக்குச் சிரசில் வேதனை

பாதத்தில் சுகம் என ஒரே காலத்தில் அனுபவத்தைக் காண்டலால் இரண்டு விருத்திகட்கு ஒரே காலத்தில் இருக்கும்தன்மை விரோதமின்மையால் அன்னிய ஞானத்தின் தாரை காலத்தின்கண்ணும் அகம்வஸ்து விஷயக அவித்தியா விருத்தியின் சந்ததி சம்பவித்தலின்.

### அவதாரிகை

அகம்வஸ்து அம்சத்தின்கண் அந்தக் கரணவிருத்தியிஞலேயே சமஸ்காரத்தின் உற்பத்தி சம்பவிக்கின்றதாதலின் அவ்வம்சத்தின்கண்ணும் அவித்தையாவிருத்தி கற்பிக்கத் தக்கதன்ரும், அந்தக்கரணவிருத்தி சம்பவிக்கும்போது அதனைக்கற்பித்தல் பொருந்தாமையின் அன்னிய ஞானதாரை காலத்தில் அகம்வஸ்து விஷயக அந்தக்கரணவிருத்தி சம்பவிக்கின்றதில்லை சுகதுக்கங்கள் ஓர் காலத்திலுண்டாவது போன்று இரண்டு ஞானங்கள் ஒரேகாலத்தில் பொருந்தாமையின் என்று சொல்லற்க சமஸ்கார ஏதுவான அகம் விருத்திக்கு ஞானவடிவத்தன்மையை அங்கீகரியாமையின் என்னும் மதத்தைக் கூறுகின்ருர்.

சில நூலாசிரியரோ அதமாகார விருத்தி அந்தக்கரண விருத்தியேயாம் ஆனல் உபாசனமுதலிய விருத்திபோன்று ஞானம் அன்ரும். பிரசித்தமான ஞானகரண ஜன்னியத் தன்மை இன்மையின் ஆண்டு நேத்திரம் முதலிய பிரத்தியக்ஷப் பிரமாணமும் சம்பிவிக்கின்றதில்லை. லிங்கம் முதலியவையும் இன்ரும், லிங்கம் முதலியவற்றின் அநுபவ மின்றிய புருஷனுக்கும் அகங்காரத்தின் அனுபவங்காண்டலின் மனமும் கரணமன்ரும். உபாதான காரணமாயுள்ள மனதிற்கு ஓரிடத்தும் கரணத்தன்மை நிச்சயம் இன்மையின் அப்படியாஞல் யாதொரு நான் சொப்பனத்தில் சாக்ஷாத் கிருஷ்ணபகவானை அனுபவித்தேனே அந்த நான் இப்போது அவனைஸ்மரிக்கின்றேன் என்னும் அகமர்த்த பிரத்திய பிஞ்ஞையும் (அகம் வஸ்து அம்சத்தில்) ஞானம் ஆகாது ஞானகரண ஜன்னியத்தன்மையின்மையின் எனின் அற்றன்று அதற்கு அகம் அம்சத்தின்கண் ஞானத்தன்மை இன்றேனும் அது என்னுமம்சத்தின்கண் ஸ்மிருதியின் காரணமாக நிச்சயிக்கப்பட்ட சமஸ்கார ஜன்னியத்தன்மை இருத்தலால் ஞானத்தன்மை உண்மையின்.

அவதாரிகை

அப்படியானால் பிரத்திய பிஞ்ஞை ஞானம் அதுஎன்னும் அம்சத்தின்கண்ணும் ஞானமாகாது, ஒரே பிரத்திய பிஞ்ஞையின்கண் ஞானத்தன்மைக்கும் அதன் அபாவத்திற்கும் விரோத மாவதால் சம்பவியாமையின் எனின் அற்றன்று. அம்சபேதத்தால் ஒரே ஞானத்தின்கண் பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மை இருப்பது போன்றும் பிரமைத்தன்மை அப்பிரமைத்தன்மை யிருப்பதுபோன்றும் ஞானத்தன்மை அஞ்ஞானத்தன்மைகளின் இருப்பின்கண்ணும் விரோதம் இன்மையின் எனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

முன்பு தரிசிப்பிக்கப்பட்ட பிரத்திய பிஞ்ஞைக்கு அகம் வஸ்து அம்சத்தின்கண்ணும் ஞானத்தன்மையை அங்கீ கரிக்க வேண்டும். இல்லாவிடின் பிரத்திய பிஞ்ஞையின் பிராமாணியத்தால் அந்தக்கரண உபகித சைதன்னிய வடிவ ஜீவனாகிய அகம் வஸ்துவிற்கு ஸ்தாயித்தன்மையை (திரத் தன்மைச்) சாதித்தல் சூத்திர பாஷியங்களில் காணப்படு கின்றது விருத்தமாகும். அதாவது சூத்திரம் "அனுஸ்மிரு தேஸ்ச" அனுஸ்மிருதி—பிரத்தியபிஞ்ஞை. அப்படியே சூத்திரத்தின் பாஷ்யம் யாதொரு நான் நேற்று பார்த்தேனே அந்தநானே இப்போது நினைக்கின்றேன் என்பது. ஆகவே பிரத்திய பிஞ்ஞைக்கு அகம் அம்சத்தில் ஞானத்தன்மையின் அபாவத்தை கூறுதல் பொருத்தமின்றாமென கருதுகின்றவர் களது மதத்தைக் கூறுகின்றார்.

வேறுசில நூலாசிரியரோ அகமாகாரவிருத்தியும் ஞானமேயாம் என்னையான் அறிகின்றேன் என்று அனுபவித்த லால் (அகம் வஸ்து விஷயக விருத்தியின்கண் ஞானத்தன்மை அனுபவிக்கப்படுவதால் என்பது பொருள்) கரணத்தின் அசம் பவமும் இன்றாம் அனுபவத்தின் அனுசாரமாக உள்ளிந்திரிய மான மனதிற்கே கரணத்தன்மையையும் கற்பித்தலால் எனக் கூறுகின்றனர்.

## 35. காரணத்தோடு கூட அத்தியாசத்தின் விசாரம்.

அற்றேல் அபரோக்ஷ விருத்திகட்கு ஆவரணத்தை அபிபவம் செய்யும் நியமத்திற்கு அகமாகார அபரோக்ஷ

விருத்தியின்கண் வியபிசாரமாமென்று ஆசங்கித்து நியமத்தின் சங்கோசத்தை தெரிசிப்பிக்கின்றூர். இவ்வாருகும் போது (அகமாகார அபரோக்ஷவிருத்தியை அங்கீகரிக்கும் போது) வெளிப்பொருளை விஷயஞ்செய்யும் அபரோக்ஷ விருத்திக்கே ஆவரணத்தை அபிபவம் செய்யும் தன்மை நியமம் முடிவு பெற்றது.

அவதாரிகை

கூறிய நியமத்தினையும் ஆக்ஷேபிக்கின்ருன், அற்றேல் இந்த நியமமும் சரியன்ரும். இது ரஜதமென்னும் பிராந்திஸ் தலத்தில் இதமாகார விருத்திக்கு அஞ்ஞானத்தை அபிபவம் செய்யும் தன்மை இன்மையின் இதமாகார விருத்திக்கு அஞ்ஞானத்தை அபிபவம் செய்யுந்தன்மை உடன்படின் உபாதான மின்மையால் இரஜத உற்பத்தி பொருந்ததெனின்.

அவதாரிகை

இதமாகார விருத்தியால் நிவர்த்திக்கத்தக்க அஞ்ஞானம் வேறு. இரஜதத்தினுபாதானமாயுள்ள அஞ்ஞானம்வேறு இவ்வாருகவே வியபிசாரமின்ரும். இரஜத உற்பத்தியின் அசம்பவமுமின்ரும் எனப் பரிகரிக்கின்றூர்.

ஈண்டு சில நூலாசிரியர் இங்ஙனம் கூறுகின்றனர்.

இதமாகார விருத்தியால் இதுவென்னும் அம்சத்தின் அஞ்ஞானம் நிவர்த்தி ஆயினும் சுத்தித்தன்மை முதலிய விசேஷ அம்சத்தின் அஞ்ஞானம் நிவர்த்தி ஆகாமையின் அதுவே இரஜதத்தின் உபாதானமாம் சுத்தித்தன்மை முதலிய வற்றின் அஞ்ஞானகாலத்தில் இரஜதாத்தியாசமும் அதன் ஞான காலத்தில் அவ்வத்தியாசத்தின் அபாவமும் அனுபவிக்கப்படுகின்றமையின் அத்தியாச பாஷியத்தின் உரையாகிய பஞ்ச பாதிகையின் விவரணத்தில் அனுபவிக்கப் படுகின்ற அன்வய வியதிரேகங்களையுடைய அஞ்ஞானத் திற்கே இரஜதாத்தி யாசத்தின் உபாதானத் தன்மையைக் கூறி இருத்தலின் இதனாலேயே (அத்தியாசத்தின் உபாதான மான அஞ்ஞான விஷயத்தன்மை யினாலேயே) சுத்தி அம்சம் அதிஷ்டானமாம். இதுவென்னும் அம்சம் ஆதாரமாம், காரியசகித அஞ்ஞானவிஷயம் அதிஷ்டானமெனவும்

அவ்வடிவம் அல்லாததாயினும் அவ்வடிவத்தால் ஆரோப்பிய புத்தியின்கண் விளங்குகின்றது ஆதாரமெனவும் சங்க்ஷேப சாரீரகத்தின்கண்ணும் பாகுபாடு செய்திருத்தலின் என்க.

அவதாரிகை

அற்றேல் பிராந்தி ஞானத்தின்கண் அதிஷ்டானம் ஆரோப்பியம் ஆகிய இரண்டின் விளக்கமும் பஞ்சபாதிகை விவரணம் முதலிய கிரந்தங்களில் சமர்த்தனம் செய்யப்பட்டிருத்தலால் அதற்கு விரோதமா மென்று சங்கித்து அதற்கு அவிரோதமான மற்றோர் மதத்தைக் கூறுகின்றார்.

சில நூலாசிரியரோ இது இரஜதமென இதுவென்னும் அம்சத்தோடு தாதான்மியமாகப் பிரதீதியாகின்ற இரஜதத்திற்கு இதுவென்னும் அம்சத்தின் அஞ்ஞானமே உபாதானமாம் இதமாகார விருத்தியினால் இதம் அம்ச அஞ்ஞானத்தின் ஆவரண சத்தி மாத்திரம் நிவர்த்தியாயினும் விக்ஷேபசத்தியோடுகூட அவ்வஞ்ஞானம் தொடர்ந்திருத்தலின் அதற்கு உபாதானத்தன்மையின் அசம்பவமின்றாம்.

அவதாரிகை

அற்றேல் அஞ்ஞானத்திற்கு ஆவரணம் சமாத்திரத்தின் நிவர்த்தியும் விக்ஷேபசத்தியோடுகூட அனுவிருத்தியும் ஓரிடத்தும் காணப்படவில்லை. எனின் அதற்குக்கூறுகின்றார். ஜலத்தில் பிரதிபிம்பித்துள்ள விருக்ஷத்தின் தலைகீழ் அத்தியாசத்தின்கண்ணும் ஜீவன் முத்திகாலத்தில் தொடர்ந்துள்ள பிரபஞ் சாத்தியாசத்தின்கண்ணும் சர்வவடிவத்தால் அதிஷ்டான சாக்ஷாத்காரத்தினனந்தரம் உண்டாகின்ற ஆவரண நிவர்த்தி காலத்திலும் விக்ஷேப சத்தியோடு கூடிய அஞ்ஞான மாத்திரத்திற்கு உபாதானத்தன்மை நன்கு அறியப்படுதலின் எனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

இவ்வாறு வெளிப்பொருள்களை விஷயஞ் செய்யும் அபரோக்ஷ ஞானங்கள் அனைத்திற்கும் ஆவரணத்தை அபிபவம் செய்யுந்தன்மை நியமத்திற்கு பிராந்திஸ்தலத்திலுள்ள இதமாகாரவிருத்தியின்கண் யாதொரு வியபிசார சங்கை உண்டோ அஃது ஆண்டும் இதமம்ச அஞ்ஞான நிவர்த்தகத்தன்மை அல்லது இதமம்ச ஆவரணமாத்திர நிவர்த்

தகத்தன்மை இருத்தலின் என உபபாதனம் செய்தலால் நிராகரிக்கப்பட்டது. இப்போது முதலில் இதமாகார விருத்தியே பிராந்திஸ் தலத்தில் இன்றும். ஆண்டு வியபி சார சங்கையும் அதன் சமாதானமும் தூரத்திலேயே தள்ளப் பட்டதாமெனக் கூறுகின்றார்.

கவிதார்க்கிக சக்கிரவர்த்தியாகிய நிருசிம்மபட்ட உபாத்தியாயரோ இது இரஜதம் என்னும் பிராந்திவடிவ விருத்தியினும் வேருக இரஜத உற்பத்திக்கு முன்பு இதமா கார விருத்தியேயின்றும் ஆதலின் அவ்விருத்திக்கு அஞ்ஞான நிவர்த்தகத்தன்மை உண்டா இல்லையா என்னும் விசாரம் நிருவிஷயமாம் எனக் கருதுகின்றனர்.

அவதாரிகை

தருமிஞான வடிவ இதமாகார விருத்தியை நிராகரிக் கின்றார்.

அஃது எப்படி எனின் பிராந்திவடிவ விருத்தியினும் வேருக இதமாகார விருத்தி அனுபவசித்தமன்றும். இஃது என்பது ஓர் ஞானம் இஃது இரஜதம் என்பது மற்றோர் ஞானம் என அனுபவம் இன்மையின்.

அவதாரிகை

இதமாகார விருத்தி காரியத்தால் கற்பிக்கத்தக்கதாம் எனின். அங்ஙனம் அன்றெனக் கூறுகின்றார் அதிஷ்டான சாமான்ய ஞானம் அத்தியாசத்திற்கு காரணம் என்பதன்கண் பிரமாணம் இன்மையின் அதிஷ்டானத்தோடு சம்பந்த மில்லாதபோது இரஜதம் முதலியவற்றின் அனுற்பத்தியே அதன்கண் பிரமாணமாம் என்னற்க. கூறிய யுக்தியினல் துஷ்டேந்திரிய சம்பந்தத்திற்கே அத்தியாச காரணத்தன்மை பிராப்தியாதலின்.

அவதாரிகை

தருமி ஞானம் காரணமா மென்னும் வாதிதனது அபிப் பிராயத்தை வெளிப்படுத்துகின்றான்.

இந்திரிய சம்பந்தம்யாண்டும் பிராந்திஸ்தலத்தில் நியம மாக இன்றும். அதிஷ்டான ஞானமோசுவயம் விளங்குகின்ற பிரத்யக்கான்மாவின்கண் அகங்கார அத்தியாசத்திலும் நியமமாக இருக்கின்றதெனின்.

அவதாரிகை

அதிஷ்டான சாமான்ய ஞானத்திற்கு வியபிசாரத்தைக் கூறுகின்றார்.

அதுவும் (அவ்வதிஷ்டான ஞானமும்) கடாதி அத்தியாசத்தின்கண் இன்மையின் கடாதிகளின் பிரத்தியக்ஷத்திற்கு முன்பு அதன் அதிஷ்டானமாயுள்ள உருவமற்ற பிரமமாத்திர விஷயக சாக்ஷுஷவிருத்தி சம்பவியாமையின் சொரூபப் பிரகாசம் மறைபட்டிருத்தலினால் ஆவிருத அனாவிருதங்கட்கு பொதுவாக அதிஷ்டானப் பிரகாச மாத்திரத்திற்கு அத்தியாச காரணத்தன்மையை அங்கீகரிக்கின் சுத்தியின் இதமம்சத்தோடு சம்யோகம் உண்டாவதற்கு முன்பும் இதமம்சத்தால் வளைபட்ட சைதன்னியவடிவ மறைபட்ட பிரகாசம் இருத்தலால் அப்போதும் அத்தியாசத்தின் அடைவுவருதலின்.

அவதாரிகை

தருமிஞான காரணவாதி வினவுகின்றான், அத்தியாச சாமான்யத்தின்கண் அதிஷ்டானப் பிரகாச சமான்யம் காரணமாம். பிராதிபாசிக அத்தியாசத்தின்கண் மறைபடாத அதிஷ்டானப் பிரகாசம் காரணமாம். ஆதலின் அதிப்பிரசங்கமின்றாம். சாமான்யத்தின்கண் சாமான்யத்திற்கும் விசேஷத்தின்கண் விசேஷத்திற்கும் காரணத்தன்மை உசிதமாவதால் எனின்.

அவதாரிகை

மறைபடாத அதிஷ்டானப் பிரகாசமும் பிராதிபாசிக அத்தியாசங்களில் யாண்டும் நியமமாக இன்றாம்என கவிதார்க்கிக சக்கரவர்த்தி தூஷிக்கின்றார்.

இவ்வாறாயினும் அதிஷ்டான அபரோக்ஷ ஞானத்திற்கு பிராதிபாசிக அத்தியாச மாத்திரத்தில் காரணத்தன்மையை அங்கீகரிக்கினும் பிராதிபாசிக சங்கில் மஞ்சள்நிற அத்தியாசத்தின்கண்ணும் கிணற்று ஜலத்தில் நீலநிற அத்தியாசத்தின் கண்ணும் அதிஷ்டான ஞான மின்மையின் உருவமற்ற வத்துவின் சாக்ஷுஷ ஞானம் பொருந்தாமையாலும் அப்போது (அத்தியாசத்திற்கு பூர்வ காலத்தில்) சங்கு முதலியவற்றிலுள்ள வெண்மைஞானம் இன்மையாலும் அத்தி

யாசத்திற்கு முன்பு சங்கு முதலியதில் உருவமற்ற அதிஷ்டான விஷயக விருத்தி சம்பவியாமையின்.

அவதாரிகை

சங்கு மஞ்சள் நிறமுடையது என்பது முதலிய பிராந்திஸ்தலத்தில் வாஸ்தவமாக வியபிசாரம் இன்றேனும் அதனை அங்கீகரித்து தருமிஞான காரணவாதி வினவுகின்றான். பிராதிபாசிகபதார்த்தங்களுள்ளும் இரஜதம் முதலிய அத்தியாச மாத்திரத்தின்கண் கூறிய அபிவியக்த அதிஷ்டானப் பிரகாசவடிவ விசேஷகாரணம் இருக்குக எனின்.

சமாதானம்

அவ்வாறாயின் சங்கு மஞ்சள் நிறமுடையது என்பது முதலிய அத்தியாசங்களில் அபிவியக்த அதிஷ்டானப் பிரகாசத்திற்கு காரணத்தன்மையை அங்கீகரியாவிடின் இந்திரிய சம்யோகத்திற்கு முன்பும் சங்கு மஞ்சள் நிறமுடையது என்பது முதலிய அத்தியாசப் பிராப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு அதன் அத்தியாசத்தின்கண் துஷ்டேந்திரிய சம்யோகம் காரணமாமென அவசியம் சொல்லத்தக்கதாய் இருத்தலின் அச்சம்யோகத்திற்கே சாமான்யமாக பிராதிபாசிக அத்தியாச மாத்திரத்தின்கண் லாகவத்தால் காரணத்தன்மை சித்திக்கும்போது அதனாலேயே இரஜத அத்தியாசத்திற்கு ஓர்போதையதாந் தன்மையும் பொருந்துதலால் அதிஷ்டானப் பிரகாசத்திற்கு சாமான்யமாகவாவது விசேஷமாகவாவது அத்தியாச காரணத்தன்மை சித்தியாமையின்.

அவதாரிகை

சுத்தி இரஜதம்முதலிய அத்தியாசத்திற்கு முன்பு இதமாகாரவிருத்தி சித்திக்கும் பொருட்டுவேறு பிரகாரத்தால் தருமி ஞானத்திற்கு காரணத்தன்மையை வினவுகின்றான்.

அற்றேல் சாதிருசியத்தை அபேக்ஷியாத சங்கு மஞ்சள் நிறமுடையது என்பது முதலிய அத்தியாசத்தின்கண் அதிஷ்டான ஞானத்திற்கு காரணத்தன்மை இன்றேனும் சாதிருசிய அபேக்ஷையோடு கூடிய இரஜதம் முதலிய அத்தியாசத்தின்

கண் இரஜதம் முதலியவற்றின் சாதிருசியமாயுள்ள உருவ விசேஷாதியோடு கூடிய தருமிஞானவடிவ அதிஷ்டான சாமான்ய ஞானம் காரணமாம். என அவசியம் சொல்லத் தக்கது. துஷ்டேந்திரிய சம்யோக மாத்திரத்திற்கு காரணத் தன்மையை அங்கீகரிக்கின் சுத்தியிற்போன்று கரியுள கண்ணும் இரஜதாத்தியாசம் பிராப்தியாதலின்.

அவதாரிகை

அற்றேல் சாதிருசியம் அபேக்ஷிக்கப்பட்டதாயினும் சொரூபசத்தே அத்தியாச காரணமாம் அத்துணையாலேயே கூறிய அதிப்பிரசங்கம் நீங்குதலின் அறியப்பட்டதாகி சாதிருசியம் காரணமன்ரும் இவ்வாருகவே தருமிஞானத்திற்கு காரணத்தன்மை சித்தியின்ரும் என்று கருதி வினவுகின்ருன்.

சாதிருசியமும் விஷய தோஷத்தன்மையால் காரணமாம் எனின்.

அவதாரிகை

சொரூபசத்தைக் காரணமாக உடன்படின் சாதிருசியப் பிராந்தியால் அத்தியாச முண்டாகலாகாது சாதிருசியப் பிராந்திஸ்தலத்தில் சொரூபசத்தாக சாதிருசியம் இன்மையின் ஆதலால் சாதிருசிய ஞானம் பிராந்தி பிரமைகளுக்குப் பொதுவாக அத்தியாச காரணமாக சொல்லத்தக்கதாம். ஆகவே சாதிருசிய விசிஷ்ட தருமிஞான சித்தியாம்என தருமிஞான காரணவாதி பரிகரிக்கின்ருன்.

சாதிருசியமின்றியதன் கண்ணும் சாதிருசியப் பிராந்தி உண்டாகும்போது அத்தியாச முண்டாவதால் சமுத்திர ஜலப் பிரவாகத்தில் தூரத்திலிருப்பவனுக்கு கருங்கல் பாறைத் தன்மை ஆரோபம் காண்டலின்.

அவதாரிகை

அற்றேல் தருமிஞானத்திற்குக் காரணத்தன்மைப் பக்ஷத்தின்கண்ணும் அந்த ஞானத்தின் சாமாக்கிரித் தன்மையால் துஷ்டேந்திரிய சம்யோகம் அவசியம் சொல்லத்தக்கது ஆகவே அவசியம் சொல்லவேண்டி யிருத்தலால் அத்தியாச விசேஷத்தின் காரணத்தன்மையை வரைந்து கொள்வது சாதிருசிய ஞானசாமக்கிரித் தன்மையேயாம். சாதிருசிய

ஞானத்தன்மை அன்றும். ஆதலால் தருமிஞான சித்தியின்றும். என்னும் கருத்தால் கரியின்கண் இரஜதாத்தியாசப் பிராப்தியை மறந்து வினவுகிருன்.

அதன் ஏதுவிற்கே அதன் ஏதுத்தன்மை இருக்குக என்னும் நியாயத்தால் சாதிருசிய ஞானத்தின் சாமக்கிரியே அத்தியாச காரணம் ஆகுக எனின்.

## அவதாரிகை

தருமிஞானவாதி பரிகரிக்கின்ருன்.

ஞான சாமாக்கிரிக்கு அர்த்த காரணத்தன்மை ஓரிடத்திலும் காணப்படாமையானும் சாதிருசிய ஞான சாமாக்கிரித் தன்மையை அபேக்ஷித்து சாதிருசிய ஞானத்தன்மைக்கு இலகுத்தன்மை உண்மையானும் இவ்வாருகவே தருமிஞான சித்தியாமென்பது கருத்து.

## அவதாரிகை

சாதிருசிய ஞானத்திற்கு அத்தியாச விசேஷத்தின்கண் காரணத்தன்மை இன்றேனும் வியவஸ்தை சம்பவித்தலால் தருமிஞான சித்தியின்றும் என்று கருதி மீண்டும் வினவுகின்ருன்.

இயற்கையாக வெண்மை வடிவமுள்ளதாயினும் நிர்மலமான சொர்ண பாத்திர விசேஷத்தின்கண் உள்ளதாயினும் சொச்சமான ஜலத்தின்கண்ணேயே நீலநிறத்தினத்தியாசமாம். முத்தின்கண் இன்றும் என்னும் வியவஸ்தையின்கண் சுபாவமே ஏதுவாவது போன்று வஸ்து சுபாவத்தாலேயே சுத்தியின்கண் இரஜதத்தின் அத்தியாசமாம் கரிமுதலியவற்றின்கண் இன்றும் என வியவஸ்தையாம் சாதிருசிய ஞானத்தின் அபேக்ஷயினைல் அன்றும் எனின்.

## அவதாரிகை

கூறிய சங்கு மஞ்சள் நிறமுடையது என்னும் அத்தியாசத்திற்போன்று சொர்ண பாத்திரத்திலுள்ள ஜலத்தில் நீலநிற அத்தியாசத்தின்கண் சாதிருசிய ஞான அபேக்ஷ இன்றேனும் வஸ்திரத்தின் துண்டத்தில் தாமரை மொட்டு என்னும் அத்தியாசத்தின்கண் சாதிருசிய ஞானத்தின்

அபேக்ஷை அன்வயவியதிரேகத்தால் சித்தித்ததால் அது போன்று சுத்தி இரஜதாதி அத்தியாசத்தின்கண்ணும் சாதிருசிய ஞானத்தின் உண்மை இன்மைகளாலேயே வியவஸ்தையாம். வஸ்து சுபாவத்தால் அன்றும். வஸ்து சுபாவத்தை ஆசிரயித்தல் கதியில்லாத இடத்திலேயே ஆமாதலின், இவ்வாறுகவே தருமிஞானத்திற்குக் காரணத்தன்மையின் சித்தி தடையற்றதாம் எனக்கருதி தூஷிக்கின்றார்.

இயற்கையாக வஸ்திரத் துண்டத்தில் தாமரை மொட்டு என்னும் அத்தியாசம் இன்றேனும் கத்தரித்தல் முதலியவற்றால் சம்பாதிக்கப்பட்ட தாமரை மொட்டின் ஆகாரமுள்ள அவ்வஸ்திரத்துண்டத்திலேயே அதனத்தியாசம் காணப்படுதலால் தாமரைமொட்டின் அத்தியாசத்திற்கு வஸ்து சுபாவத்தை அனுசரியாது சாதிருசிய ஞானத்தின் உண்மை இன்மைகளை அனுசரிக்குந்தன்மை நிச்சயிக்கப்படுதலால், வஸ்து சுபாவத்திற்கே அத்தியாச காரணத்தன்மையை அங்கீகரிக்கின் கத்தரிக்கோலால் கத்தரித்தலுக்கு முன்பும் வஸ்திரத்துண்டத்தின்கண் தாமரை மொட்டின் அத்தியாசம் பிராப்தியாதலின்.

### அவதாரிகை

அற்றேல் சாதிருசியத்தை அபேக்ஷியாதவேறு அத்தியாசத்தின்கண் காரணத்தன்மை இன்றேனும் என்பது முதலியவற்றால் சாதிருசிய ஞானத்திற்கு அத்தியாச விசேஷத்தின்கண் காரணத்தன்மை சாதித்தல் வாயிலாக தருமிஞானத்திற்கு காரணத்தன்மை அவசியமாமென பூர்வபக்ஷம் பிராப்தமாயிற்று அதனை கவிதார்க்கிகமதத்தை அனுசரித்தவர் நிராகரிக்கின்றார்.

### சமாதானம் சொல்லப்படுகின்றது

சாதிருசிய ஞானம் அத்தியாச காரணம் என்பதன்கண்ணும் விசேஷ ஞானத்தால் பிரதிபந்தம் பண்ணப்பட்ட இரஜதம் முதலியவற்றின் அத்தியாசங்களிலேயே சாதிருசிய ஞானத்திற்குக் காரணத் தன்மை சொல்லத்தக்கதாம். விசேஷ ஞானத்தால் பிரதிபந்தம் பண்ணப்படாத சங்கு மஞ்சள் நிறமுடையது என்பது முதலிய அத்தியாசங்களில் அதற்குக் காரணத் தன்மை சொல்லத்தக்கதன்றும் அசம்பவமாதலின்.

### அவதாரிகை

அதனால் என்னை எனில் கூறுகின்றார் விசேஷ ஞானத்தால் பிரதிபந்தம் பண்ணப்பட்ட அத்தியாசங்களிலும் பிரதிபந்தக ஞான சாமக்கிரிக்கு பிரதிபந்தகத் தன்மை நியமமாதலால் விசேஷ ஞானத்தின் சாமக்கிரியும் அவசியம் பிரதிபந்தகமாமென சொல்லத்தக்கதாமாதலின் அதனாலேயே சர்வ வியவஸ்தையும் பொருந்துதலின் சாதிருசிய ஞானத்திற்குக் காரணத் தண்மையைக் கற்பித்தலால் யாது பயன்.

### அவதாரிகை

சாதிருசிய ஞானத்திற்குக் காரணத் தன்மை இன்றிய வழி முன்பு அதிவியாப்தி சொல்லப்பட்டது அதனைப் பரிகரிக்கின்றார்.

நேத்திர சம்பந்தமுள்ளகரி முதலியவற்றின்கண் அதனது கருமை முதலிய உருவ விசேஷத்தின் ஞான சாமக்கிரி இருத்தலால் இரஜதாத்தியாசமின்றாம். சுத்தி முதலியவற்றின் கண்ணும் முக்கோணம் நீலபாகம் முதலியவற்றோடு நேத்திர சம்பந்தமிருக்கும்போது விசேஷஞான சாமக்கிரி இருத்தலால் இரஜதாத்தியாசமின்றாம்.

### அவதாரிகை

அற்றேல் நேத்திரத்திற்கு சுத்தி சம்பந்த காலத்தில் இரஜதாத்தியாசமில்லையாயின் நேத்திர சம்பந்தமும் அத்தியாச காரணம் ஆகாது எனின். அற்றன்றெனக் கூறுகின்றார் சாதிருசியபாக மாத்திரத்தோடு சம்பந்தமிருக்குங்கால் விசேஷ ஞான சாமக்கிரி- இன்மையின் அத்தியாசமாம்.

### சங்கை

அப்போதும் (சாதிருசிய பாகமாத்திரத்தோடு சம்பந்தமுள்ள காலத்திலும்) சுத்தித்தன்மை வடிவ விசேஷ ஞானத்தின் சாமக்கிரி இருத்தலால் அத்தியாசமுண்டாகலாகாது எனின். சங்கையின் அபிப்பிராயமிதுவாம். அத்தியாசத்தின பாவப் பிராப்தியை பரிகரிக்கும் பொருட்டு சாதிருசிய ஞானம் தோஷத் தன்மையால் அத்தியாச காரணமாம் என சொல்ல வேண்டும். அதனால் கூறிய தோஷ வடிவ பிரதிபந்தகமிருத்தலால் சுத்தித்துவ ஞான சாமக்கிரி தடுக்கப்படாததாக

இன்ருமு அதனுல் இரஜதாத்தியாசம் பொருந்துகின்றது என்பது தருமி ஞான காரணவாதியின் அபிப்பிராயம்.

சமாதானம்

அத்தியாச அபாவப் பிராப்தியைப் பரிகரிப்பதற்கு இருவருக்கும் சம்மதமான பொருளை கவிதார்க்கிகசக்கரவர்த்தியின் மதத்தை அனுசரித்தவர் தெரிசிப்பிக்கின்ருர்.

அற்றன்று அத்தியாச காலத்தில் சுத்தித் தன்மை ஞானம் இன்மையால் அதற்கு முன்பு அதன் சாமக்கிரியின் அபாவம் உன்னுலும் சொல்லத்தக்கதாய் இருத்தலின்.

அவதாரிகை

தருமி ஞானவாதி தனது அபிப்பிராயத்தை வெளிப்படுத்துகின்றவனுய் வினவுகின்ருன். என்னுடைய பக்ஷத்தில் சாதிருசிய ஞானவடிவ அத்தியாச காரணமாகிய தோஷத்தால் பிரதிபந்தம் பண்ணப்பட்டிருத்தலால் அப்போது சுத்தித் தன்மையின் ஞான சாமக்கிரியின் அபாவம் அங்கீகாரமாம். உன்னுடைய பக்ஷத்தில் அவ்வாறு அங்கீகரிக்கினே சுற்றிச் சுற்றி சுங்கஞ் சாவடிவந்த கதை போலாம்.

அவதாரிகை

கவிதார்க்கிகசக்கரவர்த்தியின் மதத்தை அனுசரித்தவரும் தனது அபிப்பிராயத்தை வெளிப்படுத்துகின்றவராய் அத்தியாச அபாவப் பிராப்தியைப் பரிகரிக்கின்ருர்.

அற்றன்று சமீபத்தில் சென்றதன் பிறகு இரஜதத்தின் சாதிருசிய வடிவ பளபளப்பு பார்க்கப்படும்போதே சுத்தித் தன்மை தோற்றுதலால் அதற்கு (சாதிருசிய ஞானத்திற்கு) சுத்தித்தன்மை ஞான சாமக்கிரியின் பிரதிபந்தகத் தன்மை சித்தியாதபோது தூரத்தன்மை முதலிய தோஷத்தால் பிரதிபந்தம் பண்ணப்படுதலாலாவது சுத்தித் தன்மையை வெளிப்படுத்துகின்ற நீல பிருஷ்டத் தன்மை முதலியவற்றைக் கிரகிப்பதில் சாவதானம் இன்மையிஞலாவது அச்சுத்தித் தன்மையின் ஞான சாமக்கிரியின் அபாவம் நம்மிருவருக்கும் சொல்லத்தக்கதாய் இருத்தலின்.

அவதாரிகை

சுத்தி இரஜத பிராந்திஸ்தலத்தில் கூறிய நியாயத்தை வேறிடத்தும் பொருத்துகின்றார்.

இவ்வாறு சமுத்திர ஜலத்தில் நியதமாக நீலநிற அத்தியாசத்தின் ஏதுவான தோஷத்தாலும் தூரத்தில் ஜலத் தன்மையை வெளிப்படுத்துகின்ற அலை முதலியவற்றை கிரகிக்கும் சாமக்கிரியின்மையினாலும் வெண்ணிறமுள்ள ஜலக் கூடத்தின் விசேஷ ஞான சாமக்கிரி இன்றாமாதலின் கற்பாரைத்தன்மை அத்தியாசமாம்.

ஈண்டு இது அறியத்தக்கது. சமுத்திர ஜலத்தில் கருங் கற்பாரைத் தன்மையின் ஆரோபத்தின்கண் கூறிய பிரகாரத்தால் விசேஷ ஞானத்தின் சாமக்கிரியின் அபாவம் அபேக்ஷிக்கப்பட்டதாயினும் அத்துணை மாத்திரத்தால் அதன் அத்தியாசமின்றாம், மற்றோ ஜலத்தில் நீலநிறத்தினத்தியாசத்தால் கருங்கற்பாரையின் சாதிருசிய அடைவுண்டாம் அதன் பிறகு அதனத்தியாசமாம். இவ்வாறாகவே தூரத்தில் கருங்கற்பாரைத்தன்மை அத்தியாசமுடையவற்கு சமுத்திர ஜலத்தின் சமீபத்தில் சென்றதின் பிறகு சமுத்திர ஜலத்தில் எனக்கு தூரத்தில் நீலநிற அத்தியாச சாதிருசியத் தன்மையால் கருங் கற்பாரைத் தன்மை பிராந்தி உண்டாயிற்று இப்போது அந்த பிராந்தி நிவர்த்தியாயிற்று என வியவகாரமுண்டாகின்றது. இவ்வாறு ஆண்டு ஆண்டு சாதிருசிய தோஷத்தால் எனக்கு முன்பு வேறு பிரகாரத்தால் பிராந்தி உண்டாயிருந்தது இப்போது அது நிவர்த்தியாயிற்று என உலக வியவகாரத்தின் கண்ணேயே சாதிருசிய ஞானத்திற்குத் தோஷத் தன்மையால் அத்தியாச விசேஷத்தின்கண் காரணத் தன்மையின் சாதகமாகக் காணத்தக்கது என்க.

அவதாரிகை

சாதிருசிய ஞானத்தின்கண் அத்தியாச காரணத்தன்மையைக் கிரகிக்கும் அன்வய வியதிரேக உதாரணத்தை மாறுபடுத்துகின்றார்.

விரிந்த வஸ்திரத்தின்கண் விசாலவடிவ விசேஷ ஞானத்தின் சாமக்கிரி இருத்தலால் தாமரை மொட்டின் அத்தியாசமின்றாம். கத்தரித்தல் முதலியவைகளோடு கூடிய வஸ்திரத்தின்கண் அது இன்மையினால் அதனத்தியாமாமென்க.

சங்கை

தார்க்கிக கவிசக்கிரவர்த்தியின் மதத்தின்கண்ணே தருமிஞானப் பிராப்தியின் பயத்தால் சாதிருசிய ஞானம் யாண்டும் அத்தியாசத்தில் காரணமாக அங்கீகரிக்கப்படுவதில்லை என்பது வியவஸ்தையாம். இவ்வாருகவே தொக்கிந்திரியத்திற்கு இதமம்சத்தோடு சம்யோகம் உண்டாகுமிடத்தில் உனது சம்மதமான அத்தியாச காரணமிருத்தலால் இரஜதாத்தியாசம் ஏன் உண்டாகிறதில்லை என வினவுகின்ருன். அற்றேல் இங்ஙனம் கையினுல் தொடப்பட்ட இரும்புத்துண்டத்தின்கண் அதனது நீலநிறத்தின் விசேஷ ஞான சாமக்கிரி இன்மையினுல் இரஜதாத்தியாசம் ஏன் உண்டாவதில்லை சாதிருசிய ஞானத்தின் அபேக்ஷை இன்மையின் எனின்.

சமாதானம்

ஆண்டு அத்தியாச முண்டாகின்றதேயாம் ஆனுல் தாம்பரம் முதலியவற்றை வியாவர்த்தக விசேஷ ஞான சாமக்கிரியின்மையின் அதன் அத்தியாசமும் உண்டாகும் ஆதலின் ஓரிடத்து அநேக அத்தியாசம் உண்டாகும்போது சம்சய விஷயம் ஆகின்றது. சில விடத்தோ இரஜம் மிகுதியாயுள்ள பொக்கிஷக்கிரக முதலியவற்றில் இரஜதாத்தியாசமே உண்டாகின்றது சிலவிடத்து சுத்திமுதலியவற்றின்கண் சாதிருசிய ஞானம் உளதாயிலும் ஓர்போது கரணதோஷம் முதலியவை இன்மையால் அத்தியாசம் உண்டாகாததுபோன்று அத்தியாசம் உண்டாகாவிடினும் குறைவின்ரும். அதனுல் (தருமிஞானத்திற்கு எவ்வாற்ருனும் அத்தியாச காரணத்தன்மை சித்தியாமையின்) இதமாகார விருத்தி, காரியத்தால் கற்பிக்கத்தக்கதன்ரும்.

அவதாரிகை

இதமாகாரவிருத்தி அனுபவத்தால் சித்தித்ததா? அல்லது காரியத்தால் கற்பிக்கத்தக்கதா அல்லது காரணத்தால் கற்பிக்கத்தக்கதா என்னும் மூன்று விகற்பத்தின்கண் முதலாவதையும் இரண்டாவதையும் நிராகரித்து இப்போது மூன்ருவதை நிராகரிக்கின்ருர்.

தடையற்ற இதம்வஸ்துவின் சம்யோக வடிவ காரணத்தால் கற்பிக்கத்தக்கதும் அன்ரும். அத்தியாசத்தின்நிமித்த

காரணமாயுள்ள துஷ்டேந்திரிய சம்யோகத்தால் உண்டாகின்ற இதமாகார விருத்திக்கு துஷ்டேந்திரிய சம்யோகத்தால் கலக்கமுற்ற அவித்தையின் பரிணமமாயுள்ளதும் தனது சமான காலத்தில் உள்ளதுமான இரஜத விஷயகத்தன்மை எம்மால் சொல்லப்படுகின்றமையின்,

அவதாரிகை

தருமிஞானபக்ஷத்தில் இதமாகாரவிருத்தி அவித்தையின் கலக்கத்தைச் செய்வதாம் அதன் அபாவ பக்ஷத்தில் தருமி ஞான ஏதுவாகிய சம்யோகம் அவித்தையின் கலக்கத்தைச் செய்வதாம் என வேற்றுமை சித்தித்தபோது அவற்றுள் அந்திமபக்ஷம் சரி அன்றும் இதம் வஸ்துவின் சம்யோகத்திற்கு இதமாகாரவிருத்தியின்கண் ஏதுத்தன்மையிருப்பது போன்று இரஜதவிஷயக விருத்தியின்கண் ஏதுத்தன்மையின்மையானும் ஞானசமானகாலத்தில் உற்பன்னமான இரஜதத்திற்கு ஞானத்திற்கு முன்பு நேத்திரசம்பந்தம் இன்மையானும் இவ்வாறுகவே இரஜதவிஷயக விருத்தியின்கண் சாமக்கிரியின் அபாவமே இதம்விருத்திக்கு தருமிமாத்திர விஷயத்தன்மையை நிலைக்கச் செய்கின்றது என்று ஆசங்கித்துக் கூறுகின்றூர்.

அங்கும் பிராந்திஸ்தலத்தின்கண்ணும் ஞானசமான காலத்தில் உற்பத்தியுடையதும் பிரதீதிகால மாத்திரத்தில் சத்தையை உடையதுமான இரஜதத்தின்கண் அதற்குமுன் சம்யோகமில்லாவிடினும் அதன் தாதான்மியத்தின் ஆசிரயமான இதம்வஸ்துவின் சம்யோகத்தாலேயே அதற்கும் நேத்திர விஷயத்தன்மை பொருந்துதலின்.

அவதாரிகை

நேத்திர சம்யோகத்தின் ஆசிரயமற்ற இரஜதத்திற்கு நேத்திரவிருத்தி விஷயகத்தன்மையை கற்பிப்பதில் ஏதுவைக் கூறுகின்றூர்.

நேத்திரத்தால் இரஜதத்தை காண்கின்றேனென பிராதிபாசிக இரஜதத்திற்கு நேத்திர சம்யோகம் இல்லாவிடினும் நேத்திர விஷயத்தன்மையின் அனுபவ முண்டாவதால்,

அவதாரிகை

தருமி ஞானவாதி நேத்திர விஷயத்தன்மையின் அனுபவத்திற்கு அன்னியதாசித்தியைக் கூறுகின்றவருய்

தருமியோடு இந்திரிய சம்யோகத்தால் உண்டான விருத்தி தருமிமாத்திர விஷயகமாம் என்னும் கருத்தால் வினவுகின்ருன். நேத்திர சம்யோகத்தின் அபாவவடிவ பாதகத்தாலேயே இரஜதம் நேத்திரவிஷயம் அன்ரும். இரஜதம் துஷ்டேந்திரிய சம்யோக ஜன்னியமும் இதம்விருத்தி சமகாலம் உடையதும் அன்ரும், ஞானத்தின் காரணமான இந்திரிய சம்யோகத்திற்கு அர்த்த காரணத்தன்மைப் பிரசித்தியின்மையின். ஆனல் இதம்விருத்தியின் பிறகு உண்டாகும் இரஜதம் இதம்விருத்தியால் ஜன்னியமாய் அதனல் அபிவியக்த சாக்ஷியின்கண் அத்தியாசமாதலால் சாக்ஷிபாஸ்யமாம், நேத்திரவிஷயத்தன்மையின் அனுபவமோ இரஜதத்தைப் பிரகாசிக்கின்ற சைதன்னியத்தின் அபிவியஞ்சக இதம்விருத்தியை உண்டு பண்ணுந்தன்மையால் பரம்பரையாய் நேத்திரத்தை அபேக்ஷித்தல் மாத்திரத்தாலாம் எனின்.

அவதாரிகை

பிராதிபாசிக இரஜதாதிகள் சாக்ஷி பாஸ்யமேயாம். இந்திரிய விஷயமன்று என்று கூறிய மதத்தை தூஷிக்கின்ருர்.

அவ்வாருயின் (அதிஷ்டானத்திற்கு இந்திரிய விஷயத்தன்மையின் அடைவின் பொருட்டு இந்திரியத்தின் அபேக்ஷையாம் ஆரோப்பியத்திற்கு இந்திரிய விஷயத் தன்மையின் பொருட்டு இந்திரியத்தின் அபேக்ஷையின்ரும் என்று அங்கீகரிக்கின்) சங்கு மஞ்சள் நிறமுடையது என்னும் பிராந்தியின்கண் நேத்திரத்தினபேக்ஷை உண்டாகலாகாது ஆண்டு சங்கின் ஞானத்தின்கண் நேத்திரத்தின் அபேக்ஷை இன்ரும். உருவமின்றி கேவல சங்கிற்கு நேத்திர விஷயத்தன்மை பொருந்தாமையின். மஞ்சள்நிற ஞானத்தின்கண்ணும் நேத்திரத்தின் அபேக்ஷை இன்ரும். ஆரோப்பியத்தின்கண் இந்திரிய விஷயத்தன்மையை அங்கீகரியாமையின்.

அவதாரிகை

உருவமின்றிய கேவல சங்குக்கு நேத்திர விஷயத் தன்மையை அங்கீகரித்து ஆரோப்பியத்திற்கு சாக்ஷிபாஸ்யத் தன்மையைக் கூறும் வாதி வினவுகின்ருன்.

மஞ்சள் நிறம் சொரூபமாக அத்தியஸ்தம் அன்றும். ஆனல் அனுபவிக்கப்படுகின்ற நேத்திரத்திலுள்ள பித்தத்தின் மஞ்சள் நிறத்திற்கு சங்கில் சம்பந்தமாத்திரம் அத்தியாசம் செய்யப்படுகின்றது ஆதலின் மஞ்சள் நிறத்தின் அனுபவத்தின் பொருட்டே நேத்திரத்தின் அபேக்ஷையாம் எனின்.

அவதாரிகை

ஆண்டு நேத்திரப் பிரதேசத்திலுள்ள பித்தத்திரவியத்தின்கண்ணேயே மஞ்சள் நிறத்தின் அனுபவமா அல்லது சங்கு தேசத்தை அடைந்து ஆண்டுள்ள பித்தத்திரவியத்தின்கண் மஞ்சள் நிறத்தின் அனுபவமா என்று விகற்பித்து முதற் பக்ஷத்தைத் தூஷிக்கின்ருர்.

அவ்வாருயின் அதாவது நேத்திரத்திலுள்ள பித்தத்திரவியத்தின்கண்ணேயே மஞ்சள் நிறத்தின் அனுபவத்தை அங்கீகரிக்கின் சங்கிற்கும் அதன் (சங்கு மஞ்சள் நிறம் ஆகிய இரண்டன்) சம்பந்தத்திற்கும் அப்பிரத்தியக்ஷத்தன்மை பிராப்தமாதலின். நேத்திரப் பிரதேசத்திலுள்ள மஞ்சள்நிற ஆகார விருத்தியால் அபிவியக்தமான சாக்ஷியோடு சம்பந்தம் இன்மையால் அவைகட்கு அதனல் விளங்கும் தன்மை இன்மையினுனும் மஞ்சள்நிற சம்பந்தமுள்ள சங்கு விஷயக ஓர் விருத்தியை அங்கீகரியாமையானும் என்க.

அவதாரிகை

சங்கு தேசத்தை அடைந்துள்ள பித்தத்திரவியத்தின் கண்ணேயே மஞ்சள் நிறத்தின் அனுபவமாமெனை. இரண்டாவது பக்ஷத்தை வினவுகின்ருன்.

நேத்திரப் பிரதேசத்திலுள்ள பித்தத்திரவியத்தின் மஞ்சள் நிறத்திற்குத் தோஷத்தால் சங்கின்கண் சம்சர்க்க அத்தியாசம் அங்கீகரிக்கப்படுகின்றதில்லை ஆனல் நேத்திர ரஸ்மிகளோடுகூட வெளியில் சென்றதும் விஷயத்தை வியாபித்ததும் ஆகிய அதற்கு சங்கில் சம்சர்க்காத்தியாசமாம் குசும்பாத் திரவியத்தால் சென்னிறம் ஆக்கப்பட்ட வஸ்திரத்தின்கண் குசும்பாத் திரவியத்தில் உள்ள சென்னிறத்தின் சம்பந்தம் அத்தியாசம் ஆவது போன்று ஆதலால் அதனுகார விருத்தியால் அபிவியக்தமான சாக்ஷியின் சம்பந்தம் சம்பவிக்கின்றது எனின்.

நேத்திரத்தின்கண் எல்லோராலும் அனுபவிக்கப்படுகின்ற நேத்திரத்திலுள்ள பித்தத்திரவியத்திற்கு நேத்திர ரஸ்மி வாயிலாக வெளிப்போந்து சங்கை வியாபிப்பதாக உடன்படின் பாதகத்தைக் கூறுகின்ருர்.

அவதாரிகை

அவ்வாருயின் சொர்ணத்தால் பூசப்பட்ட சங்கு போன்று பித்த தோஷத்தோடு கூடிய நேத்திரத்தால் சங்கு பார்க்கப் படும்போது ஏனையோருக்கும் மஞ்சள்நிற ஞானம் பிராப்தியா மாதலின்.

சங்கை

அந்த மஞ்சள் நிறம் சமீபத்தில் கிரகிக்கப்பட்டதாகியே தூரத்தில் கிரகித்தற்கும் யோக்கியமாம் ஆகாசத்தின்கண் மேலே எழும்புகின்ற பறவைபோன்று. ஏனையோருக்கோ சமீபத்தில் மஞ்சள் ஞானம் இன்ரும் எனின்.

திருஷ்டாந்தம் விஷயமாமெனக் கூறுகின்ருர். பித்த தோஷமுள்ள நேத்திரத்தின் சமீபத்தில் வைக்கப்பட்ட நேத்திரமுடைய ஏனையோருக்கும் மஞ்சள் நிறத்தின் சமீபத் தன்மை இருத்தலால் அதன் கிரகணத்தை நிவர்த்திக்க முடியாமையின்.

அவதாரிகை

அனுபவிக்கப்படுகின்ற ஆரோபஸ்தலத்தில் எவ்வாருயினும் நேத்திரத்தின் அபேக்ஷை இருக்குக நினைக்கப்படுகின்ற நீலநிற முதலியவற்றின் அத்தியாச ஸ்தலங்களிலோ நேத்திரத்தின் அபேக்ஷை ஒருவாற்ருனும் கூறமுடியாதெனக் கூறுகின்ருர்.

இவ்வாருயினும் மிகவும் வெண்மையான மணல் மயப் பிரதேசத்தில் ஓடுகின்ற சொச்சமான நதியின் ஜலத்தில் நீல நிற அத்தியாசத்தின்கண்ணும் ஆகாசத்தில் நீலநிற அத்தியாசத்தின்கண்ணும் சிகப்பு நிறமுள்ள வஸ்திரங்களில் இரவில் நிலாவின்கண் நீலநிற அத்தியாசத்தின்கண்ணும் அனுபவிக்கப்படுகின்ற ஆரோபத்திற்கு நேத்திரத்தின் அபேக்ஷை கூற முடியாமையால் ஆண்டு நீலநிற சம்பந்தமுள்ள அதிஷ்டான விஷயக நேத்திர விருத்தியை அங்கீகரியாவிடின் நேத்திரத்தின் உபயோகமின்மையை நிவர்த்திக்க முடியாதாகலின்.

அவதாரிகை

ஆரோப்பிய இரஜதாதிகள் இந்திரிய ஜன்னிய ஞானத்திற்கு விஷயமாம் என்பதன்கண் முதியோரது சம்மதியைக் கூறுகின்றார்.

இந்த ஜன்மத்தில் கசப்பு ரசத்தை அனுபவியாத பாலகனுக்கு இனிப்பின்கண் கசப்புத் தன்மையின்பிரதீதி ஜன்மாந்தர அனுபவ ஜன்னிய சமஸ்காரத்தை ஏதுவாக உடையதாம் என்று பிரதிபாதனம் செய்கின்ற பஞ்சபாதிகை என்னும் கிரந்தத்தால் சொரூபமாக அத்தியாசம் பண்ணப்படுகின்ற கசப்பு ரசத்திற்கே இந்திரிய விஷயத் தன்மை ஸ்பஷ்டம் செய்வதாலும், ஆரோப்பிய கசப்பு இரசத்திற்கு இந்திரிய விஷயத்தன்மையை அங்கீகரியாவிடின். ஆண்டு இரசனேந்திரிய வியாபாரத்தின் அபேக்ஷை பொருந்தாதாதலின்.

அவதாரிகை

இனிமேல் கவிதார்க்கிக மதத்தின் அனுசாரமாக பஞ்சபாதிகை கிரந்தத்தின் யாதொரு வியாக்கியானம் செய்யப்பட்டதோ அதுவே அனுசரிக்கப்படுகின்றது. ஆதலால் (அத்தியசிக்கப்படுகின்ற பதார்த்தம் சாக்ஷிபாஸ்யமாமென்னும் மதத்தின்கண் சங்கு மஞ்சள் நிறமுடையது என்பது முதலிய அத்தியாசங்களில் நேத்திரத்தின் உபயோகமின்மை நீக்க முடியாமையால்) உதாகரிக்கப்பட்ட நீலநிற அத்தியாச ஸ்தலங்களில் அதிஷ்டானத்தோடு இந்திரிய சம்யோகத்தாலேயே அதிஷ்டான விஷயக நேத்திர விருத்தியின் சமகாலத்தில் உற்பத்தியாகின்ற அத்தியாசம் அவ்விருத்திக்கு விஷயமாம் ஆதலின் அதற்கு நேத்திர விஷயத்தன்மை அங்கீகரிக்கத்தக்கது. உருவமின்றி கேவல அதிஷ்டான விஷயக விருத்தியை அங்கீகரியாவிடின் விஷய சைதன்னியத்தின் அபிவியக்தி இன்மையால் ஜலத்திற்கும் அதன்கண் அத்தியஸ்தமான நீலம் முதலியவைகட்கும் 'சாக்ஷிபாஸ்யத் தன்மை பொருந்தாதாதலின்.

அவதாரிகை

அத்தியாசம் செய்யப்படுகின்ற கசப்பு ரசத்திற்கு பஞ்சபாதிகை கிரந்தத்தில் கூறப்பட்ட இந்திரிய விஷயத்தன்மை நேத்திர அத்தியாச ஸ்தலத்திற்போன்று அதிஷ்டான

ஆரோப்பியங்கட்கு ஓர் விருத்தியின் விஷயத் தன்மையால் அன்ரும். மற்ருே கசப்பு ரசமாத்திரத்தை விஷயஞ் செய்யும் இரசனேந்திர ஜன்ய விருத்தியாலாமென உபபாதனம் செய்கின்ருர்.

கசப்பு ரசத்தின் அத்தியாசத்தின்கண்ணே அதிஷ்டான ஆரோப்பியங்கட்கு ஓரிந்திரியத்தால் கிரகிக்கப்படுந்தன்மை இன்மையின். தொக்கிந்திரிய ஜன்னிய அதிஷ்டான விஷயக விருத்தியால் மதுரத்திரவியம் முதலிய அதிஷ்டான அவச்சின்ன சைதன்னியம் அபிவியக்தி ஆகும்போது பித்த தோஷத்தோடு கூடிய இரசனேந்திரிய சம்யோகத்தாலேயே ஆண்டு கசப்பு இரசத்தின் அத்தியாசமும் அதை மாத்திரம் விஷயஞ் செய்யும் இரசனேந்திரிய ஜன்ய ஞானம் சமகாலத்தில் உற்பத்தியாகின்றது. ஆதலின் கசப்பு இரசத்திற்கு இரசனேந்திரிய விஷயத்தன்மை அங்கீகரிக்கத்தக்கதாம்.

அவதாரிகை

அற்றேல் கசப்பு இரச அத்தியாசத்திற்கு இரசனேந்திரிய விஷயத்தன்மை வேண்டுவதில்லை கசப்பு இரசத்தின் பிரதீதியோ கேவல சாக்ஷி வடிவமாம். என்னும் மதமே ஏன் அங்கீகரிக்கப்படுகின்றதில்லை என்னுமிடத்துக் கூறுகின்ருர்.

தொக்கிந்திரியத்தாலுண்டான அதிஷ்டானவிஷயக விருத்தியால் அபிவியக்தமாகிய சைதன்னியத்தால் விளங்குகின்ற கசப்பு இரசத்தின்கண் பரம்பரையாலும் இரசனேந்திரியத்திற்கு உபயோக மின்மையால் அதன்கண் எவ்வாற்ருனும் வேறு பிரகாரத்தால் இரசனேந்திரிய விஷயத்தன்மையின் அனுபவத்தைச் சமர்த்தனம் செய்தல் சம்பவியாமையின் அவ்வாறே இரஜதத்திற்கும் நேத்திரவிஷயத்தன்மை பொருந்துதலின் பார்க்கின்றேன் என்னும் அனுபவம் பாதிக்கத்தக்கதன்ரும்.

அவதாரிகை

பாதிக்கத்தக்கது அன்று என்பது பொருந்தாது (விரோதி) பாதகமிருக்குங்கால் அதன் பாதம் அவசியம் உண்டாகுமாதலால் என்று கருதி வினவுகின்ருன். இந்திரிய சம்பந்தம் இன்றிய இரஜதத்திற்கு நேத்திரவிஷயத் தன்மையை அங்கீகரிக்கின் பிரத்தியக்ஷ மாத்திரத்தில் விஷயேந்திரிய சம்பந்தம் காரணமாம் திரவியப் பிரத்தி

யக்ஷத்தில் திரவிய சம்யோகம் காரணமாம் இரஜதப் பிரத்தியக்ஷத்தில் இரஜதசம்யோகம் காரணமாம் எனகிரகிக்கப்பட்ட அநேக காரியகாரண நியமங்கட்கு விஞசமுண்டாம் எனின்.

உத்தரங் கூறுகின்றார். சம்யோகாதியின்கண் அநுகதமாக ஓர் சம்பந்தத்தன்மை இன்மையால் பிரத்தியக்ஷ மாத்திரத்தில் இந்திரிய சம்பந்தம் காரணமாமென்னும் முதலாவது நியமம் சித்தியாமையின்.

அவதாரிகை

முதலாவது நியமத்திற்கு அசித்தியைக்கூறி ஜன்னியத் திரவியப் பிரத்தியக்ஷத்தில் இந்திரிய சம்யோகம் காரணமாமென்னும் இரண்டாவது நியமத்தை அங்கீகரித்து பிரகிருதத்தில் அதன் அவிரோதத்தைக் கூறுகின்றார்.

இரண்டாவது நியமத்திற்கு நையாயிகனது ரீதியால் அந்தகாரத்தின்கண் திரவியத்தன்மை அத்தியாசமுண்டாவதுபோன்று சம்யோகத்திற்கு அயோக்கியமும் திரவியமல்லாததுமான சில வஸ்துவின்கண் திரவியத்தன்மையின் அத்தியாசம் சம்பவித்தலால் வியவகாரதிருஷ்டியால் திரவியத்தன்மையின் அதிகரணம்யாது அதனை விஷயஞ் செய்யும் தன்மையாலும் பிராதிபாசிக இரஜதத்தின்கண் அதிஷ்டானத்தின்கண்ணுள்ள திரவியத்தன்மைக்கே இதம் தன்மைபோன்று அத்தியாச முண்டாவதால் அதன் பிரதியை அங்கீகரித்தலாலும், இரண்டாவது நியமத்திற்கு விரோதமின்மையின், இரண்டாவது நியமவடிவ சாமான்ய காரிய காரண பாவத்தினும் வேருக விசேஷித்துக் காரிய காரண பாவத்தைக் கற்பித்தல் கௌரவ தோஷத்தால் பீடிக்கப்பட்டமையால் மூன்ருவது நியமம் சித்தியாமையின்

அவதாரிகை

அற்றேல் திரவியப் பிரத்தியக்ஷத்தில் இந்திரிய சம்யோகம் காரணம் என அங்கீகரிக்கின் இரஜதத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் இரஜதத்தோடு சக்ஷுசம்யோகம் காரணமாம் என மூன்ருவது நியமமும் நிவர்த்திக்க முடியாது இரஜதம் திரவிய விசேஷமாவதாலும் இரஜதத்தோடு சக்ஷுவின் சம்யோகம் இந்திரியசம்யோக விசேஷமாவதாலும் திரவியவிசேஷப் பிரத்தியக்ஷத்தின்கண் இந்திரிய

சம்யோகவிசேஷம் காரணமென்னுமிப் பொருள் சாமான்னிய நியாயத்தால் சித்தித்தமையின் என்னும் சங்கையை பரிகரிக்கின்றூர்,

எச்சாமானியத்தின்கண் எச்சாமான்னியம் காரணமோ அதன் விசேஷத்தின்கண் அதன் விசேஷம் காரணமாமென்னும் நியாயத்திற்கும் யாண்டுபீஜ அங்குராதியின்கண் சாமானிய காரியகாரண பாவத்தை அங்கீகரிக்கின் வேறு பீஜத்தில் நின்றும் வேறு அங்குரத்தின் உற்பத்தி பிராப்தியாமோ அதனைவிஷயமாக உடையதாந்தன்மையால் அந்த நியாயத்தால் ஆட்டின் கழுத்தில் தொங்குகின்ற ஸ்தன்னியத்திற்கு சமானமாயுள்ள விசேஷ காரியகாரணபாவம் சித்தியாமையின்.

## அவதாரிகை

அற்றேல் பீஜசாமான்யத்திற்கும் அங்குரசாமான்யத்திற்கும் காரிய காரணத்தன்மையை அங்கீகரிக்கின் வேறு பீஜத்தினின்றும்வேறு அங்குரத்தின் உற்பத்தி பிராப்தியாவது போன்று ஈண்டும் அதிப்பிரசங்கம் உண்மையால் கூறிய நியாயத்தின் பிரவிருத்தி உளதுஎன வினவுகின்றுன்.

ஈண்டும் திரவியப் பிரத்தியக்ஷத்தின்கண் திரவியசம்யோகம் காரணமாம்என சாமான்ய நியமமாத்திரத்தை அங்கீகரிக்கின் வேறுதிரவியத்தின் சம்யோகத்தால் வேறுதிரவியத்தின் பிரத்தியக்ஷத்தின் ஆபத்தியாம்என அதிப்பிரசங்கம் உளது எனின்.

## சமாதானம்

அவ்வத்திரவியப் பிரத்தியக்ஷத்தின்கண் அவ்வத்திரவிய சம்யோகம் காரணமென நியமத்தை அங்கீகரித்தலால் அதிப்பிரசங்கமின்றும்.

## அவதாரிகை

அற்றேல் அந்த நியாயத்தால் அதிப் பிரசங்கத்தைப் பரிகரிக்கும் பொருட்டு மூன்றுவது நியமமே ஏன் கற்பிக்கப் படுகின்றதில்லை எனின். அதற்குக் கூறுகின்றூர்.

மூன்ருவது நியமத்தைக் கற்பிக்கினும் அதன்கண்ணும் அதிப்பிரசங்கத்தை நீக்கமுடியாமையின். ஆதலால் பிரசித்த மான இரண்டாவது நியமத்திற்கு நாசப்பிராப்தியின்ரும். மேலும் சுத்தி இரஜதாதிஸ்தலத்தின்கண் மேற்கூறிய பிரசித்தமான நியமத்திற்கு நாசமுளதாயினும் தோஷமின்ரும். இந்த இரஜதத்தைக் காண்கின்றேன் நீலநிறமுள்ள ஜலத்தைக் காண்கின்றேன் என்பது முதலிய அன்னியதாசித்தியின்றிய அனுபவத்தினை பிரத்தியக்ஷமாத்திரத்தில் விஷய சம்பந்தம் காரணமாம் என்பது முதலிய நியமங்கள் முதலில் கிரகிக்கப்பட்டனவாயினும் அவைகட்கு வியாவகாரிக விஷயத்தின்கண் சங்கோசத்தைக் கற்பித்தலின்றி பிரதிபாதனம் செய்தல் சம்பவியாமையின்.

## அவதாரிகை

பிரசித்தமான நியமங்கட்கு சங்கோசத்தைக் கற்பிக்கும்போது சுத்தி இரஜதம் முதலியவற்றிற்கு அனிர்வசனீயத் தன்மை சித்தியாது என்று வினவுகின்ருன்.

இவ்வாருகும்போது பிரமைஞானத்தின்கண் சம்பந்தம் காரணமாம் பிராந்திஞானத்தின்கண் அன்ரும் எனவும் சங்கோசத்தைக் கற்பித்தல் சம்பவித்தலின். இந்திரிய சம்பந்தமின்றிய தேசாந்தரத்திலுள்ள இரஜதத்திற்கே ஈண்டு ஆரோபத்தின் பிராப்தியாம் ஆதலின் அன்னியதாக்கியாதி வாதம் வருகின்றதெனின்.

## அவதாரிகை

பிராந்திப் பிரத்தியக்ஷத்தின்கண் சம்பந்தத்திற்கு காரணத்தன்மை இன்றேனும் அன்னியதாக்யாதி வாதத்தின் பிராப்தி இன்ரும் எனப் பரிகரிக்கின்ருர்.

அபிவியக்த சைதன்னியத்தோடு தாதாத்மிய மின்றிய தேசாந்திரத்திலுள்ள இரஜதத்திற்கு அபரோக்ஷத்தன்மை பொருந்தாமையானும் தோற்றமும் பாதமும் பொருந்தாமை முதலியவற்ருல் பிராந்திஞான விஷயத்திற்கு அனிர்வசனீயத் தன்மை சித்தித்தலானும் என்க.

## அவதாரிகை

சுத்தி இரஜதம் முதலியவற்றிற்கு சாக்ஷிபாஸ்யத் தன்மையைக்கூறும்வாதிசுத்தி இரஜதத்திற்கு இரஜததாதாத்

மிய ஆசிரய இதம் வஸ்துவின் சம்யோகத்தாலேயே நேத்திர விஷயத்தன்மையை அங்கீகரிக்கின் அதிப்பிரசங்கமாம் என வினவுகின்ருன்.

அதிஷ்டானத்தோடு இந்திரிய சம்யோகமாத்திரத்தால் பிராதிபாசிக இரஜதத்திற்கு இந்திரிய விஷயத்தன்மையை உடன்படின் சுத்தி இரஜத அத்தியாச சமயத்தில் அச்சுத்தியின்கண்ணேயே காலாந்தரத்தில் அத்தியசிக்கத்தகுந்த ஈயத்திற்கும் நேத்திரவிஷயத்தன்மை ஏன் ஆகாது.

அவதாரிகை

அதிஷ்டானமும் சாதிருசியஞானமும் இரஜதாத்தியாசத்திற்கும் ஈய அத்தியாசத்திற்கும் பொதுவாயிருத்தலால் என தோஷத்தின் சமத்தன்மையை சூசிப்பிக்கின்ருர்.

இரஜதாத்தியாச சமயத்தில் ஈயம் வெள்ளி இரண்டுக்கும் பொதுவான பளபளப்பின் ஞானம் சமானமாயினும் ஈயத்தின் இச்சைவடிவ புருஷனது தோஷம் இன்மை முதலியவற்ருல் ஆண்டு அப்போது ஈயத்தின் அத்தியாசமின்ரும். அதனலேயே என்னல் ஈய விஷயக விருத்தியின் அனுத்பத்தி அங்கீகரிக்கப்பட்டமையின்.

அவதாரிகை

கவிதார்க்கிகரது மதத்தை முடிக்கின்ருர்.

தருமிஞானத்திற்கு காரணத்தன்மையில் பிரமாணமின்மையின் இதமம்சத்தோடு தாதான்மியமுற்ற இரஜத விஷயக ஒரேவிருத்தி இந்திரிய ஜன்னியமாம். பிராந்தி ஞானத்திற்கு முன்பு இதமாகார விருத்தியின்ரும் ஆதலின் இதமாகார விருத்தியின்கண்ணே அஞ்ஞானத்தின் நிவர்த்தகத்தன்மை உண்டா இல்லையா என்னும் விசாரம் செய்யத்தக்கதன்ரும்.

அவதாரிகை

தருமிஞானத்திற்கு அத்தியாச காரணத்தன்மையை சொல்லுகின்ற மதத்தினேயே கூறுகின்ருர்.

சில நூலாசிரியரோ அதிஷ்டான ஞானம் அத்தியாச காரணமாம் ஆதலின் இதமாகாரவிருத்தியை அங்கீகரித்து அதனல் அபிவியக்தமான சாக்ஷியினலேயே அதன்கண்

அத்தியஸ்தமான இரஜதத்தின் விளக்கம் சம்பவித்தலினாலும் இரஜதத்தைவிளக்கும் சாக்ஷியின் அபிவியஞ்சகமான அவ் இதமாகார விருத்தியினாலேயே இரஜதவிஷயக சமஸ்காரத்தின் உற்பத்தி பொருந்துதலினாலும் இரஜதாகார விருத்தி வியர்த்தமாமெனக் கருதுகின்றனர்.

### விசேஷ உரை

அன்னிய விஷயக விருத்தியால் அன்னிய விஷயக சமஸ்காரத்தின் உற்பத்தி எங்ஙனமாம் என்று சொல்லற்க எவ்விருத்தியினால் வளைபட்ட சைதன்னியத்தின்கண் எவ்வளவு பதார்த்தங்கள் விளங்குகின்றனவோ அவ்விருத்தியினாலேயே அவ்வளவு பதார்த்தங்களின் சமஸ்காரம் உற்பத்தியாம் என முன்பு கூறப்பட்டமையின் என்பது கருத்து.

### அவதாரிகை

எவர்கள் தனது விஷயக விருத்தியினாலேயே தனது விஷயக சமஸ்காரத்தின் உற்பத்தியாம் எனக்கருதுகின்றனரோ அவர்கள் மதத்தில் அத்தியஸ்த இரஜத விஷயக விருத்தியும் உளது ஆண்டு இரண்டாவது விருத்தி அத்தியஸ்த இரஜத விசிஷ்டதருமியை விஷயஞ் செய்வதா அல்லது இரஜத மாத்திரத்தை விஷயஞ் செய்வதா என சமுசயமுண்டாக இருமதத்தால் நிச்சயத்தைத் தரிசிப்பிக்கின்றார்.

ஞானமிரண்டு என்னும் பக்ஷத்தின்கண் இதுவென்னும் ஓர் விருத்தி அத்தியாசத்திற்குக் காரணமாய் உள்ளது இது இரஜதமென்னும் இரண்டாவது விருத்தி அத்தியஸ்த இரஜத விஷயகமாம் இதமம்சத்தைவிட்டு அத்தியஸ்த இரஜத மாத்திரத்தை அவ்விருத்தி விஷயஞ் செய்வதின்றாம். இந்த இரஜதத்தை அறிகின்றேனென அதன்கண் இதம் வஸ்துவின் தாதான்மியத்தை அடைந்துள்ள இரஜத விஷயகத்தன்மையை அனுபவித்தலால் என சிலர் கூறுகின்றனர்.

### அவதாரிகை

இரண்டாவது விருத்திக்கு அத்தியஸ்த இரஜத மாத்திர விஷயகத்தன்மையாம் என்னும் மதத்தைக் கூறுகின்றார்.

சில நூலாசிரியரோ இங்ஙனங் கூறுகின்றனர் எப்படி இதமம்சத்தால் வளைபட்ட சைதன்னியத்தின் கண்ணுள்ள

அவித்தை இரஜதாகாரமாக பரிணமிக்கின்றதோ அப்படி இதமம்ச விஷயக விருத்தி ஞானத்தால் வளைபட்ட சைதன்னியத்தின் கண்ணுள்ள அவித்தை இரஜத ஞானகார மாக பரிணமிக்கின்றது இதமம்ச விஷயக விருத்திபோன்று இரஜத ஞானம் வியாவகாரிகம் அன்ரும் பிராதிபாசிகமே யாம்.

அவதாரிகை

பிராதிபாசிக ஞானத்திற்கு இரஜத மாத்திர விஷயகத் தன்மையை அங்கீகரிக்கின் அதற்கு இது இரஜதம் என்னுமா காரம் உண்டாகலாகாது. என்ரு சங்கித்து பிராதி பாசிக ஞானத்திற்கு இதமம்ச விஷயகத்தன்மை இன்றேனும் அதற்கு அவ்வாகாரம் சம்பவிக்கின்றது என்னும் கருத்தால் கூறுகின்ருர்.

பிராதிபாசிக ஞானத்தைக் குறித்து இதம்விஷயக விருத்தியினுல் வளைபட்ட சைதன்னியம் அதிஷ்டானமாகும் போது இரஜதத்தின்கண் அதிஷ்டானத்தின்கண்ணுள்ள இதம்தன்மையின் சம்பந்தம் பிரதீதி ஆவதுபோன்று அதன் ஞானத்தின் கண்ணும் அதிஷ்டானத்தின் கண்ணுள்ள இதந்துவ விஷயகத்தன்மையின் சம்பந்தப் பிரதீதி பொருந்து தலின் அதன்கண்ணும் இதம் விஷயகத்தன்மையை அங்கீ கரிக்கத்தக்கதன்ரும்.

அவதாரிகை

அற்றேல் பிராந்தி ஞானத்தால் இரஜதம் கிரகிக்கப்படும் போது இதம்தன்மையின் சம்பந்தம் கிரகிக்கப்படுகின்றது எனின். இதம் தன்மையும் அதனுல் அவசியம் கிரகிக்கத் தக்கதேயாம் இதம் தன்மையின் கிரகணமின்றி அதன் சம்பந்தக்கிரகணம் பொருந்தாமையின். இவ்வாருகவே பிராந்திஞானத்திற்கு இரஜத விசிஷ்ட இதமம்ச விஷயகத் தன்மை சித்தியாம் என்று வினவுகின்ருன்.

இரஜதம்போன்று அத்தியஸ்தமான இரஜத இதந்து வங்களின் சம்பந்தத்திற்கு இரஜத ஞானத்தின் விஷயத் தன்மை உண்மையால் அதன் பிரதியோகியாகிய இதந்துவத் திற்கும் அதன் விஷயத்தன்மை சொல்லத்தக்கதாம் இன்றேல்

கடத்தன்மை முதலியவற்ருல் நிரூபிக்கப்பட்ட சம்சர்க்கப் பிரத்தியக்ஷத்திற்கு கடத்துவாதி விஷயகத்தன்மை இன்ருகும் என அதிப்பிரசங்கம் வருதலின் எனின்.

அவதாரிகை

பிராந்தி ஞானத்திற்கு இதந்துவவடிவ பிரதியோகி விஷயகத்தன்மை இன்றேனும் பிராந்தி ஞானத்தைக் குறித்து அதிஷ்டானத்தன்மையால் அதன் தாதான்மியத்தை அடைந்துள்ள இதமம்சஞானத்திற்குப் பிரதியோகி விஷயகத்தன்மை உண்மையால் பிராந்தி ஞானத்திற்குச் சம்சர்க்க விஷயகத்தன்மை சம்பவிக்கின்றது இத்துணையானேயே கூறிய அதிப்பிரசங்கத்தின் பரிகாரம் பொருந்துதலின் எனப் பரிகரிக்கின்ருர்.

பிராந்திஞானத்தின் தாதாத்மியத்தை அடைந்துள்ள இதமம்ச ஞானத்திற்கு இதந்துவ விஷயகத்தன்மை உண்மையானேயே அதற்கு அதன் சம்சர்க்க விஷயத்தன்மையை உடன்படின் அதிப்பிரசங்கம் இன்மையின், அதிஷ்டானத்திற்கும் ஆரோப்பியத்திற்கும் ஓர் ஞானத்தின்கண் விளக்க நியமத்தினைச் சம்பாவனை பாஷிய விவரணத்தின்கண் பிரதிபாதித்திருத்தலால் ஓர் விருத்தி விஷயத்தன்மை சொல்லத்தக்கதாம் என்று சொல்லற்க. விருத்திபேதத்தை அங்கீகரிக்கினும் இதமாகார விருத்தியால் அபிவியக்தமான ஓர் சாக்ஷியின்கண் அவைகளின் விளக்கத்தை அங்கீகரித்தலால் எனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

இவ்வாறு வெளிப்பொருள் விஷயக அபரோக்ஷ விருத்திகட்கே ஆவரணத்தை அபிபவம் செய்யும் தன்மையாம் என்னும் நியமத்திற்கு பிராந்திஸ்தலத்திலுள்ள இதமாகார விருத்தியின்கண் வியபிசார சங்கை உண்டாகும்போது விருத்தியின் அங்கீகாரத்தாலும் அனங்கீ காரத்தாலும் அவ்விருத்தியின் அச்சங்கையைப் பரிகரித்துப் பிரசங்கத்தால் ஞானம் இரண்டு என்னும் பக்ஷத்தின்கண் சொற்ப விசாரத்தைச் செய்து முற்கூறிய விருத்தியின் வெளிப்போதலை ஆக்ஷேபிக்கின்ருர்.

## 35. அபரோக்ஷானு பூதியின் பொருட்டு விருத்தி வெளிப்போதலேச் சொல்லுதல்

அற்றேல் சர்வ பதார்த்தங்களுக்கும் சாக்ஷியின் பிரசாதத் தாலேயே பிரகாசம் பொருந்துதலின் விருத்தியால் யாது பயன்,

அவதாரிகை

அற்றேல் கேவல சாக்ஷிக்கே விஷய அனுபவ வடிவத் தன்மை உடன்படின் காலாந்தரத்தில் விஷயத்தின் அனுசந் தானம் உண்டாகாது அனுபவத்தின் நாசவடிவ சமஸ்காரம் இன்மையினுல் அவ்வாறே ஆகந்துக விருத்தியை அங்கீகரியா விடின் நேத்திராதியை அனுசரித்தல் இன்ருகும் நித்திய சாக்ஷியின்கண் நேத்திராதிக்கு உபயோக மின்மையின் ஆதலால் விருத்தி அங்கீகரிக்கத்தக்கதாம் என்று ஆசங்கித்து அதனே அங்கீகரிக்கின்ருர்.

கடாதிவிஷயக சமஸ்காரத்தின் உற்பத்தி பொருந்தும் பொருட்டு அதனே அபேக்ஷிக்கினும் அதன் வெளிப்போதலே உடன்படல் வியர்த்தமாம்.

அவதாரிகை

அற்றேல் விஷயப் பிரகாசமே விருத்தி வெளிப்போதலின் பயனும் எனின் அற்றன்றெனக் கூறுகின்ருர்.

பரோக்ஷ ஸ்தலத்திற்போன்று வெளியில் செல்லாத விருத்தியினுல் வளேபட்ட சாக்ஷியினுலேயே கடாதிக்கும் பிரகாசம் பொருந்துதலின்.

அவதாரிகை

அற்றேல் பிரத்தியக்ஷ பரோக்ஷ ஞானங்கட்கு விலக்ஷணத் தன்மை அனுபவசித்தமாம். அதுவும் பிரத்தியக்ஷ ஸ்தலத்தில் விருத்தி வெளிப்போதலே அங்கீகரிக்கின் பொருந்துகின்றது. வெளியிற்சென்ற விருத்தி அவச்சின்ன சைதன்னியம் அபரோக்ஷ ஞானமாம். வெளியிற் செல்லாத விருத்தி அவச் சின்ன சைதன்னியம் பரோக்ஷஞானமாம் எனின் அற்றன் றெனக் கூறுகின்ருர்.

விருத்தி வெளிப்போகாதாயின் பரோக்ஷ அபரோக்ஷங் களின் விலக்ஷணத்தன்மை பொருந்தாது என்னற்க. சாப்த

ஞானம் அனுமிதி ஞானங்கட்குப்போன்று கரண விசேஷத்தின் அதீனமான விருத்தியின் விஜாதீயத்தன்மையினுலேயே அஃது பொருந்துதலின். அதாவது இந்திரிய ஜன்னிய ஞானம் பிரத்தியக்ஷம் அதன் அஜன்ய ஞானம் பரோக்ஷமென விலக்ஷணத்தன்மை பொருந்துதலின் என்பது பொருள்.

### அவதாரிகை

விருத்தி வெளிப்போதலைச் சாதிக்கின்ருர்.

ஈண்டு சில ஆசிரியர் இங்ஙனங் கூறுகின்றனர் பிரத்தியக்ஷ ஸ்தலத்தில் விஷயத்தின் அதிஷ்டானத்தன்மையால் விஷய அவச்சின்ன சைதன்னியமே விஷயப் பிரகாசமாம். நேரே தாதாத்மிய சம்பந்தம் சம்பவிக்கும்போது சொரூப சம்பந்தத்தையாவது பரம்பரா சம்பந்தத்தையாவது கற்பித்தல் பொருந்தாமையின். ஆதலால் விஷய சைதன்னியத்தின் அபிவியக்தியின் பொருட்டு விருத்தியின் வெளிப்போதலை அங்கீகரித்தல் பொருத்தமாம்.

### அவதாரிகை

அற்றேல் கூறிய யுக்தியினுல் பரோக்ஷ ஸ்தலத்தின் கண்ணும் விஷயாவச்சின்ன பிரம சைதன்னியமே விஷயத்தை விளக்குவதாகும் அதனுல் ஆண்டும் அதன் வெளிப்போதல் பிராப்தமாமெனின் அற்றன்றெனக் கூறுகின்ருர்.

பரோக்ஷ ஸ்தலத்தின்கண் மறைக்கப்பட்டுள்ள நெருப்பு முதலியவற்றின்கண் விருத்தி சம்பந்தம் பொருந்தாமையாலும் இந்திரியத்திற்குப் போன்று அன்வய வியதிரேகம் உடையதாய் விருத்தியின் வெளிப்போதல் மார்க்கம் தோற்ருமையாலும் வெளியிற் செல்லாத விருத்தியவச்சின்ன சைதன்னியமே சொரூப சம்பந்தத்தால் விஷய கோசரமாமென்று வேறுவழியின்மையால் பொருளால் அங்கீகரிக்கப்படுகின்றது என்க.

### அவதாரிகை

விருத்தியின் வெளிப்போதலின்கண் வேறு யுக்தியைக் கூறுகின்ருர்.

வேறு சில ஆசிரியரோ சாக்ஷாத் சைதன்னிய சம்பந்தமுடைய அகங்காரம் சுகம் துக்கம் முதலியவைகளில் அபரோக்ஷத் தன்மை பிரசித்தமாமாதலின். கடாதியின்கண்ணும் விஷய சம்பந்தமுடைய சைதன்னியமே அபரோக்ஷ ஏதுவாம்

ஆதலின் அதன் அபிவியக்தியின் பொருட்டு விருத்தியின் வெளிப்போதலை சமர்த்தனம் செய்கின்றனர்.

### அவதாரிகை

பிரத்தியக்ஷ வஸ்துவின்கண் ஆவரணத்தின் அபிபவம் அவசியமாமெனப் பிரதிபாதித்தல் வாயிலாக அதன் அபிபவத்தின் பொருட்டு விருத்தியின் வெளிப்போதலாமென பிரதிபாதிக்கின்ருர்.

மற்றும் சிலரோ சத்தஅனுமானங்களால் அறியப்பட்ட வஸ்துவைப் பார்க்கினும் பிரத்தியக்ஷத்தால் அறியப்பட்ட வஸ்துவின்கண் பஷ்டத்தன்மை அனுபவிக்கப்படுகின்றது மாம்பழத்தின் சுகந்தம் முதலிய விசேஷம் நூறு தடவை ஆப்தனுல் உபதேசிக்கப்படினும் பிரத்தியக்ஷத்தால் அறியப்பட்ட கடாதி வஸ்துவிற்போன்று அதன்கண் பஷ்டத்தன்மையின்ரும். அதன் பிறகும் அஃது எத்தன்மையது எனஜிஞ்ஞாசை தொடர்ந்திருத்தலின்.

### சங்கை

சப்தத்தால் மதுரம் முதலியவை மாத்திரம் அறியப்படினும் மாம்பழத்தின் மதுரம் முதலியவற்றிலுள்ள அவாந்தர ஜாதி விசேஷ வாசக சப்தம் இன்மையால் அஃது இருப்பினும் சுரோத்திரேந்திரியத்தால் அந்த சப்தத்தின் சத்திஞானம் இன்மையினுல் சப்தத்தால் அசாதாரண ஜாதி விசேஷ அவச்சின்ன மதுரஞானம் இன்ரும் ஆதலின் ஜிஞ்ஞாசையின் தொடர்ச்சி பொருத்தமாம் எனின் அற்றன்று.

மாம்பழத்தின்கண் எல்லாவற்றினும் மேலான மதுர விசேஷம் உளது என்னும் இச்சப்தத்தால் அதன்கண்ணுள்ள அவாந்தர ஜாதி விசேஷமும் அறியப்படுகின்றமையின். இந்த விசேஷ சப்தமானது அதன்கண் உள்ள விசேஷத்தை விட்டு மற்ருென்றன்கண்ணுள்ள விசேஷத்தை ஆண்டு போதிப்பிக்கின்றதில்லை அப்பிராமாண்யத்தின் பிராப்தி வருதலின்.

### அவதாரிகை

மதுரத்தின்கண்ணுள்ள ஜாதி விசேஷத்தின் ஞானத்தை அங்கீகரித்து வினவுகின்ருன். அதன்கண்ணுள்ள விசேஷத்தையே விசேஷத்தன்மை வடிவ சாமான்னிய ரூபத்தால் போதிப்பிக்கின்றது விசேஷித்து அதாவது பிரித்துபோதிப்

பிக்கின்றதில்லை. ஆதலின் ஜிஞ்ஞாசை உண்டாகின்றது எனின்.

அற்றன்று பிரத்தியக்ஷத்தாலும் மதுர இரசத்தின் விசேஷணமாயுள்ள ஜாதி விசேஷத்தை சொரூபமாக விஷயஞ் செய்வதால் ஜாதி விசேஷத்தின்கண்ணுள்ள வேறு விசேஷத்தை விஷயஞ் செய்யாமையால் ஜிஞ்ஞாசையின் தொடர்ச்சி பிராப்தி ஆதலின், ஆதலால் பிரத்தியக்ஷத்தால் அறியப்பட்ட வஸ்துவின்கண் அபிவியக்த அபரோக்ஷ ஏகரஸ சைதன்னியத்தின் தாதான்மியம் இருத்தலால் ஸ்பஷ்டத் தன்மையாம் அஃது ஜிஞ்ஞாஸையை நிவர்த்தி செய்வதில் சாமர்த்தியம் உடையது. சப்தாதிகளால் அறியப்பட்ட வஸ்துவின்கண்ணே அச்சைதன்னியத்தின் தாதான்மியம் இன்மையால் ஸ்பஷ்டத்தன்மை இன்ரும் என வியவஸ்தை அங்கீகரிக்கத்தக்கது.

## அவதாரிகை

ஆவரண நிவர்த்தி ஸ்பஷ்டத்தன்மைக்குப் பிரயோஜகமா மென்பதில் அன்வய வியதிரேகங்களைத் தரிசிப்பிக்கின்ருர்.

அபிவியக்த சைதன்னியத்தின் சம்பந்தத்தாலேயே சாக்ஷி வேத்தியமான சுகாதிகட்கு ஸ்பஷ்டத் தன்மையாம் சப்தஞான வேத்தியமான பிரமத்திற்கும் மனனுதிகட்கு முன்பு அஞ்ஞான நிவர்த்தியாகாதபோது ஸ்பஷ்டத்தன்மை இன்ரும் அதன் பிறகு அதுநிவர்த்தியாகும்போது ஸ்பஷ்டத் தன்மையாம் என விருத்தியின் வெளிப்போதலை உபபாதனம் செய்கின்ருர்.

அற்றேல் ஈண்டு சிலர் கூறுகின்றனர் என்பதாதியால் மூன்று மதங்களைப் பிரதிபாதிக்கின்ற இத்துணைக் கிரந்தத் தாலும் விஷயத்தை மறைக்கின்ற அஞ்ஞானத்தை நிவர்த் திக்கும் பொருட்டு விருத்தி வெளிப்போதலாமென்று கூறப் பட்டது. அது பொருந்தாது விஷய அவச்சின்ன சைதன்னி யத்தின்கண்ணுள்ள அதனை மறைக்கும் அஞ்ஞானத்திற்கு வெளியிற் செல்லாத விருத்தியினுல் நிவர்த்தியை உடன் படினும் அதிப்பிரசங்கம் இன்மையின்.

## அவதாரிகை

அற்றேல் ஞான அஞ்ஞானங்கட்கு நிவர்த்திய நிவர்த்தக பாவ வடிவ விரோதத்தின்கண் சமான ஆசிரயத்தன்மை

யோடு கூடிய சமான விஷயகத்தன்மை நிமித்தமாம். சமான ஆசிரயத்தன்மையும் விருத்தி வெளியிற் செல்லும்போது சம்பவிக்கின்றது அஞ்ஞானத்தின் ஆசிரியமான விஷய சைதன்னியத்தின்கண் விருத்திரூப ஞானத்திற்கும் ஸ்திதி இருத்தலின் விருத்தி வெளியிற் செல்லாதாயின் அவைகட்கு சமான ஆசிரியத்தன்மை சம்பவியாமையால் சமான விஷய கத்தன்மை மாத்திரம் விரோதத்தின் காரணமாக முடி கின்றது இவ்வாறுகும்போது அதிப்பிரசங்கமாமெனவினவு கின்றுன்.

அவ்வாருயின் (விருத்தி வெளியிற் செல்லுதலை உடன் படாவிடின்.) தேவதத்தனது கடஞானத்தால் எக்ஞ தத்தனது கடத்தின் அஞ்ஞானம் நிவர்த்தியாதல் வேண்டும் சமான விஷயகத்தன்மை இருத்தலின் அகம்வஸ்துவின் கண்ணும் விஷய சைதன்னியத்தின்கண்ணும் உள்ளனவாகிய ஞான அஞ்ஞானங்கட்குப் பின்ஞசிரயத்தன்மை இருத்தலால் அவைகளின் விரோதத்தின்கண் சமான ஆசிரியத்தன்மை காரணம் ஆகாமையின் எனின்.

அற்றன்று சமான ஆசிரய விஷயகத்தன்மையை ஞான அஞ்ஞானங்களின் விரோதத்திற்குக் காரணமாமென அங்கீ கரித்து விருத்தி வெளியிற் செல்லுதலை யுடன்படினும் தேவதத் தனது கடஞானத்திற்கும் எக்ஞதத்தனது கடத்தின் அஞ்ஞானத்திற்கும் கடாவச்சின்ன ஓர் சைதன்னியத்தை ஆசிரயித்து இருக்கும் தன்மைப் பிராப்தியால் அதிப் பிரசங்கம் முன்போலவேயாம். ஆதலின் எவ்வஞ்ஞானம் எப்புருஷனைக்குறித்து எவ்விஷயத்தை மறைக்கின்றதோ அவ்வஞ்ஞானம் அப்புருஷனுடைய அவ்விஷயக ஞானத்தால் நிவர்த்தியாமென தனித்தனியே விரோத காரணத்தினைச் சொல்லவேண்டியதாய் இருத்தலால் சமான ஆசிரயத் தன்மையை அபேக்ஷியாமையின் எனின்.

### அவதாரிகை

விருத்தி வெளியிற் செல்லுதலை சாதிப்பதற்கு ஆரம்பிக் கின்றுர் ஈண்டு சிலர் கூறுகின்றனர் இச்சங்கைக்கு சிலர் உத்தரம் இங்ஙனங் கூறுகின்றனர்.

விருத்தி வெளியிற்செல்லுதலே யுடன்படாவிடின் ஞான அஞ்ஞானங்கட்கு விரோதத்தின் காரணமே நிரூபிக்க முடியாதாம் எவ்வஞ்ஞானம் எப்புருஷனைக்குறித்து என்ப தாஃதியால் கூறப்பட்டதெனின்.

அற்றன்று பரோக்ஷ ஞானத்தாலும் விஷயத்தின்கண்ணுள்ள அஞ்ஞானத்தின் நிவர்த்தி பிராப்தியாதலின் அபரோக்ஷத்தன்மையும் அஞ்ஞானத்தை நிவர்த்திக்கும் ஞானத்தின் விசேஷணமாமெனின் அவ்வபரோக்ஷத்தன்மை என்பது யாது ஜாதியா அல்லது உபாதியா என்று விகற்பித்து முதலாவதை தூஷிக்கின்றார்.

ஜாதி வடிவம் அன்றும் இவன் தண்டியாயிருந்தானென சமஸ்காரவடிவ சம்பந்தத்தோடு கூடிய தண்டவிசிஷ்ட புருஷ விஷயக நேத்திரஜன்னிய ஞானத்திற்கு தண்டாம்சத்தின்கண்ணும் பிரத்தியக்ஷத்தன்மை இருக்குமாயின் ஆண்டும் விஷயத்தின்கண்ணுள்ள அஞ்ஞான நிவர்த்தியின் பிராப்திவருதலினாலும் தண்டத்தைச் சாக்ஷாத்கரிக்கின்றேன் என தண்டாம்சத்தின்கண்ணும் அபரோக்ஷ அனுபவத்தின் பிராப்தி வருதலினாலும்.

அவதாரிகை

தண்டாம்சத்தின்கண் அஞ்ஞான நிவர்த்தியும் அனுபவமும் இன்றேனும் பிரத்தியக்ஷத்தன்மை கற்பிக்கப்படுகின்றது கற்பனையின் காரணமோ இந்திரிய ஸன்னிஹர்ஷஜன்னியத்துவமாம். சன்னிஹர்ஷமும் சவிவிஷயப் பிரத்தியாசத்தியாம் என்னும் மதத்தை அனுசரித்து சமஸ்காரம் கற்பிக்கப்படுகின்றது என்று ஆசங்கித்து அதிவியாப்தியைக் கூறுகின்றார்.

தண்டாம்சத்தின்கண் அனுபவமின்றேனும் சமஸ்கார வடிவ சன்னிஹர்ஷத்தைக் கற்பித்து இந்திரிய சன்னிஹர்ஷஜன்யத்தன்மையால் அதன்கண் கற்பித அபரோக்ஷத்தன்மையை அங்கீகரிக்கின் அநுமிதி முதலியவற்றின்கண்ணும் இலிங்கஞான முதலிய சன்னிஹர்ஷத்தைக் கற்பித்து அபரோக்ஷத்தன்மையின் அங்கீகாரம் பிராப்தியாம். தண்டாம்சத்தின்கண் அபரோக்ஷத்தன்மையின்றியின் அதற்கு (அபரோக்ஷத்தன்மைக்கு) ஜாதித்தன்மை பொருந்தாமையின். ஜாதிக்கு வியாப்பிய விருத்தித்தன்மை நியமமாதலின் வியாப்பிய விருத்தித்தன்மை நியமம் இன்றேனும் அவச்

சேதக உபாதிபேதத்தை நிருபணம் செய்ய முடியாமையால் அபரோக்ஷத்தன்மைக்கு அவ்வியாப்பியவிருத்தி ஜாதித் தன்மை பொருந்தாமையினுனும்.

### அவதாரிகை

அபரோக்ஷத்தன்மை உபாதியாம் என்னும் பக்ஷத்தைத் தூஷிக்கின்ருர்.

உபாதியுமன்ரும் அதனை நிருபணம் செய்ய முடியாமையின் இந்திரிய ஜன்னியத்வம் அபரோக்ஷத்துவமாமெனின். அற்றன்று சாக்ஷிப் பிரத்தியக்ஷத்தின்கண் அவ்வியாப்தி வருதலினுலும் அனுமிதிசாப்த ஞான வடிவ சன்னிஹர்ஷத்தோடு கூடிய குருத்துவ முதலியவற்ரேடு கூடிய கடப் பிரத்தியக்ஷத்தின்கண் விசேஷண அம்ஸத்தில் அதிவியாப்தி வருதலானும்.

### அவதாரிகை

அற்றேல் குருத்துவம் இந்திரியத்திற்கு அயோக்கியமாவதால் பரோக்ஷமாம் ஆதலின் பரோக்ஷவடிவ குருத்துவாம்ஸ ஞானத்தின்கண் இந்திரிய ஜன்னியத்தன்மை அசித்தமாமெனின் அதற்குக் கூறுகின்ருர்.

வேறுகரணம் இன்மையால் குருத்துவாம்ஸம் பரோக்ஷமாயினும் அதின் † உபநயசககாரி சாமர்த்தியத்தால் இந்திரியத்திற்கே கரணத்தன்மை உண்மையால்.

### அவதாரிகை

அளவின்றிய அநேக உருவாதி சாக்ஷாத்காரங்களில் இந்திரிய ஜன்னியத்தன்மை அறியமுடியாது அனுகதமாக ஜன்னியத்தன்மையின் அவச்சேதகம் இன்மையால் அவ்வவச் சேதக ஞானமின்றி ஜன்னியத்தன்மை ஞானம் சம்பவியாமையின் எனக் கூறுகின்ருர்.

அனுகதமான ஜன்னியத்தன்மையின் அவச்சேதகத்தின் ஞானமின்மையால் அநேகப் பிரத்தியக்ஷங்களில் இந்திரிய ஜன்னியத்தன்மையை அறியமுடியாமையின்.

### அவதாரிகை

அற்றேல் சாக்ஷாத்கரிக்கின்றேன் என்னும் அனுபவத்தால் சித்தித்த ஓர் அகண்ட உபாதியே ஜன்னியத்தன்மை

---

† உபநயம்குருத்துவத்தின் ஸ்மரணவடிவ ஞானலக்ஷன சம்பந்தம்

யின் அவச்சேதகம் ஆகுக. என்றுசங்கித்து. அப்படியானால் அதுவே அபரோக்ஷத்தன்மை ஆகுக. வேறு இன்றும் எனக் கூறுகின்றார்.

அவ்அவச்சேதகத்தைக்கிரகிக்கின் முதற் பிரதீதியான அதற்கே அபரோக்ஷ வடிவத்தன்மை பொருந்தும்போது பிரத்தியக்ஷ அனுபவத்திற்கு அயோக்கியமான இந்திரிய ஜன்னியத்தன்மைக்கு அவ்வனுபவயோக்கிய அபரோக்ஷ வடிவத்தன்மையைக் கற்பித்தல் பொருந்தாமையின்.

அவதாரிகை

இந்திரிய சன்னிஹர்ஷஜன்னியத்துவம் உபாதியாமென்னும் பக்ஷத்தை நிராகரிக்கின்றார்.

இந்திரிய சன்னிஹர்ஷஜன்னியத்துவம் அபரோக்ஷத்தன்மையாம் உபநயவடிவ சககாரியோடு கூடிய இந்திரிய ஜன்னிய பரோக்ஷ அம்சத்தின்கண் சன்னிஹர்ஷஜன்னியத்தன்மை இன்றும். அனுமிதியின்கண்ணும் உபநயத்தால் தோன்றிய பிரதீதி இருத்தலால் வேறு பிரமாணத்திற்கு பொதுவான உபநயத்திற்கு சன்னிஹர்ஷத்தன்மையின்மையின் என்னும் சங்கையும் அவ்வியாப்தி முதலிய தோஷம் வருதலால் நிராகரிக்கப்பட்டது.

அவதாரிகை

வேறு தூஷணத்தையும் கூறுகின்றார்.

சம்யோகம் முதலிய சம்பந்தங்கட்கு அனுகமம் இன்மையால் இந்திரிய சன்னிஹர்ஷஜன்னியத்தன்மைக்கு அனுகமம் இன்மையானும் அதாவது கடம் அதன் உருவம் உருவத்தன்மை சப்தம் சப்தத்தன்மை சுகம் முதலியவற்றை விஷயஞ் செய்யும் சாக்ஷாத்காரங்களில் நான் சாக்ஷாத்கரிக்கின்றேன் என அனுகதப் பிரத்தியக்ஷமுண்டாகாது என்பது கருத்து.

சங்கை

சித்தாந்தியாகிய உனக்கு சம்மதமான ஞானத்தின்கண்ணுள்ள அபரோக்ஷத்தன்மை எதுவோ அதுவே எனக்கும் இருக்குக எனின் அதாவது அபரோக்ஷத்தன்மைக்கு அஞ்ஞானத்தை நிவர்த்திக்கும் ஞானத்தின் விசேஷணத்தன்மை சம்பவித்தலால் பரோக்ஷஞானத்தால் அஞ்ஞான நிவர்த்தியின் பிராப்தி இன்றும் என்பது கருத்து.

அவதாரிகை

எனது சம்மதமான அபரோக்ஷத்தன்மைக்கு ஞானத்தின்கண் அஞ்ஞான நிவர்த்தியின் காரணத்தன்மை சம்பவிக்கின்றதில்லை என சித்தாந்தி தூஷிக்கின்றார்.

அற்றன்று எனது சம்மதமான அபரோக்ஷத்தன்மை சாப்த அபரோக்ஷத்தை நிரூபிக்கும் பிரகரணத்தில் பிரதிபாதிக்கத்தக்கதாய் இருத்தலின் அதற்கு அவ்விடத்திலேயே காணத்தகுந்த முறையினால் அஞ்ஞானநிவர்த்தியின் அதீனத்தன்மை இருத்தலால் அதன் நிவர்த்தியின் பிரயோஜக ஞானத்தின்கண் விசேஷணத்தன்மை பொருந்தாமையின் அதனால் (எவ்அஞ்ஞானம் எப்புருஷனைக் குறித்து எவ்விஷயத்தை மறைக்கின்றதோ என்பதாதியால் கூறப்பட்ட விரோத ஏதுவான ஞானத்தின்கண் அபரோக்ஷத்தன்மைக்கு நிவர்த்தக ஞானத்தின் விசேஷணத்தன்மை சம்பவியாமையால்) ஆன்மாவை அறிந்தவன் சோகத்தைக் கடக்கின்றான் என்று கேட்கப்பட்டதும் மூலாஞ்ஞானத்தின் ஆசிரயமாய் சர்வத்திற்கும் உபாதானமாயுள்ள பிரஹ்மத்தின் சம்பந்தத்தை நியதமாகவுடையதும் ஆகிய பிரஹ்ம ஞானத்திற்கு மூலாஞ்ஞானத்தை நிவர்த்திக்குந்தன்மை உண்மையால். இந்திரிய ஜன்னிய விருத்திகள் அவ்வவ்விந்திரிய சம்பந்தத்தின் சாமர்த்தியத்தால் அவ்வவ்விஷயாவச்சின்ன சைதன்னியத்தோடு சம்பந்தம் உடையனவாகியே உற்பத்தியாகின்றன என்னும் நியமத்தை அங்கீகரித்து அஞ்ஞானத்தின் ஆசிரய சைதன்னியத்தோடு சம்பந்த நியமத்தை நிவர்த்தக ஞானத்தின் விசேஷணமாகக் கூறவேண்டும் இவ்வாறாகவே எவ்வஞ்ஞானம் எப்புருஷனைக் குறித்து எவ்விஷயத்தை மறைக்கின்றதோ அவ்வஞ்ஞானம் அப்புருஷனிடத்திலுள்ளதும் அவ்விஷயத்தை விஷயமாக உடையதும் அவ்வஞ்ஞானத்தின் ஆசிரயமான சைதன்னியசம்பந்த நியமத்தால் உற்பத்தி உடையதுமான ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்கதாம் என. ஞான அஞ்ஞானங்கட்கு விரோதகாரணம் நிரூபிக்கப்பட்டதாக ஆகின்றது. இவ்வாறாகும்போது அதாவது விரோத லக்ஷணத்தின்கண் நியமபதத்தை புகுத்தி இருத்தலால் நாடி இருதயங்களின் சொரூபத்தை விஷயஞ்செய்யும் சாப்தஞானத்திற்கும் அஞ்ஞானத்தின் நிவர்த்தகத்தன்மை பிராப்தி இன்றாம். அதற்கு ஓர்போது அர்த்தவசத்தால் பிராப்தமான நாடி இருதயங்க

ளுள் ஒரு வஸ்துவின் சம்பந்தம் சம்பவிக்கினும் விஷய சம்பந்தம் இன்றியும் சாப்தஞானம் சம்பவித்தலால் அதன் சம்பந்தத்தை நியமமாகக் கொண்டு உற்பத்தி இன்மையின் ஆதலால் அதாவது (விருத்தி ஞானத்திற்கு அஞ்ஞானத்தின் ஆசிரயமான விஷய சைதன்னியத்தின் சம்பந்தம் இன்றி அதனை நிவர்த்திக்கும் தன்மை சம்பவியாமையால்) ஞான அஞ்ஞானங்களின் விரோதம் சித்திக்கும் பொருட்டு விருத்திவெளிப் போதல் சொல்லத்தக்கதாம் என்க.

## அவதாரிகை

இவ்வாறு ஞான அஞ்ஞானங்கட்கு விரோத காரணம் நிர்வாகம் ஆகும் பொருட்டு விருத்தி வெளியிற் செல்லுதலை சாதித்து அதன்கண்ணேயே வேறு காரணங்களை மத பேதத்தால் கூறுகின்றார்.

சில ஆசிரியரோ விஷயத்தின்கண்ணுள்ள அஞ்ஞானத்திற்கு இலாகவத்தால் சமானாதிகரண ஞான நிவர்த்தியத் தன்மை சித்திக்கும்போது விருத்தி வெளியிற் செல்லுதல் தானே சித்திக்கின்றது எனக் கூறுகின்றனர்.

வேறு சில நூலாசிரியரோ வெளியிலுள்ள பிரகாசத்திற்கு வெளியிலுள்ள இருளை நிவர்த்திக்குந்தன்மை சாமானாதிகரணியம் இருக்கும்போதுதான் காணப்பட்டுளது. ஆதலின் திருஷ்டாந்தத்தின் அனுசாரமாக விருத்தி வெளியிற் செல்லுதல் சித்திக்கின்றது. எனக் கூறுகின்றனர்.

## அவதாரிகை

இவ்வாறு விஷய சைதன்னியத்தின்கண்ணுள்ள அஞ்ஞான நிவர்த்தி வெளியிற் செல்லாத விருத்தியாலும் சம்பவிக்கின்றது ஆதலால் விருத்தி வெளியிற் செல்லுதலை அங்கீகரித்தல் வீணும் என ஆக்ஷேபம் உண்டாகும்போது அது வெளியிற் செல்லுதல் இன்றி அதன் நிவர்த்தி சம்பவிக்கின்றதில்லை ஆதலின் அதனை அங்கீகரித்தல் பயனுடையதாம் என சமாதானம் தரிசிப்பிக்கப்பட்டது. இப்போது விஷய சைதன்னியத்தின்கண்ணுள்ள அஞ்ஞான நிவர்த்தியின் பொருட்டு விருத்தி வெளியிற் செல்லுதல் அபேக்ஷிக்கப்படுவதின்றும் என பூர்வபக்ஷி கூறியதை அங்கிகரித்தும் விருத்தி வெளியிற் செல்லுதலைச் சாதிக்கின்றார்.

வேறு சில நூலாசிரியரோ ஆவரண நிவர்த்தியின் பொருட்டு விருத்தி வெளியிற்செல்லுதலை அபேக்ஷியாவிடினும் சித்தின் உபராகத்தின் பொருட்டு அதாவது ஜீவ சைதன்னியத்திற்கு விஷயத்தோடு சம்பந்தம் சித்திக்கும் பொருட்டு. அல்லது பிரமாத்துரு சைதன்னியத்திற்கு விஷயத்தை விளக்குகின்ற பிரஹ்ம சைதன்னியத்தோடு அபேத அபிவியக்தியின் பொருட்டு அதன் அபேக்ஷையாமெனக் கூறுகின்றனர்.

## அவதாரிகை

பிரமாத்துரு சைதன்னிய சப்தத்தால் சொல்லப்பட்ட ஜீவனுக்கு பிரஹ்மா பேதத்தின்கண் பிரமாணம் இன்ரும் என வினவுகின்ருன்.

அற்றேல் விருத்தியினுல் அபிவியக்தமாகின்ற ஜீவப் பிரமங்களின் யாதொரு அபேதமுண்டோ அவ்வபேதத்தின் கண் பிரமாணம் யாது எனின்.

சமாதானம் வேதாந்தம் பிரமாணமாமென்பது பிரசித்தமாம். எல்லா வேதாந்தங்களும் உபக்கிரம உபசம்மாரங்களின் ஏகவடிவத் தன்மை முதலிய தாத்பரிய போதகலிங்கங்களால் விசாரிக்கப்படுகின்றனவாய் பிரத்தியக பின்ன அத்விதீயப் பிரஹ்மத்தின்கண் சமன்வயம் ஆகின்றன. இப்பொருள் எவ்வாறு பொருந்துமோ அவ்வாறு பிரஹ்ம சூத்திரத்தின்கண்ணேயே சமன்வய அத்தியாயத்தில் விஸ்தரிக்கப்பட்டுள்ளது. கிரந்தம் விரியுமென்னும் பயத்தால் ஈண்டு விஸ்தரிக்கப்படவில்லை என்க.

**வேதாந்த சித்தாந்த லேச சார சங்கிரகத்தின்கண்**
**முதலாவது பரிச்சேதம் முற்றிற்று**

# வேதாந்த சித்தாந்த லேச சங்கிரகம்
# இரண்டாவது பரிச்சேதம்

## 37. பிரத்தியக்ஷத்தால் அத்வைத சுருதிக்கு பாதமின்மையின் விசாரம்

அவதாரிகை

இப்போது வேதாந்த சமன்வயத்திற்கு வேறு பிரமாணத்தோடு விரோதம் இன்மையை நிரூபணம் செய்தற் பொருட்டு பிரம்ம சூத்திரத்தின் இரண்டாவது அத்தியாயத்தின் பொருள் வடிவ வேறு பரிச்சேதத்தை ஆரம்பிக்கின்றார்.

அற்றேல் அத்விதீயப் பிரஹ்மத்தின்கண் வேதாந்தங்கட்கு தாத்பரியம் எப்படிப் பொருந்தும். பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களோடு விரோதம் இருத்தலின் எனின்.

அவதாரிகை

பிரபஞ்சம் இரஜ்ஜுசர்ப்பாதி போன்று பிரஹ்மத்தின்கண் கற்பிதமாதலால் வாஸ்தவ அத்விதீயத் தன்மைக்கு பாதம் இன்றாம் என்று சமாதானம் கூறுகின்றார்.

அற்றன்று ஆரம்பண அதிகரணத்தில் கூறப்பட்ட சுருதி யுத்திகளால் பிரத்தியக்ஷாதிகளால் அறியப்பட்ட பிரபஞ்சத்திற்குப் பிரஹ்மத்தின் விவர்த்தத் தன்மையால் மித்தியாத் தன்மை அறியப்படுதலின்.

அவதாரிகை

பிரத்தியக்ஷ விரோதமாகும்போது சுருதியுத்திகட்கே பாதம் உசிதமாம் எனக் கருதுகின்றவனை ஆக்ஷேபிக்கின்றான்.

அற்றேல் சுருதி யுக்திகளால் பிரபஞ்சத்திற்கு மித்தியாத் தன்மையைப் போதிப்பதற்கு ஆற்றல் இன்றாம் கடம் இருக்கின்றது என்பது முதலான கடாதிகளின் சத்தியத் தன்மையை கிரகிக்கின்ற பிரத்தியக்ஷாதிகளோடு விரோதம் இருத்தலின்.

## பிரத்தியக்ஷத்தால் அத்வைத சுருதிக்கு பாதமின்மையின் விசாரம்

### அவதாரிகை

சுருதியாதிகளால் அறியப்படுகின்ற மித்தியாத்தன்மையின் விரோதமான சத்தியத்தன்மை பிரத்தியக்ஷத்தால் கிரகிக்கப்படுவதே இன்ரும் ஆதலால் அதன் விரோதசங்கை நிருவிஷயமேயாம் என ஐந்து மதங்களால் பிரதிபாதிக்கின்ருர்.

ஈண்டு தத்துவ சுத்திக்காரர் சமாதானம் கூறுகின்றனர். பிரத்தியக்ஷம் கடபடாதியையாவது அதன் சத்தியத்தன்மையையாவது கிரகிக்கின்றதில்லை. மற்ருே அதிஷ்டானத் தன்மையால் கடாதியின்கண் அனுகதமான சன்மாத்திர வஸ்துவை கிரகிக்கின்றது இவ்வாருகவே பிரத்தியக்ஷமும் சத்துருபப் பிரஹ்மத்தின் அத்துவைத சித்திக்கு அனுகூலமேயாம்.

### அவதாரிகை

கடாதிகள் இந்திரிய விஷயமாமென்னும் வாதி வினவுகின்ருன்.

பிரத்தியக்ஷம் சன்மாத்திரவஸ்துவை விஷயஞ் செய்யுமாயின் இருக்கின்றது இருக்கின்றது எனவே பிரத்தியக்ஷம் உண்டாதல் வேண்டும் இந்திரியங்களின் அன்வய வியதிரேகங்களை அனுசரித்ததாய் கடம் இருக்கின்றது என்பதாதி பிரத்தியக்ஷம் உண்டாகலாகாது எனின்.

அற்றன்று எப்படி பிராந்தி ஸ்தலங்களில் அதிஷ்டானமான இதம் அம்சத்திற்கு பிரத்தியக்ஷத்தால் கிரகணமாம் இந்திரியத்தின் அன்வய வியதிரேகங்களுக்கு அவ்வதிஷ்டானக் கிரகணத்தின்கண்ணேயே முடிவாம். ஆரோபிக்கப்பட்ட இரஜதாம்ஸத்திற்குப் பிராந்தியால் பிரதீதியோ அப்படி யாண்டும் பிரத்தியக்ஷத்தால் சன்மாத்திரவஸ்துவின் கிரகணமாம். அதன்கண்ணேயே இந்திரிய வியாபாரமாம். கடாதி பேதவஸ்துவின் தோற்றம் பிராந்தியினுல் ஆம் என அங்கீகரிக்கப்படுதலின்.

### அவதாரிகை

பேதவாதி வினவுகின்ருன்.

அற்றேல் சுத்திரஜதம்போன்று ஈண்டு பாதம் காணப்படாமையின் அவ்வாறு அங்கீகரித்தலே காரணமற்றது எனின்.

அற்றன்று பாதம் காணப்படாவிடினும் தேச காலங்களால் மறைபட்ட வஸ்துவிற்போன்று கடாதி பேதவஸ்துவின்கண் பிரத்தியக்ஷத்தின் அயோக்கியத்தன்மையே ஆண்டு காரணமாதலின்.

அவதாரிகை

பிரத்தியக்ஷத்தின் அயோக்கியத்தன்மையைத் தரிசிப்பித்தற்கு முதலில் சம்மதமான பொருளைத் தரிசிப்பிக்கின்றார்.

அஃது எங்ஙனமெனின் இந்திரிய வியாபாரத்தின் பிறகு பிரதீதியாகின்ற கடாதி யாண்டும் பின்னமாகவே பிரதீதியாகின்றது. அப்போது அக்கடாதியின் பேதத்தின்கண் சந்தேக விபரீதங்கள் காணப்படாமையின்.

அவதாரிகை

யாண்டும் பின்னமாகவே பிரதீதியாகின்றது என்பது பொருந்தாது சிலவிடத்து இந்திரிய சம்பந்தமுள்ளதாணு முதலியவற்றின்கண் புருஷாதிகளைப் பிரதியோகியாக உடையபேதம் பிரதீதியாகாமையின் பேதம் பிரதீதியாயினே சம்சயாபாவம் நேருமாதலின் எனின் அதற்குக் கூறுகின்றார்.

எந்த ஸ்தாணுமுதலிய வற்றின்கண் புருஷத்வாதி சமுசயமோ ஆண்டும் அப்புருஷனினும் வேறான கடாதிகளில் நின்றும் பேதம்விளங்குகின்றதேயாம் சந்தேக விபரீதங்கள் இன்மையின்.

அவதாரிகை

அதனால் சித்தித்தது என்னை எனில் கூறுகின்றார்.

நியமமாக பிரதியோகியின் ஞானத்தோடுகூடிய பேதத்தின் ஞானம் பிரத்தியக்ஷத்தால் சம்பவிக்கின்றதில்லை தேச காலங்களின் மறைப்பால் இந்திரிய சம்பந்தம் இன்றிய பிரதியோகிகளும் சம்பவித்தலால்.

அவதாரிகை

பிரதியோகியின் ஞான நியமத்தினைப் பேதம் சத்தியம் என்னும் மதத்தின்கண் ஒருவாறு நிவர்த்தியை வினவுகின்றான்.

பேதஞானம் பிரதியோகியின் அம்சத்தில் சமஸ்காரத்தை அபேக்ஷித்தலால் ஸ்மிருதி வடிவம் ஆகுக. பிரத்தியபிஞ்ஞா ஞானம் அது வென்னும் அம்சத்தில் போன்று எனின்.

அவதாரிகை

அதனை அங்கீகரித்தும் சித்தாந்தி கூறுகின்றார்.

அவ்வாறாயினும் பேதத்தின்கண்ணுள்ள பிரதியோகித் தன்மையின் விசிஷ்ட அம்சத்தில் சமஸ்காரம் இன்மையின் விசேஷஉரை : மகாமேரு முதலிய பதார்த்தங்கட்குச் சமீபத்தில் கடத்திலுள்ள பேதப் பிரதியோகித் தன்மையால் முன்பு அனுபவிக்கப்படாமையின் என்பதுகருத்து.

அவதாரிகை

விசிஷ்ட அம்சத்தில் பூர்வ அனுபவத்தை வினவுகின்றான்.

மகாமேருகிரிபேதத்தின்பிரதியோகியாம் வஸ்துவாதலால் கடம்போன்று என பேதத்தின்கண் பிரதியோகியின் சம்பந்தத்தை விஷயஞ் செய்கின்ற அனுமிதி ஞானத்தால் அதன் சமஸ்காரம் சம்பவிக்கின்றது எனின்.

அற்றன்று பேத ஞானமின்றி அனுமிதி பொருந்தாமையால் ஆன்மாசிரய தோஷம் வருதலின் பக்ஷம் சாத்தியம் ஏது சபக்ஷம் முதலியவற்றின் அபேதப்பிராந்தி இருக்கும் போது சித்தசாதனம் முதலிய தோஷத்தால் அனுமானப் பிரவிர்த்தியின்மையால் அதன் அபேதஞானத்தைக் கெடுக்கும் பொருட்டு அதன் பேத ஞானம் அபேக்ஷிக்கப்படுதலின்.

சங்கை பிரதியோகியின் சம்பந்த விஷயக ஞானத்திற்கு ஸ்மிருதிவடிவத்தன்மை சம்பவியாமையின் பேத அம்சத்திற் போன்று பிரதியோகியின் சம்பந்த அம்சத்திலும் பிரத்தியக்ஷம் ஆகுக எனின் அற்றன்று.

பிரதியோகி பிரத்தியக்ஷம் ஆகாதபோது அதன் சம்பந்தத்தின் பிரத்தியக்ஷம் பொருந்தாமையின் இருசம்பந்திகளின் பிரத்தியக்ஷமின்றி சம்பந்தத்தின் பிரத்தியக்ஷம் சம்பவியாமையின் ஆதலால் பிரத்தியக்ஷ அயோக்கிய பிரதியோகியின் ஞானம் பிராந்திவடிவமே யாதலின், அந்தப்

பிரதியோகியின் ஞானத்திற்கு நியமமாக விஷயமாயுள்ள பேதத்திற்கும் பேதத்தின் ஞானத்திற்கு நியமமாக விஷயமாயுள்ள கடாதிகட்கும் பிராந்திஞான மாத்திரத்தின் விஷயத் தன்மை உண்மையால் பிரத்தியக்ஷம் நிருவிசேஷ சன்மாத்திரத்தை விஷயஞ் செய்வதாய் அத்வைத சித்திக்கு அனுகூலமேயாம்.

அவதாரிகை

கடாதிக்கு நேத்திராதி விஷயத்தன்மையின் அனுபவத்தை அனுசரித்து நேத்திராதி விஷயத்தன்மை இருக்குக அங்ஙன மாயினும், பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மையை சாதிக்கின்ற சுருதி யுத்திகட்குப் பிரத்தியக்ஷத்தோடு விரோதம் இன்றும் பிரத்தியக்ஷத்திற்கும் கடாதியின்கண் பிரஹ்மத்தின் வேறான சத்துவத்தைக் கிரகிக்குந்தன்மை இன்மையின் எனக் கூறுகின்றார்.

நியாய சுதாகாரரோ இங்ஙனம் கூறுகின்றனர். கடாதிகள் இந்திரியத்திற்கு விஷயமாயினும் கடம் இருக்கின்றது என்பது முதலிய கடாதியின்கண் சத்துவப் பிரதீதி அதிஷ்டான சத்தையின் சம்பந்தத்தை விஷயஞ் செய்வதாம் ஆதலின் விரோதமின்றாம்.

அவதாரிகை

கடாதியின்கண் தோற்றுகின்ற சத்துவத்தை அதிஷ்டானத்தின் சத்துவமாம் என அங்கீகரிக்கின் அதிவியாப்தியாம் என வினவுகின்றான்.

இவ்வாறு நீலக்கடம் என்பது முதலிய கடாதியின்கண் நீலத்தை விஷயம் செய்யும் பிரதீதியும் அதிஷ்டானத்தின் நீல சம்பந்தத்தை விஷயஞ் செய்வதாக ஏன் ஆகாது எனின்.

அவதாரிகை

நீலாதிகட்கு சத்தையின் விஷம த்தன்மை உண்மையால் அங்ஙனம் அன்றெனப் பரிகரிக்கின்றார்.

சுருதியால் சத்துரூப வஸ்துவிற்கு ஜகத்தின் உபாதானத் தன்மை கூறப்பட்டுளது. அஃது விரோத இன்மையால் எல்லோராலும் அங்கீகரிக்கத்தக்கதேயாம். ஆதலின் அதிஷ்டானப் பிரஹ்மத்தின் சம்பந்தத்தாலேயே கடம் இருக்கின்

றது என்பது முதலிய பிரதீதி பொருந்தும்போது கடாதியின் கண்ணும் சத்தையைக் கற்பித்தல் கௌரவமாம். அவ்வஸ்துவிற்கு உருவாதி இன்மையின் நீலம் முதலியவை கடாதியின் கண்ணேயே கற்பிக்கத்தக்கனவாம். இவ்வாறு விஷமத் தன்மை உண்மையின் என்க.

அவதாரிகை

பிரத்தியக்ஷத்திற்கு கடாதியின்கண் தனி சத்துவத்தைக் கிரகிக்குந்தன்மை இருப்பினும் அது பிரமாணத்தின் ஆபாசமாவதால் அதனல் சுருதியின் பாத சங்கைக்கு அவகாசம் இன்ரும் எனக் கூறுகின்ருர்.

சங்க்ஷேபசாரீரக ஆச்சாரியரோ இங்ஙனம் கூறுகின்றனர். பிரத்தியக்ஷத்திற்கு கடாதியின் சத்துவத்தை கிரகிக்கும் தன்மையிருப்பினும் வெளிப் பொருளை விஷயஞ் செய்கின்ற பிரத்தியக்ஷாதிகட்குத் தத்துவத்தைப் போதிக்கும் தன்மை வடிவ பிராமாணியம் இன்மையால் அதன் விரோதத்தால் அத்வைத சுருதியாதிகட்குப் பாத சங்கையின்ரும். அறியப் படாததை அறிவிப்பதன்ரே பிரமாணம். பிரத்தியக்ஷாதிகளின் விஷயமான கடாதிகட்கு அறியப்படாத் தன்மை இன்ரும். ஜட வஸ்துவின்கண் ஆவரணத்தின் காரியம் இன்மையால் அஞ்ஞான விஷயத்தன்மையை அங்கீகரியாமையின் சொப்ரகாசத் தன்மையால் பிரகாசமாயுள்ள பிரஹ்மமே அஞ்ஞானத்தின் விஷயமாமாதலின் அதனைப் போதிக்கும் பிரமாணமே தத்துவத்தைப் போதிக்கும் பிரமாணமாம். அதுவே பிரமை ஞானத்திற்கு விஷயமாம்.

அவதாரிகை

சொப்ரகாச ஆன்மாவிற்கே பிரமேயத் தன்மை உளது என்பதில் சுருதியையும் பிரமாணமாக்குகின்ருர்.

அறியப்படாத் தன்மையாலே சுருதியும் "ஏ மைத்திரேயி இவ்வான்மா தரிசிக்கத்தக்கதாம்" என ஆன்மாவிற்கே பிரமேயத்தன்மை என நியமனம் செய்கின்றது.

அவதாரிகை

அற்றேல் தரிசிக்கத்தக்கது என்னும் சுருதி ஆன்மாவின் தரிசனத்தை விதிக்கின்றது எனின் அற்றன்றெனக் கூறுகின்ருர்.

தரிசிக்கத்தக்கது என்பதனுல் தரிசனம் விதிக்கப்படுகின்றதில்லை பிரமாணத்தின் அதீனமாயுள்ள தரிசனத்திற்கு விதி விஷயத்தன்மை இன்மையின். ஆனுல் ஆன்மா தரிசனத்திற்கு யோக்கியமாம் என்பது விகுதியின் பொருளாம். அறியப்படாத்தன்மையால் ஆன்மாவிற்கே பிரமேயத்தன்மை உசிதமாம். அன்னியத்திற்கு இன்ரும் என நியமனம் செய்யப்படுகின்றது.

அவதாரிகை

பிரத்தியக்ஷ விஷயமான ஜட வஸ்துவிற்கு அறியப்படாத் தன்மையை அங்கீகரித்து ஜட வஸ்துவைப் போதிக்கும் பிரத்தியக்ஷத்திற்குச் சுருதியோடு சமமாக பிரமாணத் தன்மையை அங்கீகரிக்கினும் பிரத்தியக்ஷத்தால் கிரகிக்கப்படுகின்ற கடாதி சத்துவத்திற்கு மித்தியாத் தன்மையோடு விரோதம் இன்மையின். மித்தியாத்தன்மையைப் போதிக்கின்ற சுருதியாதிகட்குப் பிரத்தியக்ஷ விரோத சங்கை இன்ரும் எனக் கூறுகின்ருர்.

சில நூலாசிரியரோ கடாதி சத்துவத்தைக் கிரகிக்கும் பிரத்தியக்ஷத்தின் பிராமாண்ணியத்தில் பிரஹ்மத்தின் பிரமையினும் குறைவுத் தன்மை அறியப்படாவிடினும் அதனுல் கிரகிக்கப்படுகின்ற சத்துவம் அனுகத ஞானத்திற்கு விஷயமாவதால் சத்தாஜாதி வடிவமாகவாவது ஈண்டு இப்போது கடம் உளது என தேசகால சம்பந்தப் பிரதீதியால் அவ்வத் தேசகால சம்பந்த வடிவமாகவாவது கடம் இல்லை என சொருப நிஷேதத்தின் பிரதீதியால் கடாதிகளின் சொருபமாகவாவது முடிவடைகின்றது. அதுவும் தனது மித்தியாத் தன்மையோடு விரோதம் இன்ரும். மித்தியாத் தன்மையைக் கூறும் வாதியாலும் கடாதியின் சொருபமாவது அதற்குத் தேசகால சம்பந்தமாவது அதன்கண் ஜாதி முதலியதாவது அங்கீகரிக்கப்படுகின்றது இல்லை என்பது இல்லை. மற்ருே அங்கீகரிக்கப்படுகின்றதேயாம். ஆனுல் அவைகளின் அபாத்தியத்தன்மை அங்கீகரிக்கப்படுகின்றதில்லை.

அவதாரிகை

மித்தியாத்தன்மை பாத்தியத்தன்மை வடிவமாதலால் அதன் விரோதமான சத்துவம் அபாத்தியத் தன்மை வடிவமே

யாம் எனின். அப்படியானல் இந்தச் சத்துவமே பிரத்தியக்ஷ விஷயம் ஆகுக. இவ்வாருகவே பிரத்தியக்ஷ விரோத சங்கை உளதேயாம் என்னும் அபிப்பிராயமுடைய வினவை எழுப்பிப் பரிகரிக்கின்ருர்.

அபாத்தியத் தன்மை வடிவ சத்துவமே பிரத்தியக்ஷ விஷயம் ஆகுக என்னற்க. மூன்று காலத்திலும் ஜகத்திற்குப் பாதம் இன்ரும் என வர்த்தமான மாத்திரத்தைக் கிரகிக்கும் பிரத்தியக்ஷத்தால் கிரகிக்கக் கூடாமையின் எனக் கூறு கின்றனர்.

அவதாரிகை

அபாத்தியத்தன்மை வடிவசத்துவமே பிரத்தியக்ஷ விஷய மாம் என அங்கீகரித்தும் பிரத்தியக்ஷ விரோதம் இன்மை யைக் கூறுகின்ருர்.

சில நூலாசிரியரோ அபாத்தியத் தன்மை வடிவ சத்தியத் தன்மை பிரத்தியக்ஷத்தால் கிரகிக்கப்படினும் “பிராணன்கள் சத்தியமாம் அவைகளுக்குள் இப்பரமான்மா சத்தியமாம்” என்னும் சுருதியால் பிரதானமாயுள்ள பிராண சப்தத்தால் உபலக்ஷிக்கப்பட்ட சம்பூர்ண பிரபஞ்சத்திற்கும் பிரஹ்மத் திற்கும் சத்தியத்தன்மையின் குறைவு மிகுதிகள் தோற்று தலால் அபாத்தியத்தன்மை வடிவ சத்தியத்தன்மையின் கண்ணும் எப்போதும் அபாத்தியத்தன்மை சொற்பகால அபாத்தியத்தன்மை என்னும் இத்தகைய மிகுதிக் குறைவு களின்றி ‘இராஜ ராஜன் மன்மத மன்மதன்’ என்பது முதலிய சப்தத்தின் தாத்பரிய விஷய நியாமகத்தன்மை சுந்தரத் தன்மை முதலியவைகட்குப் போன்று அதிக விஷயத்தன்மை அற்ப விஷயத்தன்மை முதலிய வடிவ உயர்வு தாழ்வுகள் சம்பவியாமையின்.

அவதாரிகை

அற்றேல் அபாதிதத்தன்மை வடிவ சத்துவத்தில் வேறு பிரகாரத்தால் உயர்வு தாழ்வுகள் சம்பவிக்கின்றனவேயாம். அஃதெங்ஙனமெனின் பிரபஞ்சத்திற்கும் பிரஹ்மத்திற்கும் மூன்று காலத்தினும் அபாத்தியத்தன்மை வடிவ சத்துவம் சமானமாயினும் பிரஹ்மத்திலுள்ள சத்துவம் சுருதியால் போதிக்கப்பட்டமையின் உயர்வாம். பிரபஞ்சத்திலுள்ள

சத்துவம் இலௌகிகப் பிரமாணத்திற்கு விஷயமாவதால் தாழ்வாம் என சுருதியின் பொருளை உபபாதனம் செய்தல் சம்பவித்தலின். இவ்வாருகவே மித்தியாத் தன்மையின் விருத்தமான சத்துவத்தைப் போதிக்கின்ற பிரத்தியக்ஷப் பிரமாணத்தோடு விரோத சங்கையுண்டாகவே செய்யு மெனின் அற்றன்றெனக் கூறுகின்ருர்.

வேறு பிரகாரத்தால் உயர்வு தாழ்வு சம்பவிக்கினும் பிர பஞ்சத்திற்கு பிரஹ்மஞான பாத்தியத் தன்மையைக் கூறும் வேறு சுருதியோடு ஓர் பொருளையுடைத்தாந்தன்மையால் மேற்கூறிய உயர்வு தாழ்வுகளே முடிவுறுதலினுலும், பிரத்தி யக்ஷத்தால் கிரகிக்கப்படுகின்ற கடாதிகளின் சத்தியத் தன்மை பிரஹ்மஞானம் உண்டாகும் வரை அபாத்தியத் தன்மை வடிவம் ஆதலின் மித்தியாத்தன்மையைக் கூறும் சுருதியோடு விரோதம் இன்ரும் எனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

இவ்வாறு ஈண்டு கூறுகின்றனர் என்பதாதியால் பிரபஞ் சத்தின் மித்தியாத்தன்மையைச் சாதிக்கின்ற சுருதியுத்தி கட்கு பிரத்தியக்ஷம் விரோதம் ஆகின்றதில்லை என்று பிரதி பாதிக்கப்பட்டது. இப்போது பிரத்தியக்ஷத்திற்கு மூன்று காலத்திலும் அபாத்தியத்தன்மை வடிவ சத்தியத்தன்மையை கிரகிக்குந்தன்மையால் சுருதி விரோதம் உளதாயினும் மித்தி யாத்தன்மை சித்தியின் அனுபபத்தி இன்ரும் சுருதியால் பிரத்தியக்ஷத்திற்கு பாதம் பொருந்துதலின் எனக் கூறுகின்ருர்.

வேறுசில ஆசிரியரோ பிரபஞ்சத்தின்கண் மித்தியாத் தன்மையினையும் சத்தியத்தன்மையினையும் கிரகிக்கின்ற சுருதிக்கும் பிரத்தியக்ஷத்திற்கும் விரோதம் உளதாயினும் தோஷ சங்கையால் கலக்க முற்றதும் முதலில் பிரவிர்த்தித்த தும் ஆனபிரத்தியக்ஷத்தைப் பார்க்கிலும் நிர்த்தோஷத் தன்மையானும் அபச்சேத நியாயத்தால் பரத்தன்மையானும் சுருதியே வலுவுடையதாம்.

அவதாரிகை

சுருதியின் பிரபலத் தன்மையில் மனுபகவானது வசன மும் பிரமாணமாமெனக் கூறுகின்ருர்.

"ஆகமத்திற்கே ஆகமத்தன்மை ஜாதியினுல் பிரத்தியக்ஷம் அனுமானம் ஆகமம் என்னும் மூன்றினுள் பிரபலத்தன்மை கருதப்பட்டுளது" என்னும் ஸ்மிருதியினுனும் என்க. இந்த ஸ்மிருதியானது வேதம் ஒன்றினுலேயே அறியப்படுகின்ற பொருளை விஷயமாக உடையது என்று சொல்லற்க. அதன்கண் பிரத்தியக்ஷ விரோத சங்கை இன்மையால். சங்கிக்கப்பட்ட பிரத்தியக்ஷ விரோதமுடைய வேதார்த்தத்தின்கண்ணேயே வேதத்திற்குப் பிரபலத்தன்மையைக் கூறுதல் உசிதமாதலின்.

அவதாரிகை

அற்றேல் பிரத்தியக்ஷத்திற்கு ஓரிடத்து அப்பிராமாணியம் காணப்பட்டதாயின் பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மையைக் கிரகிக்கின்ற பிரத்தியக்ஷத்தின்கண்ணும் மித்தியாத்தன்மை வடிவ விரோதி கோடியின் அனுசந்தானம் உடையவர்க்கு அப்பிராமாணிய வடிவ தோஷ சங்கை உண்டாகும். அதனுல் சங்கிக்கப்பட்ட தோஷமுடைய பிரத்தியக்ஷம் நிர்த்தோஷத்தன்மையால் வலுவுள்ள மித்தியாத்தன்மை சுருதியால் பாதிக்கப்படுகின்றது எனக் கூறவேண்டும். அதுவோ சம்பவிக்கின்றதில்லை. ஓர் இடத்தும் பிரத்தியக்ஷத்திற்கு அப்பிரமாணத்தன்மை காணப்படாமையின் என்னும் சத்கியாதிவாதியின் சங்கையை நாரத மகரிஷியின் வசனத்தால் நிராகரிக்கின்ருர்.

"ஆகாசம் இந்திர நீலமென்னும் இரத்தினமய கொப்பரை வடிவமாகத் தோற்றுகின்றது. மின்மினிப் பூச்சி நெருப்பு போன்று தோற்றுகின்றது. ஆகாசத்தின்கண் கொப்பரை போன்ற வடிவம் இன்ரும் மின்மினிப் பூச்சி நெருப்பும் அன்ரும். ஆதலால் பிரத்தியக்ஷத்தால் காணப்பட்ட பொருளின்கண்ணும் பரீக்ஷை செய்தல் பொருத்தமாம். ஆச்சாரியர் சிஷ்யர்களைக் குறித்து சாஸ்திர அர்த்தங்களைப் பரீட்சை செய்து போதிப்பிக்கின்றவராய் தருமத்தில் நின்றும் தவறுதலை அடைகின்றதில்லை" என்னும் நாரத ஸ்மிருதியில் சாக்ஷிப்பிரகரணத்தின்கண் பிரத்தியக்ஷத்தால் காணப்பட்ட வஸ்துவிற்கும் பிரத்தியக்ஷத்தின்கண் நம்பிக்கையுருது பிரமாண உபதேசிகளால் பரீக்ஷிக்கத்தக்கதாந்தன்மையை பிரதிபாதித்திருத்தலாலும். ஆகாசத்தின் நீலநிறப் பிரத்தியக்ஷம்

சப்தம் முதலிய ஐந்து குணங்களுள் ஆகாசத்திற்குச் சப்த குண மாத்திரத்தைப் பிரதிபாதிக்கின்ற ஆகம உபதேசமின்றி பிரத்தியக்ஷாதியால் நிவர்த்திக்கக் கூடாமையின்.

அவதாரிகை

ஆகமம் இன்றியும் நீலநிறமுடையது ஆகாசம் என்னும் பிரத்தியக்ஷத்திற்குப் பாதகம் உளது என வினவுகின்ருன்.

ஆகாசத்தின்கண் சமீபத்தில் நீலநிறம் தோற்ருமையால் தூரத்தின்கண் அதன் ஞானம் தூரத்தன்மை வடிவ தோஷ ஜன்னியமாம் என்னும் நிச்சயத்தால் அதன் பாதம் எனின். அற்றன்று. தூரத்தில் நீலநிறத்தைக் காண்டலால் சமீபத்தில் அது தோற்ருமை பனிவடிவ ஆவரணம் தோற்ருமை போல சமீபத்தன்மை வடிவ தோஷ ஜன்னியமாம் என்பதும் சம்ப வித்தலின். அனுபவ பலத்தால் ஆகாசத்தின் நீலநிறம் அவ் யாப்பிய விருத்தியெனப் பொருந்துதலினுலும் என்க.

அவதாரிகை

ஆகாசத்தின் நீலநிறப் பிரத்தியக்ஷத்திற்கு யுக்தி சம்பந்த நிச்சயத்தால் பாத்தியத்தன்மையை நிராகரித்து பிரத்தி யக்ஷத்தால் பாத்தியத்தன்மையை ஆசங்கித்து நிராகரிக் கின்ருர்.

தூரத்தில் உள்ள புருடனுக்கு யாண்டு பூமியின் சமீபத் திலுள்ள ஆகாசப் பிரதேசத்தில் நீலநிற ஞானம் உண்டா கின்றதோ அவ்விடத்தே சமீபத்தில் சென்றவனுக்கு அந் நீல நிறத்தின் அபாவப் பிரத்தியக்ஷத்தால் நீலநிற ஞானத்திற்குப் பாதம் உண்டாகின்றது என்று சொல்லற்க.

அவதாரிகை

பூமியின் சமீபத்திலுள்ள ஆகாச பாகத்தில் ஓர் இடத்தும் நீலநிறம் இன்ரும் ஆண்டு அதன் பிரதீதியோ தூரத்தன்மைத் தோஷத்தால் சம்பவிக்கின்றது எனக் கூறுகின்ருர்.

ஆகாசத்தின்மேல்பாகத்திலுள்ள நீலநிறத்திற்கே மேக நக்ஷத்திராதிகட்குப் போன்றே தூரத்தன்மை தோஷத்தால் பூமியின் சமீபத்தில் தோன்றுதல் பொருந்துதலின். இவ்வா ருகவே ஆகாசத்தின் நீலநிறப் பிரத்தியக்ஷம் ஆகமம் ஒன்றினுலேயே பாத்தியமாமெனச் சித்தித்தது.

அவதாரிகை

பிரத்தியக்ஷத்திற்கு ஆகமத்தால் பாதம் உண்டாவதன் கண் வேறு திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்.

பிருதிவி முதலியவைகளில் கலப்பாகத் தோற்றுகின்ற கந்தம் முதலியவைகளுள் கந்தத்தை ஜலத்தின்கண்ணும் வாயுவின்கண்ணும் அறிந்து சாமர்த்தியமின்றிய சிலர் பிருதிவியிற்போன்று அவைகளின் சுவாபாவிக குணங் களாகக் கூறுவார்களாயின் அப்போது அக்கந்தத்தினை ஜல வாயுக்களின் உள்ளடங்கிய பிருதிவியின் கண்ணதாகவே அறியவேண்டும் என்பது முதலிய ஆகமங்களாலேயே வியவஸ் தையைக் கூறத்தக்கதாய் இருத்தலின். பிரத்தியக்ஷத்தினும் ஆகமத்திற்கு பிரபலத்தன்மை சந்தேகமற்றிருத்தலானும்.

அவதாரிகை

அற்றேல் ஜலத்தின்கண் புஷ்பம் முதலிய பிருதிவியின் அம்ச சம்பந்தம் இருக்கும்போது கந்தம் தோற்றுகின்றது சம்பந்தம் இல்லையாயின் தோற்றுகின்றதில்லை. என்னும் அன்வய வியதிரேகங்களாலேயே கந்தம் பிருதிவியின் மாத்திர குணமாமென நிச்சயம் சம்பவித்தலின். ஆகமத்தால் என்னை பயன் எனின். அற்றன்றெனக் கூறுகின்றார்.

சுவாபாவிகமாகச் சித்தித்துள்ள ஜலத்தின் ஆசிரயமான பிருதிவியின்கண்ணுள்ள கந்தாதியை பிருதிவியின்குண மேகந்தமாம். ஜலாதியின் குணமன்றாம். என்பது முதலிய வடிவத்தால் நம்முதலானோரால் பிரத்தியக்ஷத்தால் வேறு பிரித்து அறியக்கூடாமையின் கருத்து இதுவாம் ஜலத்தின் கண்ணேயே கந்தம் சிலவிடத்து சுவாபாவிகமாம் சிலவிடத்து ஔபாதிகமாமென்னும் கற்பனை பொருந்துதலின் என்க.

அவதாரிகை

அற்றேல் ஜலாதியின்கண் கந்தமுதலியவையின் பிரத்தி யக்ஷம் அப்பிராமாணியவடிவ தோஷசங்கையால் கலக்கப் பட்டிருத்தலின் ஆகமத்தால் சிக்ஷிக்கப்படுகின்ற தென்பது பொருத்தமாம். பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மையைக் கிரகிக்கின்ற பிரத்தியக்ஷமோ அச்சங்கையின்றியதாயிருத் தலின் அதற்கு ஆகமத்தாற் பாதம் எங்ஙனமா மென்னும் கருத்தால் வினவுகின்றான்.

பிருதிவி முதலியவைகட்குப் பெரும்பாலும் பரஸ்பரம் சம்பந்தம் உடையதாந்தன்மையால் ஒன்றன் தருமம் மற்றொன்றின்கண் தோன்றுதல் சம்பவிக்கின்றது ஆதலால் சந்தேகிக்கப்பட்ட தோஷமுடையது பிரத்தியக்ஷமாம் ஆதலால் ஆண்டு ஆகமத்தால் சிக்ஷிக்கப்படுகின்றது எனின்.

அவதாரிகை

பிரத்தியக்ஷத்திற்கு அச்சங்கையின் சூனியத்தன்மை அசித்தமாதலின் அதற்கும் ஆகமபாத்தியத்தன்மை பொருத்தமாமெனக் கூறுகின்றூர்.

அப்படியானுல் ஈண்டும் பிரஹ்மத்திற்கும் பிரபஞ்சத்திற்கும் உபாதான உபாதேயத்தன்மையால் பரஸ்பரம் சம்பந்தித்திருப்பதால் ஒன்றன் தருமம் மற்றொன்றின்கண் பிரதீதி சம்பாவனை செய்யப்படுகின்றது. ஆதலின் சந்தேகிக்கப்பட்டதோஷத்தோடு கூடியது பிரத்தியக்ஷமாம்.

அவதாரிகை

பிரத்தியக்ஷத்தின் பாதப் பிரகாரத்தை முதியோரது வசனத்தால் தரிசிப்பிக்கின்றூர்.

ஜகத்தானது "இருப்பு விளக்கம் பிரியம் நாமம் உருவம் என்னும் ஐந்து அம்சத்தோடு கூடியது. முதல் மூன்றும் பிரஹ்மத்தின் வடிவமாம். பின்னிரண்டும் ஜகத்தின் வடிவமாம்" என முதியோர் கூறிய பிரகாரமுடைய ஆகமத்தால் வியவஸ்தை செய்யத்தக்கதாம் என்பது சமானமாம்.

அவதாரிகை

இவ்வாறு பிரத்தியக்ஷத்திற்கு ஆகமத்தின் அபேக்ஷையால் சுயம் பிரபலத்தன்மையை நிராகரித்து உபஜீவியத்தன்மையின் அதீனமான பிரபலத்தன்மையை நிராகரிக்கின்றூர்.

பிரத்தியக்ஷத்திற்கு ஆகமத்தால் பாதத்தை அங்கீகரிக்கின் உபஜீவிய விரோதமாம் என்று சொல்லற்க. ஆகமப்பிரமாணத்தால் எழுத்து பதம் வாக்கியம் முதலியவற்றின் சொருபாம்சத்தை விஷயம் செய்யும் பிரத்தியக்ஷத்தை ஆசிரயித்துத்தனக்கு அனுசிரயமாயுள்ள அதன் சத்தியத்தன்மையின் அம்சத்தைக் கெடுத்தலால் எனக் கூறுகின்றனர்.

## 38. சுருதிக்குப் பிரத்தியக்ஷத்தினும் பலமுடை யதாந்தன்மையின் வியவஸ்திதி விசாரம்

அவதாரிகை

ஆகம மாத்திரத்திற்குப் பிரத்தியக்ஷத்தினும் பிரபலத் தன்மை கூறப்பட்டது. அதனை ஆட்சேபிக்கின்றார்.

அற்றேல் ஆகமத்திற்குப் பிரத்தியக்ஷத்தினும் வலுவுடைமை இருப்பின் "எஜமானன் தெற்பை முஷ்டி" என்னுமிடத்துப் பிரத்தியக்ஷ விரோதத்தை நீக்கும் பொருட்டு எஜமான சப்தத்திற்குத் தெற்பை முஷ்டியின்கண் கௌணி விருத்தியைக் கற்பிக்க வேண்டியதில்லை. அப்படியே "சோம இரசத்தால் எஜிக்கக்கடவன்" என்னுமிடத்து வையதிகரணியமாக அன்வயம் செய்யுங்கால் யாகத்தின்கண் இஷ்ட சாதனத் தன்மையும் சோமலதையின்கண் யாகசாதனத் தன்மையும் போதிக்கத்தக்கதாம். இவ்வாறாகவே வியாபார பேதத்தால் வாக்கியபேதம் அடைவுறுகின்றது அத் தோஷத்தை நீக்கும் பொருட்டு சாமானாதிகரணியமாக அன்வயம் சொல்லத்தக்கதாம். அதன்கண் பிரத்தியக்ஷ விரோதத்தைப் பரிகரிக்கும் பொருட்டு சோமக் கொடியினையுடைய யாகத்தால் என உடைமைப் பொருளில் லக்ஷணை கற்பிக்கத் தக்கதன்றாம். இரண்டிடத்தும் பிரத்தியக்ஷ விரோதம் இருப்பினும் அதனைத் திரஸ்கரித்து வலுவுள்ள ஆகமத்தால் தெற்பை முஷ்டியின்கண் எஜமானனது அபேதத்திற்கும் யாகத்தின்கண் சோமலதையின் அபேதத்திற்கும் சித்தி சம்பவித்தலின் எனின்.

இச் சங்கைக்குப் பாமதி என்னும் கிரந்தத்தின்கண் வாசஸ்பதிமிஸிரரால் சமாதானங் கூறப்பட்டுளது. அஃதாமாறு தாத்பரியமுடைய சுருதி பிரத்தியக்ஷத்தினும் வலுவுடையதாம். சுருதி மாத்திரம் அன்றாம். மந்திர அர்த்தவாத வாக்கியங்கட்கோ துதியின் துவாரமாயுள்ள அர்த்தத்தின்கண் வாக்கியார்த்தத்தின் துவாரமாயுள்ள பதார்த்தத்திற் போன்று தாத்பரியம் இன்றாம். அவைகட்கு தனது பொருளின்கண் பயன் இன்மையாலும் கௌரவம் ஆதலானும் தாத்பரியம் கற்பிக்கப்படுகின்றதில்லை என்பது கருத்து.

சங்கை அவைகட்கு தனது பொருளின்கண் தாத்பரியமின்றாகுங்கால் வேறு பிரமாணத்தோடு விரோதமின்றிய

தேவதையின் விக்கிரகம் முதலானதும் அவ்வாக்கியங்களால் சித்திக்காது. தாத்பரியமுடையதின்கண்ணேயே சப்தத்திற்குப் பிரமாணத் தன்மையை நியமித்தலால் எனின்.

அற்றன்று "இதற்கே ரேவதி என்னும் இருக்குகளில் வாரவந்தீய மென்னும் அக்கினிஷ்டோம சாமத்தைச் செய்து பசு வேட்கை உள்ளவன் இதனுல் எஜிக்கக்கடவன்" என விசிட்டவிதிக்கு தாத்பரியம் இல்லாவிடினும் விசேஷண சொரூபத்தின்கண் பிரமாணத் தன்மையைக் காண்டலால் கூறிய நியமம் சித்தியாமையின்.

அவதாரிகை

கூறிய பொருளை விஸ்தரிக்கின்றுர்.

இவ்வாக்கியத்தின்கண்ணே ரேவதி இருக்கை ஆதாரமாயுள்ள வாரவந்தீய மென்னும் சாமம் விசேஷணமாம் இவ்விசேஷணமானது சோமலதை முதலிய விசேஷணம் போன்று லோக சித்தமன்றும் இதனுல் அவ்விசேஷண விசிட்டயாக விதி மாத்திரத்தின்கண் வாக்கியத்திற்குப் பிரமாணத்தன்மை இன்றும். மற்றே விசேஷணத்தின்கண்ணுமாம்.

அவதாரிகை

அற்றேல் விசிட்ட விஷயக விதியானது அப்பிரசித்த விசேஷண சொரூபத்தின் பிரமையை உண்டுபண்ணுகின்ற ரேவதி இருக்குகளில் வாரவந்தீய சாமத்தை செய்குக. என்னும் வடிவினதாகிய விசேஷண விதியை ஆக்ஷேபிக்கின்றது. இவ்வாருகவே அவ்விசேஷணம் இவ்வாக்கியத்தின் பிரமேயம் அன்றும் என வினவுகின்றுன் விசிட்ட விதியினுல் விசேஷணத்தின் ஆக்ஷேபமாம் எனின்.

சமாதானம்

ஆக்ஷேபத்தால் விசேஷண ஞானம் உண்டாகுங்கால் விசிட்ட விஷயக விதியாம். விசிட்ட விஷயக விதி இருக்குங்கால் அவ்விதியால் விசேஷணத்தின் ஆக்ஷேபமாம் என அன்யோன்னிய ஆசிரய தோஷம் வருதலின். ஆதலால் அதாவது ரேவதி ஆதாரக வாரவந்தீய சாமமென்னும் விசேஷணத்திற்கு பிரகிருத வாக்கியத்தினும் அன்னியத்தால் பிரமிதி சம்பவியாமையின் விசிட்டவிதி பரமான வாக்கியத்திற்கே விசேஷண

சொருபத்தின்கண்ணும் பிரமாணத்தன்மை சொல்லத் தக்கதாம்.

அவதாரிகை

அப்படியானல் அதன்கண்ணும் தாத்பரியம் இருக்குக என்னின். அற்றன்றெனக் கூறுகின்ருர்.

ஆனல் அதன்கண் தாத்பரியமின்ரும் இரண்டிடத்தும் தாத்பரியத்தை உடன்படின் வாக்கியபேதம் பிராப்தி யாதலின் விசிஷ்டவிதிக்கு விசேஷண சொருபத்தின்கண் போன்று விதேயத்தின் துதிபரமாயுள்ள அர்த்தவாத வாக்கியங்கட்கும் துதியின் துவாரமாயுள்ள அர்த்தத்தின்கண் தாத்பரியம் இன்ரும் ஆதலின் அவைகளைப்பார்க்கினும் பிரத்தியக்ஷத்திற்கு வலுவுடையதாந்தன்மை இருத்தலால் அதன் விரோதத்தை நீக்கும் பொருட்டு அவ்வாக்கியங்களில் லக்ஷணை முதலிய வேறு விருத்தியைக் கற்பித்தலாம். சோமத்தால் யாகம் செய்க என்னுமிடத்து விசிஷ்ட விதிபரமான வாக்கியத்தின்கண் சோமத்திரவியத்தோடு அபின்னமான யாக வடிவ விசிஷ்டம் விதிக்கத்தக்கதாம். என அங்கீகரிக்கின் அவ்விதேய யாகத்திற்குத் தயிரால் ஓமம் செய்க என்பது முதலிய இடங்களில் விதேயமான தயிர் முதலியவைகட்குப் போன்று லோக சித்தத்தன்மையின்மையால் விதிபரமான வாக்கியத்தாலேயே ரேவதியை ஆதாரமாகவுடைய வார வந்தீய விசேஷணத்திற்குப்போன்று தாத்பரியம் இன்றி சித்தி அங்கீகரிக்கத்தக்கதாம். தாத்பரிய மின்றிய ஆகமத்தால் யாகத்திற்கும் சோமலதைக்கும் பேதத்தைக் கிரகிக்கின்ற பிரத்தியக்ஷத்தின் விரோத அர்த்தம் சித்திக்கின்றதில்லை, ஆதலின் ஆண்டும் அதன் விரோதத்தை நீக்கும் பொருட்டு உடைமைப் பொருளின்கண் இலக்ஷணையை ஆசிரயித்தலாம்.

அவதாரிகை

அற்றேல் துவைதத்திற்கு மித்தியாத்தன்மையைப் போதிக்கின்ற அத்வைத சுருதிக்கும் தனது அர்த்தமாகிய மித்தியாத்தன்மையின்கண் தாத்பரியம் இன்ரும். பிரமாணமின்மையின். இவ்வாருகவே துவைதத்திற்கு சத்தியத்

தன்மையைக் கிரகிக்கின்ற பிரத்தியக்ஷ விரோதத்தை நீக்கும் பொருட்டு அத்வைத சுருதியையும் வேறு பிரகாரமாக நடத்துதலே நியாயமாமெனின் அற்றன்றெனக் கூறுகின்றார்.

அத்வைத சுருதியோ உபக்கிரம உபசம்ஹாரங்களின் ஏகவடிவத்தன்மை முதலிய ஆறுபிரகாரமாயுள்ள லிங்கத்தால் அறிவிக்கப்பட்ட அத்வைதத்தின்கண் தாத்பரிய முடையதாய்ப் பிரத்தியக்ஷத்தைப் பார்க்கிலும் வலுவுடையதாம். ஆதலின் அதனால் பிரத்தியக்ஷத்திற்குப் பாதமாம். அதன் விரோதத்தை நீக்கும் பொருட்டுச் சுருதியை வேறு பிரகாரமாக நடத்துதல் சரியன்றாம்.

அவதாரிகை

தாத்பரியத்தின் பிரபலத்தன்மைக்கு வாசஸ்பதியால் கூறப்பட்ட காரணத்தினைத் தூஷிக்கின்றார்.

விவரண வார்த்திகத்தின்கண்ணே தாத்பரிய முடையதாந்தன்மையால் சுருதிக்குப் பிரத்தியக்ஷத்தினும் பிரபலத் தன்மையின்றாம் எனப் பிரதிபாதிக்கப்பட்டுளது. "பொன்னுருந்தை சமைக்குக" என்னும்விதிக்கு சமைத்தலுக்கு பொன்னுருந்தின் சேஷத்தன்மையாக பிரதிபாதனம் செய்வதில் தாத்பரியம் உடையதாயினும் பொன்னுருந்தின்கண் உருவ ரசங்கள் மாறுதலின் உற்பத்தி பரியந்தமான முக்கிய சமையல் சம்பந்தம் பிரத்தியக்ஷ விரோதமாம். ஆதலின் அவ்விரோதத்தை நீக்கும் பொருட்டு சமையல் சப்தத்திற்கு உஷ்ணப்படுத்துதல் மாத்திரத்தின்கண் லக்ஷணையை அங்கீகரித்தமையின் தத்துவமசி மகாவாக்கியத்திற்கு ஜீவப் பிரஹ்மங்களின் அபேதத்தைப் பிரதிபாதிப்பதில் தாத்பரியம் இருப்பினும் துவம்பத வாச்சியத்திற்குத் தத்பதவாச்சியத் தோடு அபேதம் பிரத்தியக்ஷ விரோதமாம். ஆதலின் அவ்விரோதத்தை நீக்கும் பொருட்டு சுத்த சேதனத்தின்கண் லக்ஷணையை அங்கீகரித்தமையாலும். அர்த்தவாத வாக்கியங் கட்கும் பிரயா ஜாதி அங்கத்தை விதிக்கின்ற வாக்கியங் கட்குப் போன்று சுவார்த்தப் பிரமையின்கண் தற்பரத் தன்மை உண்மையால். பிரமாணாந்தர சம்வாத விசம்வாத மின்றிய அர்த்தவாத வாக்கியங்களால் அறியப்பட்ட அர்த்தங் கட்கே பிரயோஜனத்தின் ஆகாங்க்ஷையால் விதேய

யாகத்தின் அங்கத்தன்மையாம். ஆதலின் பிரயாஜாதி வாக்கியத்திற்குப்போன்று அவைகட்கும் அவாந்தர சம்பந்தத்தின்கண் தாத்பரியம் உளதேயாம்.

அவதாரிகை

பிரயாஜாதி வாக்கியங்கட்கும் அர்த்தவாதாதி வாக்கியங்கட்கும் சுவார்த்தப் பிரமிதியின்கண் தாத்பரியம் உளது என்பதன்கண் ஏதுவைக் கூறுகின்றார்.

வாக்கியத்தோடு ஏகவாக்கியத்தன்மையிருத்தலின் கருத்திதுவாம் வாக்கிய வடிவமாயிருக்கின்ற அவைகட்கே விதிவாக்கியங்களோடு ஏகவாக்கியத்தன்மையை அங்கீகரித்தலாலும் வாக்கியங்கட்கு வாக்கியார்த்தத்தின்கண் தாத்பரியம் சாமானியமாக சித்தித்தமையானும் என்க.

அவதாரிகை

வாக்கியார்த்தத்தின் துவாரமாயுள்ள பதார்த்தத்திற் போன்று ஸ்துதியின் துவாரமாயுள்ள அர்த்தத்தின்கண் தாத்பரியம் இன்றும் என முன்பு யாதொன்று கூறப்பட்டதோ அதனைப் பரிகரிக்கின்றார்.

பதத்தோடு ஏகவாக்கியத்தன்மையின்கண்ணேயே கேவலம் அவாந்தர தாத்பரியத்தை அங்கீகரியாமையின் என விவரணசாரியரால் நியாய நிர்ணயம் என்னும் கிரந்தத்தில் வியவஸ்தை செய்யப்பட்டிருத்தலால் "எஜமானன் தெற்பை முஷ்டி" என்பது முதலிய வாக்கியங்கட்கும் முக்கியார்த்தத்தில் தாத்பரியம் பிராப்தமாகும்போது பிரத்தியக்ஷ விரோதத்தை நீக்கும் பொருட்டு லக்ஷணையை அங்கீகரித்தமையாலும் என்க.

தாத்பரியம் சுருதியின் பிரபலத்தன்மைக்குக் காரணம் ஆகாதாயின் சுருதியின் பிரபலத்தன்மை எவ்வாற்றலாம் எனின். கூறப்படுகின்றது. நிர்த்தோஷத் தன்மையாலும் பரத்தன்மையாலும் ஆம். சுருதி மாத்திரத்திற்குப் பிரத்தியக்ஷத்தினும் பிரபலத்தன்மையாம் என்பது சாமான்யமாம். ஆனல் சுருதியால் பாதிக்கப்பட்டதாயினும் பிரத்தியக்ஷம் எப்படியாவது தனக்கு உசிதமான விஷயத்தைக் கொடுத்த

லால் சம்பாவனை செய்யத்தக்கது. நிர்விஷயக ஞானம் பொருந்தாமையின். நிர்விஷயக பிரத்தியக்ஷம் பொருந்தாமை யாலேயே அத்வைத சுருதியின் விரோதத்தால் தத்துவத்தைப் போதிப்பதினின்றும் விலக்கப்பட்டதாகி பிரத்தியக்ஷம் அர்த்தக்கிரியையில் சாமர்த்தியமுள்ள வியாவகாரிக விஷயத்தை சமர்ப்பித்தலால் உபபாதனம் செய்யப்படு கின்றது.

அவதாரிகை

சுருதியால் பாதிக்கப்பட்ட பிரத்தியக்ஷாதிகட்குச் சித்தாந்தத்தில் வியாவகாரிக பிராமாணியத்தை அங்கீகரித்த லால் பிரத்தியக்ஷ ஞானத்திற்கு நிர்விஷயத்தன்மை வடிவ நிரவகாசத்தன்மை இன்றும் என உபபாதனம் செய்து அதன் கண் கைமுதிய நியாயத்தைக் கூறுகின்றார்.

அதிகமாகக் கூறுவதால் என்ன பயன் இது ரஜதமன்று என சர்வசித்த பிரத்தியக்ஷத்தால் பாதிக்கப்பட்டதாயினும் சுத்தி இரஜதப் பிரத்தியக்ஷம் அனுபவத்தின் அனுசாரமாக எதிர் தேசத்தில் சுத்தியின் தாதாத்மியத்தை யடைந்துள்ள இரஜதத்தை அங்கீகரித்தலால் சமர்த்தனம் செய்யப்படு கின்றது. இதம் வஸ்துவின் அபின்னத்தன்மையின் அனுபவத் திற்கு விரோதம் வருதலால் தூரதேசத்திலுள்ள இரஜதமாவது ஆந்தரத்தில் ஞானகார இரஜதமாவது அசத்வடிவ இரஜத மாவது விஷயமாகக் கற்பிக்கப்படுகின்றதில்லை. விரோத ஸ்தலத்தில் நிரவகாச பிரமாணாந்தரத்தால் சுருதியின் பாதம் நியாயமாகும்போது தெற்பை முஷ்டியின்கண் எஜமானனு டைய பேதத்தைக் கிரகிக்கின்றதும் பிரஹ்ம ஞானம் உண்டா கும்வரை அர்த்தக்கிரியையின் சம்வாதத்தால் அனுசரித்திருக் கின்றதும் ஆகிய பிரத்தியக்ஷத்திற்குப் பிராதிபாஸிக விஷயத் தன்மையை அங்கீகரித்தலால் உபபாதனம் செய்தல் பொருந் தாமையின். "எஜமானன் தெற்பை முஷ்டியாம்" என்னும் சுருதியால் பிரத்தியக்ஷத்திற்குப் பாத்தியத்தன்மையை உடன்படின் சர்வப் பிரகாரத்தாலும் நிர்விஷயத்தன்மை பிராப்தியாம் ஆதலின் அதனை நீக்கும் பொருட்டு சுருதிக்கும் இதர பிரமாணங்கட்கும் விரோதம் உண்டாகும்போது சுருதியே வலுவுடையதாமென்னும் சாமான்ய நியமத்தை விலக்கி சுருதியே தத்சித்தி அதிகரணம் முதலியவற்றில் பிரதி

பாதிக்கப்பட்ட பிரகாரத்தால் வேறுபிரகாரமாகச் செலுத்தப் படுகின்றது.

அவதாரிகை

அற்றேல் அத்வைத சுருதிக்கும் பிரத்தியக்ஷத்திற்கும் விரோதமுண்டாகுமிடத்து பாரமார்த்திக அத்வைதம் சுருதிக்கு விஷயமாம் வியாவகாரிக துவைதம் பிரத்தியக்ஷத்திற்கு விஷயமாம் எனக் கற்பிக்கப்படுகின்றதுபோல் பிரகிருதத்தின் கண்ணும் எஜமானனுக்கும் தெற்பை முஷ்டிக்கும் வாஸ்தவ அபேதம் சுருதிக்கு விஷயமாம். கற்பித பேதம் பிரத்தியக்ஷத்திற்கு விஷயமாம் என வியவஸ்தை கற்பிக்கத்தக்கது என வினவுகின்றுன் அத்வைத சுருதிக்கும் பிரத்தியக்ஷத்திற்கும் போன்று. ஈண்டு சுருதிக்கும் பிரத்தியக்ஷத்திற்கும் வாஸ்தவ விஷயத்தன்மை வியாவகாரிக விஷயத்தன்மைகளை அங்கீகரித்தலால் பிரத்தியக்ஷத்தை உபபாதனம் செய்யக் கூடும் எனின்.

சமாதானம்

பிரஹ்மத்தின் வேருன சகலப் பிரபஞ்சத்திற்கும் மித்தியாத்தன்மையைப் பிரதிபாதிக்கின்ற ஆறுவித தாத்பரிய லிங்கங்களோடு கூடிய அனேக சுருதிகளோடு விரோதமாவதால், ஓர் அர்த்தவாதத்தால் தெற்பை முஷ்டியின்கண் எஜமானனது வாஸ்தவ அபேதத்தைப் பிரதி பாதித்தல் சம்பவியாமையின்.

அவதாரிகை

சுருதிக்குப் பிரத்தியக்ஷத்தினும் பிரபலத் தன்மையாம் என்னும் சாமானிய நியமத்திற்கு எஜமானன் தெற்பை முஷ்டி என்னுமிடத்து அபவாத ஸ்தலத்தைக் காண்பித்து வேறு அபவாதஸ்தலத்தைக் காண்பிக்கின்ருர்.

இவ்வாறு தத்துவமசி வாக்கியத்தால் துவம்பத வாச்சியத்திற்குச் சர்வக்ஞத்தன்மை அபோக்த்திருத்தன்மை அகர்த்திருத்தன்மை முதலியவற்ரேடு கூடிய பிரஹ்ம சொரூபத்தைப் போதிக்குங்கால் அதன்கண் அசர்வக்ஞத்தன்மை போக்திருத்தன்மை முதலியவற்றின் பிரத்தியக்ஷம் அத்தியந்தம் நிர்விஷயமாம் ஆதலின் அதனைப் பரிகரித்தற்

பொருட்டு அகங்கார விசிஷ்ட சைதன்னியத்திற்கு போக்திருத்துவ முதலியதும் அதனில் நின்றும் பிரிக்கப்பட்ட சுத்த சேதனத்திற்கு உதாசீனப் பிரஹ்ம வடிவத்தன்மையும் ஆம் என இவ்வாறு வியவஸ்தையை அங்கீகரித்துப் பாகத்தியாக லக்ஷணை அங்கீகரிக்கப்படுகின்றது.

அவதாரிகை

வேறு அபவாத ஸ்தலத்தைக் கூறுகின்றார்.

இவ்வாறு பொன் உளுந்தைச் சமைக்குக என்பது முதலிய விடத்தும் பிரத்தியக்ஷத்திற்கு 'அத்தியந்தம் நிர்விஷயத்தன்மைப் பிராப்தமாகும் போது அதனைப் பரிகரிக்கும் பொருட்டுச் சுருதியின்கண் உஷ்ணத்தைச் செய்வதின்கண் லக்ஷணை அங்கீகரிக்கப்படுகின்றது.

அவதாரிகை

இவ்வாறு நிரவகாசப் பிரத்தியக்ஷத்தால் சாமான்ய நியமத்தின் அபவாதவடிவ சுருதியின் பாதத்தைக் காண்பித்துச் சாமான்ய நியமமுள்ள சுருதியின் பிரபலத்தன்மையைப் பிரகிருதத்தின் அபிப்பிராயத்தால் தரிசிப்பிக்கின்றார்.

ஈண்டு நாநாவானவை சிறிதும் இல்லை என்னுமிடத்து. பிரத்தியக்ஷத்திற்கு ஒருவாறு விஷயத்தைப் பிரதிபாதனம் செய்தல் சம்பவிக்கும்போது வலுவுள்ள சுருதியை வேறு பிரகாரமாகச் செலுத்துதல் சரி இன்றாம் இவ்வாறு யாதொரு வியவஸ்தையின்மையின் பிராப்தியும் இன்றாம்.

அவதாரிகை

அற்றேல் பிரத்தியக்ஷத்தால் சுருதியின் பாதத்தின்கண் அனேக உதாரணங்கள் தரிசிப்பிக்கப்பட்டன. சுருதியினால் பிரத்தியக்ஷ பாதத்தின்கண் ஒரே உதாரணம் தரிசிப்பிக்கப்பட்டது. இவ்வாறாகவே பிரத்தியக்ஷத்திற்குச் சுருதியின் அபேக்ஷையால் பிரபலத்தன்மையாம் என்பது சாமான்ய நியமமாமெனக் கூறவேண்டும் விபரீதமாகக் கூறலாகாது என்னும் அருசியால் கூறுகின்றார்.

அல்லது பொன் உளுந்தைச் சமைக்குக. சோமத்தால் யாகம் செய்க என்பதாதியின்கண் பிரத்தியக்ஷத்தின் அனு

சாரமாக லக்ஷணையை ஆசிரியித்தல் இன்ரும் மற்ருே அனுஷ்டானத்தின் சாமர்த்தியம் இன்மையிஞல் லட்சணையின் அங்கீகாரமாம்.

அவதாரிகை

சாமர்த்தியம் இன்மையினையே விரித்துக் கூறுகின்ரூர்.

பொன்னுளுந்தின்கண் உஷ்ணம் செய்தல் போன்று முக்கிய சமையல் அனுஷ்டிக்கக் கூடாமையானும். சோமத்திரவியத்தைக் கரணமாகவுடைய யாகம் போன்று அதின் அபின்னமான யாகம் ஒருவராலும் அனுஷ்டிக்கக் கூடாமையாலும் என்க. அனுஷ்டிக்கத் தக்கதன்மையால் கருதப்பட்டதற்கு பிரத்தியக்ஷ விரோதமே அனுஷ்டானத்தின் ஆற்றல் இன்மை என்னும் வேறு சப்தத்தால் வியவகரிக்கப் படுகின்றது என்று சொல்லற்க. சந்திரமண்டலத்தை பிரகாச முடையதாகச் செய்க. என்னும் விதியின்கண் சந்திரமண்டலத்தின்கண் அனுஷ்டிக்கத்தக்கதாம் தன்மையால் கருதப்பட்ட பிரகாசமுடையதாந் தன்மைக்குப் பிரத்தியக்ஷ விரோதமில்லா விடினும் அனுஷ்டானத்தில் ஆற்றல் இன்மையைக் காண்டலால் ஆற்றல் இன்மை பிரத்தியக்ஷ விரோதத்தினும் வேருதலின், இவ்வாருகவே ஆண்டு அனுஷ்டானத்தின் ஆற்றலின்மையிஞலேயே லக்ஷணையை ஆசிரியித்தலாம், ஆதலால் அபச்சேத நியாயம் முதலியவற்ருல் சித்தித்துள்ள சுருதியின் சாமர்த்தியத்திற்கு யாதொரு பாதமும் இன்ரும் என்க.

அவதாரிகை

அபச்சேத நியாயத்தை பிரகிருதத்தில் பொருத்துதற்கு ஆக்ஷேபிக்கின்ருர்.

இனி அபச்சேத நியாயத்தின் பிரவிருத்தி ஈண்டு யாங்ஙனமாம் எனின்.

அவதாரிகை

முதலில் அந்த நியாயத்தைப் பிரகிருதத்தில் பொருத்துகின்ருர்.

உத்தரம் கூறப்படுகின்றது, ஜோதிஷ்டோம யாகத்தில் பஹிஷ்பவமான தோத்திரத்தின் பொருட்டு ஒருவரை ஒருவர்

பின்பற்றிச் செல்கின்ற இருத்விக்குகளுக்குள் உத்காதாவிற்கு நழுவுதல் உண்டாயின் "உத்காதா நழுவுவனுயின் தக்ஷிணை யின்றி யாகத்தைச் செய்து அதனாலேயே மீண்டும் யாகத் தைச் செய்க" என்னும் சுருதியைப் பார்த்தலால் உண்டாகிய உத்காதாவின் நழுவுதலை நிமித்தமாகவுடைய பிராயச் சித்தத்தின் கர்த்தவ்வியத்தன்மையின் ஞானம் பின்பு பிரதி கர்த்தாவின் நழுவுதல் உண்டாகும்போது "பிரதிகர்த்தா நழுவுவனுயின் சர்வதனத்தையும் தானம் செய்க" என்னும் சுருதியைப் பார்த்தலால் உண்டாகிய அதன் விரோதமான பிரதி கர்த்தாவின் நழுவுதலை நிமித்தமாகவுடைய பிராயச் சித்தத்தின் கர்த்தவ்வியத்தன்மையின் ஞானத்தால் பாதிக்கப்படுகின்றது, இவ்வாறு முன்னுண்டாகின்ற கடாதி யின் சத்தியத்தன்மையின் பிரத்தியக்ஷம் பின்னுண்டாகின்ற அதன் மித்தியாத்தன்மையின் சுருதி ஜன்னிய ஞானத்தால் பாதிக்கப்படுகின்றது. உதாகரிக்கப்பட்ட ஸ்தலத்தின்கண் பூர்வ நிமித்தத்தையுடைய கர்த்தவ்வியத் தன்மையின் ஞானத்திற்கு பரநிமித்தத்தையுடைய கர்த்தவ்வியத் தன்மை யின் ஞானத்தால் பாதம் உளதாயினும் பூர்வ நிமித்தத்தினை யுடையதின் கர்த்தவ்யத்தன்மையை உண்டுபண்ணும் சாஸ் திரம் யாண்டு உத்காதாவிற்கு மாத்திரம் நழுவுதலோ அல்லது இருவருக்கும் ஒரேகாலத்தில் நழுவுதலோ அல்லது உத்காதாவின் நழுவுதலுக்கு பரத்தன்மையாமோ ஆண்டு அவகாச முடையதாம். பிரத்தியக்ஷமோ அத்வைத சுருதி யால் பாதமாயின் வேறு விஷயம் இன்மையால் நிர்விஷயமாம் ஆதலின் திருஷ்டாந்தம் விஷமமாம். என சங்கிக்கத்தக்க தன்று யாண்டு கடாதியின்கண் சுருதியால் பாதிக்கப்பட்ட பிரத்தியக்ஷம் பிரவிர்த்திக்கின்றதோ ஆண்டே, வியாவ காரிக விஷயத்தை யடைந்து கிருதார்த்தமாயுள்ள பிரத்தி யக்ஷத்திற்குப் பரஅபச்சேதஸ்தலத்தில் சர்வப் பிரகாரத் தாலும் பாதிக்கப்பட்ட பூர்வ அபச்சேத சாஸ்திரத்திற்குப் போன்று வேறுவிஷயத்தைத் தேடவேண்டியது இன்மை யானும்.

### அவதாரிகை

அற்றேல் பிரஹ்மத்தின்கண் சத்துவம் பாரமார்த்திகமாம். கடாதிபிரபஞ்சத்தின் சத்துவம் வியாவகாரிகமாம். சுத்தி இரஜதாதியின்கண் சத்துவம் பிராதிபாசிகமாமென

சத்தையின் மூவகைப் பக்ஷத்தில் கடாதி சத்துவப் பிரத்தியக்ஷத்திற்கு வேறுவிஷயம் தேடவேண்டியதின்றும். கடாதியின்கண் இருக்கின்ற வியாவகாரிய சத்துவமே அதன் விஷயமாக அடைவுறுதலின் யாண்டும் ஒரே சத்தையாம் என்னும் பக்ஷத்தின்கண் வியாவகாரிக சத்துவமும் பிராதி பாசிக சத்துவமும் இன்மையால். சத்துவப் பிரத்தியக்ஷத்திற்கு வேறுவிஷயம் தேடத்தக்கதேயாம் என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்.

ஈண்டும் சர்வ ஞானங்கட்கும் விஷயமாயுள்ள பிரஹ்ம சத்தையின்கண் பிரத்தியக்ஷம் அவகாசமுடையதாம் எனக் கூற முடியுமாதலினுனும் என்க.

முன்பு எங்ஙனமாம் என்னும் சப்தத்தால் சூசிப்பிக்கப் பட்ட ஆக்ஷேபத்தை இப்போது வெளிப்படுத்துகின்றான்.

ஒரே பிரயோகத்தின்கண்ணும் கிரமமாகவுண்டாகின்ற நிமித்தங்களால் யாகத்தின்கண் அவ்வவ் நிமித்தத்தையுடைய கர்த்தவ்யத் தன்மைகட்கு இலந்தைக் கனியின்கண் பசுமை நிறத்திற்கும் சிகப்பு நிறத்திற்கும் கிரமமாக உற்பத்தியாவது போன்று கிரமமாக உற்பத்தி உண்டாவதால் உருவ ஞான மிரண்டும் பிரமாணமாவது போன்று கர்த்தவ்யத்தன்மையின் ஞானம் இரண்டும் பிரமாணமேயாமாதலின். பரத்தால் பூர்வ ஞான பாதத்தின்கண் அபச்சேத நியாயம் உதாகரணம் அன்றும். இதனாலேயே அபச்சேத அதிகரணத்தின்கண் நைமித்திக சாஸ்திரத்திற்குப் பொருள் இதுவாம். நிமித்த உற்பத்திக்கு முன்பு யாகம் வேறு பிரகாரமாகச் செய்யத் தக்கதாயினும் நிமித்தம் இருக்கும்போது மற்றோர் பிரகாரமாக செய்யத்தக்கதாம்'' என சாஸ்திர தீபிகையின் வசனமும் பொருந்துகின்றது எனின்.

அவதாரிகை

கிரமமாக விருத்தமான இரு அபச்சேதங்களையுடைய யாகத்திகண் பூர்வ நைமித்திக பிராயச்சித்தத்தின் கர்த்தவ்யத்தன்மையில் பிரமாணமின்றும். அதன்கண் பூர்வ பிராயச்சித்தத்திற்கு அங்கத்தன்மையின்மையின். அங்கத்தன்மையைப் போதிக்கும்பிரமாண மின்மையின், பூர்வ

நைமித்திக சாஸ்திரம் அதன்கண் பிரமாணமா மென்னற்க. அதற்கு வேறு பிரயோகங்களில் அவகாசம் உடையதாந் தன்மையால் ஆண்டும் அங்கத்தன்மையைப் போதிக்குந் தன்மை இன்மையின் என்னும் கருத்தால் தூஷிக்கின்ருர்.

அற்றன்று அங்கமாக இருக்குமாயின் அதற்குக் கர்த்தவ்யத்தன்மையாம். பின் உண்டாகின்ற பிரதி கருத்தாவின் நழுவுதலையுடைய யாகத்தின்கண் முன்உண்டான உத்காதாவின் நழுவுதலை நிமித்தமாகவுடைய பிராயச்சித்தத்திற்கு அங்கத்தன்மை இன்ரும். ஆகவநீய சாஸ்திரத்திற்குப் பதஓமத்தினும் வேருன ஓமவிஷயகத்தன்மை போன்று. ‘உத்காதா நழுவுவனுயின்’ என்னும் சாஸ்திரத்திற்குப் பின்னுண்டாகின்ற பிரதி கர்த்தாவின் நழுவுதல் இன்றிய யாக விஷயகத்தன்மை உண்மையின்.

அவதாரிகை

கூறிய பொருளில் பெரியோரது சம்மதியைக் கூறுகின்ருர்.

நியாய இரத்தினமாலையின்கண் இலக்ஷணப்பிராப்த பாதவிவேசனப் பிரகரணத்தில் இங்ஙனம் கூறப்பட்டுளது. பிரத்தியக்ஷசித்தமும் ஓமமாத்திரத்தில் பிராப்தமும் ஆன “ஆகவநீயத்தில் ஓமம் செய்க” என்னும் சாதாரண சாஸ்திரத்திற்கு விசேஷ சாஸ்திரத்தால் யாதொரு சங்கோசமுண்டோ அது பிராப்தபாதம் எனப்படுகின்றது; என கூறப்பட்டுள்ளது. அபச்சேதஸ்தலத்தில் உத்தர ஞானத்தால் பூருவ ஞானம்பாதமாகும்போது சாஸ்திரார்த்தம் உண்டாகின்றது பின்னுண்டாகும் உத்காதாவின் நழுவுதல் இன்றிய பிரதி கர்த்தாவின் நழுவுதலோடு கூடிய யாகத்திற்குச் சர்வதனங்களின் தானம் அங்கமாம். இவ்வாறு உத்காதாவின் நழுவுதலின்கண்ணும் காணத்தக்கதாம் என.

அவதாரிகை

சாஸ்திர தீபிகையின் வசனமும் உனது சம்மதமான பொருளில் தாத்பரிய முடையதன்ரும். அதன் முன்னுள்ள கிரந்தத்திற்கு விரோதம் வருதலானும் பூர்வகிரந்த அர்த்தத்தின் முடிவுவடிவமாயுள்ள உன்னுல் சொல்லப்பட்ட வசனம்

பூருவகிரந்தத்தின் அனுசாரமாகவே செலுத்தத்தக்கதாய் இருத்தலானும் எனக் கூறுகின்ருர்.

யாதொரு சாஸ்திர தீபிகையின் வசனம் கூறப்பட்டதோ அதுவும் பூர்வப் பிரவிர்த்தியை நிமித்தமாகவுடைய சாஸ்திரத்தால் உற்பன்னமாயினும் பூர்வ பிராயச்சித்த ஞானம் மித்தையாகின்றது. பாதிக்கப்பட்டமையினலும் உத்ரபிராயச்சித்த ஞானத்திற்கோ சொற்பமும் பாதம் இன்ருெம். என பூர்வ கர்த்தவ்யத்தன்மையின் பாத்தியத்தன்மையை பிரதிபாதிக்கின்ற கிரந்தத்தின் முடிவில் படிக்கப்பட்டமையின். நிமித்த உற்பத்திக்கு முன்பு அதாவது நிமித்தத்தின் உற்பத்தி இல்லாதபோது வேறு பிரகாரமாக கர்த்தவ்யம் இருந்தபோதிலும் எனச், செய்து .சிந்தாமாத்திரபரமாம். (பிரெளடிவாதமாம்) உத்தர நிமித்தத்தின் உற்பத்திக்கு முன்பு பூர்வ நிமித்தத்தையுடைய கர்த்தவ்யத்தன்மை வாஸ்தவமாக இருந்தது என்னும் தாத்பரியமுடையதன்ருெம். பூருவகிரந்த சமுதாயத்திற்கு விரோதம் வருதலின்.

அவதாரிகை

காண்பித்ததைக் காண்கின்ற மீமாம்சகர்கள் நிற்குக. குசலரான எம்மால் கற்பிக்கப்பட்ட சுருதியின் பொருளிற்குப் பொருந்தாமையாது என வினவுகின்ருன்.

மீமாம் சகரது மரியாதை இருக்கட்டும். முதலில் பசுமையும் அதன்பின் சென்னிறமும் என்னும் வடிவினதாகிய திருஷ்டாந்தத்தால் கிரமமாக கர்த்தவ்யத்தன்மைஇரண்டின் உற்பத்தியை அங்கீகரிக்கின் விரோதம் என்னே, உத்தரம் சொல்லப்படுகின்றது, அஃதாமாறு உத்தர நிமித்தத்தினையுடைய கர்த்தவ்யத்தன்மையின் உற்பத்தியால் எது நிவர்த்தியாமோ அக்கர்த்தவ்யத்தன்மை யென்பது யாது. பூர்வ நைமித்திக யாகத்தின்கண் கிருதி சாத்தியத்துவ யோக்கியத்தன்மையாம் என்னற்க. அஃது பின்னரும் நீங்காமையின். பயனை முகமாகவுடைய கிருதி சாத்தியத்தன்மையும் அன்ருெம், அஃது முன்னரும் உற்பத்தியாகாமையின். எதை அனுஷ்டிக்காதபோது யாகத்திற்குக் குறைவுவருமோ அத்தன்மைத்து அல்லது அங்கத்தன்மைத்தாம் என்பதும் சரி அன்று.

அனனுஷ்டானத்தின்கண் யாகத்தின் வைகல்லியப் பிரயோஜகத்தன்மை நியம (வியாப்தி) விசேஷவடிவ மாதலானும், கருமாங்கத்தன்மை பலவுபகாரித்தன்மையால் அல்லது சொரூப உபகாரித்தன்மையால் காரணத்தன்மை விசேஷ வடிவமாதலானும், அவைகட்கு அதாவது வியாப்யத்தன்மை காரணத்தன்மைகட்கு ஓர் போதயதாந்தன்மை பொருந்தாமையால். சுவாபாவிகத்தன்மை சித்திக்கும் பொருட்டுப் பின்னுண்டாகும் விரோதமான அபச்சேதத்தின் அபாவமுடைய யாகத்திற்குப் பூர்வ அபச்சேதத்தை நிமித்தமாக வுடையது அங்கமாம். ஆண்டே அதன் அனுஷ்டானம் இன்மை யாகத்தின் வைகல்லியப் பிரயோஜகமாம் என விசேஷிக்கத் தக்கதாயிருத்தலால் பின்னுண்டாகும் வேறு அபச்சேதமுடைய யாகத்தின்கண் பூர்வ அபச்சேதத்தை நிமித்தமாக உடைய அங்கத்தின்கண் யாகத்தின் அங்கத் தன்மையாவது அதன் அனனுஷ்டானத்தின்கண் யாகத்தின் வைகல்லியப் பிரயோஜகத் தன்மையாவது பின்னுண்டாகும் அபச்சேத உற்பத்திக்கு முன்பு சம்பவியாமையின், ஒரு வஸ்து வானது ஒரு வஸ்துவைக் குறித்துச் சொற்பகாலம் வியாப்பிய மாகவும் பிறகு வியாப்பிய மின்றியதாகவும் சொற்பகாலம் காரணமாகவும் பிறகு காரணமின்றியதாகவும் ஓரிடத்தும் காணப்படவில்லை. யுக்திக்கும் பொருத்த முடையதன்றும். கர்த்தவ்யத்தன்மை யென்பது போதல் வருதல் யோக்கிய மாய வேறு தருமமேயாமெனக் கற்பிக்கத்தக்கதாம் என்பதும் சரியன்று பிரமாண மின்மையின். விரோதமுள்ள அபச்சேத சாஸ்திரங்கட்குப்பத ஆகவனீய சாஸ்திரங்கட்குப் போன்று வியவஸ்தை பொருந்துதலின் ஆதலால் கிரமமாக கர்த்தவ்யத்தன்மை இரண்டன் உற்பத்தியைக் கூறும் வசனம் நிர்விஷயமாம்.

அபச்சேதம் = நழுவுதல்.

அவதாரிகை

அற்றேல் அபச்சேத நியாயத்தால் சுருதிக்குப் பிரத்தியக்ஷத்தின் அபேக்ஷையால் பிரபலத்தன்மை அறியப்படுவது போன்று, உபக்கிரம அதிகரண நியாயத்தால் பிரத்தியக்ஷத்திற்கும் சுருதியின் அபேக்ஷையால் பிரபலத்தன்மை அறியப் படுதலால் அவைகட்குப் பாத்திய பாதகத்தன்மையின்கண் வினிகமனம் இன்றும் என்னும் கருத்தால் வினவுகின்றுன்.

பலமுடையதாந்தன்மையிள் வியவஸ்திதி விசாரம்

அற்றேல் உபக்கிரம அதிகரண நியாயத்தால் விரோதி உண்டாகாமையின் பிரத்தியக்ஷமே. ஆகமத்தைப் பார்க்கிலும் பலமுடையதாக ஏன் ஆகாது எனின்.

அவதாரிகை

திருஷ்டாந்தத்தின் விஷமத்தன்மையால் பரிகரிக்கின்றார்.

உத்தரம் சொல்லப்படுகின்றது யாண்டு ஏகவாக்கியத் தன்மை தோற்றுகின்றதோ. ஆண்டு ஒரே பொருளின்கண் முடிவு பெருதல் வேண்டும். பொருள் வேறாயின் அறியப்பட்ட ஏகவாக்கியத்தன்மைக்கு அழிவுவரும் ஆதலின். ஆண்டு முதலில் விரோதம் உண்டாகாத "பிரஜாபதி வருணன் பொருட்டு குதிரையைக் கொடுத்தார்" என்பது முதலிய பிரஜாபதியின் அனுஷ்டானத்தைக் கூறும் வாக்கியத்தின் சமானமான உபக்கிரமமாகிய அர்த்தவாதத்தால் தாதாவிற்கு இஷ்டியின்கண் புத்தி ஆரோபிக்கப்பட்டபோது அதன் விரோத அர்த்தத்தையுடைய 'எவ்வளவு குதிரைகளைக் கிரகிக்கின்றானோ' அவ்வளவு வருணசம்பந்தியான நான்கு கபால புரோடாசங்களை ஓமம் செய்க; என முடிவிலுள்ள வாக்கியம், உண்டான விரோதியை யுடைமையால் கேட்டபடி பொருளைச் சமர்ப்பித்தலால் அதன் ஏகவாக்கியத்தன்மையை அடையாததாய் ஏகவாக்கியத்தன்மை சித்திக்கும் பொருட்டுப் பிறவினைப் பொருளை (கிரகிப்பித்தலை) உள்ளடக்கி அதன் அனுசாரமாகவே தன்னை அடைகின்றது. ஆதலின் உபக்கிரமத்திற்குப் பிரபலத்தன்மையாம். யாண்டு பரஸ்பரம் ஏகவாக்கியத்தன்மை தோற்றுகிறதில்லையோ ஆண்டு முன்னுள்ளதைக் கருதாது அடையப்பட்ட சொரூபமுள்ளதாய் விரோத அர்த்தமுள்ளதாய் வாக்கியம் தனது பொருளைப் போதிப்பிக்கின்றதேயாம் ஆதலின் ஆண்டு முன்னுள்ளதற்குப் பிரபலத்தன்மை இன்றாம். இதனாலேயே முன்னுள்ள சோடசி கிரகண வாக்கியத்தினைக் கருதாது அதன் அக்கிரகணவாக்கியத்திற்கும் தனது பொருளைப் போதிக்கும் தன்மை, அங்கீகரிக்கப்படுகின்றது. ஆனால் இரண்டு வாக்கியத்திற்கும் வெவ்வேறு விஷயம் இன்மையின் வழிஇல்லாமையால் அவ்வதிராத்திர யாகத்தின்கண்ணேயே

விகற்பமாக அனுஷ்டித்தல் அங்கீகரிக்கப்படுகின்றது. இவ்வாருகவே அத்வைத ஆகமத்திற்குப் பிரத்தியக்ஷத்தோடு ஏக வாக்கியத்தன்மைச் சங்கை இன்மையின் முன்னுள்ளதாயினும் அந்தப் பிரத்தியக்ஷத்தைக் கருதாது தனது பொருளைப் போதிக்கும் தன்மைத் தடையற்றதாம்.

அவதாரிகை

அபச்சேத நியாயத்தின் பிரவிருத்தியைப் பிரகிருதத்தின்கண் சங்கை சமாதானங்களால் நிரூபித்து முடிக்கின்ருர்.

அதன் பொருளின் போதத்தை யுண்டுபண்ணுவதின்கண்ணும் முன்னுண்டாகும் ஞானம் பின்னுண்டாகும் ஞானத்தைப் பாதிக்காமலேயே உண்டாகின்றது. பின் ஞானம் உற்பத்தியாகாமையினுல். பின் ஞானத்திற்கு வேறு விதமாக உற்பத்தி பொருந்தாமையினுல் முதல் ஞானத்தின் பாதத்தாலேயே உற்பத்தியாம். என்னும் அபச்சேத நியாயத்திற்கே பிரவிருத்தியாம். உபக்கிரம நியாயத்திற்குப் பிருவிருத்தி இன்ரும்.

அவதாரிகை

முன் உண்டாகின்ற பிரத்தியக்ஷத்திற்கும் பின் உண்டாகும் சப்தத்தாலே பாதம் உண்டாவதன்கண் உதாகரணத்தைக் கூறுகின்ருர்.

இதனுலேயே உலகின்கண்ணும் முன்உண்டான சுத்தி இரஜதப் பிரத்தியக்ஷமும் ஆப்தன் உபதேசத்தால் பாதிக்கப்படுகின்றது என்க.

## 39. சுருதியின் உபஜீவ்யத்தன்மையானே பிரத்தியக்ஷத்தின் அபாதசங்கையின் நீக்க விசாரம்

சங்கை

அற்றேல் ஆகமத்திற்குப் போன்று பிரத்தியக்ஷத்திற்குச் சொருபமாக பிரபலத்தன்மை இல்லாவிடினும் உபஜீவியத்தன்மையால் பிரத்தியக்ஷத்திற்கே பிரபலத்தன்மையாமென்பதை நீக்கமுடியாது. அபச்சேத சாஸ்திரங்களுக்கோவெனின். பூர்வம் பரத்திற்கு உபஜீவியம் அன்ரும். ஆதலால்

பரத்தால் பூர்வத்தின் பாதம் பொருத்தமாம். ஈண்டோ எழுத்துபதம் முதலியவற்றின் சொரூபத்தைக் கிரகிக்கும் தன்மையால் மித்தியாத்தன்மையைப் போதிக்கின்ற ஆகமத்தைக்குறித்தும் பிரத்தியக்ஷத்திற்கு உபஜீவியத்தன்மை உண்மையால் ஆகமத்திற்கே அதன் விரோதமான மித்தியாத் தன்மையைப் போதிக்காத்தன்மை வடிவ பாதம் பொருத்தமாம்.

அவதாரிகை

உபஜீவிய விரோத சங்கை உண்டாகும்போது முற்கூறிய பரிகாரத்தை நினைப்பூட்டுகிறார்.

மித்தியாத்தன்மை சுருதியால் எழுத்து பதம் முதலியவற்றின் சத்தியத்தன்மையின் அம்சம் கெடுக்கப்படினும் உபஜீவிய வடிவ சொரூப அம்சம் கெடுக்கப்படாமையின் உபஜீவிய விரோதம் இன்றும் என்னற்க. ஈண்டு நாநாவானவை சிறிதும் இல்லை என்பது முதலிய சுருதிகளால் சொரூபமாகவே பிரபஞ்சத்தின் அபாவத்தை அறிவித்தலின்.

அவதாரிகை

சொரூப நாசத்தை அங்கீகரித்தே உபஜீவிய விரோதத்தைப் பரிகரிக்கின்றார்.

ஈண்டு சில நூலாசிரியர் கூறுகின்றனர். விருஷத்தைக் கொண்டுவா என்பது முதலிய வாக்கியத்தைச் சிரவண தோஷத்தால் விருஷபத்தைக் கொண்டுவா என்பதாதி வடிவத்தால் கேட்கின்றவனுக்கும் சாப்தப் பிரமையைக் காண்டலால் சாப்தப் பிரமையின்கண் எழுத்து பதம் முதலியவற்றின் பிரத்தியக்ஷம். பிரமை பிராந்தி இரண்டிற்கும் பொதுவாகவே அபேக்ஷிக்கப்படுகின்றது. ஆதலின் அத்வைத ஆகமத்திற்கு எழுத்து பதம் முதலியவற்றின் பிரத்தியக்ஷ மாத்திரம் உபஜீவியமாம். அதன் பிரமை அன்றும். இவ்வாறுகவே எழுத்து பதம் முதலியவற்றின் சொரூபத்தை நாசம் செய்யினும் உபஜீவிய விரோதம் இன்றும் என்க.

அவதாரிகை

உபஜீவிய விரோதத்தை வேறு பிரகாரத்தால் பரிகரிக்கின்றார்.

வேறு சிலரோ இங்ஙனம் கூறுகின்றனர்.

சாப்தப் பிரமையின்கண் எழுத்து பதம் முதலியவற்றின் சொரூப சித்தியின் அபேக்ஷை இன்றேனும் அயோக்கிய சப்தத்தால் பிரமை உதயமாகாமையின் யோக்கியத்தன்மை யின் சொரூப சித்தியின் அபேக்ஷையுளது.

விசேஷ உரை = பூர்வ மதத்தின்கண் பிரத்தியக்ஷ ஞான மாத்திரத்தை ஆசிரயித்து விஷயமாகிய எழுத்து பதம் முதலிய வடிவம் உபஜீவியம் அன்றெனக் கூறப்பட்டது அது பொருந்தாது. நிர்விஷயப் பிரத்தியக்ஷ ஞானம் பொருந்தா மையின். ஆதலால் எழுத்து பதம் முதலிய வடிவமும் அங்கீ கரிக்கத்தக்கதேயாம். இவ்வாருகவே உபஜீவிய விரோதத் தின்கண் முற்கூறிய சமாதானம் சரியன்று ஆகவே எழுத்து முதலியவற்றின் யோக்கியத்தன்மைக்கு உபஜீவியத்தன்மை தள்ளத்தகாததாம். ஆதலின் அதன் விரோதம் பூர்வ மதத் தின்கண் அவசியம் உண்டாம் என்பது கருத்து.

உபஜீவியம் = ஆசிரயம், ஆதாரம். எனினும் பொருந்தும்

அவதாரிகை

அற்றேல் சைதன்னியத்தின் வேருக சம்பூர்ண சகத்தும் அங்கீகரிக்கப்படுமாயின் அதனைக் கிரகிக்கின்ற சவிஷயக பிரத்தியக்ஷாதிகட்கு உபஜீவியத் தன்மையுண்மையின் அதன் விரோதமாம் எனின் அதற்குக் கூறுகின்ருர்.

அதன் அபேக்ஷை இருப்பினும் உபஜீவிய விரோதம் இன்ரும். ஈண்டு நாநாவானவை சிறிதும் இல்லை என்னும் சுருதியால் நிஷேதிக்கப்படினும் பிரஹ்ம ஞானம் உண்டாகும் வரை தொடர்ந்திருப்பதும் அர்த்தக்கிரியையோடு கூடியதும் ஆன அசத்தின் விலக்ஷண பிரபஞ்ச சொரூபத்தை அங்கீ கரித்தலின்.

அவதாரிகை

அசத்து விலக்ஷண சொரூபத்தை அங்கீகரியாவிடின் பூர்வ மதத்தைப்பற்றிய பாதகத்தைக் கூறுகின்ருர்.

அசத்து விலக்ஷணத்தை அங்கீகரியாவிடின் பிரத்தியக்ஷம் முதலிய வியாவகாரிகப் பிரமாணங்கட்கு நிருவிஷயத்தன்மை பிராப்தியாமாதலின்.

அவதாரிகை

பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மையைக் கூறும் வாதி வினவுகின்ருன்.

பிரபஞ்சம் சொரூபமாக நிஷேதிக்கப்படின் பிரபஞ்சத்தின் சொரூபம் எவ்வாறு சித்திக்கும். நிஷேதத்திற்குப் பிரதியோகியின் நிவர்த்தக வடிவத்தன்மையை அங்கீகரியாவிடின் வியாகாத தோஷம் வருதலின் எனின்.

சமாதானம்

சுத்தியின்கண் இது இரஜதமெனவும் இது இரஜதம் அன்றெனவும் உண்டாகின்ற இரண்டு பிரதீதிகளை அனுசரித்து அதிஷ்டானத்தின்கண்ணுள்ள அத்தியஸ்தத்தின் அபாவத்திற்குப் பாத பரியந்தம் தொடர்ந்திருப்பதாகிய அசத்விலக்ஷண பிரதியோகியின் சொரூபத்தை சகிக்கும் தன்மையை அங்கீகரித்தலின் இனிக் கூறப்படும் ஏதுவால் பிரபஞ்சத்தைச் சொரூபமாக நிஷேதம் செய்யின் முயற்கோடு போன்று அசத்துவமேயாம். என்பது நீக்கப்பட்டது. பிரஹ்ம ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்க சொரூபத்தை அங்கீகரித்தலால் முயற்கோட்டின் விஷமத்தன்மையுண்மையின்.,

இவ்வத்தியஸ்தத்திற்கு அதிஷ்டானத்தின்கண் சொரூபமாக நிஷேதமாயின் அதிஷ்டானத்தினும் வேறிடத்து அதற்குச் சொரூபமாக நிஷேதம் சுவபாவமாகவே சித்தித்ததாம். ஆதலின் அதற்குச் சர்வதேசகால சம்பந்தி நிஷேதப் பிரதியோகித்தன்மையின் அடைவால் அசத்துத்தன்மை நீக்க முடியாதாம், சர்வதேச கால சம்பந்தி நிஷேதப் பிரதியோகித்தன்மை அசத்துத்தன்மையாமென இவ்வாறு அசத்துத்தன்மையை நிர்வசனம் செய்தலின். வேறு பிரகாரத்தால் அசத்துத்தன்மையின் நிர்வசனம் பொருந்தாமையின் எனின்.

சமாதானம்

அசத்திற்குச் சர்வதேசகால சம்பந்தி நிஷேதப்பிரதியோகித்தன்மையை அங்கீகரிக்கின்றவனல். அவ்வசத்திற்கு அத்தகைய பிரதியோகித் தன்மையின்கண் பிரத்தியக்ஷத்

திற்குச் சர்வதேச காலங்களின் பிரத்தியக்ஷத்தைச் செய்தல் கூடாமையாலும். ஆகமத்திற்கு அத்தகைய ஆகமம் தோற்ருமையாலும். அந்தப் பிரத்தியக்ஷ ஆகமங்களைப் பிரமாணம் ஆக்குதற்குக் கூடாமையால் அனுமானமே பிரமாணமாக்கத் தக்கதாம். ஆகவே அவ்வனுமானத்தின்கண் சத்தின் வியாவிர்த்தமான யாதொரு நிஸ்ஸொரூபத்துவ வடிவலிங்கம் சொல்லத்தக்கதாமோ முதலில் அறியப்பட்ட அவ்விலிங்கத்திற்கே அசத்துத்தன்மையின் நிர்வசனத்தன்மை பொருந்துதலின் எனக் கூறுகின்றனர்.

### அவதாரிகை

உபஜீவிய விரோதத்தினை மற்ருேர் பிரகாரத்தால் பரிகரிக்கின்ருர்.

சில நூலாசிரியரோ ஈண்டு நாநாவானவை சிறிதுமில்லை என்னும் சுருதிக்கு சத்தியத்தன்மையால் பிரபஞ்சத்தின் நிஷேதத்தின் கண்ணே தாத்பரியமாம். சொரூபத்தால் நிஷேதத்தின்கண் தாத்பரியமின்ரும், நிஷேதத்திற்குப் பிரதியோகியின் சொரூபத்தை நிவர்த்திக்கும் தன்மை இன்ருமாயின் அதற்கு அதன் நிஷேதத்தன்மை பொருந்தாமையின் பிரதியோகியின் சொரூபத்தை நிவர்த்திக்குந்தன்மை உளதாயின் பிரத்தியக்ஷ விரோதமாமாதலின்.

சத்தியத்தன்மையும் கடமிருக்கிறது என்பது முதலிய பிரதியக்ஷத்தால் சித்தித்தமையின் அச்சத்தியத்தன்மை வடிவத்தாலும் நிஷேதம் பொருத்தமன்ரும். என்னற்க. பிரத்தியக்ஷத்திற்குச் சுருதி விரோதத்தை நீக்கும் பொருட்டு பிரத்தியத்தன்மையின் ஆபாசவடிவ வியாவகாரிக சத்தி சத்தியத்தன்மையைப் பொருந்துதலின். பிரபஞ்சத் யத்துவ விஷயத்தன்மையைப் பொருந்துதலின். பிரபஞ்சத் தின் சத்தியத்தன்மைக்கு வியாவகாரிகத்தன்மையை அங்கீகரிக்கின் பிரமத்தின் கண்ணுள்ள பாரமார்த்திக சத்தியத் தன்மைக்குப் பிரபஞ்சத்தின்கண் பிராப்தி இன்மையால் அவ்வடிவத்தால் பிரபஞ்சத்தின் நிஷேதம் பொருந்தாது என்னற்க. சுத்தியின்கண் இரஜதத்தின் ஆபாசப் பிரதீதியே சத்திய இரஜதப் பிராப்தியாம் ஆதலின் அதன் நிஷேதமாம். இதனலேயே இது இரஜதமன்று மற்ருே அதுவாம் இது இதனுடைய பசுவன்று மற்ருே அதுவேயாம் ஈண்டு இருப் என்னுடைய சைத்திரன் அன்றுமற்ருே வீட்டிலிருப்பவன் என பவன்

நிஷேதிக்கப்படுகின்றதற்கு வேறிடத்தில் எங்ஙனம் சத்துவம் அறியப்படுகின்றதோ அங்ஙனம் சத்தியத்தன்மையின் ஆபாசப் பிரதீதியே சத்தியத்தன்மையின் பிராப்தியாம் ஆதலின் அதன் நிஷேதம் பொருத்தமாமென்க ஆதலால் எழுத்து பதங்களின் யோக்கியத்தன்மை முதலிய சொரூபத்தைக் கெடுக்கிறது என்னும் சங்கை இன்மையால் உபஜீவ்ய விரோதம் இன்றும் எனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

பிரபஞ்சத்தின்கண் பாரமார்த்திக சத்தியத்தன்மையின் பிராப்தி இன்மையால் நிஷேதம் பொருந்தாது என்று சங்கை உண்டாக மூவித சத்தையை ஆசிரயித்து பரிகாரம் தெரிசிப்பிக்கப்பட்டது. இப்போது யாண்டும் சத்தை ஒன்றே என்னும் பக்ஷத்தின்கண் சத்தியத்தன்மை பிராப்தியின் அபாவ சங்கையைப் பரிகரிக்கின்றார்.

வேறு சிலரோ பிரமத்தின்கண் பாரமார்த்திக சத்தியத்தன்மையாம் பிரபஞ்சத்தின்கண் வியாவகாரிக சத்தியத்தன்மையாம் சுத்தி இரஜதாதியின்கண் அதனினும் நிகிருஷ்டமான பிராதிபாசிக சத்தியத்தன்மையாம் என சத்தையின் மூவிதத்தை அங்கீகரிக்கின்றதில்லை அதிஷ்டானப் பிரமத்தின் கண்ணுள்ள பாரமார்த்திக சத்தையின் சம்பந்தத்தாலேயே கடாதியின்கண்ணும் சுத்தி இரஜதாதியின் கண்ணும் சத்தியத்துவ ஞானம் பொருந்துதலால். போலி சத்தியத்தன்மையைக் கற்பித்தலின்கண் பிரமாணமின்மையின். இவ்வாறாகும் போது பிரபஞ்சத்தின்கண் சத்தியத்தன்மையின் பிரதீதி இன்மையானும் அதன் தாதாத்மியத்தை யடைந்துள்ள பிரமத்தின்கண்ணுள்ள சத்தியத்தன்மைப் பிரதீதியினாலேயே அவிவேகத்தால் பிரபஞ்சத்தின்கண் சத்தியத்தன்மையால் பிரபஞ்ச நிஷேதத்தின்கண் உபஜீவிய விரோதம் இன்றும் அப்பிராப்த நிஷேதமும் இன்றும்.

சங்கை

அற்றேல் கடாதிப் பிரபஞ்சத்தின்கண், பிரமசத்தையினாலேயே சத்துவ வியவகாரம் சித்திக்கும்போது வேறு சத்துவம் கற்பிக்க வேண்டியதில்லை அதன் கற்பனையின்கண்

பிரமாணம் இன்மையானும் லாகவுத்தானும் எனின். அப்போது அதிவியாப்தியாம் என்று வினவுகின்றான்.

பிரமத்தின் கண்ணுள்ள பாரமார்த்திக சத்தையினும் வேறாக பிரபஞ்சத்தின்கண் போலி சத்துவத்தை அங்கீகரியா விடின் தூரத்திலுள்ள சத்திய இரஜதத்தினும் வேறாக சுத்தியின்கண் பிராதி பாசிக இரஜதத்தின் உற்பத்தி எதன் பொருட்டு அங்கீகரிக்கப்படுகிறது எனின்.

சமாதானம்

கௌரவம் பிராமாணிக மாதலால் தோஷத்தின் பொருட்டன்றாம் என்னும் கருத்தால் பரிகரிக்கின்றார். தூரத்திலுள்ளதும் நேத்திர சம்பந்தமற்றதுமான வஸ்துவின் அபரோக்ஷத் தன்மை சம்பவியாமையால் அதன் நிருவாகத்தின் பொருட்டு அதனை அங்கீகரித்தலின்.

## 40. பிரதிபிம்பத்தினது சத்தியத் தன்மையின் நீக்க விசாரம்

அற்றேல் அபரோக்ஷத்தின் பொருட்டுப் பிராதிபாசிக இரஜத உற்பத்தியை அங்கீகரிக்கின் பிரதிபிம்பப் பிராந்தி ஸ்தலத்தின்கண்ணும் கழுத்திலுள்ள முகத்தினும் வேறாக கண்ணாடியின்கண் பிராதிபாசிக முகத்தின் உற்பத்தி அங்கீகரிக்கத்தக்கதாம்.

அவதாரிகை

பிரதிபிம்பத்திற்குப் பிம்பத்தோடு அபின்னத்தன்மை உடன்படும்போதும் பிரதிபிம்பத்தின் அபரோக்ஷம் சம்பவிக்கின்றது ஆதலின் அது அங்கீகரிக்கத்தக்கதன்றாம் எனின் அதற்குக் கூறுகின்றான்.

தனது கழுத்திலுள்ள முகத்தின்கண் மூக்கு முதலியவற்றால் அவச்சின்னமான பிரதேசத்தின் அபரோக்ஷம் சம்பவிப்பினும் நேத்திர கோளகம் நெற்றி முதலிய பிரதேசத்தின் அபரோக்ஷம் பொருந்தாமையானும் பிரதிபிம்பப் பிராந்தியின்கண் நேத்திர கோளகம் முதலிய பிரதேசத்தின் அபரோக்ஷம் காணப்படுதலானும் என்க.

அவதாரிகை

பிம்பப் பிரதிபிம்பங்கட்கு அபேதத்தை உடன்படுங்கால் பிரதிபிம்பத்தின் அபரோக்ஷம் தனது முகப் பிரதிபிம்ப ஸ்தலத்தின்கண் சம்பவியாதாமாயின் அப்போது பிரதிபிம்பம் பிம்பத்தினும் வேருய் மித்தையாகவே இருக்குக அத்வைத வாதிக்கு யாது குறைவு என்று வினவுகின்ருன்.

பிம்பத்தினும் வேருக பிரதிபிம்பத்தினை அங்கீகரித்தலால் எனக்கு இஷ்டத்தின் அடைவாமெனின் அற்றன்று பிரமத்தின் பிரதிபிம்பமாகிய ஜீவனுக்கும் அதனின் பேதத்தால் மித்தியாத் தன்மை பிராப்தியாதலின்.

அவதாரிகை

பிம்பப் பிரதிபிம்பங்கட்கு உலகில் பேதம் இன்மையான் கூறிய தோஷம் இன்ருமெனப் பரிகரிக்கின்ருர்.

ஈண்டு விவரணத்தை அனுசரித்தவர்கள் கூறுகின்றனர் கழுத்திலுள்ள முகத்தின்கண்ணேயே கண்ணுடியாகிய உபாதியின் சமீப தோஷத்தால் கண்ணுடியில் உள்ளது என்னும் தன்மை எதிர்முகத் தன்மை பிம்பத்தின் பேதம் இவைகட்கு அத்தியாசம் சம்பவித்தலால் கண்ணுடியின்கண் முகத்தின் அத்தியாசம் கற்பிக்கத்தக்கதன்ரும் கௌரவம் ஆதலின். கண்ணுடியின்கண் முகமின்ருமென சம்பந்த மாத்திரத்தினைப் பாதித்தலால். பிரதிபிம்பம் பிம்பத்தின் வேருய் மித்யா வஸ்துவாயின் இது முகம் அன்று என சொருபத்தின் பாதம் உண்டாதல் வேண்டும் ஆதலினுலும் கண்ணுடியின்கண் என்னுடைய முகம் தோற்றுகின்றது என தன்னுடைய முகத்தின் அபேதப் பிரத்ய பிஞ்ஞையானும் என்க.

அவதாரிகை

பிம்பப் பிரதிபிம்பங்களின் அபேத பக்ஷத்தின்கண் கழுத்திலுள்ள முகத்தின் நேத்திர கோளகம் முதலான பிரதேசங்களில் தன்னுடைய நேத்திர சம்பந்தம் இல்லாமையால் பிரதிபிம்பத்தின் சம்பூர்ண பிரத்தியக்ஷம் சம்பவியாது என்று யாதொன்று கூறப்பட்டதோ அதனை அனுவாதம் செய்து நிராகரிக்கின்ருர்.

கழுத்திலுள்ள அதிஷ்டான முகத்திற்கு அபரோக்ஷத் தன்மையின் அசம்பவமும் இன்ரும் உபாதியால் தடுக்கப்

பட்ட நேத்திர ரஸ்மிகளுக்குத் திரும்பி வந்து பிம்பத்தினைக் கிரகிக்கும் தன்மை நியமத்தினை தடை நிகழ்ந்துழி திரும்பும் கொடி முதலியவற்றினைப் போன்று அங்கீகரித்தலின்.

அவதாரிகை

பிரதிபிம்ப அத்தியாசவாதியால் சமீபத்திலுள்ளதற்குப் பிம்பத்தன்மை அங்கீகரிக்கப்படுகின்றதில்லை ஆதலால் கழுத்திலுள்ள முகத்திற்கு பிம்பத்தன்மை சித்திக்கும்பொருட்டுத் தனது நேத்திரசம்பந்தத்தின் அபேக்ஷையின்மையால் கூறிய நியமம் வாதியால் ஆதரிக்கத்தக்கதன்றும் எனின் அதற்குக் கூறுகின்றார்.

அந்நியமத்தை அங்கீகரியாவிடின் அதாவது பிம்பத்தின் சம்பந்தம் சாக்ஷுஷ பிரதிபிம்ப அத்தியாசத்திற்குக் காரணம் ஆகாதாயின் பரமாணுவிற்கும் சுவர் முதலானவற்றால் மறைபட்டுள்ள தூலவஸ்துவிற்கும் சாக்ஷுசப் பிரதிபிம்பப் பிராந்தி உண்டாதல் வேண்டும் ஆதலின்.

அவதாரிகை

பிரதிபிம்ப அத்தியாசத்தின்கண் பிம்ப சம்பந்தத்திற்கு ஏதுத் தன்மையின்றியே கூறிய அதிவியாப்தியை பிரதிபிம்பவாதி பரிகரிக்கின்றான்.

மறைபடாததும் மகத்பரிமாணமுடையதும் உத்பூத உருவமுடையதும் ஆகிய வஸ்துவிற்கே சாக்ஷுஸப் பிரதிபிம்பப் பிராந்தியாம். மற்றவற்றிக்கு இன்றும் என நியமமாம். ஆதலால் சுவர் முதலியவற்றால் மறைபட்ட முகாதிக்கும் பரமாணுவிற்கும் வாயுவிற்கும் சாக்ஷுஸப் பிரதிபிம்பத்தின் பிராப்தி இன்றும் எனின்.

சமாதானம்

சாக்ஷுஸ ஞானத்தை யுண்டுபண்ணுவதில் பிரசித்தி பெற்றுள்ள பிம்பத்தின் தூலத்தன்மை உத்பூத உருவம் ஆகிய இவைகட்கு உபயோகம் சம்பவிக்கும்போது வேறு பிரகாரத்தால் உபயோகத்தைக் கற்பித்தல் பொருந்தாமையானும் சுவர் முதலிய வியவதானத்திற்குத் தடுக்கப்பட்ட நேத்திர ரஸ்மிகளின் சம்பந்தத்தைக் கெடுத்தலின்றியே பிரதிபிம்ப பிராந்தி ஸ்தலத்தின் பிரதிபந்தகத் தன்மை இருக்குமாயின் அப்படியே கடப் பிரத்தியக்ஷம் முதலிய ஸ்தலத்தின்கண்ணும்

சுவர் முதலியவற்றிற்கும் பிரதிபந்தகத் தன்மை சம்பவித்த லால் நேத்திர சம்பந்த மாத்திரத்திற்குக் காரணத்தன்மை யின் லோபம் பிராப்தியாதலானும் கண்ணுடியின்கண் மித்தியா முகத்தின் அத்தியாச வாதியாலும் அத்தியாசத்தின் காரணமாகிய தோஷம் சம்யோகம் சமஸ்காரம் என்னும் மூன்றனுள் அடங்கிய சமஸ்கார சித்தியின் பொருட்டு நேத்திர ரஸ்மிகட்கு ஓர்போது திரும்பி வந்து தனது முகத்தை கிரகிக் கும் தன்மையைக் கற்பித்தலாலேயே முன்னனுபவம் சமர்த் திக்கத்தக்கதாய் இருத்தலானும்.

மூக்கு முதலிய பிரதேசத்தால் வளைபட்ட முன்னனுபவத் தாலேயே சமஸ்காரம் பொருந்தும் என்னற்க. அத்தகைய அனுபவமாத்திரத்தால் நேத்திர கோளகம் முதலிய பிரதி பிம்ப அத்தியாசம் பொருந்தாமையின் தடாக ஜலத்தில் கரை யிலுள்ள மரத்தின்மீது ஏறியுள்ள முன்பு ஓர் போதும் பார்க்கப்படாத புருஷனது பிரதிபிம்ப அத்தியாச ஸ்தலத் தின்கண் எவ்வாற்றுனும் முன் அனுபவத்தை நிருபிக்க முடியா மையானும் கூறிய பிரகாரத்தால் உபாதியால் தடுக்கப்பட்ட நேத்திர ரஸ்மிகட்குப் பிம்பத்தை அடைந்து அதனை கிரகிக்குந் தன்மை அவசியம் சொல்லத்தக்க தாகுங்கால் பிரயோஜன வசத்தால் கண்ணுடி முதலியவற்ருல் தடுக்கப்பட்டவைகட்கே பிம்பத்தை அடைந்து அதனைக் கிரகிக்குந்தன்மையாம். தலமுதலியவற்ருல் தடுக்கப்பட்டவைகட்கு இன்ரும். நிர்மல மின்றிய தாம்பர முதலியவற்ருல் தடுக்கப்பட்டவைகட்கு மலின உபாதி சம்பந்த தோஷத்தால் முகம் முதலியவற்றின் ஆகார விசேஷத்தைக் கிரகிக்குந் தன்மையின்ரும். நேரே சூரியனைக் குறித்துச் செல்கின்ற ரஸ்மிகட்குப் போன்று உபாதியை அடைந்து திரும்பிச் செல்கின்றவைகட்கு அவ்வாறு சூரிய தேஜசால் தடையின்ரும் ஆதலால் பிரதி பிம்ப சூரியனைப் பார்ப்பதன்கண் நேரே சூரியனைப் பார்ப் பதில் போன்று முடியாமை இன்ரும்.

அவதாரிகை

அற்றேல் பிரதிபிம்ப உபாதியாயுள்ள ஜலத்தால் தடுக்கப்பட்ட நேத்திர ரஸ்மிகட்குப் பிம்பதேசத்தின் பிராப் தியை அங்கீகரிக்கின் ஜலத்தின் உள்ளேயுள்ள மணல் முதலியவற்றின் பிரத்தியக்ஷம் உண்டாகலாகாது சம்பந்தம்

இன்மையின் என்னும் தூஷணமும் நீக்கப்பட்டதெனக் கூறுகின்ருர்.

ஜலாதி உபாதியின் சம்பந்தம் உண்டாகும்போது உபாதியால் தடுக்கப்பட்ட சிலவற்றிற்குப் பிம்பப் பிராப்தி உளதாயினும் சிலவற்றிற்கு ஜலத்தின் உள்செல்லுதலால் உள்ளே மணல் முதலியவற்றின் கிரகணமாம் என்பது முதலியவற்றைக் கற்பித்தலால் யாதொரு தோஷமும் இன்ரும் என்க.

அவதாரிகை

இவ்வாறு பிம்பப் பிரதிபிம்பங்கட்குப் பேதபக்ஷத்தைக் கண்டித்தல் வாயிலாக அவற்றின் அபேதபக்ஷம் நிரூபிக்கப் பட்டது இப்போது அவைகளின் அபேதத்தை நீக்குதல் வாயிலாக பேதபக்ஷத்தை நிரூபிக்கின்ருர். அத்வைத வித்தியாசாரியரோ பிரதிபிம்பத்திற்கு மித்தியாத்தன்மையை அங்கீகரிக்கின்றவரும் மூன்றுவிதமாக ஜீவனைக் கூறுகின்ற வரும் ஆகிய வித்தியாரண்ய சுவாமி முதலானவர்களது அபிப்பிராயம் இங்ஙனமாமெனக் கூறுகின்றனர்.

சைத்திரனது முகத்தின்னின்றும் பேதமாகவும் அதன் சமானமாகவும் சமீபத்திலுள்ளவர்களால் கண்ணுடியில் நன்ருய் பார்க்கப்படுகின்ற அதன் பிரதிபிம்பம் அதனினும் வேருய் சொரூபமாக மித்தையேயாம். தனது கையிலுள்ள வெள்ளியைப் பார்க்கிலும் இப்பியின்கண்ணுள்ள வெள்ளி யைப்போன்று.

கண்ணுடியில் எனது முகம் தோற்றுகின்றது என பிம்பத் தின் அபேத விஷயக ஞானத்திற்கு விரோதமாம் என்னற்க. வெளிப்படையான பேதம் இருமை எதிர் முகத்தன்மை முதலியவற்றை விஷயஞ் செய்கின்ற ஞானத்தோடு விரோதித் தலால் அபேத ஞானம் சம்பவியாமையின், கண்ணுடியில் எனது முகமென்னும் கூற்றிற்குத் தனது சாயாமுகத்தின் கண் தனது முகமென்னும் கூற்றிற்குப் போன்று கௌணத் தன்மை ஆதலானும் என்க.

அபேத ஞானத்திற்கு விரோதமாதலால் பேதவசனமே கௌணமாக ஏன் ஆகாது என்று வினவற்க. பாலர்கட்கு பிரதிபிம்பத்தின்கண் தள்ளுதல் கொள்ளுதல் முதலிய

அர்த்தக்கிரியைப் பரியந்தமுள்ள அன்னிய புருஷன் என்னும் பிராந்தியைத் தள்ளக் கூடாமையின் அறிஞருக்குங்கூட தனது முக விசேஷ ஞானத்தின் பொருட்டுக் கண்ணடி முதலிய வற்றின் கிரகணத்தைக் காண்டலால்.

அபேத ஞானமும் அர்த்தக் கிரியையின் பரியந்தமா மென்று சொல்லற்க, பிம்பப் பிரதிபிம்பங்கட்குச் சொரூப மாகப் பேதம் உளதாயினும் பிரதிபிம்பத்திற்கு பிம்பத்தின் சமான வடிவத்தன்மை நியமமாமென்னும் விசேஷ ஞானத் தாலேயே அதன் கிரகணம் பொருந்துதலின்.

அவதாரிகை

பிரதிபிம்ப ஸ்தலத்தின்கண் கண்ணடியிலிருக்கும் தன்மை முதலிய வடிவ சம்பந்த மாத்திரத்தின் பாதம் கூறப் பட்டது. அதனை அனுவாதம் செய்து பிரதிவந்தியால் (சமான உத்திரத்தால்) பிரதிபிம்பத்தில் சொரூப பாதத்தைச் சாதிக்கின்றார்.

ஈண்டு முகமில்லை என கண்ணடியின்கண் முகத்தின் சம்பந்த மாத்திரத்திற்குப் பாதமாம் முகத்திற்கு இன்றாம் என யாதொன்று கூறப்பட்டதோ அதுசரியன்று. இது இரஜதமன்று என்னுமிடத்தும் இதம் அர்த்தத்தின்கண் இரஜதத்தின் தாதான்மிய மாத்திரத்திற்குப் பாதமாம் இரஜதத்திற்கு அன்றாம் என ஆபத்தி வருதலின். இதமம் சத்தின்கண் இரஜதத்திற்குத் தாதான்யமாக அத்தியாச மாவதால் இது இரஜதம் அன்று என தாதான்மியமாக இரஜதத்திற்கே பாதமாம் தாதான்மிய மாத்திரத்திற்கு அன்றாமெனின். அப்போது கண்ணடியின்கண் முகத்திற்குச் சம்பந்தித்தன்மையால் அத்தியாச மாவதால் ஈண்டு முக மில்லை என சம்பந்தித்தன்மையால் முகத்திற்கே பாதமாம் சம்பந்த மாத்திரத்திற்கன்றாம் என்பது சமானமாம்.

தருமிக்கும் அத்தியாசத்தைக் கற்பிக்கின் கௌரவமாம் என்று யாதொன்று சொல்லப்பட்டதோ அது பிராதிபாசிக இரஜத கற்பனையின் கௌரவம் போன்று பிராமாணிகமாத லால் தோஷமன்றாம். தனது நேத்திர கோளகம் முதலிய வற்றின் பிரதிபிம்பப் பிராந்தி ஸ்தலத்தில் பிம்பத்தின் அபரோக்ஷ கர்பனையின்கண் உபாயமின்மையின், உபாதியால்

தடுக்கப்பட்ட நேத்திர ரஸ்மிகட்குப் பிம்பப் பிராப்தியைக் கற்பிக்கிறுே அளவு கடந்த திருஷ்ட விரோதம் பிராப்தியாகின்றது. ஜலசம்மந்தம் உண்டாகும்போது சில நேத்திர கிரணங்கள் தடுக்கப்படாதனவாய் உள்ளே போகும்போது சில கிரணங்கள் ஜலசம்மந்தத்தால் தடுக்கப்பட்டனவாய் அத்தியந்தம் மிருதுத் தன்மையுடையனவாய் எல்லோருடைய நேத்திர கிரணங்களைத் தடுக்கின்ற சூரியனது கிரண சமூகத்தை ஜயித்து அதன் மத்தியிலுள்ள சூரிய மண்டலத்தை எப்படி பிரவேசிக்கும். சந்திரனைப் பார்க்கும்போது அமிர்தம் போன்ற குளிர்ச்சி உண்டாவது போன்று அதன் பிரதிபிம்பத்தைப் பார்க்கும்போதும் அமிர்தம் போன்ற குளிர்ச்சியினையுடைய அச்சந்திர பிம்பத்தின் சம்பந்தம் சமானமாகுங்கால் கண்களுக்கு குளிர்ச்சியின் வெளிப்பாட்டால் உஷ்ண சாந்தி ஏன் உண்டாவதில்லை. ஜலசம்மந்தத்தாலும் தடுக்கப்படுகின்ற கிரணங்கள் கல் முதலியவற்றின் சம்பந்தத்தால் ஏன் தடுக்கப்படுகின்றதில்லை. அக்கல் முதலியவற்றின் தடையால் கிரணங்கள் திரும்பிவரினும் நேத்திர கோளகம் முதலியவற்றோடு ஏன் சம்மந்திக்கின்றதில்லை. அவற்றோடு சம்பந்தமுளதாயினும் சம்பந்தமுள்ள கோளகாதியை ஏன் சாக்ஷாத்கரிக்கின்றதில்லை.

அவதாரிகை

அற்றேல் தோஷ பலத்தால் சம்பந்தமுள்ளதையும் சாக்ஷாத்கரிக்கின்றதில்லை ஆதலால் கூறிய தோஷம் இன்றும் என்னுமிடத்துக் கூறுகின்றார்.

தோஷத்தாலும் விசேஷ அம்சத்தின் கிரகண மாத்திரம் தடுக்கப்படுகின்றதாய்க் காணப்படுகின்றது சமீபத்திலுள்ள தருமியின் சொரூபக் கிரகணமும் தடுக்கப்படுகின்றதாய் காணப்படவில்லை.

அவதாரிகை

இவ்வாறு பிம்பப் பிரதி பிம்பங்களின் அபேத பக்ஷத்தின் கண் பிரத்தியக்ஷ விரோதத்தின் மிகுதியைக் காண்பித்துப் பிரதிபிம்ப அத்தியாசத்தின் உற்பத்தி பக்ஷத்தை உபபாதனம் செய்கின்றார்.

முகத்தின் பிரதிபிம்ப அத்தியாச பக்ஷத்தின்கண்ணே சொற்பமும் பிரத்தியக்ஷ விரோதம் கற்பிக்கத்தக்கதன்றும்.

அஃது எப்படி எனின் மறைப்பின்றிய மகத்துவ பரிமாண முள்ள உற்பூத உருவமுடையதற்கே சாக்ஷுஸ அத்தியாசத்தினைக் காண்டலின். பிம்பத்தின்கண்ணுள்ள மகத்துவ உற்பூத உருவங்கட்குத் தமது ஆசிரயத்தின் சாக்ஷாத்கார காரணத்தன்மை சித்தித்திருத்தலின் அவைகட்குத் தமது ஆசிரய பிரதிபிம்பாத்தியாசத்தின்கண்ணும் காரணத்தன்மையாம். சுவர் முதலிய ஆவரகத்திரவியங்கட்குத் துவக்கிந்திரியத்தின் திருஷ்டாந்தத்தால் பிராப்ய காரியத் தன்மையாய் அறியப்பட்ட நேத்திரத்தின் சம்பந்தத்தைக் கெடுத்தல் வாயிலாக மறைபட்ட வஸ்துவின் சாக்ஷாத்காரத்தின் பிரதிபந்தகத்தன்மை சித்தித்திருத்தலின். அவைகட்கு மறைபட்டதின் பிரதிபிம்பாத்தியாசத்தின்கண்ணும் வேறு வாயிலின்றியே பிரதிபந்தகத் தன்மையாம் என கற்பிக்கத் தக்கது. ஆண்டு ஓரிடத்துக் காரணத் தன்மையாதியால் துணியப் பெற்றதற்குப் பிரயோஜனத்தின் பலத்தால் வேறிடத்தும் காரணத் தன்மையாதியைக் கற்பிப்பதன்கண் யாது விரோதம்

அவதாரிகை

மறைவின்மை மஹத்துவம் உத்பூத உருவம் ஆகிய இவைகட்கு முகம் முதலியவற்றின் பிரதிபிம்பாத்தியாசத்தின் உபயோக கற்பனைக்குப் பிரயோசனத்தினைக் கூறுகின்றார்.

இதனால் அதாவது மறைவின்மை முதலிய மூன்றிற்கும் பிரதிபிம்பாத்தியாசத்தைக் குறித்து காரணத் தன்மையிருத்தலால் உபாதியால் தடுக்கப்பட்ட நேத்திரக் கிரணங்கட்குப் பிம்பப் பிராப்தியை அங்கீகரியாவிடின் மறைவுபட்டதற்கும் உற்பூத உருவம் முதலியவையின்றியதற்கும் சாக்ஷுஸ பிரதிபிம்பப் பிராந்தி உண்டாதல் வேண்டும் என்பது நிராகரிக்கப்பட்டது.

மேலும் பிம்பப் பிராப்தியை அங்கீகரிப்பதன்கண்ணேயே கூறிய தூஷணம் பிராப்தமாம். எப்படி எனின் நேரே சூரியனைப் பார்ப்பதிற் போன்று நேத்திரத்தின் விக்ஷேபமின்றி குனிந்த தலையையுடையவனால் ஜலம் பார்க்கப்படும்போது அதனால் தடுக்கப்பட்ட நேத்திர கிரணங்கட்கு மேற் கிளம்பி பிம்ப சூரியனை கிரகிக்கும் தன்மை இருப்பதைப் போலும் குறுக்கு விழியின் விக்ஷேபம் இன்றி நேராயுள்ள நேத்திரத்தி

ஞல் கண்ணுடி பார்க்கப்படும்போது அதனுல் தடைபட்ட நேத்திர கிரணங்கட்கு சமீபத்திலுள்ளவர்களது முகத்தைக் கிரகிக்கும் தன்மையிருப்பது போலும் பக்கத்தில் முகத்தைத் திருப்புதல் இல்லாத காலத்தும் உபாதியால் தடைபட்ட கிரணங்கட்கு பின்பாகத்திலுள்ள மறைவுபட்டதை கிரகிக்குந் தன்மை நீக்க முடியாதாம். உபாதியால் தடுக்கப்பட்ட நேத்திர கிரணங்கட்குப் பிரதி நிவர்த்தி நியமத்தை விட்டு அதாவது மீண்டும் கோளக வாயிலாய் தேகத்தின் உட்பிரவேச நியமத்தைவிட்டு யாண்டு பிம்பமோ ஆண்டேகமனத்தை அங்கீகரித்தலின் அப்படியே மலின தருப்பணத்தின்கண் கருமையாக வெள்ளை முகம் பிரதிபிம்பமாகுமிடத்தில் பிம்பத்தின்கண் வெண்மை வடிவமுளதாயினும் அதற்குச் சாக்ஷுஸ ஞானத்தின்கண் உபயோகம் இன்மையால் சங்கு மஞ்சள் நிறமுடையது என்னும் திருஷ்டாந்தத்தால் ஆரோப்பிய உருவ விசிட்டத் தன்மையாலேயே பிம்ப முகத்திற்கு சாக்ஷுஸத் தன்மை நிர்வகிக்கத்தக்கதாம் என்க. அப்படியே உருவம் அற்றதற்கும் கண்ணுடியாகிய உபாதியின் கருமை நிற சம்பந்தத்தால் சாக்ஷுஸப் பிரதிபிம்பப் பிராந்தி விஷயத் தன்மையும் நீக்க முடியாதாம். சுபாவமாகவே உருவமற்ற ஆகாசத்திற்கும் அத்தியஸ்த நீலநிற சம்பந்தத்தால் சாக்ஷுஸ விஷயத் தன்மை சம்மதமாதலின். ஆதலால். சொருபமாக பிரதி பிம்ப அத்தியாச பக்ஷமே சிறந்தது.

பிரதி பிம்ப அத்தியாச பக்ஷத்தின்கண்ணும் பூர்வ அனுபவ ஜன்னிய சமஸ்காரம் பொருந்தாது என்னற்க. புருஷ சாமான்ய அநுபவ ஜன்ய சமஸ்கார மாத்திரத்தால் சொப்பனத்தில் முன்பு ஓர்போதும் பார்க்கப்படாத புருஷனுடைய அத்தியாசம் உண்டாவது போன்று முக சாமான்யத்தின் அனுபவ ஜன்னிய சமஸ்கார மாத்திரத்தால் கண்ணுடிகளில் முக விசேஷத்தின் அத்தியாசம் பொருந்துதலின்.

அவதாரிகை

அற்றேல் முகசாமான்ய அநுபவ ஜன்னிய சமஸ்காரத்திற்கு பிரதிபிம்ப முகத்தின் அத்தியாச ஏதுத்தன்மையை உடன்படின் சைத்திரனது முகத்திற்கும் கண்ணுடிக்கும் சமீபத் தன்மையுண்டாகும்போது எந்த முகத்திற்காவது சொப்பனத்திற் போன்றே அத்தியாசம் உண்டாதல் வேண்டும்.

நியமமாக எதிர்முக முகத்தின் அத்தியாசமுண்டாகலாகாது என்று சங்கித்து வியவஸ்தையைக் கூறுகின்றார்.

சொப்பனத்திற்கும் பிரதிபிம்ப அத்தியாசத்திற்கும் இத்துணை பேதமாம். சொப்பனத்தில் நன்மை தீமைக்கு ஏதுவான அதிர்ஷ்டத்தின் அநுசாரமாக புருஷனது ஆகார விசேஷத்தின் அத்தியாசமாம் ஈண்டோ பிம்ப சன்னிதியின் அநுசாரமாக முகத்தினது ஆகார விசேஷத்தின் அத்தியாசமாம் என்க. பிரதிபிம்பம் சொரூபமாக மித்தையாயின் பிரமத்தின் பிரதிபிம்ப ஜீவனுக்கும் மித்தியாத் தன்மையின் அடைவு வடிவ தோஷமாம் என்னற்க. பிரதிபிம்ப ஜீவனுக்கு மித்தியாத் தன்மையிருப்பினும் அவச்சின்ன ஜீவனுக்குச் சத்தியத் தன்மை உண்மையால் முத்தியின் அடைவு பொருந்துதலின் என்க.

## அவதாரிகை

பிரதிபிம்பத்திற்கு மித்தியாத்தன்மை திடமாதற் பொருட்டு அதன் சத்தியத் தன்மையின் மதத்தை தூஷிப்பதற்கு அநுவாதம் செய்கின்றார்.

கண்ணுடி முதலியவற்றிலுள்ள பிரதிபிம்பம் முகத்தின் சாயா விசேஷ வடிவமாதலால் சத்தியமேயாம் என்பது ஒருவருடைய மதம். அது சரியன்று சாயை என்பது சரீராதிகளின் அவ்வவ்வவயங்களால் சொற்ப தேசத்தில் வியாபித்திருக்கின்ற பிரகாசம் தடுக்கப்படும்போது அத்தேசத்தின்கண் அடையப்பட்ட வடிவமுள்ள இருளேயாம். முத்துமாணிக்கம் முதலியவற்றின் பிரதிபிம்பத்திற்கு இருளின் விரோதமான வெண்மை சிகப்பு முதலிய வடிவமுடைமையால் இருள் வடிவ சாயாத் தன்மை பொருத்தமன்றும். அன்றியும் இருள் வடிவ சாயையின்றிய சூரியன் முதலியதின் பிரதிபிம்பத்திற்கு சாயைத் தன்மை அத்தியந்தம் பொருத்தமன்றும்.

அற்றேல் பிரதிபிம்ப வடிவ சாயைக்கு இருள்வடிவத் தன்மை அசம்பவமாயின் வேறு திரவியத்தன்மை இருக்குக. பிரசித்தத் திரவியங்கட்குள் அடங்காதபோது இருளிற்கு வேறு திரவியத் தன்மை கற்பித்தல் போன்று வேறு திரவியத் தன்மையைக் கற்பித்தல் பொருந்துதலின் எனின்.

அவ்வேறு திரவியம் தோற்றுகின்ற உருவம் பரிமாணம் ஆகார விசேடம் எதிர்முகத் தன்மை முதலிய தருமங்களோடு கூடியதா அல்லது அத்தருமம் அற்றதா. அந்திய பக்ஷத்தில் அவ்வேறு திரவியத்தால் உருவ விசேஷம் முதலியவற்றோடு கூடிய பிரதிபிம்பத் தோற்றத்தின் நிருவாகம் கூடாது. ஆதலால் அதனைக் கற்பித்தல் வீணேயாம். முதற் பக்ஷத்திலோ அற்ப பரிமாணமுள்ள ஓர் கண்ணுடியின்கண் ஒரே காலத்தில் வேறுவேருய் தோற்றுகின்ற மகத் பரிமாணமுள்ள அநேக முகப் பிரதிபிம்பங்கட்குச் சத்தியத்தன்மையின் நிருவாகம் எங்ஙனமாம். கெட்டியான அவயவங்களையுடைய கண்ணுடி இருந்தபடியிருக்க அதனுள் முகவாய்க் கட்டை மூக்கு முதலிய அநேக தாழ்ந்த உயர்ந்த பிரதேசமுடைய வேறு திரவியத்தின் உற்பத்தியாங்ஙனமாம். மேலும் வெண்மை மஞ்சள் சிகப்பு முதலிய அநேக நிறம் முதலியவற்றையுடைய பிரதிபிம்பத்தின் உற்பத்தியில் கண்ணுடியின் மத்தியில் இருப்பதாய் அதன் சமீபத்தில் இருப்பதாய் அத்தகைய காரணமின்ருமம்.

அவதாரிகை

பிரதிபிம்பத்தின் சொரூப மாத்திரம் சத்தியமாம் அதன் கண் தோற்று நின்ற தருமங்களோ கற்பிதங்களேயாம். என அதன் சத்தியத் தன்மையின்கண் ஆக்கிரகமுள்ளவன் வினவுகின்ருன்.

உபாதியின் மத்தியில் விஸ்ராந்தி யோக்கிய பரிமாணமுள்ள பிரதிபிம்பங்களில் மஹத்பரிமாண ஞானமும் அத்தகைய உயர்வு தாழ்வு முதலியவற்றின் ஞானமும் பிராந்தியேயாம் முன்போன்று கண்ணுடி அதன் அவயவங்களின் அவஸ்திதிக்கு விரோதமின்றி அத்தகைய பிரதிபிம்பங்களை யுண்டு பண்ணும் சாமார்த்தியமுள்ள ஓர் காரணம் கற்பிக்கத்தக்கது என்று சொல்லப்படுமாயின்.

சமாதானம்

அப்போது சுத்தி இரஜதமும் சத்தியமாகுக. ஆண்டும் சுத்தி முன்போன்றிருக்கும்போதே அதன் தாதான்மியத்தை யடைந்துள்ள இரஜதத்தை யுண்டுபண்ணும் சாமார்த்தியமுள்ள ஓர் காரணத்தைக் கற்பித்து அவ்விரஜதத்திற்குத் தோஷத்தன்மையால் கருதப்பட்ட காரணத்தால் சஹகரிக்

கப்பட்ட இந்திரிய கிராஹ்யத்தன்மையின் நியமத்தை வரு ணித்தல் பொருந்துதலின். சுத்தி இரஜதம் அசத்தியம் பிரதி பிம்பம் சத்தியம் என அர்த்தஜரதீய நியாயத்தால் என்ன பயன்.

அவதாரிகை

அற்றேல் பிரசித்த இரஜதம் அக்னியில் போடப்பட்ட தாகி இளகுகின்றது. சுத்தி இரஜதமோ அவ்வாறு இன்றும். ஆதலால் அது மித்தையேயாம், எனக்கருதி வினவுகின்றுன்.

அவ்வாறுயின் இரஜதம் என பார்க்கப்படுகின்ற சுத்திக்கு அக்கினியில் போடும்போது இரஜதம்போன்று இளகுதல் உண்டாகுதல் வேண்டும் இளகுதலின்மையின் மித்தையேயா மெனின்.

சமாதானம்

அக்கினி கஸ்தூரி முதலியவற்றின் பிரதிபிம்பத்திற்கு உஷ்ணம் சுகந்தம் முதலியவை இல்லாமை போன்று சுத்தி இரஜதத்திற்கு இளகுதல் யோக்கியத் தன்மையின்மை பொருந்துதலின்

அவதாரிகை

பிரதிபிம்ப சத்தியத்தன்மைவாதி வினவுகின்றுன். இது இரஜதம் அன்று மித்தையாகவே இரஜதம் தோன்றியது என சர்வசம்மதமான பாதத்தால் சுத்தி இரஜதம் சத்திய மன்று என்று சொல்லப்படுமாயின்,

பரிகாரத்தின் சமத்தன்மையைக் கூறுகின்றுர். அப்படி யானுல் கண்ணுடியில் முகமின்றும் மித்தையாகவே ஈண்டு கண்ணுடியின்கண் முகம் தோற்றிற்று என்பது முதலிய சர்வ சம்மதமான பாதத்தால் பிரதிபிம்பமும் அசத்தியமேயாம் எனல் பொருந்தும். ஆதலால் பிரதிபிம்ப சத்தியத்தன்மை யின் வாதம் அசங்கதமாம்.

அற்றேல் அதன் மித்தியாத்தன்மையின் வாதமும் அசங் கதமேயாம். சுத்தி இரஜதத்திற்குப் போன்று அன்வய வியதி ரேக முடைய ஒரு காரண வஞ்ஞானத்தினையும் நிவர்த்தக ஞானத்தினையும் நிர்ணயம் செய்ய முடியாமையின்.

ஈண்டு சிலர் கூறுவதாவது சர்வ வடிவத்தால் அதிஷ் டான ஞானத்தின் பின்னரும் உண்டாகா நின்ற பிரதிபிம்ப அத்தியாசத்தின்கண் அதிஷ்டானத்தின் ஆவரணமாகிய

அஞ்ஞானம் உபாதானம் அன்ரும். அதிஷ்டானத்தின் விசேஷ அம்சஞானம் நிவர்த்தகமும் அன்ரும். அங்ஙனமாயி னும் அதிஷ்டானத்தின் அஞ்ஞானத்திற்கு ஆவரண சக்தி அம்சத்தால் நிவர்த்தி உளதாயினும் விக்ஷேபசத்தி அம்சத்தால் அனுவிர்த்தி சம்பவித்தலின். அதுவே உபாதான மாம். பிம்ப உபாதிகளின் சந்நிதியின் நிவர்த்தியோடு கூடிய அதிஷ்டான ஞானம் உபாதான சகித பிரதிபிம்பத்தின் நிவர்த்தகமாம் என்க.

அவதாரிகை

கண்ணுடி முதலியவற்ருல் வளைபட்ட சைதன்னியத்தின் கண் கண்ணுடி முதலியவற்றின் உபாதானமாயுள்ள மூலாஞ் ஞானம் ஒன்று உளது. கண்ணுடி முதலியவற்றின் ஞானத் தால் நிவர்த்திக்கத்தக்க அவஸ்தா வடிவ மற்ருேர் அஞ்ஞான மும் உளது. ஆண்டு மூலாஞ்ஞானத்திற்கே கண்ணுடி முதலியவற்றின் உபாதானத்தன்மை இருப்பது போன்று பிரதிபிம்ப அத்தியாசத்தின் உபாதானத் தன்மையும் ஆம் என வேறு பரிகாரத்தைக் கூறுகின்ருர்.

வேறு சில நூலாசிரியரோ இங்ஙனம் கூறுகின்றனர் ஞானத்திற்கு விக்ஷேபசத்தி அம்சத்தை விட்டு ஆவரணசத்தி அம்சமாத்திரத்தை நிவர்த்திக்கும் தன்மை இயற்கை அன்ரும். பிரம ஞானத்தால் மூலாஞ்ஞானத்திற்கும் சுத்தி முதலியவற்றின் ஞானத்தால் அவஸ்தாஞ்ஞானத்திற்கும் ஆவரணசத்தி அம்ச மாத்திர நிவர்த்தி உளதாயின் அவ்விரு வித அஞ்ஞானத்திற்கு விக்ஷேபசத்தியோடுகூட எப்போதும் அனுவிருத்திப் பிராப்தியாமாதலின் பிம்ப உபாதி சன்னிதி வடிவ விக்ஷேபசத்தி அம்சத்தின் நிவர்த்தி பிரதிபந்தகத்தின் அதீனமாக அஃது (ஆவரணமாத்திர நிவர்த்தகத்தன்மை) உளது என்னற்க. பிம்ப உபாதிகளின் சன்னிதிக்கு முன்பே சைத்திரனது முகவடிவ பிம்பத்தின்கண் கண்ணுடி சம்பந்தம் முதலியவற்றின் அபாவம் அல்லது கண்ணுடியில் சைத் திரனது முகத்தின் அபாவம் பிரத்தியக்ஷத்தால் அறியப்படும் போது விக்ஷேபசத்தி அம்சத்திற்கும் நிவர்த்தி அவசியம் உளதாவதால் அக்காலத்தில் அவ்விரண்டிற்கும் சன்னிதி இருந்தபோதிலும் உபாதானமின்மையால் பிரதிபிம்ப பிராந்தி யின் அபாவம் பிராப்தியாமாதலின். ஆதலால் மூலாஞ் ஞானமே பிரதிபிம்ப அத்தியாசத்திற்கு உபாதானமாம்.

### அவதாரிகை

அற்றேல் இப்பக்ஷத்தின்கண்ணும் பிம்ப உபாதிகளின் சன்னிதியின் பூர்வக்ஷணத்தில் உண்டாகிய சைத்திரனது முகாதியின் சாக்ஷாத்காரத்தால் சைத்திரனது முகாதியால் வளேபட்ட சைதன்னியத்தை மறைக்கின்ற மூலாஞ்ஞானத்திற்கும் நிவர்த்தி உண்டானமையின் உபாதான அஞ்ஞானத்தின் அபாவதோஷம் சமமாம். அச்சாக்ஷாத்காரத்தால் அவ்வஞ்ஞானம் நிவர்த்தி ஆகாதாயின் சைத்திரனது முகாதிகள் தோற்றலாகாது ஆவரண மிருத்தலால் என்னும் அபிப்பிராயத்தால் வினவுகின்ருன். ஈண்டும் கூறியதோஷம் சமானமாம் எனின்.

### சமாதானம்

ஜடப் பொருள்களே விஷயஞ் செய்கின்ற அந்தக் கரணத்தின் பரிணமவடிவ விருத்திகட்குத் தத்தம் விஷயாவச்சின்ன சைதன்னியப் பிரதேசத்தில் மூலாக்ஞானத்தின் ஆவரண சத்தி அம்சத்தை அபிபவம் செய்யும் தன்மை இருப்பினும் அதன் விக்ஷேபசத்தி அம்சத்தை நிவர்த்திக்கும் தன்மை இன்மையின். இங்ஙனம் கொள்ளாக்கால் அவ்விஷய சைதன்னியப் பிரதேசத்திலுள்ள வியாவகாரிக காரியங்கட்கும் நாசம் பிராப்தியாமாதலின்.

### அவதாரிகை

அற்றேல் மூலாஞ்ஞானத்தின் காரியமாகிய கண்ணுடி முதலியவற்றிற்கு வியாவகாரிகத் தன்மையைக் காண்டலால் பிரதிபிம்ப அத்தியாசத்திற்கும் மூலாஞ்ஞான காரியத் தன்மையை யுடன்படின் வியாவகாரிகத்தன்மை பிராப்தியாம் என்று சங்கித்து நிராகரிக்கின்ருர்.

பிரதிபிம்பத்திற்கு மூலாஞ்ஞானத்தின் காரியத்தன்மையை யுடன்படின் வியாவகாரிகத்தன்மை பிராப்தியாம் என்னற்க. அவித்தையினும் வேருன தோஷ அஜன்னியத் தன்மை வியாவகாரிகத்தன்மைக்குப் பிரயோஜக மாதலின், பிரகிருதத்தின்கண் அவித்தையின் வேருன பிம்ப உபாதிகளின் சன்னிதிவடிவ தோஷம் இருத்தலால் பிராதிபாசிகத் தன்மை பொருந்துதலின்.

பிரதிபிம்ப அத்தியாசத்திற்கு மூலாஞ்ஞான கா்ரியத் தன்மையுடன்படின் பிம்ப உபாதிகளின் சன்னிதி வடிவ தோஷ நிவர்த்தியோடு கூடிய அதிஷ்டான ஞானத்திற்கும் பிரதிபிம்ப அத்தியாசத்தின் அனிவர்த்தகத் தன்மை பிராப்தியாம். அதன் மூலாக் ஞானத்தை நிவர்த்திக்கும் தன்மை இன்மையின் என்று சொல்லற்க.

விரோதம் இன்மையின். பிரமத்தின் அஞ்ஞானத்தினை நிவர்த்திக்கும் தன்மை இன்றேனும் அதனை உபாதானமாக வுடைய பிரதிபிம்ப அத்தியாசத்தின் விரோதியை விஷயமாக உடையதாந்தன்மையால் பிரதிபந்தக அபாவத்தோடு கூடிய அதிஷ்டானத்தின் எதார்த்த ஞானத்திற்கு அதனை நிவர்த்திக்குந்தன்மை பொருந்துதலின்.

அவதாரிகை

அற்றேல் பிரதிபிம்ப அத்தியாசத்திற்கு அவஸ்தாஞ்ஞானம் உபாதானம் என்னும் பக்ஷத்தின்கண் பிம்ப உபாதிகளின் சன்னிதியின் நிவர்த்தியோடு கூடிய அதிஷ்டான ஞானத்திற்கு அதன் உபாதான அஞ்ஞானத்தை நிவர்த்திக்கும் தன்மை சித்திக்கின்றது. இவ்வாறுகவே ஞானம் அஞ்ஞானத்தினையே நிவர்த்திக்கும். அஞ்ஞான காரியத்திற்கோ உபாதான அஞ்ஞானத்தின் நிவர்த்தியால் நிவர்த்தியாம் என்று பஞ்சபாதிகைக்காரரால் கூறப்பட்டது பொருந்துகின்றது என்று சங்கித்துக் கூறுகின்றார்.

அவஸ்தாஞ்ஞானம் உபாதானம் என்னும் பக்ஷத்தின் கண்ணும் பிரதிபிம்ப அத்தியாசத்திற்கு முன்புள்ள அதிஷ்டான ஞானத்தால் நிவர்த்திக்கப்பட்ட ஆவரண சத்தியோடு கூடிய அந்த அவஸ்தாவஞ்ஞானத்திற்குச் சமான விஷயகத் தன்மையின்மையால் பிரதிபந்தக அபாவ காலத்திலுள்ள அதிஷ்டான ஞானத்தால் நிவர்த்திக்கக் கூடாமையால் பிரதிபிம்ப அத்தியாச மாத்திரத்திற்கே அதிஷ்டான ஞானத்தால் நிவர்த்தியாகும் தன்மை அங்கீகரிக்கத்தக்கதாதலின். அதாவது பிரதிபிம்ப அத்தியாசத்திற்கு அவஸ்தாவஞ்ஞான உபாதான பக்ஷத்திலும் பஞ்சபாதிகையின் விரோதம் சமானமாம் என்பது கருத்து.

அவதாரிகை

அதன் அவிரோதப் பிரகாரத்தைக் கூறுகின்றார்.

அல்லது தனது உபாதான அஞ்ஞானத்தினை நிவர்த்திக்கின்ற பிரம ஞானத்தாலேயே இவ்வத்தியாசம் நிவர்த்தியாகுக. வியாவகாரிகத் தன்மையின் பிராப்தியோ அவித்தையின் வேறான தோஷ ஜன்னியத் தன்மை உண்மையால் நிராகரிக்கப்பட்டதெனக் கூறுகின்றனர்.

## 41. சொப்பன பதார்த்தத்தின் அதிஷ்டான விசாரம்

அவதாரிகை

கூறிய நியாயத்தை வேறிடத்தும் பொருத்துகின்றார்.

இவ்வாறு சொப்பனாத்தியாசத்திற்கும் அவஸ்தா வடிவ அஞ்ஞானம் இன்றிய அனவச்சின்ன பிரம சைதன்னியத்தின் கண் அல்லது அகங்கார உபகித சைதன்னியத்தின்கண் அத்தியாசமாதலானும் *

அவதாரிகை

ஈண்டு அஞ்ஞானத்தின் காரியமாகிய சொப்பன அத்தியாசத்திற்கு அவஸ்தாஞ்ஞானமின்றிய சைதன்னியத்தின்கண் அத்தியாசத்தைக் கூறினமையால் பொருளால் மூலாஞ்ஞானத்தின் காரியத்தன்மை கூறப்பட்டது. அதன்கண் வேறு ஏதுவைக் கூறுகின்றார்.

"சொப்பன சாக்கிரங்கட்கு உபாதானமாகிய யாதொரு சுழுத்தியென்னும் தமோ வடிவ அஞ்ஞானமுண்டோ" என சொப்பன சாக்கிரப் பிரபஞ்சங்கட்கு ஓர் அஞ்ஞான காரியத் தன்மையை ஆசாரியர்கள் கூறி இருத்தலினாலும் மூலாஞ்ஞானத்தின் காரியத்தன்மையிருத்தலால் தனது உபாதானத்தை நிவர்த்திக்கின்ற பிரமஞானம் ஒன்றாலேயே

---

* ஆசாரியர்கள் கூறியிருத்தலினாலும் மூலாஞ்ஞானத்தின் காரியத்தன்மை யிருத்தலால் பிரமஞான மொன்றாலேயே பாதிக்கப்படுகின்ற சொப்பனப் பிரபஞ்சத்திற்கு நித்திரை முதலிய தோஷ ஜன்னியத் தன்மையாலேயே பிராதிபாசிகத் தன்மையாம். என அன்வயஞ் செய்க.

பாதிக்கப்படுகின்ற சொப்பனப் பிரபஞ்சத்திற்கு அவித்தையினும் வேறான நித்திரை முதலிய தோஷ ஜன்னியத்தன்மையாலேயே பிராதிபாசிகத் தன்மையாமெனச் சிலர் கூறுகின்றனர். இவ்வாறு சொப்பனாத்தியாசத்திற்கும் மூலாஞ்ஞானத்தின் காரியத்தன்மையிருத்தலால் அவித்தையினும் வேறான நித்திரை முதலிய தோஷ ஜன்னியத் தன்மையாலேயே பிராதிபாசிகத் தன்மையாமென அன்வயஞ் செய்க.

அவதாரிகை

அவித்தையினும் வேறான தோஷ ஜன்னியத் தன்மை பிராதிபாசிகத் தன்மைக்குப் பிரயோசகமாம் என்னும் மதத்தால் நித்திரா தோஷ ஜன்னிய சொப்பனத்திற்கு பிராதிபாசிகத் தன்மை உபபாதனம் செய்யப்பட்டது. வியவகார காலத்தில் பாதிக்கப்படுந்தன்மை பிராதிபாசிகத் தன்மைக்குப் பிரயோஜகமாம் என்னும் மதத்தால் அதற்கு அதனை உபபாதனம் செய்கின்றார்.

வேறு சிலரோ சொப்பனத்தில் காணப்பட்ட இந்த இரதம் முதலியவைகள் சாக்கிர காலத்தில் பாதிக்கப்படுகின்றன என்னும் பாஷிய வசனத்தாலும் பிரம ஞானத்திற்கு அவித்தையின் காரியமான பந்தத்தை நிவர்த்திக்கும் தன்மை உண்மையின். ஜாக்கிர ஞானம் சொப்பனத்தை நிவர்த்தி செய்வது போன்று என விவரணத்தில் காண்டலானும் தூங்கியெழுந்த புருடனுக்குச் சொப்பனத்தின் மித்தியாத் தன்மையின் அனுபவம் உண்டாதலானும் ஜாக்கிர ஞானம் சொப்பன அத்தியாசத்தின் நிவர்த்தகமாம் என பிரம்ம ஞானத்தின் இதரஞான பாத்தியத்தன்மையாலேயே அதற்குப் பிராதிபாசிகத் தன்மையாம்.

அதிஷ்டானத்தின் யதார்த்த சொரூபத்தை விஷயம் செய்யாததும் தனது உபாதானமான அஞ்ஞானத்தை நிவர்த்தி செய்யாததுமான ஞானம் அத்தியாசத்தின் நிவர்த்தகமாக எங்ஙனமாமென்று சொல்லற்க.

அவதாரிகை

கூறிய நியமத்தின் அசித்தியால் தூஷிக்கின்றார்.

இரஜ்ஜுசர்ப்பாத்தியாசத்திற்குத் தனது உபாதானமாகிய அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்ற அதிஷ்டானத்தின்

யதார்த்த ஞானத்தினுல் நிவர்த்தியாவது போன்று ஆண்டே சர்ப்பப் பிராந்தியின் பின்னுண்டான தண்டப் பிராந்தியினுலும் நிவர்த்தியைக் காண்டலின் எனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

அதிஷ்டானத்தின் எதார்த்த ஞானத்திற்கே அத்தியாசத்தை நிவர்த்திக்கும் தன்மை நியமத்தையுடன்படினும் பிரகிருதத்தில் பொருந்தாமையின்ரும். என்று கருதி அதன் அனுசாரமான மதத்தைக் கூறுகின்ருர்.

வேறு சிலரோ ஜாக்கிர போகத்தைக் கொடுக்கின்ற கருமம் சாந்தியாகும்போது ஜாக்கிரப் பிரபஞ்சத்தைக் காண்கின்ற பிரதிபிம்பவடிவ வியாவகாரிக ஜீவனையும் அவனுல் பார்க்கப்படுகின்ற ஜாக்கிரப் பிரபஞ்சத்தையும் மறைத்து உண்டாகின்ற நித்திரை வடிவ மூலாஞ் ஞானத்தின் அவஸ்தா விசேஷம் சொப்பனப் பிரபஞ்ச அத்தியாசத்தின் உபாதானமாம். மூலாஞ் ஞானமன்று.

அவதாரிகை

சுருக்கமாகக் கூறிய பொருளைச் சங்கை வாயிலாக விஸ்தரிக்கின்ருர் நித்திரைக்கு அவஸ்தாஞ்ஞான வடிவத் தன்மையின்கண் பிரமாணமின்ருமென்று சொல்லற்க.

மூலாஞ் ஞானத்தால் மறைபட்டவனும் ஜாக்கிரப் பிரபஞ்சத்தைக் காணும் வியாவகாரிக ஜீவனும் மனுஷியன் நான் பிரமாணன் நான் தேவதத் தனது புத்திரன் நான் என்பதாதியால் தன்னைச் சந்தேக விபரீதமின்றி அபிமானிக்கின்றவனும் அதனது நீண்ட காலப் பழக்கத்தினுல் அவனைக் குறித்து எப்போதும் மறைக்கப்படாத ஏக வடிவனும் அனுபவிக்கப்பட்ட தனது பாட்டனது மரண முதலிய ஜாக்கிரப் பிரபஞ்சத்தின் விருத்தாந்தமுடையவனும் ஆகிய புருடனுக்குச் சொப்பன காலத்தில் ஏதேனுமொன்றினுல் ஆவரணமில்லாத போது ஜாக்கிரத்திற் போன்று சொப்பனத்திலும் புலி நான் சூத்திரன் நான் எக்ஞதத்த புத்திரன் நான் எனபது முதலிய பிராந்திக்கும் தனது பாட்டனது ஜீவன தசை முதலிய பிராந்திக்கும் அபாவம் பிராப்தியாதலால் நித்திரைக்கே அக்காலத்தில் உற்பன்னமானதும் வியாவகாரிக ஜகத்தையும் ஜீவனையும் மறைக்கின்றதும் ஆகிய அஞ்ஞானத்தின் அவஸ்தா

விசேஷ வடிவத் தன்மை சித்தித்தலின். இவ்வாறு ஜீவனும் மறைக்கப்பட்டமையின் சொப்பனப் பிரபஞ்சத்திற்கு திருஷ்டாவின் அபாவம் பிராப்தியாமென்று சொல்லற்க.

அவதாரிகை

பிராதிபாசிக அந்தக்கரணத்தின்கண் சித்தின் பிரதிபிம்ப வடிவ வேறு ஜீவனை அங்கீகரித்தலால் இச்சங்கைக்கு அவகாசம் இன்றும் என்னுங் கருத்தால் கூறுகின்றூர்.

சொப்பனப் பிரபஞ்சத்தோடு கூட திருஷ்டாவாகிய ஜீவனுக்கும் பிராதிபாசிக அத்தியாசம் உண்டாகலின். இவ்வாருகவே மீண்டும் ஜாக்கிர போகத்தைக் கொடுக்கின்ற கருமத்திறைல் உண்டாகிய ஜாக்கிரத்தின்கண் தனது உபாதான நித்திரை வடிவ அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்ற வியாவகாரிக ஜீவனது சொருபஞானத்திறைலேயே சொப்பனப் பிரபஞ்சத்தின் பாதமாம்.

இவ்வாறு அச்சொப்பனப் பிரபஞ்சத்தைக் காண்கின்ற பிராதிபாசிக ஜீவனுக்கும் அவ்வியாவகாரிக ஜீவனது சொரூப ஞானத்தாலேயே பாதம் உளதாயின் சொப்பனத்தின்கண் யானையை அனுபவித்தேன் என்னும் அநுசந்தானம் உண்டாகலாகாது என்று சொல்லற்க. வியாவகாரிக ஜீவனிடத்தில் பிராதிபாசிக ஜீவனுக்கு அத்தியஸ்தத் தன்மை இருத்தலால் அவனனுபவத்தால் வியாவகாரிக ஜீவனுக்கு அநுசந்தானத்தை உடன்படினும் அதிப் பிரசங்கமின்மையின் எனக் கூறுகின்றனர்.

அற்றேல் அனவச்சின்ன சைதன்னியத்தின்கண் அல்லது அகங்காரவு பகித சைதன்னியத்தின்கண் சொப்பனப் பிரபஞ்சத்தின் அத்தியாசமாம் என்று முன் கூறப்பட்ட இரண்டு பக்ஷமும் பொருந்தாது முதற்பக்ஷத்தில் சொப்பன கஜாதிகட்கு அகங்காரவுபகித சாக்ஷியினின்றும் வேறு தேசத்திலிருக்கும் தன்மையால் சுகாதி போன்று அந்தக்கரண விருத்தி சம்பந்தத்தை அபேக்ஷியாமல் அச்சாக்ஷியால் விளங்குதல் பொருந்தாமையானும் நேத்திர முதலியவையொடுங்கினமையால் விருத்தியினுற்பத்தி சம்பவியாமையால் அதன் சம்பந்தத்தை அபேக்ஷித்து சாக்ஷியால் விளங்குதல் பொருந்தாமையானும் என்க. இரண்டாவது பக்ஷத்தின்கண் இது இரஜதம்

என்பது போன்று நான் யானையென்ருவது நான் சுகி என்பது போன்று நான் யானையையுடையவன் என்ருவது அத்தியாசம் பிராப்தியாமாகலின்.

ஈண்டு சிலர் முதற் பக்ஷத்தைச் சமர்த்தனம் செய்கின்றனர் அகங்கார அனவச்சின்ன சைதன்னியம் தேகத்தின் புறம்பில் உள்ளதாய் சொப்பனப் பிரபஞ்சத்தின் அதிஷ்டானமாக அங்கீகரிக்கப்படுகின்றதில்லை. ஆனல் தேகத்தின் உள்ளேயே அங்கீகரிக்கப்படுகின்றது. இதனலேயே காணப்படுகின்ற பரிமாணத்திற்கு உசிதமான தேச சம்பத்தி இல்லாமையால் சொப்பன கஜாதிகட்கு மித்தியாத்தன்மை சொல்லப்படுகின்றது. இவ்வாருகவே அந்தக்கரணத்திற்குத் தேகத்தின் புறம்பில் சுதந்திரத் தன்மையின்மையால் ஜாக்கிரத்தில் புறம்பில் சுத்தியின் இதமம்சம் முதலியவற்றை விஷயஞ் செய்கின்ற விருத்தியின் உற்பத்தியின் பொருட்டு நேத்திர முதலியவற்றின் அபேக்ஷை உள்தாயினும் தேகத்தினுள் சுதந்தரமாயுள்ள அந்தக்கரணத்திற்குத் தானே விருத்தி சம்பவித்தலால் தேகத்தினுள் அந்தக்கரண விருத்தியால் அபிவியக்தமான அனவச்சின்ன சைதன்னியத்திற்கு அதிஷ்டானத் தன்மையை உடன்படின் யாதொரு பொருந்தாமையுமின்ரும்.

அவதாரிகை

அந்தக்கரண விருத்தியினல் அபிவியக்த சைதன்னியத்திற்கே அதிஷ்டானத் தன்மையின்கண் முதியோரது சம்மதியைக் கூறுகின்ருர்.

இக்காரணத்தினலேயே எப்படி ஜாக்கிரத்தின்கண் இந்திரிய சம்யோக ஜன்ய விருத்தியினல் அபிவியக்தமான சுத்தியின் இதமம்சத்தால் வளைபட்ட சைதன்னியத்தின்கண்ணுள்ள அவித்தை இரஜதாகாரமாக எப்படி பரிணமிக்கின்றதோ அப்படி சொப்பனத்தின்கண்ணும் தேகத்தினுள் நித்திராதி தோஷத்தோடு கூடிய அந்தக்கரண விருத்தியின்கண் அபிவியக்த சைதன்னியத்தின்கண் உள்ள அவித்தை அதிருஷ்டத்தால் வெளிப்பாட்டை அடைந்துள்ள நானா விஷயக சமஸ்காரத்தோடு கூடியதாய்ப் பிரபஞ்சாகாரமாகப் பரிணமிக்கின்றது என விவரண உபன்னியாசத்தின்கண் பாரதீ தீர்த்தருடைய வசனம் பொருந்துகின்றதென்க.

## அவதாரிகை

அவித்தையின்கண் பிரதிபிம்பித்துள்ள அனவச்சின்ன சைதன்னியமே அதிஷ்டானமாம் என்னும் மற்ருேர் மதத்தைக் கூறுகின்ருர்.

சில நூலாசிரியரோ அனவச்சின்ன சைதன்னியம் விருத்தியினுல் அபிவியக்தமாய் இருந்து கொண்டு சொப்பனப் பிரபஞ்சத்தின் அதிஷ்டானம் அன்ரும் சப்த வடிவ மூலமின்றி அனவச்சின்ன சைதன்னிய விஷயக விருத்தியின் உற்பத்தி சம்பவியாமையின். அகங்காராதியால் அவச்சின்ன சைதன்னியத்தின்கண்ணேயே அகமாகார விருத்தியின் உற்பத்தியைக் காண்டலின். ஆதலால் தானே அபரோக்ஷமாயுள்ள அகங்காரதி அனவச்சின்ன சைதன்னியம் அதனதிஷ்டானமாம். இதனுலேயே சம்க்ஷேப சாரீரகத்தின்கண் அபரோக்ஷ வடிவ விஷயத்தின் பிராந்தி ஞானம் அபரோக்ஷ அதிஷ்டானத்தை அபேக்ஷித்து உண்டாகின்றது. அவ்வதிஷ்டானத்தின் அபரோக்ஷமும் மனதினுலாவது தன்னுலாவது நேத்திரத்தினுலாவது உண்டாகின்றது. சொப்பனப் பிராந்தி முதலியவைகளில் அவ்வாறு தோற்றுதலின் என்னும் சுலோகத்தால் அபரோக்ஷ அத்தியாசத்தால் அபேக்ஷிக்கப்பட்ட அதிஷ்டானத்தின் அபரோக்ஷம் சிலவிடத்து தன்னுல் சிலவிடத்துமானசவிருத்தியால் சிலவிடத்து புறம் பிந்திரிய விருத்தியால் உண்டாகின்றதெனக் கூறி சொப்பனுவஸ்தையின்கண் ஆன்ம வடிவ சேதனமானது தன்னுலேயே பிரத்தியக்ஷமாம் அங்ஙனமாயினும் அபரோக்ஷ வடிவ இச்சேதனத்தின்கண் சொப்பனுவஸ்தையில் நேத்திரத்திற்கு விஷயமான உருவமுடைய தனது அதிஷ்டானம் இன்றியும். அல்லது மனதை நிமித்தமாகவுடைய அதாவது மனதிற்கு விஷயமான அதிஷ்டானம் இன்றியும் உருவாகாரமாகவே பிராந்தி ஞானம் அடிக்கடி உண்டாகிறது.

அப்படியே நேத்திரத்திற்கு விஷயமான சுத்தி முதலியவற்றின்கண் வெள்ளி முதலியவற்றின் அத்தியாசம் உண்டாகின்றது. அப்படியே மனதிற்கு விஷயமான ஆகாசத்தின் கண்ணும் அபரோக்ஷத்தன்மை மாத்திரத்தின் சாமர்த்தியத்தால் வெண்மை முதலிய விசேஷ வடிவத்தால் உருவத்தை

விஷயம் செய்கின்ற பிராந்தி ஞானம் அனேகப் பிரகாரமாகக் காணப்படுகின்றது. என்பது முதலிய பின்னுள்ள சுலோகத்தால் சொப்பனாத்தியாசத்தின்கண் சுயம் (தன்னால்) அதிஷ்டானத்தின் அபரோக்ஷத்தன்மை கூறப்பட்டுளது.

அவதாரிகை

சொப்பன அத்தியாசத்தின் அதிஷ்டான சைதன்னியத்தின் அபரோக்ஷத் தன்மைக்குத் தன்னால் சித்தித்த தன்மையை ஆக்ஷேப சமாதானங்களால் தெரிசிப்பிக்கின்றார்.

அகங்கார அனவச்சின்ன சைதன்னியமாத்திரம் மறைக்கப்பட்டதாதலின் விருத்தியின்றி அதன் அபிவியக்தி பொருந்தாதென்று சொல்லற்க.

பிரம சைதன்னியமே மறைக்கப்பட்டதாம் அவித்தையின்கண் பிரதிபிம்பித்த ஜீவ சைதன்னியம் அகங்கார அனவச்சின்னமாயினும் மறைக்கப்படாததாமென அங்கீகரித்தலால். இவ்வாறு அகங்கார அனவச்சின்ன சைதன்னியத்தின்கண் சொப்பன யானை முதலியவைகள் அத்தியசிக்கப்படும் போது அதன் சம நியதமான அதிஷ்டான விஷயக அந்தக்கரணாதி விருத்தியினால் செய்யப்பட்ட அபேத அபிவியக்தியால் பிரமாத்துரு சைதன்னியத்திற்கும் இதைப் பார்க்கின்றேன் என்னும் வியவகாரமாம் எனக் கூறுகின்றனர்.

வேறு சிலரோ அவச்சின்ன சைதன்னியம் சொப்பனாத்தியாச அதிஷ்டானமாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தைச் சமர்த்தனம் செய்கின்றனர்.

அகங்கார அவச்சின்ன சைதன்னியம் அதிஷ்டானமாம் என அகங்காரத்திற்கு விசேஷணத் தன்மையால் அதிஷ்டான கோடியில் பிரவேசம் அங்கீகரிக்கப்படுகின்றதில்லை. ஆனால் அகங்கார உபகிதமும் அதிற் பிரதிபிம்ப வடிவமுமான சைதன்னிய மாத்திரம் அதிஷ்டானமாம் என்க. ஆதலால் நான் யானை என்பதாதி அனுபவத்திற்கு பிராப்தி இன்றாம்.

அவதாரிகை

அற்றேல் இவ்வாறு சுத்தி ரஜதாதிகட்கு அசாதாரணத் தன்மை இன்றாகும் அதனதிஷ்டான சைதன்னியத்திற்குச்

சாதாரணத்தன்மை உண்மையால் என்று சங்கித்து ஏதுவின் அசித்தியைக் கூறுகின்றார்.

இவ்வாறு சுத்தி ரஜதமும் சுத்தியின் இதமம்சாவச்சின்ன சைதன்னியத்தின் இதமாகார அந்தக் கரண விருத்தியி லுள்ள பிரதிபிம்பத்தின்கண் அத்தியாசம் செய்யப்படுகிறது. சர்வசாதாரணமான சுத்தியின் இதம்ம்சாவச்சின்ன பிம்ப சைதன்னியத்தின்கண் அதன் அத்தியாசமாயின் சுகாதி போன்று அனன்ய வேத்தியத்தன்மையின் அபாவம் பிராப்தி யாம். ஆதலின் எனச் சிலர் கூறுகின்றனர்.

அவதாரிகை

அதிஷ்டான சைதன்னியத்திற்குச் சாதாரணத் தன்மை இருப்பினும் சுத்தி ரஜதாதியின் உபாதான அஞ்ஞானத்திற்கு அசாதாரணத்தன்மை இருத்தலால் சுத்தி இரஜதாதிக்கு அசாதாரணத் தன்மையாம் எனக் கூறுகின்றார்.

சிலரோ பிம்ப சைதன்னியத்தின்கண்ணேயே இரஜதாத் தியாசத்தினை அங்கீகரித்து எந்த இரஜதம் எந்தப் புருஷ னுடைய அஞ்ஞானத்தினை உபாதானமாக உடையதாமோ அந்த இரஜதம் அவனுக்கே பிரத்தியக்ஷமாம் மற்றையனுக் கன்றும் என அனன்னியவேத்தியத்தன்மையினை உபபாதனம் செய்கின்றனர்.

## 42. சொப்பன பதார்த்தத்தின் அனுபவ விசாரம்

அவதாரிகை

இவ்வாறு சொப்பனப் பிரபஞ்சத்தின் அத்தியாசத்திற்கு அதிஷ்டானத்தை நிரூபித்துச் சொப்பன பதார்த்தத்தின் அனுபவம் இந்திரிய ஜன்னியமா? அல்லது சாக்ஷிவடிவமா? என சம்சயம் உண்டாகுங்கால் அதன் நிர்ணயத்தின் பொருட்டு ஆக்ஷேபத்தை ஆரம்பிக்கின்றார்.

அற்றேல் சுத்தி ரஜத அத்தியாசத்தின்கண் சாக்ஷிஸத் தன்மையின் அனுபவம் நேராகவாவது அதிஷ்டான ஞான வாயிலாகவாவது சக்ஷுஸை அபேக்ஷித்தலால் சமர்த்தனம் செய்யப்பட்டது. சொப்பன கஜாதியின் சாக்ஷிஸத்

தன்மையின் அனுபவம் எவ்வாறு சமர்த்தனம் செய்யத்தக்கது.

உத்தரம் கூறப்படுகின்றது.

சாக்ஷுஸத்வ அனுபவத்தைச் சமர்த்தனம் செய்தற்பொருட்டுச் சொப்பன தேகத்திற்குப் போன்றும் விஷயத்திற்குப் போன்றும் இந்திரியங்கட்கும் பிராதிபாசிக பரிணமம் கூறமுடியாதாம். பிராதிபாசிகத்திற்கு அஞ்ஞாதசத்தை இன்மையின். அதீந்திரியமான இந்திரியங்களின் சத்துவத்தில் அஞ்ஞாதசத்துவம் சொல்லத்தக்கதாதலின். வியாவகாரிக இந்திரியங்கட்கே தத்தம் கோளகங்களினின்று புறம்போந்து சொப்பன தேகத்தை ஆசிரயித்து தத்தம் விஷயத்தைக் கிரகிக்கும் தன்மையும் கூறுதற்கு முடியாது. சொப்பன காலத்தில் அவைகட்கு வியாபாரம் இல்லாமை வடிவ உபரதி கேட்கப்படுதலாலும் வியாவகாரிக தொக்கிந்திரியத்திற்குத் தனக்கு உசிதமான வியாவகாரிக தேசத்தின் அடைவின்றிய சரீரத்தின் உட்பிரதேசத்திலுள்ள தனது அதிக பரிமாணமுள்ள சம்பூரண சொப்பன தேகத்தை வியாபிக்கும் தன்மை பொருந்தாமையானும் என்க. சொப்பன தேகத்தின் ஏகதேச ஆசிரயத்தன்மையை உடன்படினும் அதற்குச் சொப்பன ஜலத்தில் மூழ்குதலால் உண்டாகிய சர்வாங்கத்திலும் சீதஸ்பரிசத்தின் அனுபவம் நிர்வாகம் ஆகாமையின்.

இக்காரணத்தாலேயே சொப்பனத்தின்கண் சாக்கிரத்திலுள்ள இந்திரியங்கட்கு லயமுளதாயினும் தைஜசனது வியவகாரத்திற்கு உபயோகமாய் சூக்ஷும சரீரத்தின் அவயவமாய் சூக்ஷும இந்திரியங்களிருக்கின்றன. ஆதலால் அவ்விந்திரியங்களால் சொப்பன பதார்த்தங்கட்கு இந்திரிய விஷயத்தன்மையாமெனப் பிரதி பாதிக்கும் சங்கையும் நீக்கப்பட்டதாம். சாக்கிர இந்திரியத்தினும் வேறாக சூக்ஷும இந்திரியங்கட்குப் பிரசித்தியின்மையின்.

அவதாரிகை

அற்றேல் இந்திரியங்கள் அப்பிரசித்தமாயினும் சொப்பன காலத்தில் பதார்த்தங்கட்குச் சாக்ஷுஸத்தன்மை முதலியவற்றின் அனுபவத்தை அனுசரித்துக் கற்பிக்கப்படுகின்றன என்று சங்கித்துச் சுருதி விரோதமாதலால் அங்ஙனமன்றெனக் கூறுகின்றார்.

மேலும் "ஈண்டு இப்புருஷன் சுயஞ்சோதி யாகின்றான்" எனச் சாக்கிரத்தின்கண் சூரியன் முதலியோரது பிரகாசக் கலப்பிருத்தலானும் நேத்திரம் முதலியவைகளின் விருத்தி சஞ்சரித்தலாலும் ஆன்மாவின் சுயஞ்சோதித்தன்மை அறிய முடியாதாமாதலின் சொப்பனாவஸ்தையை ஆசிரயித்து ஆண்டு ஆன்மாவிற்குச் சுயஞ்சோதித்தன்மையைப் பிரதி பாதிக்கின்றது.

அவதாரிகை

அற்றேல் சொப்பனாவஸ்தையின்கண்ணேயே அதற்கு சுயஞ்சோதித் தன்மையாம் வேறு அவஸ்தையில் இன்றாம் என சுருதியில் கேட்கப்பட்டபொருளிலேயே சுருதிக்குத் தாத்பரியம் ஏன் ஆகாது எனின் அன்றெனக் கூறுகின்றார்.

சுருதிக்கு முற்கூறியபடி பொருள்கொள்ளாக்கால் அதற்கு எப்போதும் சுயஞ்சோதித்தன்மை யிருத்தலால் ஈண்டு என்னும் விசேஷணம் வியர்த்தமாம் ஆதலின்.

அவதாரிகை

இவ்வாறு சுருதியின் தாத்பரியத்தை நிரூபித்துச் சொப்பன காலத்தில் நேத்திராதியின் வியாபார கற்பனை அச்சுருதியினால் பாதிதமாமெனக் கூறுகின்றார்.

அவ்வாறாகும்போது சொப்பனத்தின்கண்ணும் நேத்திராதியின் விருத்தி சஞ்சாரம் கற்பிக்கப்படுமாயின் அப்போது ஆண்டும் சாக்கிரத்திற்போன்று அதற்குச் சுயஞ்சோதித் தன்மையறிய முடியாதாமாதலின் உதாகரிக்கப்பட்ட சுருதி பீடிக்கப்படும்.

அவதாரிகை

அற்றேல் சொப்பன சகத்திற்குப் பிரகாசஞ் செய்வதாக வேறொன்று மில்லாமையால் ஆன்ம மாத்திரத்தால் விளங்குந் தன்மையாமென்று கூறப்பட்டது பொருந்தாதென வினவுகின்றான்

அற்றேல் சொப்பனத்தின்கண் நேத்திர முதலியவற்றின் உபரமத்தைக் கற்பிக்கினும் அந்தக்கரணம் ஒடுங்காமல் இருக்கின்றது ஆதலால் பரிசேஷம் சித்தியாமையால் சுயஞ் சோதித்தன்மையின் ஞானம் கூடாதாம்.

அவதாரிகை

சொப்பன பதார்த்தங்களைக் குறித்து மனதிற்கு ஞான காரணத்தன்மை அசித்தமாம். ஆதலால் அதற்குச் சொப்பன சகத்தை விளக்குந்தன்மை சம்பவியாமையின் பரிசேஷத்தின் சித்தியாமெனப் பரிகரிக்கின்றார்.

அங்ஙனமன்று "ஆன்மா கருத்தாவாம் சாஸ்திரத்திற்குப் பொருளுடையதாந்தன்மையால்" என்னு மதிகரணத்தின் கண் நியாய நிர்ணயமென்னும் கிரந்தத்தில் சொப்பனத்திற்கு மனது உபாதான மாதலின் ஞானத்தின் கரணமன்றாம். எனக் கூறிய ரீதியினால் நேத்திரம் முதலியவேறு கரணத்தின் அபேக்ஷையின்றிய அந்தக் கரணத்திற்கு ஞான சாதனத் தன்மையின்மையினாலாவது தத்துவப் பிரதீபிகையின்கண் சொப்பனத்தில் நாநாவித சமஸ்காரத்தோடு கூடிய மனதிற்கே சொப்பனப் பிரபஞ்சாகாரமாகப் பரிணமிக்குந் தன்மையாம். அவித்தைக்கன்றாம் அதற்கு சமஸ்காரத்தின் ஆசிரயத் தன்மையின்மையால் விசித்திர பதார்த்தத்தின் பரிணமத்தன்மை பொருந்தாமையின் எனக்கூறியரீதியினால் சொப்பனத்தில் மனதிற்கே யானை முதலியவடிவமாகப் பரிணமித்தலால் ஞானத்தின் விஷயமாக இருக்குந் தன்மையாம். ஆதலின் அப்போது ஞான சாதனத்தன்மை பொருந்தாமையினாலாவது பரிசேஷம் பொருந்துதலின்.

சொப்பனத்தின்கண் அந்தக்கரண விருத்தியின்றேல் தூங்கி எழுந்தவனுக்குச் சொப்பனத்தில் காணப்பட்ட யானை முதலியவற்றின் ஸ்மிருதி பொருந்தா தென்னற்க. துயிலில் துணியப் பெற்ற அவித்தையாவிருத்தியினாலேயே அது பொருந்துதலின் துயிலில் அவ்வவஸ்தையாலு பகிதமான சொரூப சைதன்னியமே அஞ்ஞானம் சுகம் முதலியவற்றின் பிரகாசமாம். எழுந்தவனுக்கு உண்டாகும் ஸ்மிருதியானது உபாதியாயுள்ள துயிலவஸ்தையின் விநாச ஜன்னிய சமஸ்காரத்தாலாம் என வேதாந்த கௌமுதியின்கண் துயிலில் அவித்தையாவிருத்தியின் அபாவ பக்ஷத்தை யங்கீகரித் திருப்பது போன்று சொப்பனத்தின் கண்ணும் சொப்பன யானை முதலியவற்றை விளக்குகின்ற சைதன்னியத்தின் உபாதியாயுள்ள சொப்பனவஸ்தையின் விநாச ஜன்னிய சமஸ்காரத்தால் அனுசந்தானம் பொருந்துதலினாலும் என்க.

அவதாரிகை

சாக்கிரத்திற் போன்று சொப்பனத்தின்கண்ணும் யானை முதலியவற்றின் கோசரமாக அந்தக்கரண விருத்தியே அங்கீகரிக்கப்படுகின்றது ஆதலால் சமஸ்காராபாவத்தின் சங்கைக்கு அவகாசமின்றும் அப்போது அந்தக்கரணமுளதாயின் பரிசேஷம் சித்தியாது என்னற்க. பரிசேஷத்திற்கும் உலக திருஷ்டியினல் பொருத்தமிருத்தலின் என வேறு மதத்தைக் கூறுகின்றார்.

அல்லது "அவ்விது சத்துவம் எதனல் சொப்பனத்தைக் காண்கின்றானே" என்பது முதலிய சுருதியால் கல்பதருவிற் கூறிய பிரகாரத்தால் சொப்பனத்தின் கண்ணும் யானை முதலியவற்றை விஷயம் செய்கின்ற அந்தக் கரணவிருத்தி உளதாகுக. அத்துணையால் பரிசேஷத்தின் அசித்தியாம் என்னற்க. நான் என்று கிரகிக்கப்படுகின்ற அந்தக் கரணத்திற்குச் சர்வ வடிவத்தால் சீவனோடு ஐக்கியமாக அத்தியஸ்தத்தன்மை யுண்மையால் உலக திருஷ்டியால் அதற்கு அதனின் வேருகப் பிரசித்தியின்மையின் பரிசேஷத்தின் பொருட்டு நேத்திரம் முதலியவற்றின் வியாபாராபாவ மாத்திரமே அபேக்ஷிக்கப்படுதலின். பிரசித்த திருசிய மாத்திரம் திருக்கினல் விளங்குதற்கு யோக்கியமாம் என நிச்சயமிருத்தலால் பரிசேஷத்தின் பொருட்டு அன்னியத்தின் அபேக்ஷையின்மையின் சர்வப் பிரகாரத்தாலும் சொப்பனத்தில் நேத்திராதியின் வியாபாரம் சம்பவியாமையால் சொப்பன யானை முதலியவற்றின்கண் சாக்ஷுஷத் தன்மையின் அநுபவம் பிராந்தியேயாம்.

அவதாரிகை

சொப்பனுனுபவத்தை சாக்ஷி வடிவமாகவுடன்படின் நேத்திராதியினை அநுசரித்திருத்தலுக்கு விரோதமாமென்று சங்கித்துத் திருஷ்டாந்தத்தால் சமாதானம் கூறுகின்றார்.

அற்றேல் சொப்பனத்தின்கண்ணும் நேத்திரத்தைத் திறக்கும்போது யானை முத்லியவற்றின் அனுபவமாம் அதனை மூடும்போது இன்றும் என சாக்கிரத்திற்போன்று யானை முதலியவற்றின் அனுபவத்திற்கு நேத்திரத்தின் திறத்தல் முதலியவற்றை யநுசரித்தல் தோற்றுகின்றது எனின்.

நேத்திரத்தால் வெள்ளி முதலியவற்றைக் காண்கின்றேன் என்னும் அனுபவம் போன்று இதுவும் ஓர் சொப்பன மயலே யாம். கேவல சாக்ஷி வடிவ சொப்பன யானை முதலியவற்றின் அனுபவத்தின்கண் நேத்திராதியின் அனுசரணம் அல்லது அதனை அனுசரித்த விருத்தி இருக்கும் என்பது மயலேயாம்.

அவதாரிகை

அற்றேல் இவ்வளவு பிராந்தி பொருந்தாது என்று சங்கித்துக் கூறுகின்றார்.

மாயையானது பொருத்தமற்ற எந்தப் பிராந்தியைத்தான் செய்யாது. அதினும் விசேஷமாக நித்திரை வடிவத்தால் பரிணமித்த மாயை எந்தப் பிராந்தியைத்தான் செய்யாது. எதன் மாகான்மியத்தால் சொப்பனத்தின்கண் தோற்றுகின்ற ரதம் க்ஷணத்தில் மனுஷியனைத் தோற்றுகின்றது. அவனும் க்ஷணத்தில் பூனையாகத் தோற்றுகின்றான். சொப்பனத்தைக் காண்பவனுக்கும் முன்பின் விரோதத்தின் அனுசந்தானமுமின்றாம். ஆதலால் அன்வயம் முதலியவற்றை அனுசரித்த பிரதீதி சமானமாயினும் சாக்கிரத்தில் யானை முதலியவற்றின் அநுபவமே நேத்திர முதலியவற்றால் ஜன்னியமாம். சொப்பனத்தில் யானை முதலியவற்றின் அநுபவம் இந்திரிய ஜன்யமன்றாம்.

அவதாரிகை

எவ்வதிகாரிகள் அநேகப் பிரகாரமான கருமோபாசனைகளின் அனுஷ்டானத்தால் சாதிக்கப்பட்ட பரமேஸ்வரனது பிரசாதத்தின் மகிமையால் அத்தியந்தம் பரிசுத்தமாயுள்ள அந்தக்கரணமுடையவராய் சாக்கிரத்தின்கண்ணும் சொப்பனத்தின் விலக்ஷணத்தன்மையைக் காண்கிறார்களில்லையோ, பிரஹ்ம வித்தையின் வேட்கையினையுடைய அவர்களைக் குறித்துப் பிரவிர்த்தித்ததும் சருவ சகத்திற்கும் சாக்கிரத்திலும் சுழுத்தியிலும் உற்பத்தி லயங்களைப் பிரதிபாதிக்கின்றதுமான சுருதியை அனுசரித்துத் திருஷ்டி சிருஷ்டி வாதம் பூர்வாசாரியர்களால் நிருபிக்கப்பட்டுள்ளது. சொப்பன விசாரத்தால் புத்தியில் பிராப்த்தமான அதனை தெரிசிப்பிக்கின்றார்.

திருஷ்டி சிருஷ்டி வாதிகளோ, கற்பித வஸ்துவிற்கு அஞ்ஞாத சத்தை பொருந்தாது. ஆதலால் சம்பூர்ண சாக்கிரப் பிரபஞ்சத்திற்குத் திருஷ்டியின் சமான காலத்தில் சிருஷ்டி

யினை அங்கீகரித்து கடாதி ஞானத்தின்கண் நேத்திர சம்பந்தத்தின் அனுசாரமாமென்னும் பிரதீதியை திருஷ்டிக்கு முன்பு கடாதியின்மையால் அசங்கதமாயும் சொப்பனம் போன்று மித்தையாயும் சமர்த்தனஞ் செய்கின்றவராய் சாக்கிர யானை முதலியவற்றின் அனுபவமும் இந்திரிய ஜன்னியமன்றெனக் கூறுகின்றனர்,

## 43-வது சிருஷ்டியின் கற்பனை விசாரம்

அற்றேல் திருஷ்டி சிருஷ்டியினை ஆசிரயித்து சம்பூர்ண சாக்கிரப் பிரபஞ்சத்திற்குப் பிராதிபாசிகத் தன்மையையுடன்படின் அதனைக் கற்பிப்பவன் யாவன் நிருபாதிக ஆன்மாவா அல்லது அவித்தையாலுபகிதமான ஆன்மாவா. முதற்பட்சம் சரியன்று. மோட்சத்தின்கண்ணும் வேறு சாதனத்தின் அபேக்ஷயின்றிய கற்பிக்கும் நிருபாதிகான்மா இருத்தலால் பிரபஞ்சத்தின் அனுவிருத்திப் பிராப்தியாம். ஆகவே சம்சாரத்தினும் விசேஷமின்மைப் பிராப்தியாமாதலின், இரண்டாவது பட்சமும் சரியன்று. அவித்தைக்கும் கற்பிக்கத்தக்கதாந்தன்மை யுண்மையின் அதன் கற்பனைக்கு முன்பே கற்பகனது சித்தியைக் கூறவேண்டுமாதலின்.

### உத்தரம்

ஈண்டு சிலர் இங்ஙனம் கூறுகின்றனர். முன் முன் கற்பித அவித்தையால் உபகித ஆன்மாபின் பின்னுள்ள அவித்தையைக் கற்பிக்கின்றது.

### அவதாரிகை

இவ்வாறாயினும் முதலவித்தையைக் கற்பிப்பது யாது என்னுமிடத்துக் கூறுகின்றார்.

கற்பக கற்பனையின் பிரவாகத்திற்கு இது முதலாவது என்னுந் தன்மையின்மையால் முதலாவது அவித்தையே ஒன்று இன்றுமாதலின் சங்கைக்கு அவகாசம் இன்றுமென்பது கருத்து.

அப்படியானால் அனவஸ்தையாமென்று சங்கித்து அது தோஷத்தின் பொருட்டன்றும் பிரபஞ்சத்தின் கற்பகத் தன்மையால் சுருதி சித்தமான அவித்தையினாலுபகிதமான ஆன்மாவிற்கு முன் முன் அவித்தையின்றி அதன் கற்பகத்தன்மை சம்பவியாமையின் என்னுங் கருத்தால் கூறுகின்றார்.

அனவஸ்தா தோஷமுமின்றும், சங்கை அவித்தைக்கு அனுதித் தன்மையை அங்கீகரித்தலால் சுத்தி ரஜதத்திற்குப் போன்று கற்பிதத்தன்மை பொருந்தாது அனுதித் தன்மையுடன்படாவிடின் சாதி அனுதிகளின் வேற்றுமை அசங்கதமாமெனின்.

சமாதானம்

எப்படி சொப்பனத்தின்கண் கற்பிக்கப்படுகின்ற சில கோபுரம் முதலியது முன்பே இருப்பதாகக் கற்பிக்கப்படுகின்றதோ சிலவஸ்து அப்போது உற்பத்தியாவதாக கற்பிக்கப்படுகின்றதோ அப்படி ஜாக்கிரத்திலும் சிலது கற்பிக்கப்படுகின்றதாகி உற்பத்தியுடையதாய் கற்பிக்கப்படுகின்றது சிலது அனுதித்தன்மையாய்க் கற்பிக்கப்படுகின்றது இத்துணையால் சாதி அனுதிகளின் வேற்றுமை பொருந்துதலின் இதனுல் காரிய காரணங்களின் வேற்றுமையும் பிரதிபாதனம் செய்யப்பட்டதாம் என்க.

அவதாரிகை

பிரபஞ்சத்தைக் கற்பிக்கின்ற அவித்தையால் உபகித ஆன்மாவிற்கு அனந்தத்தன்மையைப் பரிகரிக்கும் பொருட்டும் சாதி அனுதிகளின் வேற்றுமை பொருத்தமாதற் பொருட்டும் திருஷ்டி சிருஷ்டியினை சங்கோசம் செய்கின்றூர்.

சில நூலாசிரியரோ அவித்தை முதலியது சொரூபமாக அனுதியேயாம் அதன்கண் திருஷ்டி சிருஷ்டி அங்கீகரிக்கப்படுகின்றதில்லை ஆனுல் அதனின் வேறுன பிரபஞ்ச மாத்திரத்தின்கண் திருஷ்டி சிருஷ்டி அங்கீகாரமாமெனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

அற்றேல் திருஷ்டியின் சமகாலத்திலேயே பிரபஞ்சத்தின் சிருட்டியாம் என்னும் மதத்தின் கண்ணும் திருஷ்டி சப்தத்தால் பிரத்தியட்ச ஞானமே விவக்ஷிக்கப்பட்டுளது பரோக்ஷ ஞானம் அன்றும் அபரோக்ஷ ஞானத்திற்கே விஷயமின்றி இராத்தன்மையால் பிராதிபாசிக விஷயத்தைச் சாதிக்கும் தன்மை உண்மையினுலும் பரோக்ஷ ஞானத்திற்கு அஃது இன்மையினுலும் இவ்வாருகும்போது பாதகமாமென வினவுகின்றுன்.

இவ்வாருயினும் சுருதி மாத்திரத்தால் அறியப்பட்டுள்ள ஆகாசாதியின் சிருஷ்டி அதன் கிரமம் முதலியவற்றை கற்பிப்பவன்யாவன்? உத்தரம், ஒருவனுமின்ரும் சங்கை அப்படியானல் ஆன்மாவினின்றும் ஆகாசம் உண்டாயிற்று என்பது முதலிய சுருதிக்கு யாது பற்றுக்கோடு உத்தரம்.

நிஷ்பிரபஞ்ச பிரஹ்மான்மாவின் ஐக்கியம் பற்றுக்கோடாமென அறிவாய்.

அத்தியாரோபாபவாதங்களால் நிஷ்பிரப்ஞ்ச பிரஹ்ம ஞானம் உண்டாகின்றதாகலின் அதன் ஞானத்தின் உபாயமாக சுருதிகளில் சிருஷ்டி பிரளயங்களைக் கூறுதலாம் அவற்றின்கண் தாத்பரியத்தால் அன்ரும் என பாஷியாதிகளில் பறைசாற்றப்படுகின்றது.

சங்கை அப்படியானல் அதாவது சிருஷ்டிப் பிரளயங்களில் தாத்பரியம் இன்றேல் வியத்பிராண பாதங்களில் ஆகாசாதி சிருஷ்டியினையும் அதன் கிரமம் முதலியவற்றினையும் விஷயம் செய்கின்ற சுருதிகளின் பரஸ்பரம் விரோதத்தைப் பரிகரித்தற் பொருட்டுச் சூத்திரக்கார பாஷியக்காரரின் பிரயத்தனம் வீணேயாம். சமாதானம், வீணன்ரும். நியாயவியுற்பத்தியின் பொருட்டு தாத்பரியத்தினை அங்கீகரித்து அவர்கள் பிரவிர்த்தித்தலின், சாஸ்திர தர்ப்பணத்தின்கண்ணும் இப்பொருள் கூறப்பட்டுள்ளது சுருதிகட்குச் சிருஷ்டியின்கண் தாத்பரியத்தை அங்கீகரித்து விரோத சமாதானம் வியத்பிராண பாதங்களில் கூறப்பட்டது அவைகட்கு பிரஹ்மான்மாவின் ஐக்கியத்திலேயே தாத்பர்யம் இருத்தலால் அதன்கண் தாத்பர்யம் இன்ருமென.

அவதாரிகை

இவ்வாறு திருஷ்டி சிருஷ்டி வாதத்தின்கண் சிருஷ்டியாதி சுருதிகட்கு நிராசிரயத் தன்மையைப் பரிகரித்துக் கரும உபாசனை வாக்கியங்கட்கும் நிராசிரயத் தன்மையை பரிகரிக்கின்ருர்.

ஜோதிஷ்டோமாதி சுருதியால் போதிக்கப்பட்ட யாகாதிகளின் அனுஷ்டானத்தால் பயனின்சித்தி சொப்பன சுருதியால் போதிக்கப்பட்ட யாகாதிகளின் அனுஷ்டானத்தின் அதீனமாக பலப்பிராப்திக்குச் சமானமாம்.

அவதாரிகை

அப்படியானல் அச்சுருதிகட்கு அப்பிரமாணத் தன்மை பிராப்தமாமெனின் அன்றெனக் கூறுகின்ருர். ஜோதிஷ்டோமாதி சுருதிகட்கு அந்தக்கரண சுத்திவாயிலாக பிரமத்தின்கண் தாத்பர்யம் இருத்தலால் அப்பிரமாணத் தன்மையின்ரும என்பதாதியாக திருஷ்டி சிருஷ்டி பிரதிபாதன பிரக்கிரியையின் விஸ்தாரம் பாஷ்யக் கிரந்தங்களில் காண்க.

திருஷ்டியின் சமான காலத்தில் பிரபஞ்சத்தின் சிருஷ்டியாம் என்னும் இஃது ஒரு திருஷ்டி சிருஷ்டி வாதமாம்.

மற்றென்ருே திருஷ்டியே பிரபஞ்சத்தின் சிருஷ்டியாம் திருசியத்திற்குத் திருஷ்டிபேதத்தின்கண் பிரமாணம் இன்மையின் வித்துவான்கள் பிரத்தியக்ஷமான இந்த ஜகத்தினை ஞான சொரூபமேயாம் எனக் கூறுகின்றனர்.

குதர்க்கமுடைய சில பேர்கள் பிரபஞ்சத்தில் சுழல்கின்றவராய் ஞானத்தின் வேருக பொருளின் சொரூபத்தைப் பார்க்கின்றனர் என்னும் ஸ்மிருதியினுனும் என சிந்தாந்த முக்தாவலி முதலிய கிரந்தத்தில் தெரிசிப்பிக்கப்பட்ட திருஷ்டி சிருஷ்டிவாதமாம்.

இரண்டு பிரகாரமான திருஷ்டி சிருஷ்டி வாதத்தின்கண்ணும் விசுவாசத்தை அடையாதவராய்ச் சிலவாசிரியர்கள் சிருஷ்டி திருஷ்டி வாதத்தை விரும்புகின்றனர்.

சுருதியால் காண்பிக்கப்பட்ட கிரமத்தால் பரமேஸ்வரனுல் சிருஷ்டிக்கப்பட்டதாகி அஞ்ஞாதசத்தையோடு கூடியதாகவே பிரபஞ்சமுளது அவ்வவ்விஷயகப் பிரமாண முண்டாகுங்கால் அவ்வவ் விஷயத்தின் ஞானம் உண்டாம் என்க.

சங்கை

அபசித்தாந்தத்தை வினவுகின்ருன், இவ்வாறு பிரபஞ்சத்திற்குக் கற்பிதத்தன்மையின்றேல் சுருதியாதியால் அறியப்பட்டதும் சிருஷ்டி பிரளயம் முதலியவற்ருேடு கூடியதும் பிரத்தியட்சாதியால் அறியப்பட்ட அர்த்தக்கிரியையைச் செய்வதும் ஆகிய பிரபஞ்சத்திற்குச் சத்தியத்தன்மையே அங்கீகரிக்கப்பட்டதாகும் எனின்.

### உத்தரம்

சுத்திரஜதாதிக்குப் போன்று சம்யோகம் சமஸ்காரம் தோஷமென்னும் மூன்று ஏதுக்களால் அல்லது அதிஷ்டான ஞானம் சமஸ்காரம் தோஷம் என்னும் மூன்று ஏதுக்களால் ஜன்யத் தன்மையின்மையால் பிராதிபாசிகத் தன்மையின் றேனும் ஞான மாத்திரத்தால் நிவர்த்திக்கத்தக்கதாகிய மித்தியாத் தன்மையையாவது சதசத்விலக்ஷணத்தன்மை வடிவ மித்தியாத் தன்மையையாவது ஆரோபிக்கப்பட்ட வஸ்துவிற்கு தனது அதிஷ்டானத்தின்கண் மூன்று காலத்தைய நிஷேதப் பிரதியோகித் தன்மை வடிவ மித்தியாத் தன்மையையாவது அங்கீகரித்தலால். சத்தியத் தன்மை பட்சத்தின்கண் பிரபஞ்சத்தின்கண் கூறிய வடிவ மித்தியாத் தன்மையின்மையால் அதனின்றும் பேதமாமாதலின்.

### அவதாரிகை

திருஷ்டி சிருஷ்டிவாதியே வினவுகின்ருன்.

அற்றேல் இவ்வாறு ஞான மாத்திரத்தால் நிவர்த்திக்கத் தக்க வடிவம் முதலியவற்றிற்கு மித்தையாத்தன்மையை உடன்படின் அகங்காரத்திற்கும் அதன் தர்மங்கட்கும் கூறிய வடிவ மித்தையாத்தன்மை ஆகாசாதிகட்குப் போன்று பிராதி பாசிகத் தன்மையின்றேனும் சித்திக்கின்றது. ஆதலின் பாஷி யடீகை விவரணங்களில் அதனத்தியாசத்தின்கண் மூன்று காரணத்தைச் சம்பாதித்தல் முதலியவற்றில் முயலுதல் வீணேயாமெனின்.

### உத்தரம்

அகங்காராதிகட்கும் கேவல சாட்சி வேத்தியத் தன்மை யுண்மையால் சுத்தி ரஜதத்திற்குப் போன்று பிராதிபாசிகத் தன்மை பாஷியக்காரர் முதலியோருக்கு சம்மதமாமெனச் சிற்சுகாசாரியர் கூறுகின்றனர்.

### அவதாரிகை

அகங்காரத்திற்கும் அதன் தர்மங்கட்கும் கேவல சாக்ஷி வேத்தியத் தன்மையிருப்பினும் சுத்தி ரஜதாதிக்குப் போன்று பிராதிபாசிகத் தன்மையைக் கூறல் பொருந்தாது வியவகார காலத்தில் பாதம் தோற்ருமையின் ஆதலால் வஸ்துவின் கதியால் அவைகட்குப் பிராதிபாசிகத் தன்மையின்றேனும்

அதனை அங்கீகரித்து முக்காரணத்தைச் சம்பாதித்தல் முதலி யவற்றில் அவர்களால் யத்தனம் செய்யப்பட்டது. என வேறு பரிகாரத்தைக் கூறுகின்றார்.

பாஷியம் முதலியது பிராதிபாசிகத் தன்மையை அங்கீ கரித்துச் சொல்லுதலாம் "அத்துவிதீய அதிஷ்டான பிரஹ் மான்மாவின்கண் பிரமாணமான சைதன்னியத்திற்கு" என் பது முதலிய ஆண்டுள்ள மூன்று காரணத்தைச் சம்பாதிக்கும் கிரந்தத்திற்கு சைதன்னியத்திற்குப் பிரஹ்மப் பிரமையின் கரணத் தன்மையையுடன்படின் வேதாந்தங்கட்குக் கரணத் தன்மை முதலியவற்றின் கற்பனைக்குக் கெடுதி நேருதலால் பிரௌடிவாதத் தன்மை மிகவும் ஸ்பஷ்டமாதலின் என ராமாத்துவயாசாரியர் கூறுகின்றனர். சம்பாதிக்கும் கிரந்தத் திற்கு பிரௌடிவாதத் தன்மை ஸ்பஷ்டமாமெனக் கூட்டுக.

## 44. மித்தியா பதார்த்தத்திற்கு அர்த்தக் கிரியையைச் செய்யுந்தன்மை விசாரம்

பிரபஞ்சத்தின் பரமார்த்தத் தன்மையின்கண் முன்பு அர்த்தக் கிரியையைச் செய்யுந்தன்மை அப்பிரயோஜகமா மெனச் சூசிப்பிக்கப்பட்டது. அது பொருந்தாது. மித்தையா யுள்ள சுத்தி ரஜதாதிகட்குக் காப்பு முதலிய அர்த்தக் கிரியை யைச் செய்யுந் தன்மை காணாமையின், என்று கருதி வினவு கின்றான்.

அற்றேல் சிருஷ்டி திருஷ்டி வாதத்தின்கண்ணும் திருஷ்டி சிருஷ்டி வாதத்தின்கண்ணும் மித்தியாத்தன்மையை உடன் படலால் மித்தையாயுள்ள வஸ்துவிற்கு அர்த்தக் கிரியையைச் செய்யுந் தன்மையாங்ஙனம் எனின்.

சமாதானம் அவதாரிகை

அர்த்தக் கிரியையைச் செய்யுந் தன்மை சத்தியத்தன் மையின் வியபிசாரியாம் எனப் பரிகரிக்கின்றார்.

சொப்பனம் போன்று எனக் கூறுகின்றோம்.

சங்கை

அற்றேல் சொப்பன ஜலம் முதலியவற்றால் சாதிக்கத் தகுந்த முழ்குதல் முதலிய வடிவ அர்த்தக் கிரியை அசத்திய மேயாமெனின்.

சமாதானம்

சாக்கிர ஜலம் முதலியவற்ருல் சாதிக்கத் தகுந்த அர்த்தக் கிரியை சத்தியமா? அதுவும் சொப்பனம் போன்று அசத்திய மேயாமென்பது பொருள் இரண்டு அவஸ்தையின்கண்ணும் தனது சமான சத்தையுடைய அர்த்தக் கிரியையைச் செய்யுந் தன்மை சமானமாதலின் எனச் சிலர் கூறுகின்றனர்.

அவதாரிகை

சொப்பனம் போன்று எனக் கூறுகின்ருேம் என்னும் சமாதானத்தின்கண் சொப்பனத்தில் அர்த்தக் கிரியை சத்தியம் அன்ரும். ஜாக்கிரத்திலோ அது சத்தியமாம் என்னும் விஷமத்தன்மை சங்கை உண்டாகும்போது, பிரதி வந்தியால் சிலருடைய சமாதானம் தரிசிப்பிக்கப்பட்டது. இப்போது சொப்பன பதார்த்தங்கட்கும் சத்தியமான அர்த்தக் கிரியையைச் செய்யுந் தன்மையைக் காண்டலால் திருஷ்டாந்தம் விஷமம் அன்ருமென வேறு பரிகாரத்தைக் கூறுகின்ருர்.

அத்வைத வித்தியாசாரியர் கூறுவதாவது சொப்பன பதார்த்தங்கட்குக் கேவலம் ஜாக்கிரத்தில் பாதிக்கத் தகுந்த அர்த்தக் கிரியையை மாத்திரம் செய்யுந் தன்மையின்ரும். சொப்பனத்திலுள்ள ஸ்திரீ சர்ப்பம் முதலியவைகட்கு ஜாக்கிரத்தில் அபாத்திய சுகம் பயம் முதலியவறறை உண்டு பண்ணுந் தன்மையைக் காண்டலால் சொப்பன விஷயத்தால் உண்டாயினும் சுகம் பயம் முதலியவற்றிற்குச் சாக்கிரத்தின் பிறகும் பாதம் அனுபவிக்கப்படுகிறதில்லை.

மாருய் ஜாக்கிரத்தின் அனந்தரமும் மனதின் தெளிவு சரீர நடுக்கம் முதலியவற்ருேடுகூட அதன் அனுவிருத்தியைக் காண்டலால் முன்பும் சத்துவமே நிச்சயிக்கப்படுகின்றது. இதனுலேயே பிராணிகட்கு சுகத்தை உண்டுபண்ணுகின்ற விஷய கோசரமான சொப்பனத்தின்கண் மீண்டும் ஆசை உண்டாகின்றது. அத்தகைய தல்லாத சொப்பனத்தின்கண் துவேஷம் உண்டாகின்றது.

அவதாரிகை

அற்றேல் சொப்பனத்தின்கண் சர்வமும் வாசனை மாத்திர மாவதால் சத்தியமாகிய பயாதிகளின் சம்பவம் எங்ஙனமாம் என்னுமிடத்துக் கூறுகின்ருர்.

சொப்பனத்தின்கண்ணும் ஞானம் போன்று அந்தக் கரண விருத்தி வடிவ சுக பயாதிகளின் உத்பத்தி சம்பவிக்கின்றது.

அவதாரிகை

அற்றேல் சொப்பன பயம் சுகம் முதலியது சர்ப்பம் ஸதிரீ முதலிய பாதார்த்த ஜன்யமன்ரும். மற்ருே அதன் விஷயக ஞான ஜன்யமாம் ஆகவே ஞானத்திற்குச் சத்தியத்தன்மை யிருத்தலால் அசத்தியத்தில் நின்றும் சத்தியமாகிய காரியத்தின் உற்பத்தி சொப்பனத்தில் காணப்பட்டது என்பது பொருந்தாது என்று வினவுகின்ருன்.

சொப்பன ஸ்திரீ முதலியவற்றின் ஞானமே சுகம் முதலியவற்றின் ஜனகமாம். அதுவும் சத்தியமேயாம். எனின்

காண்டல் தொடுதல் முதலிய விருத்தி வடிவமும் சொப்பன பிரபஞ்ச சாட்சியின்கண் அத்தியஸ்தமுமான அந்த ஞானமும் கற்பனே மாத்திரத்தால் சித்தித்தமையின்.

சங்கை

இந்திரியங்கள் லயமுடையவனுக்கு நேத்திராதி விருத்திகள் சத்தியமாகச் சம்பவிக்கின்றதில்லை அவ்விஷயத்தின் அபரோக்ஷ மாத்திரம் சுகத்தின் ஜனகமாம். அதுவும் சாட்சி வடிவமேயாம் சத்தியமேயாம் எனின்.

சமாதானம்

இஷ்ட ஸ்திரீயின் தரிசனத்தைப் பார்க்கிலும் அவளே தொடுதலின்கண்ணும் அவளே பாதத்தால் தொடுதலேப் பார்க்கினும் கையால் தொடுதலின்கண்ணும் சுக விசேஷமும் சர்ப்பத்தினது வால் முதலியவற்றை தொடுதலேப் பார்க்கினும். சிரசில் தொடுவதில் பய விசேஷமும் அனுபவ சித்தமாய் இருத்தலால் சொப்பனத்தின்கண்ணும் அவ்வச் சுகம் பயம் முதலிய விசேஷத்திற்குக் கற்பித தரிசனம் பரிசனம் முதலிய விருத்தி விசேஷ ஜன்யத்தன்மை கூறத்தக்கதாய இருத்தலினென்க.

அவதாரிகை

இவ்வாறு சொப்பனவஸ்தையின்கண் அசத்தியத்தினின்றும் சத்தியமான அர்த்தக் கிரியையை உதாகரித்து ஜாக்கிரத்தின்கண்ணும் அதனே உதாகரிக்கின்ருர்.

அப்படி ஜாக்கிராவஸ்தையிலும் கடாதியைப் பிரகாசித்த லில் சாமர்த்தியமுள்ளதும் அவ்வீட்டிலேயுள்ள வேறு புருஷர் களால் பார்க்கப்படுகின்றதும் ஆகிய பிரகாசமுடைய சிறிய வீட்டின்கண்ணே உடனே பிரவேசித்த புருடனுல் கற்பிக்கப் பட்ட இருளிற்குப் பிரசித்த இருட்டிற்குரிய அர்த்தக்கிரியை யைச் செய்யுந்தன்மை காணப்படுகிறது. அவ்விருளினுல் அப்புருடனைக் குறித்து கடாதியின் ஆவரணமாம். தீபாதியைக் கொண்டு வருங்கால் அதன் நீக்கமாம். அதைக் கொண்டு போகுங்கால் மீண்டும் ஆவரணமாம். என்பதாதியைக் காண்டலினுல் என்று சிலர் கூறுகின்றனர்.

வேறு சிலர் கூறுவதாவது குடித்தல் குளித்தல் முதலிய அர்த்தக் கிரியையின்கண் ஜலம் முதலியவற்றின் சொரூப மாத்திரம் உபயோகியாம். அதன்கண் உள்ள சத்தியத் தன்மையன்ரும். அச்சத்தியத் தன்மைக்கு காரணத்தன்மை யும் அதன் அவச்சேதகத் தன்மையும் இன்மையால் 'ஆதலால் அச்சத்தியத்தன்மையால் யாது பயன்' சத்தியத் தன்மைக்குக் காரணத் தன்மையின் அவச்சேதகத் தன்மையை உடன்படா விடின் கானற்சலம் சுத்தி இரஜதம் முதலியவற்றிற்கும் பிரசித்த ஜலம் முதலியவற்றிற்கு உசிதமான அர்த்தக் கிரியையை செய்யுந்தன்மை பிராப்தியாம் என்று சொல்லற்க. கானற் சலம் முதலியவற்றில் ஜலத்தன்மை முதலிய ஜாதி யின்ருமாதலின்.

அவதாரிகை

கானற் சலத்தில் ஜலத்தன்மை ஜாதி இல்லையாயின் இது ஜலம் என்னும் சப்த விஷயக ஞான மெங்ஙனமாமென்ரு சங்கித்து அவ்வனுபவத்திற்கு அன்னியதாசித்தியைக் கூறுகின்ருர்.

அதன் விஷயகமான பிராந்திக்கு ஜலசப்த விஷயகத் தன்மை ஜலசப்த விஷயக யாதொரு பூர்வ அனுபவ முண்டோ அதன் சமஸ்கார ஜன்யத்தன்மையின் அதீனமாம், என தத்துவ சுத்திக்காரர் முதலியோரது மதத்தின்கண் அவ்வவ் வர்த்தக் கிரியைக்குக் காரணமான ஜலத்தன்மை முதலிய ஜாதி இன்மையினுலேயே அதன் அப்பிராப்தியாம் ஆதலின்.

அவதாரிகை

கானற் சலம் முதலியவற்றில் அர்த்தக்கிரியையைச் செய்யுந்தன்மைக்குக் காரணமான ஜாதியை அங்கீகரித்தும் கூறிய அதிப்பிரசங்கத்தைப் பரிகரிக்கின்றார்.

கானற் சலம் முதலியவற்றின் கண்ணும் ஜலத்தன்மை முதலிய ஜாதி உளதேயாம். அவற்றின்கண் ஜாதி இன்றேல் அதன் சம்பந்தத்தினை விஷயம் செய்கின்ற பிராந்தி ஞானத்திற்கு விரோதம் வருதலினாலும் ஜலாதியை விரும்புகின்ற புருடனுக்கு அதன்கண் பிரவிருத்தியின் அபாவம் பிராப்தி ஆதலினாலும் என்க.

இவ்வாறாகவே பிராதிபாசிக வஸ்துவின்கண் முன் பார்க்கப்பட்ட வஸ்துவின் சஜாதீயத்தன்மை வியவகாரத்தை அனுசரிக்கின்றவர்களது மதத்தின்கண் சில விடத்து அதிஷ்டானத்தின் விசேஷ ஞானத்தால் மூலத்தோடு அத்தியாசம் நாசமாதலாலும் சில விடத்து அதிஷ்டானத்தின் சாமான்ய ஞானத்தின் ஒடுக்கத்தால் கேவலம் அத்தியாசம் நாசமாதலாலும் சில விடத்து குன்றுமணிக் கொத்து முதலியவற்றின்கண் நேத்திரத்தால் நெருப்பு முதலியவற்றின் அத்தியாசஸ்தலத்தில் தாகம் பாகம் முதலியவற்றின் காரணமான உஷ்ண ஸ்பரிச முதலியவற்றிற்கு அத்தியாசம் இன்மையினாலும் அவ்வவ் விடங்களில் அர்த்தக்கிரியையின் அபாவம் பொருந்துதலின் சில விடத்து சில அர்த்தக்கிரியைகளை உடன்படுதலாலும் என்க.

அவதாரிகை

இப்போது பிராதிபாசிக வஸ்துக்களில் அர்த்தக்கிரியையைச் செய்யுந்தன்மையின் அபாவத்தை அங்கீகரித்தும் சத்தியத்தன்மை காரணத்தன்மையின் அவச்சேதகமாக சொல்லத்தக்க தன்றாம் எனக் கூறுகின்றார்.

கானல் ஜலம் முதலியவற்றின் வியா விர்த்தியைச் செய்வதும் அர்த்தக்கிரியையின் உபயோகியுமான வடிவம் சொல்லத்தக்கதாமேல் மித்தியாத்தன்மைச் சுருதியோடு விரோதமானதும் பிரத்தியக்ஷம் முதலியவற்றால் கவர முடியாததுமான மூன்று காலத்திலும் அபாத்தியத்தன்மை

வடிவ சத்தியத்தன்மையை விட்டுத் தோஷ விசேஷ அஜன்ய இரஜதத்தன்மை முதலியவற்றிற்கே இரஜதாதிக்கு உசித மான அர்த்தக்கிரியையின் உபயோகி வடிவம் கூறுதற்கு முடியு மாதலானும் என்க, ஆதலால் மித்தியாத்தன்மையை உடன் படினும் அர்த்தக்கிரியையைச் செய்யுந்தன்மை சம்பவித்த லால் பிரபஞ்சம் மித்தையேயாம் சத்தியம் அன்றுமென்க.

## 45. மித்தியாத்தன்மைக்கு மித்தியாத்தன்மை யுடன்படினும் பிரபஞ்சத்தின் மித்தியாத் தன்மை பொருந்தமாமெனல்

அவதாரிகை

வேறு பிரகாரத்தால் பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மை யினை வினவுகின்றான்.

அற்றேல் பிரபஞ்சத்தின் தருமமான, மித்தியாத் தன்மைக்கு சத்தியத்தன்மையை உடன்படின் பிரஹ்மம் அத்வைதம் என்பதற்குக் கேடுண்டாம் ஆதலின் அதுவும் மித்தையேயாம் எனச் சித்தாந்தியால் கூறத்தக்கது ஆதலின் பிரபஞ்சத்திற்கு சத்தியத் தன்மையின் நீக்கம் எவ்வாறும்.

அவதாரிகை

அற்றேல் மித்தியாத்தன்மை மித்தையாயினும் தனது ஆசிரய பிரபஞ்சத்தின்கண் தனது விரோதி சத்தியத் தன்மையை நிவர்த்தி செய்வதால் அதற்குச் சத்தியத்தன்மை யின் கேடுண்டாம் என்னும் சங்கையை சித்தாந்தியின் சம்மத மான திருஷ்டாந்தத்தால் பரிகரிக்கின்றார்.

மித்தையாயுள்ள பிரஹ்மத்தின் ஸப்பிரபஞ்சத்தன்மை நிஷ்பிரபஞ்சத்தன்மைக்கு விரோதியன்றும் என நீ கூறிய ரீதியால் மித்தியாவடிவ மித்தியாத்தன்மைக்குச் சத்தியத் தன்மையோடு விரோதமின்மையின்.

அவதாரிகை

மித்தியாத்தன்மை தருமம் மித்தையாம் என்னும் பக்ஷத் தினையே ஆசிரயித்து சமாதானம் கூறுகின்றார்.

ஈண்டு அத்வைத தீபிகையின்கண் கூறப்பட்டதாவது ஆகாசாதிப் பிரபஞ்சத்தின் சமான சத்தையுடையது மித்தி யாத் தன்மையாம். அதுவும் தருமியின் சத்தியத்தன்மையை நீக்குவதாம். தர்மத்திற்கு தனது விரோதமான தர்மத்தை

நிவர்த்திக்குந் தன்மையில் உபயவாதி சித்தமாகிய தர்மியின் சமான சத்துவம் நிமித்தமாம். பாரமார்த்திகத்தன்மை அன்ரும். கடத்தன்மை முதலியவற்றை நிவர்த்திக்கின்ற படத்தன்மை முதலியவற்றின்கண் நமக்கும் பாரமார்த்திகத் தன்மை சம்மதமின்மையின். பிரஹ்மத்தின் ஸப்பிரபஞ்சத் தன்மை தர்மியின் சமான சத்தையுடையதன்ரும் ஆதலால் நிஷ்பிரபஞ்சத்தன்மையை நிவர்த்திப்பதன்ரும். இதனுலேயே மித்தியாத்தன்மைக்கு வியாவகாரிகத்தன்மையை உடன்படின் அதன் விரோதியாகிய பிராதிபாசிக ரகிதப் பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மைக்கு பாராமார்த்திகத் தன்மை பிராப்தியாம் என்பது நிராகரிக்கப்பட்டது. தருமியின் சமான சத்தையினையுடைய மித்தியாத்தன்மை வியாவகாரிகமாமேல் தருமிக்கும் வியாவகாரிகத்தன்மை நியமமாதலின்.

அவதாரிகை

யாண்டும் பிரஹ்மசத்தையே தோற்றுகின்றது அதனினும் வேருக வியாவகாரிக சத்தையாவது பிராதிபாசிக சத்தையாவது இன்ரும் என்னும் மதத்தின்கண் தருமியின் சமான சத்துவம் நிமித்தமாம் என்னும் சமாதானம் சம்பவியாது என்று கருதி வேறு சமாதானத்தைக் கூறுகின்ருர்.

அல்லது எந்தத் தர்மமானது எந்தத் தர்மியினது தர்மி விஷயக சாட்சாத்காரத்தால் நிவர்த்திக்கத் தகாதோ அந்தத் தருமம் அந்தத் தருமியின்கண் தனது விருத்தமான தர்மத்தை நிவர்த்தி செய்வதாம்.

சுத்தியின்கண் சுத்தியின் தாதானமியம் அதன் விஷயக சாட்சாத் காரத்தால் நிவர்த்திக்கத் தகாததாய் அசுத்தித் தன்மைக்கு விரோதியாம் அச்சுத்தியின் கண்ணேயே இரஜத தாதாத்மியம் தர்மியின் சாட்சாத் காரத்தால் நிவர்த்திக்கத் தக்கதாய் அரஜதத் தன்மைக்கு அவிரோதியாம். என வியவஸ்தையைக் காண்டலின். இவ்வாருகவே பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மை கற்பிதமாயினும் பிரபஞ்சத்தின் சாட்சாத் காரத்தால் நிவர்த்திக்கத் தகாத தாகலின் சத்தியத் தன்மையை நீக்குவதேயாகும். பிரஹ்மத்தின் ஸப்பிரபஞ்சத் தன்மையோ பிரஹ்ம சாட்சாத் காரத்தால் நிவர்த்திக்கத் தகுந்ததாயிருத்தலின் நிஷ்பிரபஞ்சத் தன்மையை நீக்குவதின்ரும் என்க.

அவதாரிகை

வேறு சங்கையும் இனி கூறப்படும் ஏதுவால் நீக்கப் பட்டதெனக் கூறுகின்ருர்.

இதனல் சப்தத்தால் அறியப்படுகின்ற பிரஹ்மத்திற்குச் சத்தியத்தன்மை உளதேல் சப்தத்தின் யோக்கியத் தன்மைக் கும் சாப்த ஞானத்தின் பிராமாண்யத்தன்மைக்கும் சத்தியத் தன்மை கூறத்தக்கதாம். பிராதிபாசிக யோக்கியத்தன்மை யினையுடைய அனுப்தனது வாக்கியத்தால் வியாவகாரிக அர்த்தத்தின் சித்தியின்மையினுலும் வியாவகாரிக யோக் கியதையுடைய அக்கினி ஹோத்திராதி வாக்கியத்தால் தாத்துவிக அர்த்தத்தின் சித்தியின்மையினுலும் யோக்கியதை யின் சமான சத்தையினையுடையதாகவே சப்தார்த்தத்தின் சித்தி, நியம மாதலினுலும். அர்த்தத்தின் அபாதவடிவ பிராமாணியத்திற்கு அசத்தியத்தன்மை உளதேல் அர்த்தத் திற்குச் சத்தியத்தன்மை பொருந்தாமையானும் என்க. இவ்வாருகவே பிரஹ்மத்தின் வேருக சத்தியவஸ்து இருத்த லால் அத்வைதத்திற்கு அவசியம் கேடுண்டாம் ஆதலின் ஆகாசாதிப் பிரபஞ்சமும் சத்தியமாக இருக்குக. என்பது கண்டிக்கப்பட்டது. வியாவகாரிகப் பிரபஞ்சத்திற்கு அர்த்தக் கிரியையைச் செய்யுந்தன்மை வியவஸ்தை செய்யப்பட்டமை யால் வியாவகாரிக யோக்கியத்தன்மையாலும் சத்தியப் பிரஹ்மத்தின் சாப்தபோதம் சம்பவித்தலின். பிரஹ்மத்தின் கண் தாத்பர்யமுள்ள வேதாந்த வாக்கியத்தில் சத்தியம் முதலிய பதம் இருத்தலால் பிரம்மத்தின் சத்தியத்தன்மை சித்தித்தலின். அக்கினி ஹோத்திராதி வாக்கியத்தின்கண் அத்தகைய பதம் இன்மையால் சத்தியத்தன்மையின் சித்தி யின்ரும் அத்தகைய பதம் இருப்பினும் பிரபலமாகிய பிரஹ்ம அத்வைத சுருதிக்கு விரோதம் வருதலால் சத்தியத்தன்மை யின் சித்தியின்ரும் என்று இவ்வாறு விஷமத்தன்மை பொருந் துதலின் சப்தார்த்தத்திற்கும் யோக்கியத்தன்மைக்கும் சமான சத்தை யுடையதாந்தன்மை நியமம் நிஷ்பிரமாணமாத லானும் கடஞானத்தின் பிராமாண்யத்திற்கு அகட கடிதத் தன்மை போலும் அதாவது கடத்துவ வைசிஷ்டியம் இருத் தல் போலும் சத்தியமாயுள்ள பிரஹ்ம ஞான பிராமாண்யத் திற்கும் அதனினும் வேருன பிரஹ்மத்துவ வைசிஷ்டிய கடிதத் தன்மையால் மித்தியாத்தன்மை பொருந்து தலினுலும்

என்க. ஆதலால் ஆரம்பண அதிகரணத்திற் கூறிய நியாயத்தால் ஆகாசாதி சகல பிரபஞ்சத்திற்கும் மித்தியாத்தன்மை வஜ்ஜிர லேபமாகின்றது

## 46. ஜீவோபாதியின் பேத விசாரம்

சங்கை

அற்றேல் ஆரம்பண சப்தாதிகளால் அசேதனமாகிய ஆகாசாதிப் பிரபஞ்சத்திற்கு மித்தியாத்தன்மை சித்திக்கினும் மோக்ஷத்தை அடைபவர்களான சேதனர்களான ஜீவர்கட்கு மித்தியாத்தன்மை பொருந்தாமையால் அத்விதீயப் பிரஹ்மத்தின்கண் வேதாந்த வாக்கியங்கட்கு சமன்வயம் பொருத்தமன்றும் அவர்கட்கு முன்பு கூறப்பட்ட பிரஹ்மத்தின் அபேதமும் பொருத்தமன்றும் பரஸ்பரம் பேதத்தை அடைந்துள்ள அவர்கட்கு ஓர் பிரஹ்மத்தோடு அபேதம் சம்பவியாமையின், அந்த ஜீவர்களின் பரஸ்பர பேதம் அசித்தமாம் என்னற்க. சுக துக்காதிகளின் வியவஸ்தையால் பேதம் சித்தித்தலின் எனின்.

சமாதானம்

அற்றன்று அவர்கட்கு அபேதம் இருப்பினும் உபாதி பேதத்தாலேயே சுகதுக்க வியவஸ்தை பொருந்துதலின்.

அற்றேல் உபாதிகட்கு பேதம் உளதாயினும் ஜீவர்கட்கு அபேதம் நீங்காமையின் வியவஸ்தை எப்படிக் கூடும். ஆசிரய பேதத்தால் உபபாதனம் செய்யத் தக்கதாகிய விருத்த தருமங்களின் அசங்கரம் (கலப்பின்மை) அதனின் வேருகிய மற்ருென்றன் பேதத்தை அங்கீகரித்தலால் சித்திக்கின்றதில்லை.

அவதாரிகை

அந்தக்கரணமே பந்தத்தின் ஆசிர்யமும் நான் என்னும் அனுபவத்திற்கு விஷயமும் ஆம் ஆன்மாவன்று அது கூடஸ்தமாதலின் அதாவது ஆசிரய பேதத்தாலேயே தருமத்தின் வியவஸ்தையாமெனச் சமாதானம் கூறுகின்ருர்.

ஈண்டு சிலர் கூறுவதாவது அந்தக் கரணமாகிய உபாதி பேதத்தாலேயே சுகதுக்காதிகளின் வியவஸ்தை சித்திக்கின்றது "காமம் சங்கற்பம் சமுசயம் சிரத்தை அசிரத்தை

தைரியம் அதைரியம் வெட்கம் ஞானம் பயம் இவ்வனைத்தும் மனமேயாம். அந்தக்கரணம் எக்ஞத்தைச் செய்கின்றது. என்பது முதலிய சுருதிகளால் அந்தக்கரணத்திற்கே சர்வ அனர்த்த ஆசிரயத்தன்மை பிரதி பாதிக்கப்பட்டிருத்தலாலும் "இப்புருஷன் அசங்கன்" "அசங்கன் ஒன்றோடும் பற்றுகிற தில்லை" என்பது முதலிய சுருதிகளால் சேதனத்திற்குச் சர்வ வடிவத்தாலும் உதாசீனத்தன்மை பிரதி பாதிக்கப்பட்டிருத்த லாலும் என்க. இவ்வாறு அந்தக்கரணத்திற்கே பந்தத்தின் ஆசிரயத்தன்மை இருக்குமாயின் கர்த்திருத்தன்மை முதலிய பந்தத்திற்குச் சைதன்ய சாமானாதிகரண்ய அனுபவத்திற்கு விரோதமாம் என்று சொல்லற்க.

அந்தக்கரணத்திற்குச் சேதனத்தின் தாதான்மியமாக அத்தியஸ்தத்தன்மை இருத்தலால் அதன் தர்மங்கட்குச் சைதன்னிய சாமானாதிகரணிய அனுபவம் பொருந்துதலின். அந்தக்கரணத்திற்கு கர்த்திருத்தன்மை முதலிய பந்தத்தின் ஆசிரயத்தன்மை இருக்குமாயின் சேதனன் சம்சாரியாகான் என்று சொல்லற்க.

### அவதாரிகை

சேதன ஆன்மாவிற்கு சுபாவமாக சம்சார ஆசிரயத் தன்மையின்றேனும் புத்தியின் கண்ணுள்ளதாய் சாட்சியினால் அனுபவிக்கப்படுகின்றதாயுள்ள சம்சார ஆசிரயத்தன்மைக்கு ஆன்மாவின்கண் ஆரோபம் பொருந்துதலின் ஆரோபிக்கப் பட்ட சம்சார ஆசிரயத்தன்மை உளது எனப் பரிகரிக்கின்றார்.

கர்த்திருத்தன்மை முதலிய பந்தத்தின் ஆசிரய அகங் காரத்தின் கிரந்தி வடிவ சேதனத்தோடு யாதொரு தாதான் மிய அத்தியாசம் உண்டோ அதன் அதிஷ்டானத் தன்மையே ஆன்மாவிற்கு சம்சாரமாம் என்று அங்கீகரித்தலின். உபா திக்குச் சம்சார ஆசிரயத்தன்மை மாத்திரத்தாலேயே பீஷ ணத்தன்மைக்கு ஆசிரயமான சர்ப்பத்தின் தாதான்மிய அத்தியாசத்தின் அதிஷ்டானமாகிய இரஜ்ஜு முதலியவற்றின் கண் இது பயத்தைச் செய்வதாம் என்னும் பிராந்தி உண்டா வது போல் ஆன்மாவின்கண் அனர்த்தத்தின் ஆசிரயத் தன்மைப் பிராந்தி பொருந்துதலினாலும். இவ்வபிப்பிராயத் தினாலேயே "தியானம் செய்கின்றது போலும் விளையாடுகின் றது போலும்" "அகங்காரத்தால் மோகத்தை அடைந்துள்ள

ஆன்மா நான் கர்த்தாவென்று அபிமானிக்கின்றது" என்பது முதலிய சுருதிஸ் மிருதிகளைக் காண்டலானு மென்க.

ஒரே ஆன்மாவின்கண் விசித்திரமான சுகதுக்கங்களின் ஆசிரயமாகிய அவ்வவ் வந்தக்கரணங்களின் அத்தியாசத்தால் ஆன்மாவின்கண் அபிமானத்தாலாகிய சுகதுக்காதிகளின் வியவஸ்தை இவ்வாருயினும் (புத்திதர்ம வியவஸ்தை சித்திக்கினும்) சித்திக்கின்றதில்லை என்று சொல்லற்க.

அத்தியாசத்தால் தாதான்மியத்தை அடைந்துள்ள அந்தக்கரணத்தின் அனர்த்தக் கூட்டத்திற்குப் போன்று அதன் கண்ணுள்ள பரஸ்பர பேதத்திற்கும் அபிமானத்தால் ஆன்ம சம்பந்தத்தன்மை இருத்தலால் ஆன்மாவிற்கு அனர்த்தத்தை அடைவுறுந்தன்மை எத்தகையதோ அத்தகைய பேதத்தால் அதன் வியவஸ்தை பொருந்துதலின்.

அவதாரிகை

இப்போது சாக்ஷி சைதன்னியத்திற்குச் சர்வ சரீரங்களிலும் ஏகத்தன்மையின் அதீனமான தோஷத்தினை ஆசங்கித்து நிராகரிக்கின்ருர்.

கூறப்படும் ஏதுவால் சுகதுக்காதிகட்கு அந்தக்கரணத்தின் தருமத்தன்மை இருப்பினும் அதனனுபவம் சாட்சிவடிவமாதலின் அஃது ஒன்ருதலின் சுகதுக்கங்களின் அனுபவ வடிவ போக வியவஸ்தை சித்திக்கின்றதில்லை என்பது நிராகரிக்கப் பட்டது, அவ்வவ் வந்தகரணங்களோடு தாதான்மியத்தினடைவால் அவ்வவ் வந்தக்கரணத்தின் பேதத்தால் பேதமுடைய சாட்சிக்கே அவ்வவ் வந்தக்கரண சுகதுக்காதிகளின் அனுபவ வடிவத்தன்மை இருத்தலால் அதன் வியவஸ்தையும் பொருந்துதலின் என்க.

அவதாரிகை

சர்வ சரீரங்களிலும் ஆன்மாவிற்கு ஏகத்தன்மை இருப்பதால் சுகதுக்காதி வியவஸ்தை கூடாது என்று பூர்வ வாதியின் ஆக்ஷேபத்திற்கு வேறு சமாதானத்தைக் கூறுகின்ருர்.

வேறு சிலரோ ஜடமாகிய அந்தக்கரணத்திற்கு கர்த்திருத்தன்மை முதலிய பந்தத்தின் ஆசிரயத்தன்மை பொருந்தாமையால் ஆன்மா கர்த்தாவாம் சாஸ்திரத்திற்குப் பொருளுடையதாந்தன்மையால்" என சேதனத்திற்கு பந்தத்தின் ஆசிரயத்தன்மையைப் பிரதிபாதிக்கின்ற சூத்திரத்தால்

அந்தக்கரணத்திலுள்ள சிதாபாசன் பந்தத்திற்கு ஆசிரயனுவான் அசத்தியமாய் பிம்பத்தினும் வேருயுள்ள அந்த சிதாபாசனுக்கு அந்தக்கரணங்கள் தோறும் பேதம் இருப்பதால் ஞானி அஞ்ஞானி சுகிதுக்கி கர்த்தா அகர்த்தா என்பது முதலிய வியவஸ்தை சித்தியாம்.

இவ்வாறு அத்தியஸ்தத்திற்குப் பந்தத்தின் ஆசிரயத் தன்மையை உடன்படின் பந்த மோட்சங்கட்கு வெவ்வேறு அதிகரணத்தில் இருக்குந்தன்மை பிராப்தியாம் என்று சொல்லற்க. இச் சிதாபாசனுக்கு அந்தக்கரண அவச்சின்னனும் சொருபமாக சத்தியத் தன்மையால் மோட்சத்தில் தொடர்ந்திருப்பவனும் ஆகிய பரமார்த்த ஜீவனிடத்தில் அத்தியஸ்தத்தன்மை இருப்பதால் கர்த்திருத்தன்மையின் ஆசிரய சிதாபாசனது தாதான்மிய அத்தியாசத்தின் அதிஷ்டானத்தன்மை அவனுக்குப் பந்தமாம் என அங்கீகரித்தலால் எனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

சர்வ சரீரங்களிலும் சிதான்மா ஏகமாயினும் கேவல அவ்வான்மாவிற்கு பந்தாசிரயத்தன்மை அங்கீகரிக்கப் படுகின்றதில்லை. மற்ருே புத்தி விசிஷ்ட சிதான்மாவிற்காம் அதாவது பந்தத்தின் ஆசிரயமாகிய விசிஷ்ட சீவனுக்குச் சரீரந்தோறும் பேதம் இருத்தலால் சுகதுக்காதிகளின் சாங்கரியம் (கலப்பு) இன்ரும். என மற்ருேர் மதத்தைக் கூறுகின்ருர்.

வேறு சில நூலாசிரியரோ "தேகேந்திரிய மனதோடு கூடிய சேதனம் போக்தாவாம் என்று பண்டிதர்கள் கூறுகின்ருர்கள்" என சககாரித்தன்மையால் தேகேந்திரியங்களோடும் தாதான்மியத்தால் மனதோடும் கூடியுள்ள சேதனத்திற்குப் போக்த்துருத்தன்மை கேட்கப்படுதலால் அந்தக்கரணத்தின் பேதத்தால் அதன் விசிஷ்ட சீவர்களுக்கும் பேதம் உளதாதலின் சுகதுக்காதிகளின் வியவஸ்தையாம். இவ்வாருயின் விசிஷ்டத்திற்கு பந்தம் சுத்தத்திற்கு மோட்சம் என வெவ்வேறு அதிகரணத்தில் இருக்கும் தன்மை பிராப்தியாம் என்று சொல்லற்க. விசிஷ்டத்தின் கண்ணுள்ள பந்தத்திற்கு விசேஷியத்தின்கண் தொடர்ச்சி இருத்தலின் விசிஷ்டம் சுத்தத்தினும் வேறின்மையின் எனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

பந்த மோட்சங்கட்கு நேர்மையான சாமானுதி கரணியத்தைக் கூறுகின்றூர்.

வேறு சிலரோ கேவல சேதன வான்மா கர்த்துருத் தன்மை முதலிய பந்தத்திற்கு ஆசிரயம் ஆகுக. ஸ்படிகம் சென்னிறமுடையது என்னும் நியாயத்தால் கர்த்திருத் தன்மை முதலியவற்றின் ஆசிரயமாகிய அந்தக்கரணத்திற்காவது அதன் விசிஷ்டத்திற்காவது சன்னிதானம் இருத்தலால் சேதனத்தின்கண்ணும் வேறு கர்த்திருத்தன்மை முதலியவற்றின் அத்தியாசத்தினை அங்கீகரித்தலால். அவ்வத்தியாசத்தின் அதிஷ்டான ஆன்மா ஒன்ருதலால் வியவஸ்தை பொருந்தாது என்னற்க. உபாதி பேதத்தாலேயே அது பொருந்துதலின். மற்ருென்றன் பேதத்தால் மற்ருென்றன் கண் விருத்த தருமங்களின் வியவஸ்தை பொருத்தமன்ரும் என்று சொல்லற்க. மரத்தின் அடிப்பாக நுனிப்பாக வடிவ உபாதி பேத மாத்திரத்தால் மரத்தின்கண் சம்யோகத்திற்கும் அதன் அபாவத்திற்கும் வியவஸ்தையைக் காண்டலாலும் அவ்வப் புருஷர்களது செவித்துளை வடிவ உபாதி பேதத்தால் சுரோத்திரத் தன்மையை அடைந்துள்ள ஆகாசத்திற்கு ஆண்டு ஆண்டு சத்தத்தைத் தோற்றுவிக்குந் தன்மை தோற்றுவிக்காத் தன்மை உச்சமந்த இஷ்ட அனிஷ்ட சத்தங்களைத் தோற்றுவிக்குந் தன்மை முதலிய விசித்திரத் தன்மையைக் காண்டலாலும் எனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

திருஷ்டாந்தங்களில் உபாதி பேதத்தால் அதன் உபகித விருக்ஷாதியின் பேதத்தை அன்னியன் கூறுவானுகில் அப்போது பிரகிருதத்திலும் அவ்வாறு ஆகுக என்னும் கருத்தால் கூறுகின்ருர்.

சிலரோ ஆசிரய பேதத்தாலேயே விருத்த தருமங்களின் வியவஸ்தையைப் பிரதிபாதனம் செய்தல் நியமமாயின் அப்போது அந்தக்கரண உபகித சேதனத்தின்கண்ணேயே உபாதி வசத்தால் பேத கற்பனை இருக்குக.

அவதாரிகை

அற்றேல் சத்திய பேதமே வியவஸ்தையின் பிரயோஜகமாமெனின் அற்றன்றெனக் கூறுகின்ருர்.

அகற்பித ஆசிரய பேதமே வியவஸ்தையின் பிரயோஜக மென்பது ஓரிடத்தும் அறியப்படாமையின்.

அவதாரிகை

அற்றேல் சொரூப பேதமே வியவஸ்தையின் பிரயோஜக மாம் ஔபாதிக பேதமன்றும் என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்.

மணி, கண்ணடி, வாள் முதலிய உபாதியால் கற்பிக்கப் பட்ட பேதத்தால் முகத்தில் கருப்பு, வெளுப்பு, வட்டம், நீளம் முதலிய தர்மங்கட்கும் விரல் ஆசிரயமாகிய உபாதி கற்பித பேதத்தால் தீபத்தின்கண் பின்தன்மை முன்தன்மை முதலிய தர்மங்கட்கும், வியவஸ்தை அறியப்படுதலினல் எனக் கூறுகின்றனர்.

## 46. ஜீவனது உபாதிவிசாரம்

அவதாரிகை

இப்போது வேறு விசாரத்தை ஆரம்பிக்கின்றார்.

இவ்வாறு உபாதியின் வசத்தால் வியவஸ்தையின் உபபாதனம் சம்பவிக்கப்பட்டபோது ஜீவர்கட்குப் பரஸ்பர சுகாதிகளின் அனுசந்தானத்திற்கும் அனுசந்தானம் இன்மைக்கும் காரணமான உபாதியாது என்பது நிரூபிக்கத் தக்கதாம்.

ஈண்டு சிலர் கூறுவதாவது போகாயதனத்தின் அபேத மும் அதன் பேதமும் அனுசந்தானத்திற்கும் அனனுசந்தானத் திற்கும் பிரயோஜக உபாதிகளாம், சரீரத்தால் அவச்சின்ன வேதனை அதன் அவச்சின்ன சீவனல் அனுசந்தானம் செய்யப் படுதலினலும், பாதத்தால் அவச்சின்ன வேதனை கரத்தால் அவச்சின்ன ஜீவனல் அனுசந்தானம் செய்யப் படாமை யாலும், கரத்தால் அவச்சின்னனுகிய நான் பாதத்தால் அவச் சின்ன வேதனையை அனுபவிக்கின்றேன் என்னும் ஞானம் உண்டாகாமையின்.

அவதாரிகை

கரத்தாலவச்சின்ன ஆன்மாவிற்கு பாதாவச்சின்ன ஆன்மாவிலுள்ள துக்கத்தின் அனுசந்தான மின்மையில் பாத கத்தை வினவுகின்றான்.

† போகாயதனம் = சரீரம்

அப்படியானல் பாதத்தில் தைத்த முள்ளைப் பிடுங்கும் பொருட்டு கையின் வியாபாரம் எங்ஙனமாம். உத்தரம் இந்தக் கரத்தின் வியாபாரம் கரத்தாலவச்சின்ன சீவனது அனுசந் தானத்தாலன்ரும். மற்ரூ அவயவ அவயவிகளாகிய பாத சரீரங்கட்குப் பேதம் இன்மையால் பாதாவச்சின்ன வேதனை சரீர அவச்சின்ன சீவனல் நான் பாதத்தில் வேதனையை உடையவன் என அனுசந்திக்கப் படுகின்றது, இவ்வாறு அதன்அநுசந்தானத்தால் கரத்தின் வியாபாரமாம். இவ்வாறு சைத்திர மைத்திர சரீரங்கட்கு அபேத மின்மை யால் சைத்திரனது சரீரத்தால் அவச்சின்ன வேதனை மைத் திரனது சரீரத்தால் அவச்சின்ன சீவனல் அனுசந்திக்கப் படுகிறதில்லை.

அற்றேல் கரத்தால் வளைபட்ட ஆன்மாவிற்குப் பாதத் தால் வளைபட்ட வேதனையின் அனுசந்தான மின்றேனும் பாதத்தில் தைத்த முள்ளை யெடுக்கும் பொருட்டு கரத்தின் வியாபாரம் உண்டாவது போன்று மைத்திரனது சரீராவச் சின்ன ஆன்மாவிற்குச் சைத்திரனது சரீராவச்சின்ன ஆத்மாவி லுள்ள வேதனையினனுசந்தானம் இன்றேனும் சைத்திர சரீரத் தில் தைத்த முள்ளை எடுக்கும் பொருட்டு மைத்திரனது சரீரத் தில் வியாபாரம் உண்டாதல் வேண்டும் எனில் கூறுகின்ரூர்.

இரண்டு சரீரங்களில் தொடர்ந்துள்ள வேறு அவயவி யினுல் அவச்சின்னனுலும் அனுசந்திக்கப் படுகின்றதில்லை, இரண்டு சரீரங்களிலும் தொடர்ந்துள்ள அவயவியாகிய போகாயதனமே இன்மையின் ஆதலால் சைத்திரனுடைய சரீரத்தில் தைத்த முள்ளை எடுக்கும் பொருட்டு மைத்திரனது சரீரத்தில் வியாபாரப் பிராப்தி யின்ரும் என்க.

வேறு சிலரோ சேர்க்கையின்றிய சரீரமாகிய உபாதியின் பேதம் அனனுசந்தானத்தின் பிரயோஜகமாம். இவ்வாருகவே கரத்தால் அவச்சின்ன ஆன்மாவிற்கு பாதத்தால் அவச்சின்ன வேதனையின் அனுசந்தானத்தை அங்கீகரிக்கினும் தோஷ மின்ரும். உபாதிக்கு சேர்க்கை இன்றிய என்னும் விசே ஷணத்தைச் சேர்த்த போதிலும் கர்ப்பத்திலுள்ள பாலக னுக்குமாதாவின் சுகத்தின் அனுசந்தானம் பிராப்தியாம் என்னற்க. ஓர் அவயவியின்கண் அவயவத்தன்மையால் பிரவேசியாதுள்ளவைகட்கே சேர்க்கை இன்றிய என்னும்

சப்தத்தால் விவக்ஷிக்கப்பட்டமையின். தாயின் சரீரத்திற்கும் கர்ப்ப சரீரத்திற்கும் அப்படிப்பட்ட தன்மை இருத்தலின். அதாவது சேர்க்கை இன்றிய உபாதிபேதம் இருத்தலின் அநுசந்தானப் பிராப்தி இன்றுமெனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

கூறிய அநுசந்தானப் பிரயோஜகத்திற்கு வியபிசாரத்தை வினவுகின்றான்.

உயரத் தூக்கிய ஆயுதமுடைய கைகளாகிற தடிகளையுடைய கவந்தங்கள் கீழே விழுந்த தனது சிரசிலே உள்ள நேத்திரங்களால் யுத்த பூமியின்கண் பார்க்கின்றனவாய்ச் சத்துருக்களையும் கீழே வீழ்த்துகின்றன என்னும் பாரத வசனத்தால், சேர்க்கையின்றிய விடத்தும் அநுசந்தானம் அறியப்பட்டுளது என்று சொல்லற்க. ஆண்டும் சிரசிற்கும் முண்டத்திற்கும் ஓர் அவயவியின்கண் அவயவத்தன்மையால் முன்பு பிரவேசம் இருத்தலின்.

அவதாரிகை

இந்தப் பாரத வசனத்திற்குச் சுவார்த்தத்தில் பிரமாணத் தன்மை இன்மையின் வியபிசார சங்கையே பொருத்தமின்றும். என்னும் கருத்தால் அங்கீகாரத்தைத் தியாகம் செய்கின்றார்.

தலையை வெட்டியதன் பிறகு மூர்ச்சை மரணங்களுள் ஒன்று அவசியம் உண்டாவதால் பிரத்தியக்ஷ விரோத அர்த்தமுடைய அத்தகைய வசனத்திற்கு கைமுதிக நியாயத்தால் படைகளின் (போர் வீரர்களின்) உத்சாக அதிகத்தின் ஸ்துதி பரத்தன்மையாம் ஆதலின்.

அவதாரிகை

அற்றேல் தலையை வெட்டினதின் பிறகும் யுத்தத்தின் அநுசந்தான முதலியது யோக மகிமையாலாவது வரதான மகிமையாலாவது சிலருக்கு சம்பவிக்கின்றது. ஆதலால் பாரத வசனம் உண்மைப் பொருளையுடையதேயாம். என்னும் சங்கை உண்டாக மீண்டும் அநுசந்தானத்தை அங்கீகரித்து வியபிசாரத்தைப் பரிகரிக்கின்றார்.

அப்படிப்பட்ட பிரபாவத்தோடு கூடிய புருஷ விசேஷர்கள் விஷயமாக உடையதாந்தன்மையால் பாரத வசனத்திற்கு

---

கவந்தங்கள் — தலையில்லாத உடல்கள்.

பூதார்த்த வாதத்தன்மை இருப்பினும் சாமான்ய வடிவமா யுள்ள அனனுசந்தானப் பிரயோஜகத்தன்மையைக் கெடுக்கா மையாலும் என்க. அனனுசந்தானப் பிரயோஜகத்திற்குச் சாமான்யத் தன்மையை அங்கீகரித்தலாலேயே முன்கூறிய தும் இனிக் கூறப்படுவதுமான பக்ஷங்களில் யோகிகட்கும் பூர்வ ஜன்மத்தின் ஸ்மிருதியுடையவர்க்கும் வேறு சரீரத்தி லுள்ள விருத்தாந்தத்தின் அனுசந்தானம் இருப்பினும் தோஷப் பிராப்தியின்றும்.

வேறு சிலரோ சரீரத்தின் ஐக்கியமும் பேதமும் அனு சந்தானத்திற்கும் அதனபாவத்திற்கும் ஏதுக்களாகிய உபாதிகளாம். பால்ய அவஸ்தையிலும் ஜென்மாந்தரத்திலும் அனுபவிக்கப்பட்டவைகளின் அனுசந்தானத்தையும் அதன பாவத்தையும் காண்டலின்.

பால்யத்திலும் யௌவனத்திலும் சரீரம் வேறு வேறுமென சங்கிக்கத்தக்கதன்று.

அதுவே இச்சரீரம் என பிரத்யபிஞ்ஞை காணப்படுவ தால். பரிமாணத்தின் பேதத்தால் சரீரத்தின் பேத ஞான மும் சரியன்றும். ஓர் விருக்ஷத்தின்கண் சம்யோகமும் அதன பாவமும் அடி நுனிகளின் பேதத்தால் காணப்படுவன போன்று கால பேதத்தால் ஓர் சரீரத்தின்கண் அனேக பரி மாணத்தின் தொடர்ச்சி பொருந்துதலின்.

அவதாரிகை

ஆரம்பவாதத்தை ஆசிரயித்து வினவுகின்றுன்.

அற்றேல் அவயவங்களின் சேர்க்கை இன்றி பரிமாண பேதம் சித்திப்பதின்றும் அவயவங்களும் பின்னர் வந்தடை கின்றன வாய் முன்பு சித்தித்துள்ள தேகத்தைக் கூடுவதின் றும். ஆதலால் பரிமாணம் பேதமாகுங்கால் சரீர பேதம் அவசியம் அங்கீகரிக்கத்தக்கதாமெனின்.

அற்றன்று தீபத்தை ஏற்றுகின்ற அதே சமயத்தில் வீட்டினுள் வியாபிக்கின்ற பிரபா மண்டலத்தின் விகாசமும் அதனை அணைக்கின்ற அதே சமயத்தில் அதனது சங்கோசமும் முதலியதை அனுசரியாத பரமாணுப் பிரக்கிரியையினை யுடைய ஆரம்ப வாதத்தை அங்கீகரியாமையின்.

அவதாரிகை

அவயவங்களின் சேர்க்கைக் கிரமத்தால் வேறு சரீரத் தின் ஆரம்பத்தை அங்கீகரியாவிடின் ஓர் சரீரத்தின்கண்

விருத்த பரிமாணம் எங்ஙனம் கூடுமெனின் அதற்குக் கூறுகின்றார்.

விவர்த்த வாதத்திலோ இந்திர ஜாலக்காரனால் காண்பிக்கப்பட்ட சரீரம் போன்று அவயவங்களின் சேர்க்கை இன்றியே மாயையால் சரீரத்தின் விருத்தி பொருந்துதலின் எனக் கூறுகின்றார்.

சில நூலாசிரியரோ அந்தக்கரணத்தின் அபேதத்தாலும் அதன் பேதத்தாலும் முறையே அனுசந்தான அனனுசந்தானங்களின் வியவஸ்தையைக் கூறுகின்றனர். இந்தப் பக்ஷம் முன்பு உபபாதனம் செய்யப்பட்டுளது.

வேறு சிலரோ அஞ்ஞானங்கள் ஜீவபேதங்கட்கு உபாதிகளாய் நாநாவாயுள்ளனவென அங்கீகரித்து அவைகளின் பேதா பேதங்களால் அனுசந்தான வியவஸ்தையினைக் கூறுகின்றனர்.

## 47. உபாதி பேதமுளதாயினுஞ் சுகாதியினனுசந்தான சாங்கர்ய ஆபாதன விசாரம்

(கலப்பின் ஆபத்தியைக் கூறுதல்)

அவதாரிகை

இவ்வாறு ஏகான்ம வாதத்தின்கண் வியவஸ்தையை உபபாதனஞ் செய்து அதன் நாநாத்துவ வாதத்தின்கண் வியவஸ்தையின் அனுபபத்தியைக் கூறுகின்றார்.

ஈண்டு சிலர் ஜீவன் பிரஹ்மத்தின் அம்சமாம். சுருதிகளில் நாநாத்தன்மையைக் கூறுதலால், என்னும் அதிகரணத்தில் "அதிருஷ்டத்திற்கு நியமமின்மையால், அபிசந்தி முதலியவைகளிலும் இங்ஙனமாம். பிரதேசத்தாலெனின் அற்றன்று அந்தர்ப்பாவமாவதால்." என்னும் சூத்திர அதன் பாஷியரீதியை அநுசரித்து ஏகான்மாவின்கண் உபாதி பேதத்தால் வியவஸ்தையை அங்கீகரியாவிடின், கணதர் முதலியோரது ரீதியால் ஆன்ம பேதவாதத்தின்கண்ணும் வியவஸ்தை பொருந்தாமை சமானமாமெனக் கூறுகின்றார்,

அஃது எப்படியெனின் சைத்திரனது பாதத்தில் தைத்த முள்ளினால் சைத்திரனுக்கு வேதனையுண்டாகும் சமயத்தில் மற்றைய ஆன்மாக்களுக்கும் வேதனை ஏன் உண்டாகிறதில்லை

சர்வான்மாக்களுக்கும் சர்வகதத்தன்மை யுண்மையால், சைத்திரனது சரீரத்தினுள்ளிருக்குந்தன்மை சமானமாதலின்.

எவனுடைய சரீரத்தில் முள் தைத்ததோ அவனுக்கே வேதனையாம் மற்றையருக்கு அன்றும் என்னும் வியவஸ்தையும் கூறற்க. சர்வான் மாக்களின் சன்னதியில் உற்பத்தியாகின்ற சரீரம் ஒருவனுக்கேயாம் மற்றையருக்கின்றும் என நியமனம் செய்தற்குக் கூடாமையின்.

அவதாரிகை

அதிர்ஷ்டத்திற்கு நியமமின்மையின் என்னும் சூத்திரத்தை ஆரம்பிக்கின்றூர்.

எந்த சரீரம் எவனுடைய அதிர்ஷ்டத்தால் உண்டு பண்ணப்பட்டதோ அந்தசரீரம் அவனுடையதாம் எனநியமம் சித்தியாமையின் எப்போது அவ்வதிர்ஷ்டத்தின் உற்பத்தியின் பொருட்டு ஒரு ஆன்மாவோடு மனம் சம்யோகமாகின்றதோ அப்போது மற்றைய ஆன்மாக்களோடும் சம்யோகத்தை அடைகின்றதேயாம். காரணம் பொதுவாயிருக்கும்போது ஓர் ஆன்மாவின் கண்ணேயே அவ்வதிர்ஷ்டம் எவ்வாறு உற்பத்தியாகும்.

அற்றேல் மனதின் சையோக மாத்திரம் பொதுவாயிருப்பினும் நான் இந்தப் பயனை அடைவேனுக என்னும் இச்சை அதிர்ஷ்டத்தை உண்டுபண்டுகின்ற கர்மத்தின் அனுகூலமான முயற்சி யென்பது முதலியது வியவஸ்தை செய்யப் பெற்றுள்ளது ஆதலின் அதனுலேயே அதிர்ஷ்டத்தின் நியமம் சம்பவிக்கும் எனின்

அவதாரிகை

அபிசந்தி முதலியவைகளிலும் இங்ஙனமாம் என்னும் சூத்திரத்தினைப் பொருத்துகின்றவராய் உத்தரம் கூறுகின்றூர்.

அற்றன்று பலத்தின் ஆசை முதலியவைகட்கும் பொதுவான மனதின் சம்யோக முதலியவற்றுல் உற்பத்தியாகும் தன்மை இருத்தலால் வியவஸ்தை சித்தியாமையின்.

அற்றேல் தனது மனதின் சம்யோகம் ஆசை முதலியவற்றிற்குக் காரணமாம் ஆதலின் மனதின் சம்யோகமே அசாதாரணமாக சம்பவிக்குமெனின் அற்றன்று.

எப்போதும் எல்லா ஆன்மாக்களோடும் சம்யோகத்தை அடைந்துள்ளது மனது அந்த மனதையோர் ஆன்மாவிற்கே தன்னுடையது என நியமனஞ் செய்யக் கூடாமையின் அதிர்ஷ்ட விசேஷத்தால் ஓர் ஆன்மாவோடு மனதிற்கு சுவ சுவாமித்தன்மை சித்தியாமென்பதும் சரியன்றாம். அவ்வதிர்ஷ்டத்திற்கும் முன்போன்று வியவஸ்தை சித்தியாமையின்.

அவதாரிகை

"பிரதேசத்தாலெனின் அற்றன்று அந்தர்ப்பாவத்தா" லென்னுஞ் சூத்திரத்தினை வியாக்கியானம் செய்கின்றவராய்ப் பிரதேசத்தால் செய்யப்பட்ட வியவஸ்தையை ஆசங்கித்து நிராகரிக்கின்றார்.

அற்றேல் ஆன்மாக்கட்கு விபுத்தன்மை இருப்பினும் அவைகளின் பிரதேச விசேஷங்களே பந்தத்தை அடைவனவாம். ஆதலின் வேறு ஆன்மாக்கட்குச் சைத்திரனது சரீரத்தில் அந்தப் பிரதேச விசேஷ மின்மையால் சுகதுக்காதி வியவஸ்தை சம்பவிக்குமெனின்.

அவதாரிகை

ஓர் சரீரத்தில் ஓர் ஆன்மாவிற்கே பிரதேசமாம் மற்றைய ஆன்மாக்களுக்கு இன்றாம் என்னும் நியமம் அசித்தமாமென தூஷிக்கின்றார்.

எந்தப் பிரதேசத்தில் சைத்திரன் சுகாதியை அனுபவித்து அந்தப் பிரதேசத்தில் நின்றும் நீங்கினனோ அந்தப் பிரதேசத்திலேயே மைத்திரன் வந்தபோது அவனுக்கும் ஆண்டும் சுகதுக்காதியைக் காண்டலினால் வேறு சரிரத்தில் மற்றோர் ஆன்மாவின் பிரதேச விசேஷமும் அடங்கி இருத்தலின். ஆதலால் ஆன்ம பேத பக்ஷத்தின் கண்ணும் வியவஸ்தையை உபபாதனம் செய்வதற்கு அசக்கியமாம், எப்படியாவது அதனை உபபாதனம் செய்யத் தொடங்கின் சுருதியின் அனுசாரத்தாலும் இலாகவத்தாலும் ஏகான்ம பக்ஷத்தை அங்கீகரித்து அதன் கண்ணேயே அதனை உபபாதனம் செய்தல் பொருத்தமாம் என்க.

## 48. ஜீவர்களின் அணுத்துவ நிராகரண விசாரம்

அவதாரிகை

ஜீவர்கட்கு அணுத்தன்மையைப் போதிக்கின்ற சுருதி

யுக்திகளை ஆசிரயித்து மீண்டும் ஜீவப் பிரஹ்மங்களின் அபேதத்தை ஆக்ஷேபித்தல்.

விபுத்தன்மை பக்ஷத்தில் வியவஸ்தை நிருபிக்க முடியாதாயின் அப்போது அணுத்துவ பரிமாண முடையவைகளாகவே ஆன்மாக்கள் இருக்குக எனின்.

அற்றன்று ஆன்மாக்கட்கு அணுத்தன்மையை யுடன்படின் ஓர்போது எல்லாவவயவங்களிலும் சுகத்தின் உற்பத்தியும் ஒரே காலத்தில் கைகால் முதலியவற்றின் பிரேரணையும் பொருந்தாமையின்,

அவதாரிகை

ஜீவனுக்கு அணுத்தன்மையிருப்பினும் சர்வசரீரத்திலும் வியாபிக்கின்ற சுகாதி சம்பவிக்கின்றது என வினவுகின்ருன் முதலில் ஆன்மாவின் அணுத்தன்மையில் பிரமாணம் கூறுகின்ருன்.

சரீரத்தில் நின்றும் வெளிக்கிளம்புதல் போதல் வருதலாகிய கேட்கப்படுகின்ற இவைகள் வேறுவிதமாகப் பொருந்தாமையாலும் "இவ்வான்மா அணுவாம். எவ்வான்மாவை புண்ணியமும் பாவமும் ஆகிய இவைகள் கட்டுகின்றனவோ மயிர் நுனியின் நூற்றில் ஒருபாகத்திற்கு இவ்வான்மா சமானமாம்" என்பது முதலிய சுருதிகளில் நேரே அணுத்தன்மையைக் கேட்டலானும் ஜீவர்கள் அணுக்களேயாம்,

அவதாரிகை

ஜீவனுக்கு அணுத்தன்மையைச் சாதிக்கின்ற பிரமாணத்தை அநுசரித்த நவீன கற்பனையின் பிரகாரத்தை தரிசிப்பிக்கின்ருர்.

ஆன்மாக்களுக்கு அணுத்தன்மை இருப்பினும் ஞானசுகாதிகட்குத் தீபப்பிரபை போன்று ஆசிரயத்தினும் வேருன பிரதேச விஷேசங்களில் வியாபிக்கின்ற குணத்தன்மை இருத்தலால் சர்வ அங்கத்திலுமுள்ள சுகத்தின் பிரதீதி பொருந்தும். துரோணம் பிரகஸ்பதியின் பாகமாம் என்பது முதலிய ஸ்மிருதியை அனுசரித்து ஜீவர்கட்கு அம்சம் இருத்தலால் கை கால் சிரசு முதலியவற்றைத் தொடர்ந்துள்ள ஜீவனுடைய அம்சங்களில் சுகதுக்காதிகளின் ஒரே காலத்தில் தோற்றுதலும்

தேகக் கூட்டத்தின்கண்ணுள்ள ஜீவனுடைய அம்சங்களில் யோகிகட்கு போகங்களின் வேற்றுமையுமாம் ஆதலின் யாதொரு பொருந்தாமையுமின்றாம் இவ்வாறாகவே ஜீவர்கட்கு அணுத்தன்மையால் ஒருவருக்கொருவர் கலப்பின்மையால் சுகதுக்காதிகளின் வியவஸ்தையாம். விபுவாகிய பரமேஸ்வரனில் நின்றும் பேதமுமாமென்க.

அவதாரிகை

நவீன கற்பனையைத் தூஷிக்கின்றார்.

ஈண்டு அத்வைத தீபிகையின்கண் கூறப்பட்டதாவது இவ்வாறு ஜீவனுக்கு அணுத்தன்மை சாம்சத்தன்மைகளைக் கற்பிக்கினும் வியவஸ்தை எவ்வாறு சித்திக்கும், சைத்திரனுக்கு பாதத்தில் வேதனை சிரசில் சுகம் என தனது அம்ச பேதத்திலுள்ள சுகதுக்கங்களின் அனுசந்தானம் போன்று மைத்திரனிடத்திலுள்ள சுகதுக்கங்களின் அனுசந்தானத்தினை நிவர்த்திக்கக் கூடாமையின் சைத்திர ஜீவனில் நின்றும் அவனுடைய அம்சங்கட்கும் மைத்திரனுக்கும் பேதம் சமமாதலின்.

அவதாரிகை

அம்சாம்சிகட்கு அனனுசந்தானப் பிரயோஜகபேதம் அசித்தமாம் என்று சங்கித்து அதனைச் சாதிக்கின்றார்.

காயவியூகஸ்தலத்தில் அம்ஸியினின்றும் பிரிந்து வேறிடத்தில் செல்லுவதில் சாமர்த்தியமுள்ள அம்சங்கட்கு ஜீவனில் நின்றும் பேதம் அவசியம் இருத்தலாலும் அம்சாம்சிகட்கு உன்னால் பேதாபேதத்தை அங்கீகரித்தமையாலும் என்க.

சுத்தபேதம் அனனு சந்தானப் பிரயோஜகமாம் என்று சொல்லற்க பேதத்திலுள்ள சுத்தத்தன்மை என்பது யாது அதாவது அம்சாம்சி பாவத்தோடு சேர்ந்து இராத்தன்மையா, அல்லது அபேதத்தோடு கூடியிராத்தன்மையா? முதற்பக்ஷம் சரியன்று "ஜீவன் பரமேஸ்வரனுடைய அம்சமாம் என்னுடைய அம்சம் ஜீவலோகத்தில் அம்சம் நாநாத்தன்மையைக் கூறுதலால்" என்னும் சுருதிஸ் மிருதி சூத்திரங்களால் ஜீவனுக்குப் பிரஹ்மத்தின் அம்சத்தன்மையைப் பிரதிபாதித்தலால் பிரஹ்ம ஜீவர்கட்குப் போகக் கலப்பு பிராப்தியாமாதலின்,

அற்றேல் ஜீவ அம்சங்கட்கு ஜீவனைக் குறித்து முக்கிய அம்சாம் சித்தன்மையிருப்பது போன்று ஜீவனுக்கு பிரஹ்மத்தைக் குறித்து முக்கிய அம்சத்தன்மை இன்றும் மற்றே, குருபிம்பம் சந்திர பிம்பத்தின் நூற்றில் ஒரு அம்சமாம் என்பது போன்று சமானத்தன்மையினை யுடையதாய் அதனினும் குறைவுத் தன்மை மாத்திரம் உபசாரத்தாலாகிய அம்சத் தன்மையாமெனின்.

அவதாரிகை

முக்கிய அம்சாம் சித்தன்மையோடு கூடியிராத பேதம் அனனு சந்தானப் பிரயோஜகமாம் என்பதிலுள்ள முக்கிய அம்சாம்சித்தன்மை நிரூபிக்கத் தகாதாம் எனக் கூறுகின்றார்.

ஜீவ அம்சங்கட்கு ஜீவனைக் குறித்து யாதொரு முக்கிய அம்சத்தன்மை உண்டோ அது கூறியதினும் வேறாக எத்தகையது ஈண்டு அனனு சந்தானப் பிரயோஜக சரீரத்தின்கண் எது பிரவேசம் செய்யப்படுகின்றதோ, அது எத்தகையது எனக் கூட்டுக.

படத்தைக் குறித்துத் தந்துக்களுக்குப் போன்று ஆரம்பகத்தன்மை இன்றும். ஜீவனுக்கு அநாதித்தன்மை இருத்தலால் மகாகாசத்தைக் குறித்துக் கடாகாசங்கட்குப் போன்று பிரதேசத்தன்மையாவது உளியால் பிளக்கப்பட்ட கல் துண்டு முதலியவைகட்குப் போன்று கண்டத்தன்மையாவது இன்றும். ஜீவனுக்கு அணுத்தன்மை இருத்தலால் பிரதேசத் தன்மையும் சேத்தியத்தன்மையும் சம்பவியாமையானும் என்க.

சங்கை

பின்ன பின்னத் திரவியத்தன்மை அம்சத்தன்மையென சம்மதமாமெனின்,

அற்றன்று அவ்வாருயின் ஜீவ ஈஸ்வரருக்கும் பரஸ்பரம் ஜீவர்கட்கும் போகக் கலப்பு பிராப்தியாதலின், சொரூபத்தால் வேறு வேருயுள்ள அவைகட்குச் சேதனத்தன்மை முதலியவற்றுல் அபேதமும் உன்னல் அங்கீகரிக்கப் பட்டிருத்தலின். சமூகத்திற்கும் சமூகத்திலுள்ளதற்கும் பேதாபேதத்தைக் கூறுகின்ற உன்னுடைய மதத்தில் ஓர் சமூகத்தில் உள்ளடங்கிய ஜீவர்கட்கும் பரஸ்பரமும் அபேதம் இருத்தலானும் தனது அபின்னமான சமூகத்தோடு அபின்னமாயுள்ள

வஸ்துவோடு தனக்கும் அபேதத்தை நீக்க முடியாமையின், அதாவது உன்ஞல் அதன் அபின்ஞ பின்னத்திற்கு அதன் அபின்னத்தன்மை நியமத்தை அங்கீகரித்தலால் என்பது பொருள்,

அவதாரிகை

அன்னியனைக் குறித்துக் கூறிய நியமத்தின் அங்கீகாரத்தைச் சாதிக்கின்ருர்.

சம்யோகாதிகட்கும் ஜாதிக்கும் அனேகத்தை ஆசிரயித்திருக்கும் தன்மை அங்கீகரிக்கப்படுமாயின் அப்போது குணம் குணி முதலியவற்றிற்கு அபேதம் இருத்தலால் கடத்தின் அபின்னமான சம்யோகத்தின் அபின்னமான படாதிகட்கும் கடத்தின் அபேதம் பிராப்தமாம் என்று கூறுகின்றவுன்ஞல் அதன் அபின்ஞ பின்னத்திற்கு அதன் அபேத நியமத்தை அங்கீகரித்தலின்.

வேறு ஜீவர்கட்கு பொதுவான சேதனத்தன்மை முதலிய தருமத்தின் ஏகவடிவத்தன்மையின் அதீனமானதும் ஓர் சமூகத்திலுள்ளடங்கி இருத்தல் முதலியவற்றின் அதீனமானதும் ஆகிய யாதொரு அபேதமுண்டோ அதனினும் விலக்ஷணமாகிய வேறு அபேதம் அம்சாம்சிகட்கு பேதம் உள்ளதாயினும் அனுசந்தானப் பிரயோஜகமாக இன்ரும்.

ஈண்டு அதிப்பிரசங்க நிவாரணத்தின் பொருட்டு எவ்வபேதம் விவக்ஷிக்கப்படுமோ அவ்வபேத மின்ருமென்பது பொருள். அங்ஙனமாயின் அதற்கே விசேஷித்துக் கூறத்தக்கதாந்தன்மை பிராப்தியாதலின் தருமத்திஞல் ஏகவடிவத்தன்மை முதலியவற்றின் அதீனமாகாமை அம்சாம்சிகளின் அபேதத்தில் விசேஷமாமெனின்.

அற்றன்று ஜீவனுக்கும் அவனம்சத்திற்கும் சேதனத்தன்மை முதலிய தருமத்தால் ஏகவடிவத்தன்மை இருத்தலாலும் ஓர் சரீர அவச்சேதத்தின் கண்ணும் தேக சமுதாய சேர்க்கையின் கண்ணும் சமூகத்தன்மையாலும் அவைகளின் அபேதத்தில் தருமத்தால் ஏகவடிவத்தன்மை முதலியவற்றின் அதீனத்தன்மையும் இருத்தலால்,

சங்கை

தருமத்தால் ஏகவடிவத்தன்மை முதலியவற்றின் அதீன மான வேறு அபேதம் உளதாயினும் ஜீவனுக்கும் அவன் அம்சத்திற்கும் அம்சாம்சித் தன்மைக்குப் பிரயோஜகமான அபேதம் அதனதீனம் அன்றும் எனின்.

அற்றன்று அவைகட்கு இரண்டு அபேத மின்மையின் உனது மதத்தில் அதிகரணம் ஒன்றுகுங்கால் பேதத்திற் காவது அபேதத்திற்காவது பிரதியோகியின் பேதத்தாலாவது அதன் அவச்சேதக பேதத்தாலாவது அனேகத்தன்மையை அங்கீகரியாமையின்.

ஆதலால் முதற்பக்ஷத்தின்கண் அதிப்பிரசங்கம் திடமாம்.

இதனலேயே இரண்டாவது பக்ஷமும் நிராகரிக்கப் பட்டது.

அபேதத்தோடு கூடியிராத பேதத்திற்கு அனனு சந்தானப் பிரயோஜகத்தன்மையை உடன்படின் கூறிய ரீதியால் உனது மதத்தில் ஜீவப் பிரஹ்மங்கட்கும் பரஸ்பரம் ஜீவர்கட்கும் அபேதம் இருத்தலால் அதிப்பிரசங்கத்தை நீக்க முடியாமையின்.

அவதாரிகை

சீவனுக்கும் அதன் அம்சத்திற்கும் போல் ஜீவப்பிரஹ்மங் கட்கும் ஜீவர்கட்கும் அபேதத்தை அங்கீகரித்தும் முற்கூறிய அதிப்பிரசங்கத்தின் பரிகாரத்தை வினவுகின்றுன்.

அற்றேல் அபேதப் பிரத்தியக்ஷம் அனுசந்தானத்தில் பிரயோஜகமாம். அஃதின்றேல் அனனுசந்தானமாம். தனக்கு தனது அபேதமும் தனது அம்சத்தின் அபேதமும் பிரத்தியக்ஷமாதலின், அதனைக் காண்பவனுக்குத் துக்காதி யின் அனுசந்தானமாம். வேறு ஜீவனேடு அபேதம் இருந்த போதிலும் அவன் அப்பிரத்தியக்ஷனுதலின் அவனது துக்காதி யின் அநுசந்தானமின்றும். பூர்வஜன்மத்தின் ஸ்மரண முடை யோர்க்கு பூர்வ ஜன்மத்திலுள்ள வடிவத்தாலும் அபேதத்தின் பிரத்தியக்ஷம் இருத்தலால் பூர்வஜன்ம விருத்தாந்தத்தின் அனுசந்தானமாம். அன்னிய ஜீவர்கட்கு அஃதின்மையின் அனுசந்தானமின்றும். என்பது முதலிய சகலமும் பொருந்து கின்றது எனின்.

உத்தரம்

அப்படியானால் ஏகான்மவாதத்தின் கண்ணும் சர்வான்மத்தன்மையை மறைக்கின்ற அஞ்ஞானத்தின் ஆவரணத்தால் சைத்திரனுக்கு மைத்திரனது ஆன்மா முதலியவற்றின் அபேதப் பிரத்தியக்ஷமின்றாம். என்பதனாலேயே சர்வ வியவஸ்தையும் பொருந்துதலின், சுருதி விருத்தமான ஆன்ம பேதத்தை அங்கீகரித்தல் வீணம்.

அவதாரிகை

அபேதப் பிரத்தியக்ஷம் அனுசந்தானப் பிரயோஜகமாமென அங்கிகரித்துப் பரமதத்தின்கண் ஆன்ம பேதத்தை கற்பித்தல் வடிவ கௌரவத்தையும் சுருதி விரோதத்தையும் தெரிசிப்பித்து பரமதத்தின்கண் அதற்குப் பிரயோஜகத் தன்மையும் சம்பவிக்கின்றதில்லை அதிப்பிரசங்கம் வருதலாலெனக் கூறுகின்றார்.

அபேதப் பிரத்தியக்ஷம் அனுசந்தானப் பிரயோஜகமெனக் கற்பிக்கினும் பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மை வாதியாகிய உனக்கு வியவஸ்தை பொருந்துவதின்றாம். சர்வஞ்ஞனாகிய ஈஸ்வரனுக்கு வாஸ்தவமாக மற்றைய ஜீவர்களோடுள்ள அபேதத்தின் பிரத்தியக்ஷம் அவசியம் இருத்தலால் ஜீவர்கள் துக்கமுடையவர்களாகும்போது நான் துக்கி என்னும் அனுபவம் அடைவுறுதலின்.

அவதாரிகை

அற்றேல் சித்தாந்தத்தின்கண்ணும் பிரஹ்மத்திற்குச் சர்வஞ்ஞத்தன்மை ஜீவ அபின்னத்தன்மைகள் இருத்தலால் கூறிய தோஷத்தின் பிராப்தியாம் எனின்.

அற்றன்றெனக் கூறுகின்றார்.

எமது மதத்திலோ ஈஸ்வரன் தனது அபின்னமான ஜீவனிடத்தில் பிரதிபிம்ப முகத்தில் மலினத்தன்மையைப் போன்று சம்சாரத்தினைப் பார்க்கின்றவனாயினும் மித்தியாத் தன்மையின் நிச்சயத்தால் சோகத்தை அடைகின்றதில்லை ஆதலின் கூறிய தோஷப் பிராப்தியின்றாம்.

சங்கை

இஃது உளதாகுக. கை கால் தலை முதலியவைகட்கும் காய சமுதாயத்திற்கும் சீவனது அம்ஸ விசேஷம் பிரேரக

மாக இன்ருகுக. அணுவடிவ ஆன்ம தீபத்திற்கு எப்போதும் நீங்காத ஞானப்பிரபை வியாபகமாக உளது. ஆதலின் அதுவே சர்வாதிஷ்டான (பிரேரக) மாக சம்பவிக்கின்றது எனின்.

உத்தரம் அற்றன்று ஞானம் போன்று ஆன்மாவின் தர்மமாகிய சுகதுக்க போகத்திற்கு ஞானத்தை ஆசிரயித்து உத்பத்தி சம்பவியாமையால் கைகால் முதலிய அவயவ பேதத்தால் அவயவிக்கும் தேக பேதத்தால் தேக சமுதாய முடையவருக்கும் போகவை சித்திரியத்தின் அபாவம் அடைவுறுதலின். சுகதுக்கபோக முதலியவை ஞானத்தின் தருமமேயாம். ஆன்மாவின் தர்மமன்ரும் என அங்கீகரிக்கின். அப்போகத்தின் விசித்திரத் தன்மையால் ஆன்மாவின்குணமாகிய ஞானத்திற்குப் பேதம் சித்திக்கினும் ஆன்மாவிற்கு பேதம் சித்தியாமையால் போக விசித்திரத்தன்மை முதலிய ஏதுவால் ஆன்மாவின் அபேதத்தை நிவர்த்திக்கக் கூடாமையின்.

அவதாரிகை

சுகாதிக்கு வியாபகமாகிய ஞானத்தின் தருமத்தன்மை தனது மதவிருத்தமாமெனக் கூறுகின்ருர்.

போகாதியின் ஆசிரயமாகிய ஆன்மாவிற்கு அணுத்தன்மை உண்மையால் ஒவ்வொரு சரீரத்திலும் வெவ்வேருயிருத்தலால் அதன் வியாபகத்தன்மை வாதத்திற் போன்றும் அதன் அபேத வாதத்திற் போன்றும் சர்வ தர்மங்களின் கலப்பு அடைதலின்ரும் என்னும் உனது மதத்திற்கு குறைவு வருதலானும் என்க. ஆதலால் ஜீவனுக்கு அணுத்தன்மையை அங்கீகரித்து வியவஸ்தையைப் பிரதிபாதித்தல் பொருத்தமற்றதாமென்க.

அணுத்தன்மையால் ஜீவனுக்கு ஈஸ்வரனில் நின்றும் பேதத்தைச் சாதித்தலும் பொருத்தமன்ரும். தேகத்தினின்றும் வெளிக்கிளம்புதல் முதலியவற்றைக் கேட்டலானும் நேரே அணுத்தன்மையைக் கேட்டலானும் ஜீவன் அணுவென்று கூறுகின்ற உனது மதத்தில் அதனைச் சிருஷ்டித்து அதனிலே பிரவேசித்தது "தேகத்தினுள் பிரவேசித்தவனுகி ஜனங்களை நியமிப்பவன்" மேலாகிய இருதய ஆகாசத்தின் கண் புத்திவடிவ குகையில் பிரவேசித்தவர்களாகி என்பது முதலிய சுருதிகளில் பிரவேசம் முதலியவற்றைக் கேட்டலா

னும் அந்த இவ்வான்மா அணுவாம் இந்த என்னுடைய ஆன்மா இருதயத்துள் விரீஹி (நெல்) யைப் பார்க்கிலும் யவையைப் பார்க்கிலும் அணுவாம் என்னும் சுருதியில் நேரே அணுத்தன்மையைக் கேட்டலானும் பரமான்மாவும் அணு வடிவ மாகவே சித்திக்கின்றது. ஆதலின் பரமான்மாவிற்கும் ஜீவனுக்கும் விபுத்தன்மை அணுத்தன்மைகளால் பேதசித்தி எவ்வாறும்.

வாதியின் சங்கை

வேருேராற்ருல் பெறப்படாத சுருதியாதி வசனத்தால் ஈஸ்வரனுக்கு விபுத்தன்மையை வினவுகின்ருன்.

அற்றேல் "ஆகாசம் போன்று சர்வகதமும் நித்தியமும் ஆம் தேவலோகத்தினும் பெரியது அந்தரிக்ஷலோகத்தினும் பெரியது" என்பது முதலியவற்றைக் கேட்டலானும் சர்வப் பிரபஞ்சத்தின் உபாதானத் தன்மையானும் பரமான்மாவிற்கு சர்வகதத்தன்மை சித்தித்தலால் அவற்கு அணுத்தன்மையைக் கூறும் சுருதிகள் உபாசனையின் பொருட்டாம் அல்லது அறிய முடியாத் தன்மையில் அபிப்பிராயமுடையனவாம். என யூகிக்கத்தக்கனவாம். பிரவேசத்தைக் கூறும் சுருதிகளும் சரீராதி உபாதியால் நிருவகிக்கத் தக்கனவாம்.

அவதாரிகை

அற்றேல் ஜீவனது அணுத்தன்மையைக் கூறும் சுருதி லிங்கங்கட்கும் வேறு பிரகாரமாய்க் கொண்டு கூட்டல் சம்பவித்தலின் ஜீவனுக்கும் சுபாவமாக விபுத்தன்மை ஏன் ஆகாது. ஆகவே அவனுக்கணுத்தன்மை சித்தியின்ரும் என்னும் சித்தாந்தியின் சங்கையை அனுவதித்து நிராகரிக்கின்ருன் அணுத்துவவாதி.

ஜீவனது வெளிக்கிளம்புதல் முதலியவற்றைக் கூறும் சுருதிகளும் புத்திவடிவ உபாதியால் நிர்வகிக்கத் தக்கனவாம் எனின்.

வெளிக் கிளம்புகின்ற அவ்வான்மாவைப் பின்பற்றியே பிராணன் வெளிக் கிளம்புகின்றது என பிராணன் எனப் பெயரிய புத்தியின் வெளிக் கிளம்புதற்கு முன்னரே ஜீவன் வெளிக் கிளம்புதலைக் கூறுதலின். அப்படியே வித்வான் நாமரூபங்களின்றும் விடுபட்டவனுகி மேலுக்கு மேலாயுள்ள

திவ்விய புருஷனை அடைகின்றான். என நாமரூபங்களின் விடுபாட்டின் பிறகும் கமனம் கேட்கப்படுதலானும் "அது எப்படி வண்டி சாமான்களால் நிறப்பப்பட்டதாகி சப்தத்தைச் செய்கின்றதாய் செல்லுகின்றதோ அப்படியே இந்த ஜீவான்மாவும் ஈஸ்வரனால் பிரேரிக்கப்பட்டதாகி சப்தத்தைச் செய்கின்றதாய் பரலோகம் செல்கின்றது" என சுவாபாவிக கமனத்தின் ஆசிரய வண்டி திருஷ்டாந்தத்தைக் கூறினமையாலும் எனின்.

இது சரியன்று யாதொரு இந்த விஞ்ஞானமய ஜீவான்மா உண்டோ "அது வியாபகமும் ஜன்மமற்றதும் ஆகும். கடம் கொண்டு போகப்படும்போது கடாவச்சின்ன ஆகாசம் செல்லுகிறதில்லை. கடந்தான் கொண்டுபோகப்படும். அது போன்று ஜீவன் ஆகாசத்திற்குச் சமனானவன் என்பது முதலிய சுருதிகளில் ஜீவனுக்கும் விபுத்தன்மை கேட்கப்படுதலால் "உனது மதத்தில் மாயைக்கே ஜகத்தின் உபாதானத் தன்மை இருத்தலால் பிரஹ்மத்திற்கு ஜகத்தின் உபாதானத் தன்மை இன்மையால் ஜீவனுக்குத் தேக சமுதாயத்திலுள்ள விசித்திர சுக துக்கங்களின் உபாதானத் தன்மை இருப்பது போன்று ஈஸ்வரனுக்கு அணுத்தன்மையை உடன்படினும் ஜகத்தின் உபாதானத் தன்மை சம்பவித்திலானும் அதனால் அவனுக்குச் சர்வகதத் தன்மை சித்தியாமையின் பிரமத்தின் பிரவேச சுருதிகட்குச் சரீர உபாதியைக் கற்பிக்கின் ஜீவனது வெளிக்கிளம்புதல் முதலிய சுருதிகட்கும் புத்தி உபாதியை அங்கீகரித்தல் சம்பவித்தலின். மனது போன்று பிராணன் ஐந்து வியாபாரமுடையதாகச் சொல்லப்படுகின்றது. என்னும் சூத்திரபாஷியத்தில் புத்திக்கும் பிராணனுக்கும் காரிய பேதத்தால் பேதம் பிரதிபாதிக்கப்பட்டிருத்தலால், புத்தி உபாதியுடைய ஜீவன் முதலில் வெளிக்கிளம்பும்போது பிராணனிற்கு அதன்பின் வெளிக்கிளம்புதல் பொருந்துதலின். நாமரூபங்களின் விடுபாட்டின் பிறகு பிரஹ்மப் பிராப்தியின் சிரவணத்திற்கு அடைகின்ற ஜீவனிடத்திற்போல அடையத் தக்க பிரஹ்மத்தின்கண்ணும் விபுத்தன்மை விரோதம் இருத்தலின். பிராகிருத நாமரூபங்களின் விடுபாட்டின் பிறகும் அப்பிராகிருதலோக விக்கிரகம் முதலிய உபாதியோடு கூடிய பிரஹ்மத்திற்குப் பிராப்தவ்யத் தன்மையைக் கூறும் வாதி மதத்தில் பிராபகனாகிய ஜீவனுக்கும் அப்பிராகிருத தேகேந்

திரியாதிகள் இருத்தலால் அவ்வுபாதியினுல் பிரஹ்மப் பிராப்தியின் சிரவணத்திற்கு விரோதமின்மையின் சுவாபாவிக கமனத்தின் ஆசிரய வண்டி திருஷ்டாந்த சிரவண மாத்திரத்தால் ஜீவனுக்கு சுவாபாவிக கமனம் சித்திக்குங்கால் குகையுட் பிரவேசித்தனர் என சுவாபாவிக பிரவேசத்தின் ஆசிரய ஜீவனேடு சேர்த்துக் கூறுதலால் பிரஹ்மத்திற்கும் சுவாபாவிக பிரவேசத்தின் சித்தி சம்பவித்தலின். பிரஹ்மம் ஜீவன் என்னும் இரண்டிலும் தொடர்ந்திருக்கின்ற ஓர் பிரவேச பதத்திற்கு ஓர் வடிவ பிரவேச பரத்தன்மை கூறத்தக்கதாதலின். ஆதலால் பரமதத்தில் பிரஹ்ம ஜீவர்கட்கு விபுத்தன்மை அணுத்தன்மை வியவஸ்தை சித்தியாமையால் அதனுல் பேத சித்தியைக் குறித்து ஆசை செய்யத் தக்கதன்ரும். எமது மதத்தில் பிரஹ்மான்மாவின் ஐக்கியத்தில் தாத்பரியமுள்ள மகாவாக்கியத்தை அனுசரித்து அவாந்தர வாக்கியங்களைச் செலுத்த வேண்டியிருத்தலால் சொரூபமாக ஜீவனுக்கு விபுத்தன்மை ஔபாதிக ரூபத்தால பரிச்சேதம் என்பதாதி பிரகாரத்தால் ஜீவப் பிரஹ்மங்களின் பேதத்தை அடைவிக்கின்ற சுருதிகளின் பிரதிபாதனம் பாஷ்யாதிகளின் வெளிப்படையாம்.

ஆதலால் அசேதனப் பிரபஞ்சத்திற்கு மித்தியாத்தன்மை இருத்தலாலும் சேதனப் பிரபஞ்சத்திற்குப் பிரஹ்மத்தின் அபேதமிருத்தலாலும் ஞான மாத்திரத்தால் அடையத்தக்க அத்து விதீயப் பிரஹ்மத்தின்கண் வேதாந்தங்களின் சமன்வயத்திற்கு யாதொரு விரோதமுமின்ருமென்க.

**வேதாந்த சித்தாந்த லேச சங்கிரகத்தில்**
**இரண்டாவது பரிச்சேதம் முற்றிற்று**

# வேதாந்த சித்தாந்த லேச சங்கிரகம்

## மூன்ருவது பரிச்சேதம்

### 49. கருமங்கட்கு விவிதிஷையின் சாதகத் தன்மை விசாரம்

அவதாரிகை

பூர்வ பரிச்சேதத்தின் அந்தத்தில் பிரஹ்மப் பிராப்தி வடிவ மோக்ஷத்திற்கு ஞான மாத்திரத்தால் அடையத் தக்க தாந்தன்மை கூறப்பட்டது. அதன்கண் ஞானத்தால் அடையத்தக்கதாந் தன்மையை அங்கீகரித்து மோக்ஷத்திற்கு வேறு சாதனத்தை நிஷேதிக்கின்ற ஞான மாத்திர சாத னத்தைச் சகிக்காதவனுய் சமுச்சயவாதி எதிர்க்கின்ருன்.

அற்றேல் வித்தை ஒன்றினுலேயே பிரஹ்மத்தின் பிராப்தி எங்ஙனமாம் கர்மங்கட்கும் அதன் பிராப்தியின் ஏதுத்தன்மை ஸ்மிருதியில் கூறப்படுகின்றதாதலின் பிரஹ்மப் பிராப்திக்குக் காரணம் ஞானமும் கர்மமும் கூறப்பட்டுள்ளது மகாமுனியே என.

வாஸ்தவந்தான் மோக்ஷத்தின் பொருட்டு வேறு வழி யில்லை என்னும் சுருதியினுலும் கழுத்திலுள்ள மறந்த சுவர்ண மாலையின் அடைவு போன்று. நித்திய சித்தப் பிராப்தியின் கண் வித்தையினும் வேருனதிற்குச் சாதனத் தன்மை சம்ப வியாமையானும் பிரஹ்மப் பிராப்தியில் பரம்பரையாக கர்மத் தின் அபேக்ஷை மாத்திரத்தில் தற்பரமாம் அத்தகை ஸ்மிருதி.

அவதாரிகை

பரம்பரையாய் கருமங்கட்கு மோக்ஷ சாதனம் கூறப் பட்டது அதனை விரிப்பதற்கு வினவுகின்ருன்.

அப்படியானுல் கருமங்கட்கு உபயோகம் யாண்டு ஈண்டு பார்மதி மதத்தை அனுசரித்தவர்கள் கூறுவதாவது "அந்த இவ்வான்மாவை பிராமணர்கள் வேத அத்திய யனத்தாலும் யஞ்ஞத்தாலும் தானத்தாலும் கெடுதலைச் செய்யாத தபசினு லும் அறிய விரும்புகின்றனர்" என்னும் சுருதியால் வித்தையை சம்பாதித்தல் வாயிலாக பிரஹ்மப் பிராப்தியில் உபாயமா யுள்ள விவிதிஷையின்கண் உபயோகமாம்.

சங்கை

இச்சிக்கப்படுகின்ற வித்தையின்கண்ணேயே உபயோகம் ஏன் ஆகாது.

சமாதானம்

உபயோகம் ஆகாது விகுதியின் பொருள் முக்கியமாதலாலும் வித்தையின் சம்பந்தத்தால் வித்தையின் சாதனமான சமதமாதிகள் சமீபத்தில் உள்ளனவாம் விவிதிஷையின் சம்பந்தத்தாலோ எக்ஞாதிகள் தூரத்தில் உள்ளனவாம் என சர்வாபேக்ஷை அதிகரணத்திலுள்ள பாஷியத்தாலும் என்க.

அற்றேல் விவிதிஷையின் பொருட்டு எக்ஞாதியை அனுஷ்டிக்கின்றவனுக்கு ஞான விஷயக இச்சை இருக்குமாயின் விவிதிஷை சித்தித்தமையினலும் ஞான விஷயக இச்சை இல்லையாயின் ஞானத்தின் உபாயமான விவிதிஷையின்கண் இச்சை சம்பவியாமையாலும் விவிதிஷையின் பொருட்டு எக்ஞாதியின் அனுஷ்டானம் பொருந்தாமையால் எக்ஞாதிகட்கு விவிதிஷையின்கண் உபயோகம் பொருத்தமன்ரும் எனின். அற்றன்று அன்னத்து வேஷத்தால் மெலிவை அடைந்துள்ள புருடனுக்கு அதன் பரிகாரத்தின் பொருட்டு அன்னவிஷயக அதிக ஆசையிருந்த போதிலும் அஜீரணம் முதலியவற்றின் மிகுதியால் ஏற்பட்ட தாதுக்களின் விஷமத்தன்மை தோஷத்தால் அதன்கண் பிரவிருத்தி பரியந்தமான உருசி உண்டாகின்றதில்லை. ஆதலின் அந்த ருசியை உண்டுபண்ணுகின்ற ஔஷதத்தை அனுஷ்டிப்பது போல் பிரஹ்மம் நிரதிசயானந்தமேயாம். அதன் பிராப்தியில் வித்தை சாதனமாம் என்னும் பொருளில் கீழ்ப்போன அனந்த சன்மங்களில் பலேச்சையின்றி அனுஷ்டிக்கப்பட்ட நித்தியநைமித்திக கர்மங்களால் உண்டான மனத் தெளிவின் மகிமையால் விசுவாசத்தை அடைந்துள்ள புருஷனுக்குப் பிரஹ்மப் பிராப்தியிலும் வித்தையிலும் அதிக ஆசை இருந்த போதிலும் கீழ்ப்போன அனந்த ஜன்மங்களில் சம்பாதிக்கப்பட்ட அளவின்றிய பாவதோஷத்தால் சன்மார்க்கத்தில் பிரியமுள்ள புருஷனுக்கு நிஷேத கர்மத்தில் பிரவிர்த்தி உண்டாகுதல் போன்று விஷய போகத்தில் சுழற்சியைச் சம்பாதிக்கின்ற பாவ தோஷத்தினலே பிரதிபந்தம் செய்யப்படுதலின் ஞான சாதனமாகிய சிரவணதியின்கண் பிரவிர்த்தி பரியந்தமான ஆசையுண்டா

கிறதில்லை. ஆதலால் பிரதிபந்த நீக்கவாயிலாக அதனை சம்பாதிக்கின்ற எக்ஞாதிகளைவிதித்தல் பொருந்துதலின்.

## 50. கருமங்கட்கு வித்தையின் சாதகத் தன்மை விசாரம்

கர்மங்கட்கு யாண்டு உபயோகமென்னும் சங்கை உண்டாக வித்தையின்கண் உபயோகமாமென வேறு சமாதானத்தை ஆரம்பிக்கின்றார்.

விவரணத்தை அனுசரித்தவர்கள் கூறுவதாவது.

பகுதிப் பொருள் விகுதிப் பொருள்களுக்குள் விகுதிப் பொருட்கு பிரதானத்தன்மையாம் என்னும் சாமான்ய நியாயத்தினும் இச்சையின் விஷயத்தன்மையால் சப்தத்தால் அறியப்பட்டதன்கண்ணேயே சாப்த சாதனத்தன்மைக்கு அன்வயமாம் என சுவர்க்க காமாதிவாக்கியத்தின்கண் நிச்சயிக்கப்பட்ட விசேஷ நியாயத்திற்குப் பிரபலமுடையதாந் தன்மை உண்மையினுலும். குதிரையால் செல்வதற்கு இச்சிக்கின்றனன். கத்தியால் வெட்டுவதற்கு இச்சிக்கின்றனன் என்பது முதலிய லௌகீகப் பிரயோகத்தில் குதிரை முதலிய சாதனத்திற்கும் அது விசாரிக்கத்தக்கது. அதுவே அறிய விரும்பத்தக்கது. மனனம் செய்யத் தக்கது. நிதித்தியாசனம் செய்யத் தக்கது. என்பது முதலிய வைதிகப்பிரயோகத்தில் தவ்விய என்னும் விகுதிப் பொருளாயுள்ள விதிக்கும். சன்விகுதியால் கூறப்பட்ட இச்சையின் விஷயமாகிய கமனம் முதலியவற்றிலேயே அன்வயம் நிச்சயிக்கப்பட்டிருத்தலினுலும் பகுதியால் கூறப்பட்ட வித்தையின்கண் எக்ஞாதிகட்கு உபயோகமாம்.

அவதாரிகை

வித்தையில் உபயோகமா மென்னும் பக்ஷத்தில் வேறு விதியின் விரோதத்தை வினவுகின்றான்.

அவ்வாறாயின் வித்தையின் உதயபரியந்தம் கருமானுஷ்டானம் அடைவுறுதலால் கருமங்களைத் தியாகம் செய்கின்ற புருடனாலேயே பிரத்திய கான்மபிரஹ்மம் சாக்ஷாத்கரிக்க தக்கது. என்பது முதலிய சுருதியில் பிரசித்தமாகிய கருமத்தின் தியாகவடிவ சன்னியாசத்திற்கு வித்தையின் சாதனத் தன்மை பீடிக்கப்படு மெனின்.

### அவதாரிகை

விவிதிஷை வாக்கியத்திற்கும் சன்னியாச விதிக்கும் விரோதமின்மையைத் திருஷ்டாந்த சகிதம் பிரமாண சகிதம் தரிசிப்பிக்கின்றார்.

விதை விதைத்தலுக்கு முன்பு உழுதலும் அதன் பிறகு உழுவாமையும் என உழுதல் உழுவாமைகளால் நெல் முதலியவற்றின் பிராப்திபோன்று, சித்த சுத்தி விவிதிஷைகளை அடைய விரும்பும் முனிக்கு கர்மம் காரணமெனப்படுகின்றது. சித்த சுத்தியை அடைந்தவனுக்கே சன்னியாசம் காரணம் எனப்படுகின்றது. என்பது முதலிய கீதாவாக்கியத்தின் அநுசாரத்தால் மனத்தூய்மையில் விவிதிஷைவடிவ ஆன்மாவை அறியும் ஆற்றல் உதய மாகும் பரியந்தம் கருமத்தின் அனுஷ்டானமாம். அதன் பிறகு சன்னியாசமாம் எனக் கருமத்தாலும் அதன் தியாகத்தாலும் வித்தையின் பிராப்தியை அங்கீகரித்தலின். இஃது நைஷ் கருமிய சித்தியிலும் சுரேஸ்வராச்சாரியரால் கூறப்பட்டுள்ளது. கருமங்கள் அந்தக்கரணத்தின் சுத்திவாயிலாக பிரத்தியகாண்மாவை அறியும் ஆற்றலை சம்பாதித்து கிருதார்த்த முடையனவாய் மழைக்காலத்தின் அந்தத்தில் மேகங்கள்போன்று அஸ்தமனத்தை அடைகின்றன.

### சங்கை

கருமங்கட்கு வித்தையின் சாதனத்தன்மை பக்ஷத்திலும் விவிதிஷையின் பரியந்தமே கருமானுஷ்டான மாகுமாயின் விவிதிஷையின் சாதனத்தன்மை பக்ஷத்தில் நின்றும் பேதம் யாதெனின்.

### சமாதானம்

அனுஷ்டானத்தில் விசேஷ மின்றேனும் பயனால் விசேஷ முளதெனக் கூறுகின்றார்.

**பேதம் இதுவாம்.** கருமங்களுக்கு வித்தையின் சாதனத்தன்மை பக்ஷத்தில் துவாரமாயுள்ள விவிதிஷை சித்தியின் அனந்தரம் தியாகம் உளதாயினும். பயனின்கண் முடிவையுடையனவும் நிவர்த்தியை முக்கியமாக உடையனவுமாகிய சிறந்த குருவினடைவால் நிர்விக்ன சிரவண மனனுதிசாதனங்களைச் சம்பாதித்து வித்தையை உண்டாக்குந்தன்மை நியமமுளது. விவிதிஷையின் சாதனத்தன்மை பக்ஷத்திலோ

சிரவணாதி பிரவிர்த்தியை உண்டு பண்ணுவதில் சாமர்த்தியம் உள்ள அதிக ஆசையைச் சம்பாதித்தல் மாத்திரத்தால் கிருதார்த்தத் தன்மையாம். ஆதலின் அவசியமாக வித்தையை உண்டாக்குந்தன்மை நியமமின்றாம். எவனுக்கு இந்த நாற்பது சமஸ்காரங்களுண்டோ என்னும் ஸ்மிருதியை மூலமாகவுடைய கருமங்கட்கு ஆன்மஞான யோக்கியதையைச் சம்பாதிக்கின்ற பாபநீக்க குணத்தின் உற்பத்தி வடிவ சமஸ்காரத்தின் சாதனத்தன்மை பக்ஷத்திற்போன்று, எனக் கூறுகின்றனர்.

## 51. சுருதியால் விநியோகிக்கப்பட்ட கரும விசேஷத்தின் விசாரம்.

சங்கை

அற்றேல் எக்கருமங்கட்குக் கூறிய சுருதியால் வித்தையில் உபயோகம் போதிக்கப்படுகின்றது.

சமாதானம்

ஈண்டு சிலர் கூறுவதாவது, வேதானுவசனத்தால் என்பது பிரஹ்மசாரியின் தருமங்கட்கும். எக்ஞத்தால் தானத்தாலென்பது கிரகஸ்தனது தர்மங்கட்கும். உடலை நாசஞ் செய்யாத தபசாலென்பது வானப் பிரஸ்தனது தர்மங்கட்கும் உபலக்ஷணமாதலால் ஆசிரம தர்மங்கட்கே வித்தையில் உபயோகமாம். "இதனாலேயே விதிக்கப்பட்டமையாலும் ஆசிரமகர்மமும்" என்னும் பிரம்ம சூத்திரத்தில் வித்தையின் சாதனமான கர்மங்களில் ஆசிரமகர்ம பதத்தின் பிரயோகமாம் என்க.

கல்பதருவிலோ ஆசிரம தர்மங்கட்கே வித்தையில் உபயோகம் என்பதின்றாம். "இடையிலும் அதனைக் காண்டலின்" என்னும் அதிகரணத்தின்கண் ஆசிரமமின்றிய விதுரர் முதலானோரால் அனுஷ்டிக்கப்பட்ட தர்மங்கட்கும் வித்தையில் உபயோகத்தை நிரூபித்தலால்.

சங்கை

முன் ஜன்மத்தில் அனுஷ்டிக்கப்பட்ட எக்ஞாதிகளால் உண்டாக்கப்பட்ட விவிதிஷையையுடைய ஆசிரமமின்றிய விதுராதிகட்கு வித்தையின் சாதனமாகிய சிரவணாதிகளில்

அதிகாரத்தை நிரூபித்தல் மாத்திரத்தில் அவ்வதிகரணம் தாத்பரிய முடையது. அவர்களால் அனுஷ்டிக்கப்பட்ட கர்மங்கட்கு வித்தையில் உபயோகத்தை நிரூபித்தலில் தாத்பரிய முடையதன்ரும். எனின்.

சமாதானம்

விசேஷ அனுக்கிரகமும் என்னும் அவ்வதிகரண சூத்திரத்திலும் பாஷ்யத்திலும் அவர்களால் அனுஷ்டிக்கப்பட்ட ஜபாதி வடிவ வருணமாத்திரதர்மங்கட்கும் வித்தையின் உபயோகத்தை முகத்தால் கூறி இருத்தலின். (விதிக்கப்பட்டமையானும் ஆசிரம கருமமும்) என்னும் சூத்திரத்தில் ஆசிரம கருமபதம் வருண தர்மங்கட்கும் உபலக்ஷணமாதலால் என்னும் அபிப்பிராயத்தால் கூறப்பட்டது

இவ்வாறு ஆசிரம தர்மத்தினும் வேருனவற்றினுக்கும் வித்தையில் உபயோகமுளது. ஆனுல் நித்திய கர்மங்கட்கே உபயோகமாம். அவைகளின் பயனுகிய பாப நிவர்த்தியை வித்தை அபேக்ஷிக்கின்றது. காமிய கர்மங்களின் பயனுகிய சுவர்க்காதியை அபேக்ஷிக்கின்றதில்லை. ஆண்டு எப்படி பிரகிருதியாகத்தின்கண் நிச்சயிக்கப்பட்ட உபகாரத்தினை யுடைய அங்கங்கட்கு அதிதேசமுண்டாகும்போது பிரகிருதி யாகத் தலத்திலுள்ள உபகாரத்தினும் வேருன உபகாரத்தை கற்பித்தல் இன்ரூ அப்படி ஞானத்தின்கண் உபயோகிக்கப்பட்ட எக்ஞாதிகட்கு நிச்சயிக்கப்பட்ட நித்திய கருமத்தின் பயனுகிய பாப நிவர்த்தியினும் வேருக நித்திய காமிய கருமங்கட்குப் பொதுவான வித்தையின் உபயோகியாகிய உபகாரத்தைக் கற்பித்தலின்ரும் என்க.

சங்க்ஷேம சாரீரகத்தின் கண்ணே நித்திய கர்மங்கட்கும் காமிய கர்மங்கட்கும் வித்தையில் உபயோகம் கூறப்பட்டுளது. எக்ஞம் முதலிய சப்தம் பொதுவாயிருத்தலால், பிரகிருதியாகங்களில் நிச்சயிக்கப்பட்ட உபகாரமுடைய பதார்த்தங்கட்கு நிச்சயிக்கப்பட்ட பிரகிருதியாகங்களில் உள்ள உபகாரத்தின் அதிதேச வாயிலாகவே விகிருதியாகங்களில் அதிதேசத்தால் சம்பந்தமாம். பதார்த்தங்கட்கு அதிதேசத்தின் அனந்தரம் உபகார கற்பனையின்ரும். ஆதலின்

ஆண்டு பிரகிருதியிலுள்ள உபகாரத்தினும் வேருன உபகார கற்பனையின் பிராப்தியின்ரும் பிராப்தி இன்ரும். ஈண்டோ பிரத்தியக்ஷ சுருதியால் முதலிலேயே உபயோகிக்கப்பட்ட எக்ஞாதிகட்கு உபதேசிக்கப்பட்ட அங்கங்கட்குப் போன்று பின்பு கற்பிக்கத்தக்க உபகாரம் முன்பு அறியப் பட்ட உபயோக நிர்வாகத்தின் பொருட்டு நிச்சயிக்கப் படாததாயினும் உபகாரம் சாமான்ய சப்தத்தால் கிரகிக் கப்பட்ட சகல நித்திய காமிய கருமங்களின் சாமான்ய மாக ஏன் கற்பிக்கத்தக்கதன்ரும். யாகங்களில் பூர்வ மீமாம்சர்களாலும் உபகார வாயிலாக பதார்த்த அன் வயத்தின்கண்ணேயே நிச்சயிக்கப்பட்ட உபகாரத்தின் நியமமாம். பதார்த்த அன்வயத்தின்பின்பு உபகாரத்தைக் கற் பிக்கினே நிச்சயிக்கப்படாததாயினும் உபயோகிக்கப்பட்ட பதார்த்தத்தின் அனுகூலமாகவே உபகாரம் கற்பிக்கத்தக்க தாம். என அங்கீகரித்தே பாத அத்தியாய ஆரம்ப சித்தி யின் பொருட்டு உபகார வாயிலாக விகிருதிகளில் பிராகிருத அன்வயம் பத்தாவது அத்தியாயத்தின் ஆரம்பத்தில் சமர்த் தனம் செய்யப்பட்டுளது. மேலும் காமிய கர்மங்களில் நிச்ச யிக்கப்பட்ட உபகாரத்தின் பிராப்தி இன்மையால் நித்திய கர்மங்கட்கே இந்த வினியோகமாம். என்று அங்கீகரிக்கின், நித்திய கர்மங்களால் பாபத்தின் நாசமும் அதனுல் ஞானத் தின் உற்பத்தியும் அன்னியத்தால் சித்திக்குங்கால் இந்த வினியோகம் வீணேயாம். அன்னியத்தால் அஃது அசித்தமாயின் ஞானத்தால் அபேக்ஷிக்கப்பட்ட உப காரத்தை உண்டுபண்ணும் தன்மை அவைகளில் நிச்சயிக் கப்படாமை சமமாதலால் நித்திய கரும காமிய கருமம் இரண்டிற்கும் பொதுவான வினியோகம் நீக்க முடியாதாம் என்க.

அற்றேல் நித்திய கருமங்கட்குப் பாவ நாசத்தின் மாத்தி ரத்தின் ஏதுத்தன்மை அன்னியத்தால் சித்தமாயினும் விசே ஷித்து ஞான உற்பத்திக்குத் தடையான பாபத்தை நிவர்த் திக்கும் தன்மை சித்தமன்ரும். ஆனுல் இந்த வினியோகம் இருக்கும்போது ஞானத்தை உத்தேசித்து நித்திய கருமங் களை அனுஷ்டிக்கின்றவனுக்கு அவசியம் ஞானம் உண்டா கின்றது இந்த விநியோகம் இன்றேல் சுத்திமாத்திரமாம். நியதமாக ஞானத்தின் உத்பத்தி இன்ரும். ஆதலின் இந்த வினியோகம் பயனுடையதாமெனின்.

அவதாரிகை

ஞானத்தால் அபேக்ஷிக்கப்பட்ட உபகாரம் நித்திய கர்மங்களில் நிச்சயிக்கப்பட்டுள்ளது என்னும் மதம் ஆதார மற்றதாம் என்று கருதி காமிய கர்மங்களிற்போல் நித்திய கர்மங்களிலும் நிச்சயிக்கப்படாத உபகார கற்பனை சமானமாம் எனத் தூஷிக்கின்றார்.

அப்படியானல் நித்தியகர்மங்கட்கும் ஞான உற்பத்திக்கு தடையான பாபத்தை நிவர்த்திக்குந்தன்மையும் நிச்சயிக்கப் படாததேயாம். ஞான சாதனமாகிய சிறந்த குருவின் அடைவு சிறவண மன்னம் முதலியவற்றைச் சம்பாதிக்கின்ற அபூர்வமாகிய துவாரம் கற்பிக்கத்தக்கதாம். ஆதலின் நிச்சயிக்கப்படாத உபகார கற்பனை சமமாதலால் சாமான்ய சுருதியினல் பிராப்த்தமான நித்திய கரும காமிக கருமங் கட்குப் பொதுவான வினியோகம் கெடுக்கத்தக்கதன்றாம் என்க.

## 52. மூன்று வருணங்கட்கும் வித்தையின் சாதனமான கருமத்தில் அதிகாரமாமெனல்

அவதாரிகை

இவ்வாறு விவிதிஷை வாயிலாக வித்தையின்கண் கருமங்கட்கு உபயோகத்தை நிருபித்து அவைகளில் மூன்று வருணங்கட்கும் அதிகாரம் உளது என நிரூபித்தற் பொருட்டு ஆக்ஷேப வியாஜத்தால் பிரசங்கத்தைத் தரிசிபிக்கின்றார்.

அற்றேல்

"கருமத்தாலேயே ஜனகன் முதலாயினோர் மோக்ஷத்தினை அடைந்தனர்" என்பது முதலிய ஸ்மிருதியின் நிர்வாகம் எவ்வாறும். அதற்கு வித்தையின் சாதனமான கர்மானுஷ்டானத்தில் தாத்பரியமாம் என்று சொல்லற்க.

விவிதிஷை வாக்கியத்தில் பிராமணப தத்தைக்கிரகித்திருத்தலால் பிராமணர்கட்கே வித்தையின் சாதனமான கருமத்தின்கண் அதிகாரம் தோற்றுதலின். ஆதலால் ஜனகன் முதலானோரால் அனுஷ்டிக்கப்பட்ட கருமங்கட்கு நேரே மோக்ஷ சாதனத்தன்மை கூறத்தக்கதாம் எனின்.

அற்றன்று விவிதிஷை வாக்கியத்திலுள்ள பிராமணபதம் மூன்று வருணங்கட்கும் உபலக்ஷணமாதலின்.

பூஜிக்கத்தக்க வார்த்திககாரரும் இவ்வாறு கூறுகின்றனர். விவிதிஷை வாக்கியத்திலுள்ள பிராமணபதம் துவிஜர்கட்கு உபலக்ஷணமாம். ஆன்ம ஞானத்தில் எல்லோருக்கும் அதிகாரம் சமமாதலின் என.

வித்தையில் விருப்பம் உள்ளவன் எஞ்ஞாதிகளை அனுஷ்டிக்குக என்று மாற்றப்பட்ட வித்தையின் விருப்பமுள்ளவனது அதிகார விதியின்கண் பிராமண பதத்திற்கு அதிகாரி விசேஷத்தை சமர்ப்பிக்குந்தன்மை பொருத்தமன்றும், உத்தேசியத்தின்கண் விசேஷணம் பொருந்தாமையின்.

"சுவராஜ்யத்தில் விருப்பமுள்ள அரசன் ராஜ சூயத்தால் எஜிக்கக்கடவன்" என சுவராஜ்ய காமனை அதிகாரியாகவுடைய ராஜசூய விதியின்கண் சுவராஜ்ஜிய காமன் ராஜாவை கர்த்தாவாகவுடைய ராஜசூயத்தால் எஜிக்கக்கடவன் என. கர்த்திருத்தன்மையால் யாகத்தின் விசேஷணமாக விதிக்கத்தகுந்த அரசனுக்கு அரசனைக் கர்த்தாவாகவுடைய ராஜசூய யாகத்திற்கு அரசன் அல்லாதவரால் சம்பாதித்தற்குக் கூடாமையின். பொருளால் அதிகாரி கோடியில் பிரவேசமிருத்தற்போன்று. ஈண்டு எஞ்ஞாதியின் கர்த்தாவாக விதிக்கத்தகுந்த பிராமணனுக்குப் பொருளால் அதிகாரி கோடியில் பிரவேசமாம் என்பதும் பொருத்தமன்று.

"சர்வப் பிரகாரத்தாலும் அவையே இரண்டு லிங்கத்தால்" என்னும் சூத்திரத்தில் வேறிடத்தில் விதிக்கப்பட்ட எஞ்ஞாதிகட்கே விவிதிஷை வாக்கியத்தில் பல விசேஷ சம்பந்த விதியாம். அபூர்வ எஞ்ஞாதி விதியன்றும். என வியவஸ்தை செய்யப்பட்டமையால், பிராப்தமான எஞ்ஞாதிகளை அனுவாதம் செய்து ஓர் வாக்கியத்தின்கண் கர்த்திரு ரூப குணவிதியும் பல சம்பந்த விதியும் என்னுமிரண்டை விதித்தலால் வாக்கிய பேதமடைவுறுதலின்.

ராஜசூய வாக்கியத்தில் அரசனுக்குக் கர்த்திருத்தன்மையால் விதேயத்தன்மையின்றென்னும் பக்ஷத்தில் ராஜபதத்தின் சமீப உச்சாரண மாத்திரத்தால் விசிஷ்ட கர்த்திருத்தன்மையின் அடைவுபோன்று, ஈண்டு வாக்கியத்தின் அபேதத்தின் பொருட்டுக் கர்த்திருத்தன்மையால் பிராமணனது

விதியின்றேனும். பிராமண பதத்தின் சமீப உச்சாரணமாத்திரத்தால் பிராமணனைக் கர்த்தாவாகவுடைய தாந்தன்மை அடைவுறுதலால் அவனது அதிகாரத்தில் முடிவு பேறும் என்பதும் பொருந்தாது.

வேறிடத்தில் மூன்று வருணங்களையும் அதிகாரிகளாகவுடையதாந்தன்மையால் நிச்சயிக்கப்பட்டவைகளும் ஈண்டும் மூன்று வருணங்களின் அதிகாரமுள்ள ஆத்ம வித்தையின் சாதனத்தன்மையால் விதிக்கப்படுகின்றவையும் ஆகிய எஞ்ஞாதிகட்கு மூன்று வருணங்களை அதிகாரிகளாக உடையதாந்தன்மை பொருத்தமாவதால் விதிசம்பந்தமின்றிய பிராமண பதத்தின் சமீப உச்சாரண மாத்திரத்தால் அதிகாரத்தின் சங்கோசம் சம்பவியாமையால் பிராமண பதத்திற்கு வித்தையின்கண் யோக்கியமாக அடைவுற்ற அதிகாரி மாத்திரத்திற்கு உபலக்ஷணத்தன்மை உசிதமாதலின்.

## 53. சூத்திரனுக்கு வித்தையின் சாதனமான கருமத்தில் அதிகாரம் இன்றெனலும் உண்டெனலும்

அற்றேல் வித்தையின் அதிகாரி மாத்திரத்திற்கு பிராமண பதம் உபலக்ஷணமாமேல் சூத்திரனுக்கும் வித்தையின்கண் இச்சை முதலியவை சம்பவித்தலால் அவனுக்கும் வித்தையின் சாதனமான கருமத்தில் அதிகாரம் அடைவுறுமெனின்.

அற்றன்று அத்தியயனத்தால் கிரகிக்கப்பட்ட தனது வேதத்தால் உண்டான அதன் அர்த்த ஞானமுடையவனுக்கே வைதீக கர்மங்களில் அதிகாரமாம் என அபசூத்திர அதிகரணத்தில் அத்தியயனம் வேத வாக்கிய சிரவணம் முதலியவையின்றிய சூத்திரனுக்கு வித்தையில் அதிகாரத்தை நிஷேதித்திருத்தலினாலும் "சூத்திரனுக்குச் சாஸ்திரார்த்த ஞானத்தைக் கொடுக்கலாகாது" என்னும் ஸ்மிருதியினால் போலியாகவும் அவனுக்கு வித்தையின் மாகாத்மிய ஞானத்தின் உபாயம் சம்பவியாமையால் அதன்கண் இச்சை பொருந்தாமையாலும் அவனுக்கு வித்தையின்கண் அதிகாரமின்றாமெனச் சிலர் கூறுகின்றனர்.

அவதாரிகை

சூத்திரனுக்கும் வித்தையின் சாதனமான கருமத்தில் அதிகாரம் உண்டெனல்.

வேறு சிலர் கூறுவதாவது சூத்திரனுக்கும் வித்தையின் சாதனமான கருமத்தில் அதிகாரமுளதேயாம். அவனுக்கு வேத அத்தியயனம் அக்கினி ஹோத்திரம் முதலியவை அசம்பவமாயினும் முகத்தால் சொல்லப்பட்ட சர்வ வர்ணங்களையும் அதிகாரமாகவுடைய ஸ்ரீபஞ்சாக்ஷரமாகிய மந்திர ராஜ வித்தை முதலியவற்றின் ஜெபம் பாபநாசத்தின் ஏதுவாகிய தபம் தானம் பாக யக்ஞம் முதலியவை சம்பவித்தலாலும் வேத அத்த்யாயனத்தால் எக்ஞத்தால் தானத்தால் என்பதாதி வேறு வேருக மூன்ரும் வேற்றுமைச் சுருதியினலும் விதுரர் முதலாயினேருக்கும் வித்தையின் சாதனமான ஜெபம் தானம் முதலியவற்றின் அநுஷ்டானத்தை உடன்பட்டிருத்தலாலும் வேத அத்தியயனம் †முதலியவற்றின் சமுச்சயத்தை அபேக்ஷியாமையின்.

சூத்திரனுக்கு வித்தையின்கண் இச்சை சம்பவியாது என்னற்க. பிராமணனை எதிரில்வைத்துக் கொண்டு நான்கு வர்ணங்களையும் கேட்பிக்கலாம். என இதிகாசபுராண சிரவணத்தில் நான்கு வர்ணங்கட்கு அதிகாரத்தைக் கூறுதலால், புராணுதிகளால் வித்தையின் மாகாத்மியத்தை அறிந்த அவனுக்கும் அதன்கண் இச்சை சம்பவித்தலின். சூத்திரனுக்குச் சாஸ்திரார்த்த ஞானத்தைக் கொடுக்கலாகாது என்னும் ஸ்மிருதிக்கும் அதன் அனுஷ்டானத்தில் உபயோகமின்றிய அக்கினி ஹோத்திராதி கருமஞானத்தைக் கொடுத்தலின் நிஷேதத்தில் தாற்பர்யமாமாமதலின். அப்படிக்கின்றேல் அவனக்கு தனது வருண தர்மத்தின் ஞான உபாயமும் சம்பவியாமையால் "சூத்திரன் நான்காவது வருணமுள்ளவன். ஓர் பிறப்பையுடையவன் அவனுக்கும் சத்தியம் குரோதமின்மை சௌசம் ஆசமனத்தின் பொருட்டு கைகால் கழுவுதலேயாம். சிரார்த்த கருமம் தாசரைக் காத்தல் தனது மனைவியினிடத்தில் சந்தோஷித்தல் மூன்று வருணங்கட்கு சேவை செய்தல்" என்பது முதலாக அவனது தர்மத்

† ஸ்ரீ பஞ்சாக்ஷரமே மந்திர ராஜ வித்தையெனப்படும்

தைப் பகுக்கின்ற வசனங்கட்கு அனுஷ்டானத்தினின்மை வடிவ அப்பிராமாணியம் அடைவுறுதலின்.

சூத்திரனுக்கும் வித்தையின் சாதனகர்மாதிகாரத்தை யுடன்படின் அபசூத்தீர அதிகரணம் நிர்விஷயமாம் என்னற்க.

அவ்வதிகரணத்திற்கு சூத்திரனிடத்தில் "அபக்ஷிய பக்ஷணத்தால் உண்டான பாபம் அற்பமும் இன்ரும் அவன் சமஸ்காரத்திற்கு அருகனன்று" என்பது முதலிய ஸ்மிருதி யினுல் குருவின் அடைவு எனப் பெயரிய வித்தையின் அங்க மான உபநயன சம்ஸ்காரம் இன்றிய சூத்திரனுக்கு சகுண வித்தைகளிலும் நிர்க்குண வித்தையின் சாதனமான வேதாந்த சிரவணுதிகளிலும் அதிகாரத்தை நிஷேதித்தலில் தாத்பர்ய முடைமையின் நிர்க்குண வித்தையில் சூத்திரனுக்கும் விஷய சௌந்தரியத்தால் உண்டான ஆசையினை நிஷேதிக்கக் கூடாமையாலும் விதிக்கு விஷயமாகாத பிர்ம வித்தையின் கண் விருப்பத்தினும் வேருக அதிகாரப் பிராப்தியின்மையால் அதனை நிஷேதித்தல் பொருந்தாமையாலும் என்க. அவனுக்கு வேதாந்த சிரவணம் சம்பவியாதபோது வித்தையின் சாதன மான கருமானுஷ்டானம் சம்பவிக்கினும் வித்தையுற்பத்தி ஆகாமையின் அவனுக்கு அதன் சாதன கருமானுஷ்டானம் வீணேயாம் என்று சொல்லற்க. அவனுக்கு வேதாந்தசிரவணத் தில் அதிகாரம் இன்றேனும் பகவற்பாதரால் "நான்கு வருணங் களையும் கேட்பிக்குக" என இதிகாச புராணங்களின் ஞானத்தில் நான்கு வர்ணங்கட்கும் அதிகாரம் ஸ்மிருதியில் கூறியிருத்தலால் வேதபூர்வமாகவோ சூத்திரற்கு அதி காரமின்ரும் என சித்தித்தது என அபசூத்திர அதிகரண உபசம்மாரபாஷியத்தில் வித்தையின்கண் சாதனமாகிய பிரம்மான்மாவின் ஐக்கியத்தில் தாற்பரியமுள்ள புராணுதி சிரவணத்தின்கண் அதிகாரம் தரிசிப்பிக்கப்பட்டமையின்.

அவதாரிகை

"இதிகாச புராணங்களால் வேதத்தை விருத்தி செய்க" என்னும் வசனத்தால் இதிகாசாதியின் கண்ணுள்ள பிரம் மான்ம ஐக்கியத்தில் தாற்பரியமுள்ள பாகத்திற்கு வேதாந்த சிரவணத்தால் உண்டான வேதாந்த அர்த்த ஞானத்தில்

உபகாரத்தன்மை மாத்திரமேயாம். வேதாந்த சிரவணத்தை அபேக்ஷியாமல் சுவதந்தரமாக பிரம்மான்ம ஐக்கியஞானத்தை உண்டு பண்ணுந்தன்மை இன்றும் என நிச்சயிக்கப்படுகின்றது. இவ்வாறுகும்போது தான் அவ்வசனத்தின் பூர்வ பாகம் பொருந்துகின்றது, "சொற்பம் சிரவணித்த புருடனில் நின்றும் வேதம் பயப்படுகின்றது என்னை இவன் வஞ்சிப்பன்" என இவ்வாறுகவே வேதாந்தாந்த சிரவணமின்றிய சூத்திரனுக்கு வேதாந்த அர்த்தத்தைத் திடப்படுத்தல் வடிவ பிரம்மான்ம ஐக்கிய பர இதிகாசாதி சிரவணத்தின்கண் பிரவிர்த்தி உளதாயினும் வித்தையின் உத்பத்தி இன்றும். நான்கு வர்ணங்களையும் கேட்பிக்குக. என்னும் வசனமும் சூத்திரனுக்கு அத்வைத பரபுராணுதி சிரவண அம்சத்தில் அதிருஷ்டத்தின் பொருட்டு அங்கீகாரத்தில் தாற்பர்ய முடையதாம். அபசூத்திர அதிகரண பாக்ஷியத்தின் கண்ணும் சூத்திரனுக்கு அத்வைத பரபுராணுதி சிரவணத்தில் அதிகாரத்தை வர்ணித்தல் சொற்பம் சிரவணித்த புருடனில் நின்றும் பயப்படுகின்றது என்னும் வசனம் இல்லை யென்று கொண்டு செய்யப்பட்டதாம். ஆதலின் பாஷிய விரோதமுமின்றும் அதாவது வேதாந்த சிரவணம் ஒன்றினுலேயே சாதிக்கத் தகுந்த வித்தை அஃதில்லாதபோது சூத்திரனுக்கு சித்திப்பதின்றும் என்னும் அருசியினுல் கூறுகின்றுர்.

வித்தையின் உத்பத்திக்கு யோக்கியமான நிருமலமான தேவ சரீரத்தை சம்பாதித்தல் வாயிலாக முத்தியின் சாதனத் தன்மை சம்பவிக்குமென மூவருணங்கட்கும் கிரம முத்தியைப் பயனுக உடைய சகுண வித்தையின் சாதனமான கருமானுஷ்டானம் போன்று வேதாந்த சிரவணத்திற்கு யோக்கிய மூவருணத்திய சரீரத்தை சம்பாதித்தல் வாயிலாக வித்தையின் சாதனத்தன்மை சம்பவிக்கின்றதாதலின், சூத்திரனுக்கு வித்தையின் சாதனமான கர்மானுஷ்டானத்தில் விரோதமின்மையினுனும் என்க. ஆதலால் விவிதிஷை வாக்கியத்தில் பிராமண பதத்திற்கு யோக்கியமாக அடைவுற்ற வித்தையின் அதிகாரி மாத்திரத்தை விஷயமாக உடையதாந் தன்மையால் சூத்திரனுக்கும் வித்தையின் சாதன மாகிய கருமத்தில் அதிகாரம் சித்திக்கின்றதேயாம்.

## 54. சன்யாசத்திற்கு வித்தையின் உபயோகித் தன்மையின் விசாரம்

அற்றேல் கருமங்கட்குச் சித்தசுத்தி வாயிலாக வித்தையின் உபயோகம் உளதாகுக. சன்னியாசத்திற்கு எவ்வழியால் அதன் உபயோகமெனின்.

ஈண்டு சிலர் கூறுவதாவது வித்தையின் உற்பத்திக்குத் தடையாகிய பாபங்கட்கு அளவின்மையின் சில பாபம்யாகாதி அனுஷ்டானத்தால் நீக்கத்தக்கது சில பாபம் சன்னியாச ஜன்ய அபூர்வத்தால் நீக்கத்தக்கது என கருமம் போன்று சித்த சுத்திவாயிலாகவே சன்னியாசத்திற்கும் அதன் உபயோகமாம். இவ்வாருகவே வீட்டிற்குரிய கருமங்கள் ஒழிந்த சமயங்களில் சிரவணுதிகளை அனுஸ்டிக்கின்ற கிரகஸ்தர் முதலானேருக்கு அந்த ஜன்மத்தில் வித்தையின் பிராப்தியின்ரும். மற்ருே ஜன்மாந்திரத்தில் சன்னியாசத்தை அடைந்தே வித்தையின் அடைவாம். எந்த ஜனகன் முதலானேருக்கு கிரகஸ்த ஆஸ்ரமத்திலேயே வித்தையின் பிராப்தி உளதாமோ அவர்கட்கு பூர்வ ஜன்மத்தில் சன்னியாசத்தால் வித்தையின் பிராப்தியாம். ஆதலால் வித்தையின்கண் சன்னியாச ஜன்னிய அபூர்வத்திற்கு வியபிசார சங்கையுமின்ருமென்க.

அவதாரிகை

சன்னியாசத்திற்கு அதிர்ஷ்ட வாயிலை யுடையதாந் தன்மைப் பக்ஷத்தினையே ஆசிரயித்து சன்னியாச ஜன்னிய அபூர்வத்திற்கு சிரவணுதி அதிகாரியின் விசேஷணத்தன்மையால் வித்தையின் உபயோகத்தைப் பிரமாணசகிதம் கூறுகின்ருர்.

வேறு சிலரோ "சாந்தியுள்ளவன் தாந்தி உள்ளவன் உபரதி உள்ளவன் என்பது முதலிய சுருதியின்கண் உபரதி சப்தத்தால் கிரகிக்கப்பட்டமையால் சன்னியாசத்திற்கு சாதன சதுஷ்டியத்திற்குள் அடக்கம் இருத்தலினுலும் "சககாரி அந்தரவிதி" என்னும் சூத்திர பாஷியத்தில் வித்தையினையுடைய சன்னியாசிக்கு பால்ய பாண்டியத்தை (சிரவண மனனங்களை) அபேக்ஷித்து மூன்ருவதாகிய இந்த மௌனம் (நிதித்தியாசனம்) விதிக்கப்படுகின்றது "ஆதலால் பிராமணன்

பாண்டித்தியம்" என்பது முதலிய சுருதியில் அதற்குமுன்பு "பிக்ஷாடனத்தை அனுஷ்டிக்குக" என சன்னியாச அதிகாரத்தால் என்று பிரதிபாதித்திருத்தலினுனும். "சம்பூர்ணக் கிரியைகளை விட்டவனும் சம்சாரத்தைவிட இச்சிக்கின்றவனும் அறியும் வேட்கை உள்ளவனும் ஆகிய புருஷனுக்கே நியமமாக வேதாந்தங்களில் அதிகாரமாம்" என்னும் வார்த்திக வசனத்தாலும். சன்னியாச ஜன்னிய அபூர்வத்திற்கு ஞான சாதன வேதாந்த சிரவணுதிகளின் அதிகாரிக்கு விசேஷணத்தன்மையாம் என அதற்கு வித்தையின் உபயோகம் கூறுகின்றனர்.

அவதாரிகை

சன்னியாசத்திற்கு திருஷ்ட வாயிலாக வித்தையின் உபயோகமாம் என்னும் பக்ஷத்தைக் கூறுகின்ருர்.

வேறு சிலரோ "சிரவணுதியின் அங்கத்தன்மையால் ஆன்ம ஞானமாகிய பயன் சன்னியாசத்திற்கு சித்தித்துளது" என்னும் விவரணக் கூற்றினுல் அனன்ய வியாபாரத்தன்மையால் சிரவணுதியைச் சம்பாதிக்கின்ற அச்சன்னியாசத்திற்கு வித்தையின்கண் உபயோகமாம். திருஷ்டத்துவாரம் சம்பவிக்கும்போது அதிர்ஷ்ட கற்பனை பொருந்தாமையின்

சோம்பலின்றியவனும் புத்திமானும் புருஷ சிரேஷ்டனும் வேறு ஆசிரமத்திலிருப்பவனும் ஆகிய புருடனுக்கும் கருமங்களின் ஒழிவுகாலங்களில் சிரவணுதி சித்திக்குமாகில் அப்போது நான்கு ஆசிரமங்களுள் சன்னியாச ஆசிரமத்தின் கிரகணத்திலேயே சிரவணுதி சம்பாதிக்கத்தக்கதாம் என்னும் நியமம் அங்கீகரிக்கத்தக்கதாம் என்க.

## 55. க்ஷத்திரிய வைசியர்கட்கு சிரவணுதியின்கண் அதிகார விசாரம்

அற்றேல் இந்த இரண்டு பக்ஷத்திலும் அதாவது சன்னியாசத்திற்கு அதிகாரி விசேஷணத் தன்மை பக்ஷத்திலும் சிரவண அங்கத்தன்மை பக்ஷத்திலும் க்ஷத்திரிய வைசியருக்கு வேதாந்த சிரவணுதியின் அனுஷ்டானம் எவ்வாருமம். சன்னியாசத்திற்கு பிராமணன் அதிகாரி ஆதலால் "பிராமணன்

வைராக்கியத்தை யடைக'' ''பிராமணன் விட்டொழித்து'' ''பிராமணன் சன்னியாசத்தை யடைக'' என சன்னியாசத்தை விதிக்கின்ற வாக்கியங்களில் பிராமண பதத்தைக் கிரகித்திருத்தலாலும் சுருதியின்கண் ''அதிகாரி விசேஷத்தின் ஞானத்தின் பொருட்டு எதனுல் பிராமண பதத்தின் கிரகணமோ அதனுல் க்ஷத்திரிய வைசியருக்கு சன்னியாச விதியின்ரும்'' என்னும் வார்த்திக வசனத்தாலும் எனின்.

ஈண்டு சிலர் ''பிரமசரியத்தை சமாப்தி செய்து கிரகஸ்தனுக கிரகஸ்த ஆசிரமத்தினின்று வானப் பிரஸ்த ஆஸ்ரமத்தை யடைந்து பின்பு சன்னியாச ஆசிரமத்தை யடைக'' என்னும் பூருவ சுருதியின்கண் நான்கு ஆசிரமங்கட்கும் சமுச்சயத்தை (கிரம சன்னியாசத்தை)ப் பிரதிபாதித்து அவைகட்கு உத்தர சுருதியின்கண் விகற்பத்தைத் தெரிசிப்பிக்கின்றது. அல்லது ''கிரம சன்னியாசத்தினும் வேறு பிரகாரமாக பிரம்ம சரியத்தில் நின்றே சன்னியாசத்தை யடைக அல்லது கிரகத்தில் நின்ருவது வானப்பிரஸ்த ஆஸ்ரமத்திலிருந்தாவது சன்னியாசத்தை அடைக'' என்பது முதலிய சாமான்ய சுருதியினுல் ''பிராமணனுவது க்ஷத்திரியனுவது வைசியனுவது கிரகத்தில் நின்றும் சன்னியாசத்தை அடைக மூன்று வருணங்கட்கும் நான்கு ஆஸ்ரமங்கள் உண்டு'' என்னும் ஸ்மிருதியினுல் அனுக்கிரகிக்கப்பட்டதாந் தன்மையால் க்ஷத்திரிய வைசியருக்கும் சன்னியாசத்தில் அதிகாரம் சித்தித்தலின். வேறு சுருதிகளிலுள்ள பிராமணபதம் மூன்று வர்ணங்கட்கும் உபலக்ஷணமாம். இதனுலேயே வார்த்திகத்தின் கண்ணும் அதிகாரி விசேஷத்தின் என்னும் சுலோகத்தால் பாஷிய அபிப்பிராயத்தைக் கூறி சுருதியின்கண் மூன்று வர்ணங்கட்கும் சாமான்யமாக சன்னியாசம் எப்போது கேட்கப்படுகின்றதோ அப்போது பிராமணபதம் உபலக்ஷணத்தின் பொருட்டாம். என பின்னுள்ள சுலோகத்தால் தனது மதத்தில் க்ஷத்திரிய வைசியருக்கும் சன்னியாசத்தில் அதிகாரம் தரிசிப்பிக்கப்பட்டுளது. என இவ்வாறு அவர்கட்கு சிரவணுதியின் அனுஷ்டான சித்தியை சமர்த்தனம் செய்கின்றனர்.

வேறு சிலரோ சன்னியாசத்தை விதிக்கின்ற அனேக வாக்கியங்களில் பிராமணபதம் இருத்தலாலும் உதாகரிக்கப்பட்ட ஜாபால சுருதியிலுள்ள சன்னியாசத்தை விதிக்கின்ற

வாக்கியத்தில் பிராம்மணபதம் இன்றேனும் வேறு சுருதிகளில் சித்தித்த பிராம்மண்னது அதிகாரத்தினையே சித்தித்ததாகச் செய்து சன்னியாச அவஸ்தையில் எக்ஞோப வீதமின்றிய வன் எப்படிப் பிராம்மணனுவன் என பிராம்மணனைப் பராமரி சித்தலாலும் பிராம்மணனுக்கே சன்னியாசத்தில் அதி காரமாம்.

அவதாரிகை

இவ்வாறு சன்னியாசத்தை விதிக்கின்ற வாக்கியங்கட்கு அபிப்பிராயம் ஒன்ருக சித்தித்தபோது பிராம்மணனுவது க்ஷத்திரியனுவது என்னும் ஸ்மிருதிவாக்கியம் ஜாபாலசுருதி தாற்பரியத்தின் அஞ்ஞானத்தை மூலமாக உடைமையால் அப்பிரமாணமாமெனக் கூறுகின்ருர்.

விரோத அதிகரண நியாயத்தால் அதாவது சுருதிக்கும் ஸ்மிருதிக்கும் விரோதம் உண்டாகும்போது சுருதியே பிரமாணமாம் ஸ்மிருதி அப்பிரமாணமாம் என்னும் நியாயத்தால் சுருதியோடு விரோதமின்றிய ஸ்மிருதியின் அர்த்தமே கிரகிக்கத்தக்க தாதலின். சன்னியாசத்தில் எல்லோரும் அதிகாரியாவர் என யாதொரு வார்த்திக வசனமுண்டோஅது வித்வத் சன்னியாச விஷயக மாம். ஆதுர விவிதிஷை சன்னியாசத்தில் பாஷிய அபிப் பிராயத்தின் விரோதமாக சர்வ அதிகாரத்தைப் பிரதி பாதித்தலில் தாத்பர்யமின்ரும். சர்வ அதிகாரத்தையும் கெடுக்கின்றதாய் தத்துவஞானம் அங்கீகரிக்கப்படுமேல் சன்னியாசத்தின்கண் அதிகார நியமம் பலாத் காரத்தால் ஏன் செய்யப்படுகின்றது என பின்னுள்ள சுலோகத்தால் பிரஹ்மக்ஞான முண்டான பின்பு ஜீவன் முக்தி காலத்தில் வித்வச் சன்யாசத்தின்கண்ணேயே அதிகார நியமத்தை நிரா கரித்திருத்தலின். இவ்வாருகும்போது பிராம்மணர்கட்கே சிரவணுதியின் அனுஷ்டானத்தில் சன்னியாசம் அங்கம். க்ஷத்திரிய வைசியருக்கு அதனை அபேக்ஷியாமலே சிரவணுதி யில் அதிகாரமாம். என அவர்கட்குச் சிரவணுதியின் அனுஷ் டானம் நிர்வாகமாம். சன்னியாசத்திற்குச் சிரவணத்தால்

அபேக்ஷிதத்தன்மை பக்ஷத்தில், சிரவணமாத்திரத்திற்கு அதன் அபேக்ஷையின் நியமனம் செய்தற்குக் கூடாது. கிரம முத்தியைப் பயனாகவுடைய சகுணப் பிர்ம்மத்தின் உபாசனை யால் தேவத்துவத்தை அடைந்தவனுக்குச் சிரவணாதியில் சன்னியாச நிரபேக்ஷத்தன்மை அவசியம் கூறத்தக்கதாதலின் தேவர்கட்குக் கர்மானுஷ்டானப் பிராப்தி இன்மையால் அதன் தியாகவடிவ சன்னியாசத்திற்கு அவர்களிடத்தில் பொருத்தமின்மையின் எனக் கூறுகின்றனர்.

சன்னியாசமுடைய பிராமணனுக்குப் போன்று சன்னி யாசமின்றிய க்ஷத்திரிய வைசியர்கட்குச் சிரவணாதியின்கண் அதிகாரம் சம்பவிப்பதின்றும் என மற்றோர் மதத்தைக் கூறுகின்றார்.

வேறு சிலரோ "பிரம்மத்தின்கண் நன்கு நிலைத்தவன் அமிருதத்தன்மையை அடைகின்றான்" என்னும் சுருதியால் கூறப்பட்ட பிரமத்தின்கண் நன்கு நிலைத்தல் வடிவ அனன்ய வியாபாரத்தன்மைஎவனுக்கோ அவனுக்கு சிரவணாதியின்கண் முக்கிய அதிகாரமாம். "எவனுடைய மனமானது செல்கின்ற போதும் நிற்கின்றபோதும் ஜாக்கிர காலத்திலும் தூங்குகிற காலத்திலும் விசாரத்தில் தற்பரமாகின்றதில்லையோ அவன் இறந்தவன் எனப்படுகின்றான்." சுழுத்திவரையும் மரணம் வரையும் வேதாந்த விசாரத்தால் காலத்தைக் கழிக்க வேண்டும்" என்பது முதலிய ஸ்மிருதிகளில் எப்போதும் விசாரத்தை விதித்திருத்தலினால் பிரம்மத்தின்கண் நன்கு நிலைத்தலாகிய அஃது சன்னியாச ஆசிரமமின்றி வேறு ஆசிர மத்தில் இருப்பவனுக்குச் சம்பவிக்கின்றதில்லை. தத்தம் ஆசிரமத்திற்கு விதிக்கப்பட்ட கர்மானுஷ்டானத்தில் தற்பர மாயிருத்தலின். சன்னியாச மின்றிய க்ஷத்திரிய வைசியர் கட்கு சிரவணாதியில் முக்கிய அதிகாரமின்றும். மற்றோ பிரத்தியக்ஷப் பயனையுடைய வித்தையானது நிஷேதத்தின் அபாவமாத்திரத்தினாலும் விருப்புமுடையவனை சிரவணாதி களில் அதிகாரியாக்குகின்றதென "இடையிலும் அதனைக் காண்டலின்" என்னும் அதிகரண பாஷியத்தில் கூறிய நியா யத்தால் சூத்திரன் போன்று நிஷேதிக்கப்படாத க்ஷத்திரிய வைசியருக்கு விதுராதிகட்குப் போன்று வேறு தேகத்தில் வித்தையை அடைவிக்கின்ற அமுக்கியாதிகார மாத்திரத் தால் சிரவணாதி அங்கீகாரமாம். இடையிலும் அதனைக்

காண்டலின் என்னும் அதிகரணத்தின் கண் விதுராதிகட்கு அங்கீகரிக்கப்பட்ட சிரவணுதியின்கண் அதிகாரம் முக்கிய மெனக் கூறமுடியாதாம். "இதனினும் வேறு சிறந்தது லிங்கத்தானும்" என சூத்திரக்காரராலேயே அவர்கட்கு அமுக்கிய அதிகாரத்தை வெளிப்படுத்துதலின்.

ஆண்டு அவர்கட்குச் சிரவணுதியில் அதிகாரமே கூறப் படவில்லை. மற்ருே அவரது கர்மங்கட்கு வித்தைக்கு அனுக் கிரகஞ் செய்யுந் தன்மையாம் என்று சங்கை செய்யற்க. "பிரத்தியக்ஷப்பயனை யுடையது வித்தை" யென்று உதா கரிக்கப்பட்ட அவ்வதிகரண பாஷியத்திற்கு விரோதம் வருதலின்.

க்ஷத்திரியவைசியருக்குச் சன்னியாசமின்மையின் அமுக்கிய வதிகாரமாமேல் அதனுலேயே தேவர்கட்கும் சிரவ ணுதிகளில் அமுக்கிய அதிகாரமே ஆகும். இவ்வாருகவே கிரம முத்தியைப் பயனுக உடைய சகுணவித்தையால் தேவ தேகத்தை யடைந்து சிரவணுதியை அனுஷ்டிக்கின்றவர்க்கு வித்தைப் பிராப்தியின் பொருட்டுச் சன்னியாசத்திற்கு யோக் கியமாக மீண்டும் பிராம்மண ஜன்மம் கூறத்தக்கதாம் ஆகவே "பிர்ஹ்ம லோகத்தை அடைகின்ருன். மீண்டு திரும்புகிறதில்லை" திரும்புகிறதில்லை சப்தத்தால்" என்பது முதலிய சுருதி சூத்திரங்கட்கு விரோதமாம் என்று சொல்லற்க.

தேவர்கட்கு அனுஷ்டிக்கத்தக்க கர்மத்தின்கண் தற்ப ரத்தன்மை இன்மையின் சுயமாகவே அனன்னிய வியாபாரத் தன்மை சம்பவிக்கின்றதாதலின். கிரமமுத்தியைப் பயனுக வுடைய சகுண வித்தையைப் பிரதிபாதிக்கின்ற சாஸ்திரப் பிரமாணத்தால் சன்னியாசமின்றியும் அவர்கட்கு முக்கிய வதிகாரத்தை அங்கீகரித்தலின் எனக் கூறுகின்றனர்.

## 56. அமுக்கிய அதிகாரியால் செய்யப்பட்ட சிரவணுதிகட்கு மறு பிறப்பில் வித்தையின் உபயோகித்தன்மையைக் கூறுதல்

அற்றேல் அமுக்கிய வதிகாரியால் பிரத்தியக்ஷப் பயனு யுள்ளவாக்கியார்த்த் ஞானத்தின் பொருட்டு விதிக்கப்

படாத வேறு நியாய சாஸ்திரத்தின் விசாரம் போன்று செய்யப்படுகின்ற வேதாந்த விசாரம் மறு பிறப்பில் வித்தையின் அடைவில் எவ்வாறு உபயோகமாம். இன்றைய விசாரத்திற்கு நாளை விசாரிக்கப்படுகின்றதின் ஞானஹேதுத் தன்மையும் பொருத்தம் இன்றன்றோ. மறுபிறப்பிலுள்ள அதன் ஏதுத் தன்மை வெகு தூரத்திலாம்.

சித்தாந்தியின் சங்கை

முக்கிய அதிகாரியாகிய பரிவிராஜக சன்னியாசியினுல் செய்யப்படுகின்ற சிரவணமும் பிரத்தியக்ஷப் பயனையுடையதேயாம். ஞானம் பிரத்தியக்ஷப் பயனுதலின். எப்படி பிராரப்த கரும விசேஷ வடிவ பிரதிபந்தத்தினுல் இந்த ஜன்மத்தில் பயனைப் பயக்காத அச்சிரவணுதிகட்கு மறு பிறப்பில் பிரதிபந்தகநீக்கத்தால் பயனை யுண்டுபண்ணுந் தன்மையோ "பிரதிபந்தக மின்றியவழி இந்த ஜன்மத்தில் ஞானம் உளதாயினும் அதனைக் காண்டலால்" என்னும் அதிகரணத்தில் அவ்வாறு நிச்சயம் செய்திருத்தலின் அப்படி அமுக்கியாதிகாரியால் செய்யப்பட்ட சிரவணத்திற்குமாகுமெனின்.

அற்றன்று

எதனுலெனின் சாஸ்திரீய அங்கத்தோடு கூடிய சிரவணம் அபூர்வ விதித்தன்மை பக்ஷத்தில் பல பரியந்தம் அபூர்வத்தை உண்டு பண்ணுகின்றது. நியம விதித்தன்மை பக்ஷத்தில் நியமாதிர்ஷ்டத்தை உண்டு பண்ணுகின்றது. சிரவணத்தினுல் உண்டான அவ்வதிர்ஷ்டமும் பூர்வ ஜன்மத்தின் ஸ்மிருதியை யுண்டுபண்ணுகின்ற அதிர்ஷ்டம் போன்று முன் ஜன்மத்திலுள்ள சமஸ்காரத்தை வெளிப்படுத்தி அதற்குக் காரணமாயுள்ள விசாரத்திற்கு மறுபிறப்பிலுள்ள வித்தையின் உபயோகித்தன்மையைச் சேர்ப்பிக்கின்றது. எனப் பொருந்துகின்றது, சாஸ்திரீய அங்கமின்றிய சிரவணம் அதிர்ஷ்டத்தை உண்டுபண்ணுவதின்றும். ஆதலின் அதற்கு மறுப்பிறப்பில் வித்தையின் உபயோகித் தன்மை எவ்வாறு பொருந்தும். சேர்ப்பிக்கின்ற அதிர்ஷ்டமின்றி முற்பிறப்பிலுள்ள பிரமாணத்தின் வியாபாரத்திற்கு மறுபிறப்பில்

ஞானஹேதுத் தன்மையை உடன்படின் அதிப்பிரசங்கம் வருதலின்.

சாஸ்திரீயாங்கம் = சன்னியாசம்.

அவதாரிகை

கர்மங்கட்கு வித்தையில் உபயோகம் என்னும் பக்ஷத்திணை ஆசிரயித்துப் பரிகரிக்கின்ருர்.

சமாதானம் கூறப்படுகின்றது விவிதிஷையோடு கூடிய அமுக்கிய அதிகாரியினுலும் செய்யப்படுகின்ற சிரவணம் துவாரமாயுள்ள விவிதிஷையை உண்டு பண்ணுகின்ற பிராசீன வித்தையின் சாதனமான யாகாதியின் அனுஷ்டானத்தால் உண்டாகிய அபூர்வத்தின் அதீனமாதலின். அவ்வபூர்வமே வித்தை வடிவ பல பரியந்த வியாபாரமுடையதாய் மறு பிறப்பிலுள்ள வித்தையின் கண்ணும் தன்னுல் செய்விக்கப்பட்ட சிரவணத்திற்கு உபகாரத் தன்மையைச் சேர்ப்பிக்கின்றது, ஆதலின் பொருந்தாமை இன்ரும். சிரவணுதியின் கண் விதியின் அபாவ பக்ஷத்திலோ, சன்னியாச பூர்வகம் செய்யப்பட்ட சிரவணத்திற்கும் அதிர்ஷ்டத்தை உண்டாக்கும் தன்மை இன்மையால் பிரதிபந்தமிருக்கும்போது அதற்கு மறு பிறப்பிலுள்ள வித்தையின் ஏதுத் தன்மை இவ்வாறே நிர்வாகம் செய்யத்தக்கதாம்.

அவதாரிகை

விவரண பக்ஷத்திலும் இவ்வாறே நிருவாகமாம் எனக் கூறுகின்ருர்.

ஆசிரியரோ நியமவிதி பக்ஷத்திலும் இதே நிருவாகமாம். சிரவணத்தை அப்பியசிக்கின்ற புருடனுக்குப் பலப் பிராப்தியின் பின்பு பெரும்பாலும் அந்தநியமாதிர்ஷ்டம் உண்டாகாமையின். அதற்கு பல பரியந்தம் ஆவிருத்தி குணத்தோடு கூடிய சிரவண அனுஷ்டான நியமத்தால் சாத்தியத் தன்மை இருத்தலின். நியம அதிர்ஷ்டத்தை உண்டாக்குகின்ற சிரவண நியமம் பல பரியந்தம் ஆவிருத்திக்கத்தக்க சிரவணத்தின் உபக்கிரம மாத்திரத்தால் சித்தித்ததாக ஆகிறதில்லை ஆதலின். எப்படி அதனுலுண்டான நியம அதிர்ஷ்டத்திற்

கும் பலபரியந்த சிரவணத்தின் ஆவிருத்திக்கு முன்பே உத்பத்தியின் சம்பாவனே செய்யப்படும். குத்துதல் போன்று ஆவிருத்தி குணத்தோடு கூடிய சிரவணத்திற்கே பல சாதனத் தன்மை இருத்தலால். பல சாதனமாகிய பதார்த்தத்தின் உற்பத்திக்கு முன்பு அந்நியமத்தை நிகழ்த்தும் வசனத்திற்கு நிரு விஷயத்தன்மை இருத்தலின், சிரவணம் குத்துதல் முதலியவற்றின் உபக்கிரம மாத்திரத்தால் நியம அதிர்ஷ்டமுண்டாகுமாயின் அத்துணையானே நியமசாஸ்திரத்தின் அனுஷ்டானம் சித்தித்ததாம். ஆதலின் அதனை ஆவிருத்தி செய்யாதபோதும் குறைவின்மை பிராப்தியாதலினுலும் எனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

முக்கிய அமுக்கிய அதிகாரிகளால் தினந்தோறும் செய்யப்படுகின்ற வேதாந்த சிரவணத்திற்குப் பிரதிபந்தக நிவர்த்திவடிவ திருஷ்ட பயனை உண்டாக்கும் தன்மை யிருப்பது போன்று அதிர்ஷ்டத்தை உண்டாக்கும் தன்மையுமுளது. இவ்வாருகவே அதன் வலிமையால் மறு பிறப்பில் வித்தையின் உபயோகித் தன்மை விசாரத்திற்குப் பொருந்துகின்றது, என வேறு பரிகாரத்தைக் கூறுகின்ருர்.

சிலரோ பிரத்தியக்ஷப் பயனையுடைய வேதாந்த சிரவணத்திற்கே "தினந்தோறும் பக்தியோடு கூடியும் குருவின் சேவையோடு கூடியும் செய்யப்படுகின்ற வேதாந்த சிரவணத்திஞல் எண்பது கிருச்சிர பயன் உண்டாம்" என்பது முதலிய வசனப் பிரமாணத்தால் சுதந்திர அதிர்ஷ்டத்தை உண்டாக்கும் தன்மையுமுளது, எப்படி அக்கினி சமஸ்காரத்தின் சாதனமான ஆதானத்திற்குப் புருஷ சமஸ்காரங்களில் கணித்திருத்தலால் அதன சாதனத் தன்மையுமாமோ. அப்படி வசன பலத்தால் இரண்டின் சாதனத் தன்மையும் பொருந்துதலின். இவ்வாருகவே தினந்தோறும் செய்யப்படுகின்ற சிரவணத்திஞல் உண்டாகிய அதிர்ஷ்டத்தின் மகிமையினுலேயே மறு பிறப்பில் வித்தையின் உபயோகித் தன்மையைச் சிரவண மனனுதி சாதனங்கட்காம் என்று கூறுகின்றனர்.

## 57. வித்தையின் உபயோகியான யோக மார்க்கத்தை நிருபித்தல்

அவதாரிகை

இவ்வாறு உத்தம மத்திம அதிகாரிகட்குச் சாங்கிய மார்க்கத்தை நிருபித்து அதில் அசமர்த்தரான அத்தியந்தம் மந்த அதிகாரிகட்கு யோக மார்க்கத்தை நிருபித்தற்கு ஆரம் பிக்கின்ருர்.

இவ்வாறு சிரவணமனனுதி சாதனங்களின் அனுஷ்டான வாயிலால் வித்தை அடைவுறுமென்னுமிப் பொருள் சர்வ சம் மதமாக சித்தித்தபோது பாரதீ தீர்த்தர் தியான தீபத்தின் கண் வித்தையின் பிராப்தியில் வேறு உபாயத்தையும் கூறு கின்றனர். அந்தப் பிரம்மம் சாங்கிய யோகங்களால் அடை யப்பட்டது "எந்த ஸ்தானம் சாங்கியர்காளால் அடையப்படு கின்றதோ அது உபாசகர்களாலும் அடையப்படுகின்றது" என்னும் சுருதிஸ் மிருதியைக் காண்டலால். எப்படி சாங்கி யம் எனப் பெயரிய வேதாந்த விசாரம் சிரவண சப்தத்தால் கூறப்பட்டதாய் மனனுதியால் சகாயம் செய்யப்பட்டதாய் வித்தையின் பிராப்தியில் உபாயமாமோ அப்படி யோக சப்தத்தால் சொல்லப்பட்ட நிர்க்குணப் பிர்ம்மத்தின் உபா சனையுமாம்.

அவதாரிகை

நிர்க்குணப் பிர்ம்மத்தின் உபாசனை பிரமாண மற்றது என்று சங்கித்துப் பரிகரிக்கின்ருர்.

நிர்க்குணத்தின் உபாசனையே யின்ரும் என்று வினவற்க.

பிரசினேப நிஷத்தில் சைப்பிய மஹரிஷியின் வினவின் கண் "யாதொருவன் இந்தப் பரம புருஷனை மூன்று மாத்தி ரையோடு கூடிய ஓங்காரத்தால் தியானம் செய்வானே" என நிர்க்குணத்திற்கே உபாசனை பிரதிபாதிக்கப்பட்டிருத்தலின். அதன் பின்பு அவன் இந்தப் பரமாகிய ஜீவக் கூட்டத்தினின் றும் பரமானபுரியில் இருக்கின்ற புருஷனை சாக்ஷாத்கரிக்கின் ருன். என உபாசனையின் பயனைக் கூறுகின்ற வாக்கியத்தில் சாக்ஷாத்காரத்தின் விஷயமாக சொல்லப்பட்ட யாதொரு நிர்க்குணப் பிரம்மம் உண்டோ அதுவே உபாசனை வாக்கியத்

தின் கண்ணும் தியானத்தின் விஷயமாம். வேறின்று காரிய காரணமாயுள்ள சாக்ஷாத்காரத்திற்கும் தியானத்திற்கும் ஓர் விஷயகத் தன்மை நியமமாதலின். என்னும் இப்பொருள் ஈக்ஷதி கரும அதிகரணத்தில் பாஷியக்காரர் முதலானோரால் அங்கீகரிக்கப்பட்டமையின் வேறிடத்தும் தாபநீயம் கட வல்லி முதலிய வேறு சுருதிகளில் நிர்க்குணப் பிரமத்தின் உபாசனையை விஸ்தாரமாகக் கூறியிருத்தலின், சூத்திரக் காரராலும் உபாசிக்கதக்கதின் குணங்களை நிர்ணயம் செய் தற் பொருட்டு ஆரம்பிக்கப்பட்ட குண உபசம்மார பாதத் தின்கண் நிர்க்குணப் பிர்ம்மத்தின் கண்ணும் "ஆனந் தாதிகள் பிரதானத்திற்கு" என்னும் சூத்திரத்தால் பாவ வடிவ ஞானம் ஆனந்தம் முதலிய குணங்களின் உபசம்மார மும் "அக்ஷர ஞானங்கட்கோ அவரோதமாம்" என்பது முதலிய சூத்திரத்தால் அபாவ வடிவ அஸ்தூலத் தன்மை முதலிய குணங்களின் உபசம்மாரமும் தரிசிப்பிக்கப்பட்டமை யானும் என்க.

உபசம்மாரம் = கிரகித்தல்.

வியாகாத தோஷத்தை வினவுகின்ருன்.

அற்றேல் ஆனந்தம் முதலிய குணங்களை உபசம்மாரம் செய்யின் உபாசிக்கத்தக்க வஸ்து நிர்க்குணமே ஆகாதா மெனின்.

அவதாரிகை

ஆனந்தம் முதலிய குணங்கட்கு உபாஸ்யவஸ்துவின் கோடியில் பிரவேசம் அங்கீகரிக்கப் படுகின்றதில்லை, எதனல் உபாஸ்யப் பிரம்மம் சகுணமாகும். மற்ருே உபாஸ்ய நிர்க் குணப் பிரம்மத்தின் நிச்சய வாயிலாக நிர்க்குணப் பிரம்மத் தின் உபாசனையில் உபயோக மாத்திரம் அங்கீகரிக்கப் படு கின்றது என சமாதானம் கூறுகின்ருர்.

அற்றன்று ஆனந்தம் முதலிய குணங்களாலும் அஸ்தூலத் தன்மை முதலிய குணங்களாலும் உபலக்ஷிக்கப் பட்ட அகண்டை கரசப் பிர்ம்மம் யானுகின்றேன் என நிர்க்குணத் தன்மையைக் கெடுக்காமல் உபாசனை சம்பவித்தலின்.

அவதாரிகை

இவ்வாறு சுருதி சூத்திரங்களால் நிர்க்குணப் பிரமத்திற்கு உபாஸ்யத் தன்மையை நிரூபித்து நிர்க்குணப் பிரமத்தின் உபாசனைக்கு வேறு சுருதியோடு விரோதத்தை ஆசங்கித்துப் பரிகரிக்கின்றார்.

அற்றேல் "எது உபாசனைக்கு விஷயமன்றோ அதனையே பிரம்மம் என்று நீ அறிவாய்" என்னும் சுருதியால் பரப் பிர்ம்மம் உபாஸ்யமன்றாமெனின்.

அவதாரிகை

உபாஸ்யத்திற்கு பிர்மத்தன்மையை நிஷேதித்தல் போன்று வேத்தியத்திற்கும் பிர்ம்மத் தன்மையை நிஷேதித்தால் பரப்பிர்ம்மத்தின் ஞானமும் சித்தியாதெனக் கூறுகின்றார்.

"அது அறியப்பட்டதில் நின்றும் வேறேயாம்" என்னும் சுருதியால் அதற்கு வேத்தியத் தன்மையின் அசித்தியும் அடைவுறுதலின். வேறு சுருதிகளில் பிர்ம்ம ஞானம் பிரசித்தமாயிருத்தலின் அவேத்தியத்தன்மைசுருதி வாஸ்தவ அவேத்தியத் தன்மையில் தாத்பர்யமுடையதாம் எனின். அதர்வணம் முதலிய சுருதிகளில் அதன் உபாசனையும் பிரசித்தமாயிருத்தலால் அதன் அனுபாஸ்யத் தன்மை சுருதியும் வாஸ்தவ அனுபாஸ்யத்தன்மையில் தாற்பர்யமுடையதாகுக. வேத்தியத் தன்மையாவது உபாஸ்யத் தன்மையாவது பிர்ம்மத்தின்கண் பரமார்த்தமாக இன்றாம் என்பது நிஷேத சுருதிகட்குத் தாத்பர்யமாம்.

அவதாரிகை

நிர்க்குணப் பிரம்மத்தின் உபாசனையில் அதிகாரியை தரிசிப்பிக்கின்றார்.

இவ்வாறாகவே சிரவணத்தின் பொருட்டும் எவ்வான்மா அநேகம் பேர்களால் அடையப் படுவதின்றோ என்று கேட்கப் படுதலால் எவர்கட்குப் புத்தியின் மந்தத் தன்மையினலாவது நியாயத்தைக் கூறுவதில் சாமர்த்தியமுள்ள குரு கிடைக்காமையினலாவது சிரவணம் முதலியவை சம்பவிக்கின்ற

தில்லையோ. அத்தியயனத்தால் கிரகிக்கப்பட்ட வேதாந்தங்களால் போலியாக பிரம்மான்மத் தன்மையை அறிந்துள்ளவர்களுக்கு அதன் விசாரமின்றியே பிரசின உபநிஷத் முதலியவற்றில் கூறப்பட்டதும் ரிஷிகளால் செய்யப்பட்ட பிர்ம்ம வாசிட்டாதி கற்பங்களிலும் பஞ்சீகரணாதிகளிலும் அனேக சாகைகளில் சிதறிக்கிடந்த சர்வ அர்த்தங்களையும் சங்கிரகித்தலால் கற்ப சூத்திரங்களில் அக்கினி ஹோத்ராதி போன்று நிர்ணயம் செய்யப்பட்ட அனுஷ்டானப் பிரகாரத்தினையுடையதுமாகிய நிர்க்குணப் பிரம்மத்தின் உபாசனையைச் சம்பிரதாய மாத்திரத்தை அறிந்த ஆசிரியர்களிடத்தில் நின்றும் நிச்சயம் செய்து அதனை அனுஷ்டித்தலால் கிரமமாக உபாசிக்கதக்கதாயுள்ள நிர்க்குணப் பிரம்மத்தின் சாக்ஷாத்காரம் சம்பவிக்கின்றது.

பஞ்சீகரணாதிகளிலும் நிர்ணயஞ் செய்யப்பட்ட எனக் கூட்டுக.

அவதாரிகை

நிர்க்குணப் பிரம்மத்தின் உபாசனைக்கு பிரமை வடிவ சாக்ஷாத்காரத்தில் முடிவுபேறு எவ்வாருமெனின் ;அதற்குக் கூறுகின்ருர்.

அவிசம் வாதிப் பிராந்தி போன்று உபாசனைக்கும் சிலவிடத்து பிரயோஜன காலத்தில் பிரமையின் கண் முடிவுபேறு சம்பவித்தலின், கையில் ஐந்து பலகரணையை வைத்து மூடிக் கொண்டு ஒருவனல் கையில் எத்தனை பலகரணைகள் உள என்று வினவப்பட்டபோது ஐந்து பரகரணைகள் உளவென்று அதற்கு உத்தரம் கூறுபவனுடைய வாக்கியப் பிரயோகத்திற்கு மூலமாயுள்ள எண்ணிக்கையின் விசேஷ ஞானம் மூலப்பிரமாணம் அற்றதாய் ஆகார்ய ஆரோபமாயிருப்பினும் எதார்த்தமாவது போன்று நிர்க்குணப் பிர்ம்மத்தின் உபாசனையும் பிர்ம்மத்தின் எதார்த்தத் தன்மையை போதிக்கின்ற சந்தேகம்அற்ற மூலப் பிரமாணத்தின் அபேக்ஷையின்றியதாய் தகராதி உபாசனை போன்று உபாசனை சாஸ்திர மாத்திரத்தை ஆசிரயித்துச் செய்யப் படுகின்றதாயினும் வாஸ்தவமாக எதார்த்தத் தன்மையிருத்தலால் தகராதி உபாசனையினல் போன்று நிர்க்குண உபாசனையினல்

உண்டாகிய தனது விஷயக சாக்ஷாத்காரத்திற்குச் சிரவணுதி வாயிலாக உண்டான சாக்ஷாத்காரத்திற்குப் போன்று தத்துவார்த்த விஷயகத்தன்மை அவசியம் இருத்தலாலும் என்க.

அவதாரிகை

சாங்கியமார்க்கத்திற்கும் யோகமார்க்கத்திற்கும் சமானத் தன்மைப் பிராந்தியினை நிராகரிக்கின்ருர்.

இத்துணை விசேஷமாம் பிரதிபந்தமின்றிய புருடனுக்குச் சிரவணுதி வாயிலாக பிர்ம்ம சாக்ஷாத்காரம் சீக்கிரம் சித்திக்கின்றது. ஆதலின் சாங்கிய மார்க்கம் முக்கியமாம். உபாசனையினுலோ தாமதமாகச் சித்திக்கின்றது. ஆகலின் யோக மார்க்கம் அமுக்கியமாம். அதாவது சாங்கியமார்க்கம் அனுஷ்டிக்க முடியாத காலத்தில் யோக மார்க்கம் அனுஷ்டிக்கத்தக்கதா மென்க.

## 58. பிரம்ம சாக்ஷாத்காரத்தில் கரணவிசாரம்

அற்றேல் இவ்விரண்டு பக்ஷத்தின் கண்ணும் பிரம்ம சாக்ஷாத்காரத்தில் கரணம் யாது.

சிலர் கூறுவதாவது, அந்தக் கரண விருத்தியின் அப்பியாச வடிவ பிரசங்கியானமேயாம், யோகமார்க்கத்தில் ஆதியிலிருந்து உபாசனை வடிவமாகவும் சாங்கிய மார்க்கத்தில் மனனத்தின்பின்பு நிதித்தியாசனவடிவமாகவும் அஃதிருத்தலின்.

அதற்குப் பிரம்ம சாக்ஷாத்காரத்தின் கரணத்தன்மையில் பிரமாணமின்ருும் என்று சொல்லற்க, நிர் விசேஷப் பிரம்மத்தைத் தியானம் செய்கின்றவனுய் அந்தத் தியானத்தால் அதனைச் சாக்ஷாத்கரிக்கின்ருன் என்று கேட்கப்படுதலானும்.

காமத்தால் பிடிக்கப்பட்டவனுக்கு சுவர் முதலியவற்ருல் மறைக்கப்பட்டுள்ள காமினியின் சாக்ஷாத்காரத்தின் கண் பிரசங்கியானத்திற்குக் காரணத் தன்மை சித்தித்திருத்தலானும். "மரணம் வரை ஆண்டும் காணப்பட்டது" என்னும் அதிகரணத்தின் கண்ணும் "விகற்பம் சமான பயனுடைமையின்" என்னும் அதிகரணத்தின் கண்ணும் தகராதி அகங்

கிரக உபாசகருக்குப் பிரசங்கியானத்தால் உபாசிக்கத்தக்க சகுணப் பிர்ம்மத்தின் சாக்ஷாத்காரத்தை அங்கீகரித்திருத்தலானும் என்க.

அற்றேல்

பிரசங்கியானத்தினைப் பிரமாணங்களில் ஒன்றாகச் சேர்த்து எண்ணுமையினுல் அதனாலுண்டாகிய பிரம்ம சாக்ஷாத்காரம் பிரமையாகாது, காகதாலீயமாய் சம்வாதிப் பிராந்தி வடிவமாயுள்ள பலகரணையின் எண்ணிக்கை விசேஷ ஆகாரிய ஞானத்திற்குப் போன்று பொருட்குப்பாத மின்மையால் பிரமைத் தன்மை பொருத்தமாம் என்று சொல்லற்க. பிரமாணமாகிய மூலமின்றிய ஞானத்திற்குப் பிரமைத்தன்மை பொருந்தாமையின். ஆகார்யவிருத்திக்கும் உபாசனை விருத்திபோன்று ஞானத்தினும் வேறான மானசக்கிரியை வடிவத் தன்மையால் இச்சை முதலியவை போன்று பாதிக்கப் படாத பொருளை விஷயஞ் செய்யுந் தன்மை இருப்பினும் பிரமைத் தன்மையை அங்கீகரியாமையினெனின்.

அற்றன்று பிரசித்தமாகிய பிரமையின் கரணத்தை மூலமாகவுடைய தன்றேனும் ஈஸ்வரனது மாயாவிருத்திக்குப் போன்று பிரமைத் தன்மை பொருந்துதலின் விஷயத்தின் அபாதம் சமானமாயிருத்தலின் பிரசங்கியான ஜன்ய சாக்ஷாத்காரத்திற்குப் பிரமாண மூலத் தன்மை இருத்தலின் பிரமைத் தன்மையாம். என வேறு சமாதானத்தைக் கூறுகின்றார்.

இரண்டு மார்க்கத்திலும் பிரசங்கியானத்திற்கு விசாரிக்கப்பட்ட அல்லது விசாரிக்கப்படாத வேதாந்தத்தால் உண்டாகிய பிரம்மான்ம ஐக்கிய ஞானத்தை மூலமாகவுடைமையால் பிரசங்கியான ஜன்னிய பிரம்ம சாக்ஷாத்காரத்திற்குப் பிரமாணத்தை மூலமாகவுடையதாந் தன்மை இருத்தலினாலும் என்க.

அவதாரிகை

பிரமாண அஜன்னியத்திற்கும் பிரமாணத்தின் அதீனத் தன்மை மாத்திரத்தால் பிரமைத் தன்மையில் முதியோரது சம்மதியைக் கூறுகின்றார்.

கல்பதருக்காரராலும் கூறப்பட்டுள்ளது. வேதாந்த வாக்கியத்தால் உண்டாகிய ஞானத்தின் அப்பியாச வடிவ

பிரசங்கியானத்தால் உண்டாகிய அபரோக்ஷ ஞானம் மூலப் பிரமாணத்தின் திடத் தன்மையிருத்தலால் பிராந்தித் தன்மையை அடைகின்றதில்லை. பிராமாணியத்திற்குப் பிறிதாற் பெறப்படுந்தன்மைஅடைவுமின்ரும். அப்பிராமாணிய சங்கையை நீக்கும் பொருட்டு மூல சுத்தியை அனுசரித்தலின் என.

அவதாரிகை

பிரசங்கியான மாத்திரம் சாக்ஷாத்காரத்தில் கரணமன்ரும் மற்ருே அதனுல் சகாயஞ் செய்யப்பட்ட மனது அதன்கண் கரணமாம் என்னும் மதத்தைத் தரிசிப்பிக்கின்ருர்.

வேறு சிலவாசிரியரோ "இந்த அணுவடிவ ஆன்மா மனதினுல் அறியத்தக்கது. சூக்ஷ்ம புத்தியினுல் பார்க்கப் படுகின்றது." என்பது முதலிய சுருதியால் மனமே பிரம்ம சாக்ஷாத்காரத்தில் கரணமாம். அதற்கு சோபாதிக ஆன்மாவில் அகம் விருத்தி வடிவ பிரமையின் கரணத் தன்மை சித்தித்திருத்தலின்.

அவதாரிகை

ஜீவனது சாக்ஷாத்காரத்தில் மனம் கரணம் என்பதில் பெரியோரது சம்மதியைக் கூறுகின்ருர்.

சொப்பனப் பிரபஞ்சத்தின் விபரீதமான வியாவகாரிக பிரமாதா முதலியவற்றின் ஞான சாதனமாகிய அந்தக் கரணத்திற்கு. என்பது முதலிய பஞ்சபாதிகை விவரண கிரந்தங்களாலும் அவ்வாறே கூறப்பட்டிருத்தலின்.

அவதாரிகை

நிருபாதிக ஆன்மசாக்ஷாத்காரத்திலும் மனத்திற்குக் கரணத் தன்மை பிரசித்தமாமெனக் கூறுகின்ருர்.

நானே இவ்வனைத்துமாய் எல்லாமாயிருக்கின்றேன் என்று எவன் அறிகிருனே அவனுக்கு மேலான உலகமாம். என்று சுருதியால் கூறப்பட்ட சொப்பனப் பிரம்ம சாக்ஷாத்காரத்தில் மனதிற்கே கரணத் தன்மை அறியப் பட்டிருத்தலானும். அப்போது வேறு கரணமின்மையினுல் என்க. பிரசங்கியானமோ மனதின் சஹகாரித் தன்மையாலும் உபயோகமாகின்றது. வாக்கியார்த்த பாவனையின் பரிபாகத்

தோடு கூடிய அந்தக் கரணம் அபரோக்ஷமாகிய துவம்ப தார்த்த ஜீவனுக்கு அவ் அவ்வுபாதி வடிவத்தை நிஷேதித்த லால் தத்பதார்த்த பிரம்மத்தன்மையை வெளியாக்கு கின்றது. என்னும் பாமதி வசனத்தால் "ஞானப் பிரசாதத் தால் சுத்த மனமுள்ளவனுய் நிரவயவப் பிரம்மத்தைத் தியா னிக்கின்றவனுய் அதனுலேயே அதனை தரிசிக்கின்ருன்" என்னும் சுருதியின் கண்ணும் ஞானப் பிரசாத சப்தத்தால் சொல்லப்பட்ட சித்தத்தின் ஏகாக்கிரத் தன்மைக்கு ஏதுவா கத் தியானத்தை பிரதிபாதித்திருத்தலின், பிரசங்கியானம் சுவயம் கரணமன்ரும் அதற்கு ஓரிடத்தும் ஞானகரணத் தன்மை பிரசித்தியின்மையின். காமத்தால் பீடிக்கப்பட்ட வனுக்கு காமினியின் சாக்ஷாத்காரஸ்தலத்திலும் பிரசங்கி யான சகாயத்தோடு கூடிய மனதிற்கே கரணத் தன்மை பொருந்துதலால். ஞானத்திற்கு அப்பிரசித்த வேறு கரணத் தைக் கற்பித்தல் பொருந்தாமையின் எனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

மகா வாக்கியமே அதன் கண் கரணமாம் என்னும் மதத் தைக் கூறுகின்ருர்.

வேறு சிலரோ "பிதாவின் உபதேசத்தால் பிரம்மத்தை சாக்ஷாத்கரித்தான் அஞ்ஞானத்தின் அதிஷ்டான வடிவ பிரம்மத்தைத் தரிசிப்பிக்கின்ருர்.

"ஆசாரியனையுடைய புருடன் அறிகின்ருன் அவனுக்கு அவ்வளவே. தாமதம்" என்பது முதலிய சுருதிகளில் ஆசாரி யரது உபதேசத்தின் அனந்தரமே பிரம்ம சாக்ஷாத்கார முதய மாகுங்கால் ஜீவன் முத்தியைக் கேட்டலினுலும். வேதாந்த விக்ஞானத்தால் நிச்சயிக்கப்பட்ட அர்த்தத்தினையுடையவ ராய் என. தியானத்தின் நிரபேக்ஷைத் தன்மையைக் கேட் டலினுலும். அந்த ஔபநிடதபுருடனை வினவுகின்றேன் என. பிரம்மத்திற்கு உபநிடதம் ஒன்றினுலேயே அறியப் படுந் தன்மை கேட்கப்படுதலானும். உபநிடத சம்பந்த மாகிய மகா வாக்கியமே பிரம்ம சாக்ஷாத்காரத்தில் கரண மாம். மனம் கரணமன்று. மனதினுல் எந்த சைதன்னி யத்தை அறிகின்றதில்லையோ என அதற்குப் பிரம்ம சாக்ஷாத் காரத்தின் கரணத் தன்மையை நிஷேதித்திருத்தலின்.

இந்த நிஷேத சுருதி அசுத்தமனதை விஷயம் செய்வதாம் என்று சொல்லற்க. "எந்த சைதன்னியத்தால் மனம் அறியப்பட்டது எனக் கூறுகின்றனர்" என்னும் வாக்கிய விசேஷத்தில் மனோமாத்திரத்தைக் கிரகித்திருத்தலின்.

இவ்வாருயின் எந்த சைதன்னியம் வாக்கினுல் பிரகாசிக்கப் படுவதின்ருே என சப்தத்திற்கும் அதன் கரணத் தன்மை நிஷேதிக்கப் படுகின்றது என்று வினவற்க.

மனதை கரணமென்னும் வாதிகட்கும் சப்தத்திற்கு நிருவிசேஷப் பிரம்மத்தின் பரோக்ஷ ஞான கரணத்தன்மை அங்கீகாரமாதலால் இந்த நிஷேத வசனத்திற்கு பிரம்மத்தினை அடையாது மனதோடு கூடவாக்கு எதில் நின்றும் திரும்புகின்றனவோ என்னும் சுருதியை அனுசரித்து சப்தார்த்தத்தின் பிராப்தி வடிவ சத்தி வாயிலாய்ச் சப்தத்திற்கு அதன் கரணத் தன்மையை நிஷேதித்தலில் தாத்பர்யம் கூறத்தக்கதாகலின். சக்கிய சம்பந்த வடிவ லக்ஷணை வாயிலாக அதற்கு அதன் கரணத் தன்மை விரோதமின்மையின். மனத்தினலேயே தரிசிக்கத் தக்கது. என்னும் சுருதியால் மனதிற்கும் அதன் கரணத் தன்மை பிரசித்தமாம் அதனை நீக்குதற்குக் கூடாது என்று சொல்லற்க. சாப்த சாக்ஷாத்காரத்தை உண்டு பண்ணுவதின் கண்ணும் அதன் ஏகாக்கிரத்தை அபேக்ஷித்தலால் ஏதுத் தன்மை மாத்திரத்தால் மூன்ரும் வேற்றுமை பொருந்துதலின். மனதினுலே இவன் காண்கின்ருன் மனதினுலே கேட்கின்ருன் என்பது முதலிய இடங்களில் அவ்வாறு காண்டலின். கீதையின் வியாக்கியானத்தில் பாஷ்யக்காரரது மனதைக் கரணமாகக் கூறும் வசனம் வேறு மதத்தின் அபிப்பிராயத்தால் பிரவிர்த்தித்தலின் பாஷ்ய விரோதமுமின்ரும் என்று கூறுகின்றனர்.

## 59. பிரம்ம ஞானத்திற்குச் சாப்தவபரோக்ஷத் தன்மை விசாரம்

சங்கை. அற்றேல் சப்தத்திற்கு பிரம்ம சாக்ஷாத்காரத்தின் கரணத்தன்மை பக்ஷத்தில், சுருதி பாஷ்யங்கட்கு விரோதமின்றேனும். பரோக்ஷ ஞானத்தை உண்டுபண்ணும் சுபாவத்தை யுடைய சப்தத்திற்கு அபரோக்ஷ ஞானத்தை யுண்டு பண்ணுந் தன்மை பொருந்தாதெனின்.

தோடு கூடிய அந்தக் கரணம் அபரோக்ஷமாகிய துவம்ப தார்த்த ஜீவனுக்கு அவ் அவ்வுபாதி வடிவத்தை நிஷேதித்த லால் தத்பதார்த்த பிரம்மத்தன்மையை வெளியாக்கு கின்றது. என்னும் பாமதி வசனத்தால் "ஞானப் பிரசாதத் தால் சுத்த மனமுள்ளவனுய் நிரவயவப் பிரம்மத்தைத் தியா னிக்கின்றவனுய் அதனுலேயே அதனை தரிசிக்கின்ருன்" என்னும் சுருதியின் கண்ணும் ஞானப் பிரசாத சப்தத்தால் சொல்லப்பட்ட சித்தத்தின் ஏகாக்கிரத் தன்மைக்கு ஏதுவா கத் தியானத்தை பிரதிபாதித்திருத்தலின், பிரசங்கியானம் சுவயம் கரணமன்ரும்: அதற்கு ஓரிடத்தும் ஞானகரணத் தன்மை பிரசித்தியின்மையின். காமத்தால் பீடிக்கப்பட்ட வனுக்கு காமினியின் சாக்ஷாத்காரஸ்தலத்திலும் பிரசங்கி யான சகாயத்தோடு கூடிய மனதிற்கே கரணத் தன்மை பொருந்துதலால். ஞானத்திற்கு அப்பிரசித்த வேறு கரணத் தைக் கற்பித்தல் பொருந்தாமையின் எனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

மகா வாக்கியமே அதன் கண் கரணமாம் என்னும் மதத் தைக் கூறுகின்ருர்.

வேறு சிலரோ "பிதாவின் உபதேசத்தால் பிரம்மத்தை சாக்ஷாத்கரித்தான் அஞ்ஞானத்தின் அதிஷ்டான வடிவ பிரம்மத்தைத் தரிசிப்பிக்கின்ருர்.

"ஆசாரியனையுடைய புருடன் அறிகின்ருன் அவனுக்கு அவ்வளவே. தாமதம்" என்பது முதலிய சுருதிகளில் ஆசாரி யரது உபதேசத்தின் அனந்தரமே பிரம்ம சாக்ஷாத்கார முதய மாகுங்கால் ஜீவன் முத்தியைக் கேட்டலினுலும். வேதாந்த விக்ஞானத்தால் நிச்சயிக்கப்பட்ட அர்த்தத்தினையுடையவ ராய் என. தியானத்தின் நிரபேக்ஷத் தன்மையைக் கேட் டலினுலும். அந்த ஔபநிடதபுருடனை வினவுகின்றேன் என. பிரம்மத்திற்கு உபநிடதம் ஒன்றினுலேயே அறியப் படுந் தன்மை கேட்கப்படுதலானும். உபநிடத சம்பந்த மாகிய மகா வாக்கியமே பிரம்ம சாக்ஷாத்காரத்தில் கரண மாம். மனம் கரணமன்று. மனதினுல் எந்த சைதன்னி யத்தை அறிகின்றதில்லையோ என அதற்குப் பிரம்ம சாக்ஷாத் காரத்தின் கரணத் தன்மையை நிஷேதித்திருத்தலின்.

இந்த நிஷேத சுருதி அசுத்தமனதை விஷயம் செய்வதாம் என்று சொல்லற்க. "எந்த சைதன்னியத்தால் மனம் அறியப்பட்டது எனக் கூறுகின்றனர்" என்னும் வாக்கிய விசேஷத்தில் மனோமாத்திரத்தைக் கிரகித்திருத்தலின்.

இவ்வாருயின் எந்த சைதன்னியம் வாக்கினுல் பிரகாசிக்கப் படுவதின்ருே என சப்தத்திற்கும் அதன் கரணத் தன்மை நிஷேதிக்கப் படுகின்றது என்று வினவற்க.

மனதை கரணமென்னும் வாதிகட்கும் சப்தத்திற்கு நிருவிசேஷப் பிரம்மத்தின் பரோக்ஷ ஞான கரணத்தன்மை அங்கீகாரமாதலால் இந்த நிஷேத வசனத்திற்கு பிரம்மத்தினை அடையாது மனதோடு கூடவாக்கு எதில் நின்றும் திரும்புகின்றனவோ என்னும் சுருதியை அனுசரித்து சப்தார்த்தத்தின் பிராப்தி வடிவ சத்தி வாயிலாய்ச் சப்தத்திற்கு அதன் கரணத் தன்மையை நிஷேதித்தலில் தாத்பர்யம் கூறத்தக்கதாகலின். சக்கிய சம்பந்த வடிவ லக்ஷணை வாயிலாக அதற்கு அதன் கரணத் தன்மை விரோதமின்மையின். மனத்தினுலேயே தரிசிக்கத் தக்கது. என்னும் சுருதியால் மனதிற்கும் அதன் கரணத் தன்மை பிரசித்தமாம் அதனை நீக்குதற்குக் கூடாது என்று சொல்லற்க. சாப்த சாக்ஷாத்காரத்தை உண்டு பண்ணுவதின் கண்ணும் அதன் ஏகாக்கிரத்தை அபேக்ஷித்தலால் ஏதுத் தன்மை மாத்திரத்தால் மூன்ரும் வேற்றுமை பொருந்துதலின். மனதினுலே இவன் காண்கின்ருன் மனதினுலே கேட்கின்ருன் என்பது முதலிய இடங்களில் அவ்வாறு காண்டலின். கீதையின் வியாக்கியானத்தில் பாஷ்யக்காரரது மனதைக் கரணமாகக் கூறும் வசனம் வேறு மதத்தின் அபிப்பிராயத்தால் பிரவிர்த்தித்தலின் பாஷ்ய விரோதமுமின்ரும் என்று கூறுகின்றனர்.

## 59. பிரம்ம ஞானத்திற்குச் சாப்தவபரோக்ஷத் தன்மை விசாரம்

சங்கை. அற்றேல் சப்தத்திற்கு பிரம்ம சாக்ஷாத்காரத்தின் கரணத்தன்மை பக்ஷத்தில், சுருதி பாஷ்யங்கட்கு விரோதமின்றேனும். பரோக்ஷ ஞானத்தை உண்டுபண்ணும் சுபாவத்தை யுடைய சப்தத்திற்கு அபரோக்ஷ ஞானத்தை யுண்டு பண்ணுந் தன்மை பொருந்தாதெனின்.

ஈண்டு சிலர் இயற்கையாக அசமர்த்தமாயினும் சப்தம் சாஸ்திர சிரவண மனன பூர்வக பிரத்தியயத்தின் அப்பியாசத்தால் உண்டான சமஸ்கார சமூகத்தால் அடையப் பெற்ற பிரம்மத்தில் ஏகாக்கிரத் தன்மையினையுடைய மனமாகிய கண்ணாடியினால் அனுக்கிரகிக்கப்பட்டதாய் அபரோக்ஷ ஞானத்தை உண்டு பண்ணுகின்றது என கற்பிக்கப் படுகின்றது.

அவதாரிகை

அதில் திருஷ்டாந்தங் கூறல்.

சாஸ்திரீய சமஸ்காரத்தால் சுத்தி செய்யப் பெற்ற அக்கினியை அதிகரணமாகவுடைய ஓமம் அபூர்வத்தை உண்டு பண்ணுவது போன்று.

அவதாரிகை

அற்றேல் திருஷ்டாந்தத்தில் சாஸ்திர பலத்தால் அவ்வாறு அங்கீகரிக்கப் படுகின்றது பிரகிருதத்தில் அவ்வாறு சாஸ்திரம் அறியப்படுகின்றதில்லை எனின் அதற்குக் கூறுகின்றார்.

ஆன்மாவை யறிந்தவன் சோகத்தைக் கடக்கின்றான் '' என்னும் சாஸ்திரப் பிரமாணமிருத்தலால். கருத்திருத்தன்மை முதலிய அபரோக்ஷ அத்தியாசத்திற்கு அபரோக்ஷமாகிய அதிஷ்டான ஞானமின்றி நிவர்த்தி பொருந்தாமையின், உபநிடதத்தால் பிரதிபாத்தியப் பிரம்மத்தின் கண் வேறு பிரமாணத்திற்குப் பிரவிருத்தி யின்மையால் சப்தத்தாலும் அபரோக்ஷ ஞானம் உண்டாகாதாயின் மோக்ஷத்தின் இன்மை பிராப்தியாதலின் எனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

சாஸ்திரப் பிராமாணியத்தை ஆசரியிக்காமலும் சப்தத்திற்கு அபரோக்ஷ ஞானத்தின் கரணத் தன்மையைச் சாதிக்கின்றார்.

வேறு சிலரோ மனதிற்குப் புறப்பொருளில் சாமர்த்திய மின்றேனும் பாவனைக் கூட்டத்தோடு கூடியதாய் இறந்து போன ஸ்திரீயின் சாக்ஷாத்காரத்தை யுண்டுபண்ணும் தன்மையைக் காண்டலின் நிதித்தியாசனத்தோடு கூடியதாந்

தன்மையால் சப்தத்திற்கும் அபரோக்ஷ ஞானத்தை யுண்டு பண்ணுந் தன்மை பொருத்தமாம் என திருஷ்டானு சாரமாகச் சமத்தனம் செய்கின்றனர்.

அவதாரிகை

இப்போது சப்தத்திற்கு பரோக்ஷ ஞானத்தை யுண்டு பண்ணும் சுபாவமே அசித்தமாம். ஆதலால் நித்திய அபரோக்ஷப் பிரம்மத்தின் கண் வேதாந்தங்கட்குச் சாக்ஷாத்காரத்தின் கரணத் தன்மை அபவாதமின்றியதாம் என்னும் மற்ஜேர் மதத்தைக் கூறுகின்ருர்.

வேறு சில ஆசிரியரோ ஞானத்தின் அபரோக்ஷத் தன்மை என்பது அபரோக்ஷ அர்த்தத்தை விஷயம் செய்யும் தன்மையாம். வேறு பிரகாரமாக நிரூபிக்க முடியாமையால். அர்த்தத்தின் அபரோக்ஷத் தன்மையோ அபரோக்ஷ ஞானத்தின் விஷயத் தன்மை அன்ரும். எதனல் அன்னியோன் யாசிரய தோஷம் உண்டாம். மற்ருே அவ்வப் புருஷரது சைதன்னியத்தின் அபேதமாம். அந்தக் கரணங்களும் அதன் தருமங்களும் சாக்ஷியின் கண் கற்பிதமாதலால் அதன் அபேதமிருத்தலினலும் வெளியிலுள்ள சைதன்னியத்தின்கண் விருத்தியால் செய்யப்பெற்ற அவ்வப்புருஷரது சைதன்னிய அபேதத்தின் அபிவியத்தியால் அதன் அபேதம் இருத்தலினுலும் ஓரிடத்தும் அவ்வியாப்தியின்ரும்.

அருத்தத்தின் அபரோக்ஷத்தன்மையின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை ஆசங்கித்து நிராகரிக்கின்ருர்.

அந்தக்கரண அதன் தருமங்களாகிய ஞாளுதிகட்குப் போன்று தருமா தரும சமஸ்காரங்கட்கும் சாக்ஷியின்கண் கற்பிதத் தன்மை சமமாயிருத்தலின் அபரோக்ஷத் தன்மையின் அடைவாமென்று சொல்லற்க. அவைகட்கு உத்பூதத் தன்மையின்மையின். உத்பூதமாகிய சடவஸ்துவிற்கே சைதன்ய அபேதம் உண்டாகுங்கால் அபரோக்ஷத் தன்மையாமென அங்கீகரித்திருத்தலின்.

அவதாரிகை

இவ்வாறு சப்தத்திற்குப் பிரம்ம சாக்ஷாத்காரத்தில் கரணத் தன்மை சித்திக்கும் பொருட்டு உபோற்காதத்திணைச் செய்து பிரகிருதத்தைத் தரிசிப்பிக்கின்ருர்.

இவ்வாருகவே அதாவது ஞானத்தின் கண்ணுள்ள அபரோக்ஷத் தன்மை விஷயத்தின் கண்ணுள்ள அபரோக்ஷத் தன்மையின் அதீனமாகுங்கால் எப்போதும் எல்லாப் புருஷரது சைதன்னிய அபின்னத் தன்மையிருத்தலால் எது சாக்ஷாத் அபரோக்ஷம் பிரம்மம் என்னும் சுருதியால் தானுகவே அபரோக்ஷம் பிரம்மமாதலின் அபரோக்ஷ அர்த்த விஷயகத் தன்மை இருத்தலால் சப்த ஜன்னியப் பிரம்ம ஞானத்திற்கும் அபரோக்ஷத் தன்மை வாசகம் யுக்திக்குப் பொருத்தமாமெனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

ஞானத்தின் அபரோக்ஷத் தன்மையினேயும் அர்த்தத்தின் அபரோக்ஷத் தன்மையினேயும் வேறு பிரகாரத்தால் நிரூபிக்கின்ருர்.

அத்துவைத வித்யாசாரியரோ. அபரோக்ஷ அர்த்த விஷயகத் தன்மை ஞானத்தின் அபரோக்ஷத் தன்மையன்ரும். சொரூப சுகாபரோக்ஷ வடிவ சொரூப ஞானத்தில் அவ்வியாப்தி உண்டாதலின். சுவவிஷயகத் தன்மை வடிவ சொப்பிரகாசத் தன்மையை நிஷேதித்திருத்தலின். மற்ருே அவ்வவ் வர்த்தத்திற்குத் தமது வியவகாரத்திற்கு அனுகூலமான சைதன்னியத்தின் அபேதம் அர்த்தாபரோக்ஷத் தன்மை போன்று. அவ்வவ் வியவகாரத்திற்கு அனுகூலமான சைதன்னியத்திற்கு அவ்வவ் வர்த்தத்தோடுள்ள அபேதம் ஞானத்தின் அபரோக்ஷத் தன்மையாம். இவ்வாருகவே சதன்னிய தர்மமே அபரோக்ஷத் தன்மையாம். அனுமிதித் தன்மை முதலியவை போன்று அந்தக் கரணவிருத்தி தருமம் அன்ரும். இதனுலேயே சுகாதி பிரகாச வடிவ சாக்ஷியின் கண்ணும் சொரூப சுகப் பிரகாச வடிவ சைதன்னியத்தின் கண்ணும் அபரோக்ஷத் தன்மையாம்.

கடாதி இந்திரிய ஜன்னிய விருத்தியின் கண் அதன் அனுபவத்திற்கு விரோதமாமென்று சொல்லற்க. அனுபவத்திற்கு விருத்தி அவச்சின்ன சைதன்னியத்தின் கண்ணுள்ள அபரோக்ஷத் தன்மையை விஷயஞ் செய்யும் தன்மை பொருந்துதலின்.

அற்றேல் கூறப்பெற்ற ஞான அர்த்தங்களின் அபரோக்ஷத் தன்மை இருதயாதி கோசர சாப்த விருத்தியிலும் சாப்த விஷயத்திலும் அதிவியாப்தமாம். ஆண்டு தெய்வ கதியால் ஓர்போது விருத்திக்கும் விஷயத்திற்கும் சம்பந்தம் உண்டாகுங்கால் விருத்தி அவச்சின்ன சைதன்னியத்திற்கும் விஷயாவச்சின்ன சைதன்னியத்திற்கும் அபேத அபிவியக்தி தள்ளத்தகாததாயிருத்தலின் எனின்.

அற்றன்று பரோக்ஷ விருத்திக்கு விஷயாவச்சின்ன சைதன்னியத்திலுள்ள அஞ்ஞானத்தை நிவர்த்திக்கும் ஆற்றலின்மையால். ஆண்டு அஞ்ஞானத்தால் மறைபட்ட விஷய சைதன்னியத்திற்கு மறைபடாத விருத்திய வச்சின்ன சாக்ஷி சைதன்னியத்தோடு அபேதாபிவியத்தியின்மையால் அபரோக்ஷத் தன்மையின் பிராப்த்தியின்மையின். இதனுலேயே (அபேதாபி வியத்திக்கு அபரோக்ஷத் தன்மையின் ஏதுத் தன்மையை அங்கிகரித்தலினுலேயே) ஜீவனுக்குச் சம்சார தசையில்வாஸ்தவமாக பிரம்மத்தின் அபேதமிருந்தபோதிலும் அதன் அபரோக்ஷத் தன்மையின்ரும். அஞ்ஞானுவரணத்தால் செய்யப்பட்ட பேதமிருத்தலின். இவ்வாறு பிரம்மத்திற்கு ஜிவனது அபரோக்ஷத் தன்மை சம்பவியாமையால் அசர்வக் ஞத்தன்மையின் அடைவாம் என்னற்க.

. அஞ்ஞானத்திற்கு ஈஸ்வரனைக் குறித்து மறைக்குந் தன்மையின்மையால் அவரைக் குறித்து ஜீவ பேதத்தைக் கற்பியாமையின். எவ்வஞ்ஞானம் எவனைக் குறித்து மறைப்பைச் செய்யுமோ அவ்வஞ்ஞானம் அவனைக் குறித்தே தனது ஆசிரய பேதத்தைக் கற்பிக்குமாதலின். இதனுலேயே (எவ்வஞ்ஞானம் எவனைக் குறித்து மறைக்குமோ என்பது முதலிய வியவஸ்தையை அங்கீகரித்ததினுலேயே) சைத்திரனது ஞானத்தால் அவனது கட அஞ்ஞானம் நிவர்த்தியாகும்போது நிவர்த்தி ஆகாத மைத்திரனது அஞ்ஞானம் மைத்திரனைக் குறித்தே விஷய சைதன்னியத்தின் பேதத்தைக் கற்பிக்கும் ஆதலின். சைத்திரனுக்கு கடாபரோக்ஷ அனுபவத்திற்கு பொருத்தமின்மை இன்ரும்.

அற்றேல் இவ்வாறு விருத்தியவச்சின்ன விஷயாவச்சின்ன சைதன்னியங்களின் அபேத அபிவியக்தி வடிவ அபரோக்ஷத் தன்மைக்கு தனது விஷய சைதன்னியத்திலுள்ள

அஞ்ஞான நிவர்த்தியின் அதீனத் தன்மையுளதேல் அதற்கு அஞ்ஞான நிவர்த்தியின் ஏதுத் தன்மை பொருந்தாமையால் ஞானமாத்திரம் அஞ்ஞான நிவர்த்தகமாமெனின்.

அற்றன்று யாதொரு ஞானம் உற்பத்தி யாகின்றதாய் தனது காரண மகிமையால் விடய சம்பந்தமுடையதாகியே உற்பத்தி யாகின்றதோ அந்த ஞானமே அஞ்ஞானத்தை நிவர்த்தி செய்வதாம் என விசேஷித்தலின். இந்திரிய ஜன்னிய ஞானங்கட்கு அவ்வாருந்தன்மை இருத்தலின். இவ்வாறு சப்தத்தால் உண்டாகின்ற பிரம்ம ஞானமும் சர்வத்திற்கும் உபாதானமாயுள்ள தனது விஷயமாகிய பிரம மத்தின் சம்பந்தமுடையதாகியே உண்டாகின்றது ஆகலின் அதற்கு அஞ்ஞானத்தை நிவர்த்திக்கும் தன்மையும் அஞ்ஞானம் நீங்கிய வழி அதனை மூலமாகவுடைய பேதம் நசித்ததால் அபரோக்ஷத் தன்மையும் நன்கு பொருந்தும்.

அற்றேல் இவ்வாறு அத்தியயனத்தால் கிரகிக்கப்பட்ட வேதாந்தங்களால் உண்டான பிரம்ம ஞானத்தாலும் மூலாஞ் ஞானத்தின் நிவர்த்தியால் அபரோக்ஷத் தன்மை ஏன் உண்டாகிறதில்லை. அதன் சத்தையின் நிச்சய வடிவத் தன்மை இன்மையால் அஞ்ஞானத்தை நிவர்த்திக்கும் தன்மை இன்ரும் என்று சொல்லற்க. அவ்வாருயினும் சிரவணம் செய்தவனுக்குச் சந்தேகமற்ற சாப்த ஞானத்தால் அதன் நிவர்த்தி உண்டாவதால் மனனுதிகட்கு வீண் தன்மை அடைவுறுமெனின்.

அற்றன்று சிரவணத்திஞல் சந்தேகமற்ற சாப்த ஞான மூளதாயினும் சித்த விக்ஷேபதோஷத்தால் தடையுண்டா தலின் அஞ்ஞானத்தின் நிவர்த்தி இன்மையால். அத் தடையை நிவர்த்தி செய்வதில் மனன நிதித்தியாசனங்களின் நியம விதிகளின் அர்த்த அனுஷ்டானத்திற்கு பயனுடைத் தாந்தன்மை இருத்தலானும். ஜன்மாந்தரத்தில் மனனுதி யின் அனுஷ்டானத்தால் சித்தவிக்ஷேபம் நீங்கியவனுக்கு உபதேச மாத்திரத்தால் பிரம்மத்தின் அபரோக்ஷத் தன்மை அங்கீகரிக்கப்படுவதாலும் எனக் கூறுகின்றனர்.

# 60. அஞ்ஞானத்தின் நிவர்த்தக விசாரம்

சங்கை

இவ்வாருயினும் (விக்ஷேபதோஷ நிவர்த்தியின் பொருட்டு மனனுதிகளை அபேக்ஷிக்கினும்) நிதித்தியாசனம் செய்தவனுக்கு வேதாந்த ஜன்னிய பிர்ம்ம ஞானத்தால் போன்று கடாதி ஞானத்தாலும் பிரம்மத்தின் அஞ்ஞான நிவர்த்தி ஏன் உண்டாவதில்லை. அதற்கு பிரம்மம் விஷயமின்மையின் அதனுல் பிரம்மத்தின் அஞ்ஞான நிவர்த்தி இன்ரும் என்று சொல்லற்க. கடம் இருக்கின்றது என்பதாதிபுத்திவிருத்திக்குச் சத்ரூப பிரம்ம விஷயகத் தன்மையை அங்கீகரித்தலின். ஆண்டு கடாதி ஆகாரவிருத்தியால் அதன் அஞ்ஞானம் நிவர்த்தியாகுங்கால் சுயமாக விளங்குதலினுலேயே அதன வச்சின்ன சைதன்னியம் இருக்கின்றது. என விளங்குகின்றது. அதற்கு கடாதி ஆகாரவிருத்தி விஷயத் தன்மை இன்ரும் என்று சொல்லற்க. அஃதிலதேல் கடவிஷயகம் ஞானம் அதன் அவச்சின்ன சைதன்னிய விஷயகம் அஞ்ஞானம் என இவ்வாருனபின்ன விஷயக ஞானத்தால் அதன் அஞ்ஞான நிவர்த்தி பொருந்தாமையின். ஜடத்தில் ஆவரண வியாபாரமின்மையால் கடத்திற்கு அஞ்ஞான விஷயத் தன்மை யின்மையின்.

கடவிருத்திக்கு அதன வச்சின்ன சைதன்னிய விஷயகத் தன்மை இருப்பினும் அகண்டானந்த ஆகாரத் தன்மையின் மையால் அதனுல் மூலாஞ்ஞானத்தின் நிவர்த்தி யின்ரும் என்று சொல்லற்க. வேதாந்த ஜன்னிய சாக்ஷாத்காரத்தின் கண்ணும் அஃதின்மையின், ஆண்டு அகண்டத் தன்மை யாவது ஆனந்தத் தன்மையாவது விசேஷணமாய் யாதொன்று மின்ரும். வேதாந்தங்கட்கு சம்சர்க்க அகோசர பிரமையை உண்டுபண்ணுந் தன்மை வடிவ அகண்டார்த்தத் தன்மைக்குக் குறைவு வருதலின். வேதாந்த ஜன்னிய ஞானத்தினுலேயே அதன் நிவர்த்தி நியமமாம் என்று சொல்லற்க. மூலாஞ் ஞானத்தை நிவர்த்தி செய்வதில் பிரசித்தமான சமான விஷயகத் தன்மை சத்தையின் நிச்சய வடிவத் தன்மை பிரதிபந்தம் பண்ணப்படாத் தன்மை வடிவ காரணங்கள் வேறு ஞானத்திலும் (நிதித்தியாசன பரிபாக

காலத்தில் நேத்திராதி ஜன்ய கடாதி ஞானத்திலும்) இருக்கும்போது அவ்வாறு நியமித்தற்குக் கூடாமையின்.

கடாதியாகார விருத்தி விஷயமாகிய அவச்சின்ன சைதன்னியத்திற்கும் கற்பிதத் தன்மை யிருத்தலால். மூலாஞ்ஞானத்தின் விஷயமாய். சத்தியமாய் அனவச்சின்னமாய். யாதொரு சைதன்யமுண்டோ அதனை விஷயம் செய்யும் தன்மை இன்மையின் கடாதி விருத்திகட்கு நிவர்த்திக்கத் தக்கதாகக் கருதப்பட்டுள்ள அஞ்ஞானத்தின் சமான விஷயகத் தன்மை வடிவ பிரசித்தமான காரணமே யின்ரும் என்று சொல்லற்க.

ஆண்டு அவச்சேதக அம்சத்திற்குக் கற்பிதத் தன்மை இருப்பினும் அவச்சேத்திய அம்சத்திற்கு அகற்பிதமாய் மூலாஞ்ஞானத்தின் விஷயமாய் உள்ள சைதன்னிய வடிவத் தன்மை இருத்தலின். அது கற்பிதமாயின் கடம்போன்று ஜடமாதலால் அவஸ்தாஞ் ஞானத்தைக் குறித்தும் விஷயத் தன்மை பொருந்தாமையால் அவஸ்தாஞ் ஞானத்திற்கு மூலாஞ்ஞானத்தின் விஷயமாகிய அகற்பித சைதன்னிய விஷயகத் தன்மை கூறத்தக்கதாதலின். அவ்வவஸ்தா அஞ்ஞானத்தினை நிவர்த்திக்கின்ற கடாதி ஞானத்திற்கும் பிரம்ம விஷயகத் தன்மை அவசியம் இருத்தலால். இந்தப் பக்ஷத்திலும் அதனுல் மூலாஞ்ஞானத்தினி வர்த்தியின் ஆபத்தியை நீக்க முடியாதாதலின்.

சமாதானம்

ஈண்டு ஆச்சாரியர் கூறுவதாவது சைதன்னியம் நேத்திராதி ஜன்ய விருத்திக்கு விஷயமன்ரும். "சைதன்னியத்தின் வடிவம் நேத்திரத்திற்கு விஷயமாக நிற்கின்றதில்லை நேத்திரத்தால் இவ்வான்மாவை ஒருவனும் பார்க்கின்றதில்லை. பரமேஸ்வரன் இந்திரியங்களைப் பகிர்முகமாகச் சிருஷ்டித்தார் ஆதலால் வெளிவிஷயங்களையே எல்லோரும் பார்க்கின்றனர் அந்தரான்மாவை பார்க்கின்றதில்லை" என்பது முதலிய சுருதியால் அதற்கு பரமாணு முதலியவற்றிற்குப் போன்று நேத்திராதியின் அயோக்கியத் தன்மையை உபதேசித்தலானும், ஔப நிடதம் என்னும் விசேஷணத்தினலும் என்க.

சர்வஞானங்கட்கும் விஷயமாய் பிரம்மத்தின் வடிவம் நிலை பெற்றுள்ளது என்பது முதலிய வார்த்திக வசனத்திற்கு விரோதமாம் என்று சொல்லற்க. அதற்கு கடாதியாகார விருத்தி உண்டாகும்போது ஆவரணத்தின் அபிபவத்தால் சுவயம் பிரகாச சத்ரூப பிரம்மம் கடம் இருக்கின்றது என கடம் போன்று வியவகார யோக்கியமாகின்றது ஆதலின் உபசாரத்தால் கடாதி விருத்தியின் விஷயத் தன்மையில் தாத்பரியமாதலின்.

அவதாரிகை

அற்றேல் கடாதி விருத்திக்கு கடாதியவச்சின்ன சைதன்னிய விஷயகத் தன்மை இன்றேல் சைதன்னியத்தை மறைக்கின்ற அஞ்ஞானத்தினை அபிபவம் செய்யுந் தன்மையும் சம்பவியாது ஞான அஞ்ஞானங்கட்கு சமான விஷயகத் தன்மை இன்மையினெனின். அதற்குக் கூறுகின்றார்.

ஆவரணத்தை அபிபவம் செய்யும் தன்மையும் கடாதி ஞானத்திற்கு கடாதி விஷயகத் தன்மையினாலேயே பொருத்தமாம், கடாதிக்கும் அஞ்ஞானத்தின் விஷயத் தன்மை இருத்தலால். கடத்தை அறிகின்றிலேன். கட ஞானத்தால் கட அஞ்ஞானம் நாசமாயிற்று. என அவஸ்தாஞ் ஞானத் திற்கு கடாதி விஷயகத் தன்மை அனுபவிக்கப் படுதலின்.

ஆண்டு ஆவரணத்தின் வியாபாரம் இன்மையால் அஞ் ஞானத்தின் அங்கீகாரம் பொருத்தமன்றும். அதனை விளக்கு கின்ற அதனவச்சின்ன சைதன்னியத்தின் ஆவரணத்தா லேயே அதன் அப்பிரகாசம் பொருந்துதலின். என்று சொல்லற்க. கூறிய பிரகாரத்தால் ஜடத்திற்கு சாக்ஷாத் அஞ்ஞான விஷயத் தன்மை நிஷேதிக்கப்படினும் ஜட அவச் சின்ன சைதன்னியப் பிரகாசத்திற்கு அஞ்ஞானத்தால் ஆவரணமாம். அவ்வாவரணத்தால் நித்திய சைதன்னியப் பிரகாசத்தின் சம்பந்தம் உளதேனும் ஜடத்திற்கு இல்லை விளங்கவில்லை என்பது முதலிய வியவகார யோக்கியத் தன்மையாம். இவ்விதம் பரம்பரையாக அஞ்ஞான விஷயத் தன்மையை அங்கீகரித்தலின். சாக்ஷாத்தாகவாவது பரம் பரையாகவாவது எது அஞ்ஞானத்தால் மறைக்கத்தக்க தாமோ அதன் விஷயகத் தன்மையே ஞானத்தின் கண்

அவ்வஞ்ஞான நிவர்த்தகத் தன்மையாகிய காரண வடிவத்தில் பிரவேசிக்கப் படுதலால்.

இவ்வாறு ஞானுஞ்ஞானங்கட்கு சர்வாம்சத்தில் சமான விஷயகத் தன்மையை அங்கீகரியாவிடின் கடாதிகட்கும் கூறிய பிரகாரத்தால் மூலாஞ்ஞான விஷயகத் தன்மையும் உளதாதலின் கடாதியின் சாக்ஷாத்காரத்தாலேயே மூலாஞ்ஞானத்தின் நிவர்த்தி உண்டாதல் வேண்டும் என்று சொல்லற்க. பயனின் வலிமையால் அவ்வஞ்ஞான காரியத்தினும் வேருன அதன் விஷய வீஷயகத் தன்மையினையே அதனை நிவர்த்திக்கும் தன்மையில் காரணமாகக் கற்பித்தலின்.

## அவதாரிகை

**ஜடமாத்திரத்தைக் கோசரிக்கும் விருத்தியிஞல் அவச்சின்ன சைதன்னியத்தினை மறைக்கின்ற அஞ்ஞானத்தின் நிவர்த்தி எப்படிக் கூடும். பின்ன விஷயகத் தன்மை இருத்தலால். என்று சங்கை உண்டாக அவஸ்தாஞ்ஞானம் அவச்சின்ன சைதன்னியத்தை மறைத்தல் வாயிலாக சடத்தையும் மறைக்கின்றது ஆதலால் சடமாத்திரத்தைக் கோசரிக்கின்ற விருத்தியினுலும் அவஸ்தாஞ்ஞானத்தின் நிவர்த்தி சம்பவிக்கின்றது என பிரதிபாதிக்கப் பட்டது. இப்போது அச்சங்கைக்கே வேறு பிரகாரத்தால் சமாதானங் கூறுகின்ருர்.**

அல்லது மூலாஞ்ஞானத்திற்கு ஜடம் விஷயமேயன்ரும் அவச்சின்ன சைதன்னியத்தை ஆசரியித்துள்ள அவஸ்தாஞ்ஞானங்கட்கோ அவ்வச்சடமே விஷயமாம். சடத்திற்கு ஆவிருதத் தன்மை இன்றேல் நேத்திர ஜன்னிய விருத்தியால் சந்தனக் கட்டையால் வளைபட்ட சைதன்னியம் அபிவியத்தியாகும்போது அதன் சம்பந்தியாகிய கந்தத்திற்கும் அபரோக்ஷத் தன்மை அடைவுறுதலின் அச்சைதன்னியத்தின் அபிவியக்தியில்லையாயின் சந்தனக் கட்டைக்கும் அதன் உருவத்திற்கும் அப்பிரகாசம் பிராப்த்தியாம்.

நேத்திர ஜன்னிய விருத்தியால் சந்தனக் கட்டை அதன் உருவ அவச்சின்ன சைதன்னியங்கட்கு அபிவியக்த்தி உண்டாவதால் அவைகட்குப் பிரகாசமாம். கந்தாகார விருத்தியின்மையால் கந்தாவச்சின்ன சைதன்னியத்திற்கு அபிவி

யக்தி யின்றுதலின் அதற்கு அப்பிரகாசமாம். என்று சொல்லற்க.

சைதன்னியத்திற்கு இருமடங்காகப் பிரிந்திருத்தல் சம்பவியாமையால். தமது ஆசிரயத்தில் யாண்டும் வியாபித்திருக்கின்ற ஓர் திரவியத்திலுள்ள குணங்கட்குத் தனித்தனி ககனத்தின் அவச்சேதகத் தன்மை யின்மை போன்று சைதன்னிய அவச்சேதகத் தன்மையும் சம்பவியாமையின். அவைகட்கு தமது ஆசிரய திரவியா வச்சின்ன சைதன்னியத்திலேயே சுத்தியின் இதமம்சாவச்சின்ன சைதன்னியத்தினல் சுத்திரஜதம் போன்று பிரகாசிக்கப்படுந் தன்மை இருத்தலால், அதற்கு அபிவியக்தி உண்டாகுங்கால் கந்தத்திற்கும் அபரோக்ஷத் தன்மை அடைவுறும். அபிவியக்தி இன்றுகுங்கால் சந்தனக் கட்டை அதன் உருவங்கட்கும் அபரோக்ஷத் தன்மையின் அபாவம் அடைவுறும் ஆதலின், கந்தாகார விருத்தியில் சம்பந்தமுற்ற சைதன்னியத்திலேயே கந்தம் விளங்குகின்றது என்பது நியமமாம் என்று சொல்லற்க. பிரகாச சம்சர்க்கத்திற்கே பிரகாச சப்தத்தின் அர்த்தத் தன்மையாமாதலின். அதன் ஆகார விருத்தியில்லாதபோதும் அனுவிருத பிரகாச சம்சர்க்கம் இருக்குங்கால் அப்பிரகாசத் தன்மையைக் கற்பித்தல் விருத்தமாதலின். அபிவியக்தமாகிய கந்தோபாதான சைதன்னியத்திற்கு கந்தத்தின் அசம்சர்க்கத்தைக் கூறுதல் சம்பவியாமையின். ஆதலால் எங்ஙனம் சைத்திரனுக்கு கடாகார விருத்தி யுண்டாகும்போது அவனைக் குறித்து மறைக்கின்ற அஞ்ஞானத்திற்கே நிவர்த்தியாமாதலின் அவனுக்கே விஷயப் பிரகாசமாம். அன்னியனுக்கு இன்றும். அங்ஙனம் அவ்வவ் விஷயாகார விருத்தியால் அவ்வவ் விஷயத்தை மறைக்கின்ற அஞ்ஞானத்திற்கே நிவர்த்தியாமாகலின். வேறு விஷயத்திற்கு அபரோக்ஷத் தன்மை இன்றும். மறைக்கப்படாத அர்த்தத்திற்கே ஞானத்தின் அபேதத்தால் அபரோக்ஷத் தன்மையாம் என்று அங்கீகரித்திருத்தலின். என்க. பிரமாதாவின் பேதத்தினல் அவஸ்தாஞ்ஞானம் பேதமாவது போன்று விஷய பேதத்தினலும் ஒரே சைதன்னியத்தின்கண் அவஸ்தாஞ் ஞானத்தின் பேதம் கூறத்தக்கதாம் (அதாவது ஒரே விஷயத்தின் கண் சைத்திரமைத்திராதி பேதத்தால் எப்படி அநேக அஞ்ஞானம்

உளதோ அப்படி ஓர் சந்தனக் கட்டையால் அவச்சின்ன சைதன்னியத்தின் கண்ணும் கந்தாதி விஷய பேதத்தாலும் அநேக அஞ்ஞானம் உளதெனக் கூறத்தக்கதாம்) ஆதலின் அவஸ்தாஞ் ஞானங்கட்கு அவ்வச்சட விஷயகத் தன்மை யாம், ஆதலின் கடாதி விருத்திகட்கு அவஸ்தாஞ் ஞானத் தின் நிவர்த்தகத் தன்மையில் பொருந்தாமை யாதொன்று மின்றும் மூலாஞ்ஞான நிவர்த்தகத் தன்மையின் அடைவு மின்றும்.

இவ்வாருயினும் (கடாதி விருத்திகட்கு சைதன்னிய விஷயகத் தன்மை இன்ருயினும்) ஜீவ விஷயக அகமாகார விருத்திக்கு மூலாஞ்ஞான நிவர்த்தகத் தன்மையின் அடை வாம் என்று சொல்லற்க, அதற்கு சுயம் பிரகாசமான சித்தோடு கூடிய அசித்தம்ச மாத்திர விஷயகத் தன்மை யுண்மையின்.

அவதாரிகை

அற்றேல் யாதொரு நான் சொப்பனத்தில் ஸ்ரீ கிருஷ்ணனை அனுபவித்தேனே அந்த நான் ஜாக்கிரத்தில் அவனை ஸ்மரிக் கின்றேன் என்பது முதலிய பிரத்யபிஞ்ஞைக்கு சைதன்னிய விஷயகத் தன்மை அவசியம் கூறவேண்டும். அன்றேல் சிதான்மாவிற்கு நித்தியத் தன்மையும் சங்காதத்தின் விலக்ஷணத் தன்மையும் சித்திக்காதெனிற் கூறுகின்ருர்.

அவன் நான் என்னும் பிரத்ய பிஞ்ஞைக்கும் சுவயம் பிரகாச சைதன்னியத்தின்கண் அந்தக்கரண சம்பந்தத் தோடுகூட பூர்வாபரகால சம்பந்த மாத்திரம் விஷய மாதலால் சைதன்னிய விஷயகத் தன்மை யின்மையின் என்க,

அவதாரிகை

கடாதி விருத்திகட்கும் சைதன்னிய விஷயகத் தன்மை சமானமாயிருத்தலால் வேதாந்த ஜன்னிய ஞானத்திற்குப் போன்று மூலாஞ்ஞான நிவர்த்தகத் தன்மை அடைவுறும் என்னும் சங்கைக்கு கடாதி விருத்திகட்கு சைதன்னியத்தை விஷயம் செய்யுந் தன்மை வடிவ ஏதுவே யில்லாமையால் கூறிய அதிப்பிரசங்கமின்றும் என்று சமாதானம் கூறப் பட்டது. இப்போது அவைகட்கு சைதன்னிய விஷயகத்

தன்மையை அங்கீகரிக்கினும் கூறிய அதிப்பிரசங்கம் இன்ரு மெனக் கூறுகின்ருர்.

சிலரோ கடாதிகட்கு அவ்வவ் விஷயாவச்சின்ன சைதன்ய விஷயகத் தன்மையை யங்கீகரித்து சருவப் பிரமாணங்கட்கும் பயனெனப் பெயரிய சைதன்னிய விஷய கத் தன்மை யிருத்தலால் மோக்ஷ சாதனமாகிய பிரம்ம ஞானத்தின் கண் சர்வப் பிரமாணங்கட்கும் காரணத் தன்மை பிராப்த மாகுங்கால் வேதாந்தங்களையே நியமனம் செய்யு மிச்சையால் சிரவணம் செய்யத் தக்கது என்னும் வசனம் வேதாந்த விசாரமே செய்யத் தக்கது என்னும் இப்பொரு ளைக் கூறுகின்றது" என்னும் வார்த்திக வசனத்தால் சிரவணம் செய்யத்தக்கது என்னும் வாக்கியார்த்தமாகிய வேதாந்த நியம விதியை அனுசரித்து வேதாந்த ஜன்யமும் நியம அதிர்ஷ்டத்தோடு கூடியதும் ஆகிய பிரம்ம ஞானமே தடையற்றதாய், பிரம்மத்தின் அஞ்ஞான நிவர்த்தகமாம். ஆதலின் கடாதி ஞானத்தால் அதன் நிவர்த்தியின் பிராப்தி இன்ருமெனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

தத்துவமசி முதலிய வாக்கியத்தால் உண்டாகிய ஞானம் மோக்ஷ சாதனம் என்னும் நாரதரது வசனத்தாலும் மகா வாக்கிய ஜன்ய ஜீவப் பிரம்மங்களின் அபேத விஷயக ஞானம் மோஷசாதனம் என்னும் பகவத் பாதரது வசனத்தா லும் மூலாஞ்ஞானம் ஜீவப் பிரம்மங்களின் அபேதத்தை மறைத்தலானும் ஜீவப் பிரமங்களின் அபேத விஷயக ஞானமே மோக்ஷ சாதனமாம். ஆதலின் கூறிய அதிப் பிரசங்கமின்ருமென. வேறு சமாதானத்தைக் கூறு கின்ருர்.

சில நூலாசிரியரோ தத்துவமசி முதலிய வாக்கியத்தா லுண்டானதும் ஜீவப் பிரமங்களின் அபேதத்தை விஷயம் செய்வதுமாகிய ஞானமே மூலாஞ் ஞானத்தை நிவர்த்தி செய்வதாம். மூலாஞ் ஞானத்திற்கு அதன் அபேத விஷயகத் தன்மை இருத்தலின். ஆதலால் சைதன்னியத்தின் சொரூப மாத்திரத்தை கோசரிக்கின்ற கடாதி ஞானத்தால் அதன் நிவர்த்தியின் பிராப்தியின்ரும்.

தத்துவத்தை அறிவிக்கின்ற பிரமாணத்தினுல் போதிக்கப்படுகின்ற அபேதம் சைதன்னியத்தினும் வேருயின் துவைதப்பிராப்தியாம். சைதன்னிய மாத்திரம் அபேதமெனின். அதனை விஷயஞ் செய்கின்ற கடாதி ஞானமும், அபேத விஷயகமாம். என்று சொல்லற்க.

அபேத ஞானம் என விடயத்தால் விசேஷத்தைக் கூறுகின்றிலேம் மற்ருே தத்துவம்பதங்களின் வாச்சியார்த்தங்களாகிய இருதருமியின் ஸ்மிருதி முதலிய காரண விசேஷத்தின் அதீனமான சொரூப சம்பந்த விசேஷத்தால் சைதன்னிய விஷயகத் தன்மையே அதன் அபேத ஞானத் தன்மையாம். எப்படி விசேஷணம் விசேஷியம் அவற்றின் சம்பந்தம் இவைகளை விஷயம் செய்யுந் தன்மை சமானமாயிருப்பினும் விசிஷ்ட ஞானத்திற்கு விசேஷணஞானுதி காரணவிசேஷத்தின் அதீனமான சொரூப சம்பந்த விசேஷத்தால் அம்மூன்றையும் விஷயம் செய்யுந் தன்மையே சமூகாலம்பன ஞானத்தினும். வேறுபட்ட விசிட்ட ஞானத் தன்மையோ எப்படித் தாணுத் தன்மை புருஷத் தன்மையினை யுடையது என்னும் ஆகாரிய ஞானத்தினும் வேறுபட்ட சம்சயத் தன்மையோ விஷயத்தால் விசேஷத்தை நிருபிக்க முடியாமையின். அப்படி கடாதியின் கண்ணும் அது. இக்குடம் என்பது முதலிய ஞானத்திற்கு சொரூப சம்பந்த விசேஷத்தால் கடாதி விஷயகத் தன்மையே கேவல கடசப்தாதியினுல் உண்டான ஞானத்தினும் வேறுபட்ட அதன் அபேத ஞானத் தன்மையாம். வேருக அபேதத்தை நிருபிக்க முடியாமையின்.

அதிகரண பிரதியோகி முதலியவற்ருேடு சொரூப சம்பந்தமுடைய அபாவம் சாதிரிசியம் முதலியவைகட்கு அதிகரணத்தோடு ஆதார ஆதேய பாவ வடிவ சொரூப சம்பந்த விசேஷமாம். பிரதியோகியோடு* பிரதியோகி அநுயோகி பாவ வடிவ சொரூப சம்பந்த விசேஷமாம் என்பது முதலிய பிரகாரத்தால் சொரூப சம்பந்தத்தில் அவாந்தர விசேஷத்தைக் கற்பித்தல் போன்று. விருத்திகட்கு விஷயத்தின் கண்ணும் சம்யோக தாதாத்மிய சம்பந்தங்கட்கு அதிவியாப்தி வருதலால் விஷயங்களோடு விஷய விஷயித் தன்மை வடிவ சொரூப சம்பந்தமுடைய விருத்திகட்கு நிர்விசேஷ சைதன்

* குறிப்பு :—நிருப்பிய நிருபக பாவ வடிவ சம்பந்தமாம்.

னிய வடிவ விஷயத்தில் காரண விசேஷத்தினுல் ஆதானம் சம்பவியாதபோது பிரசித்தமாகிய விருத்திஞான வடிவ சொரூபசம்பந்தத்திலேயே அவாந்தர விசேஷத்தைக் கற்பித்தலால் அபேத ஞானத் தன்மை முதலிய பரஸ்பர விலக்ஷணத் தன்மை நிர்வாகமாதலினுலும் என்க.

இவ்வாருகவே பிரம்ம ஞானத்திற்கு அபேதம் எனப் பெயரிய சொற்ப சம்சர்க்க விஷயகத் தன்மையை அங்கீகரியாமையின் வேதாந்தங்கட்கு அகண்டார்த்தத் தன்மையின் குறைவுமின்ருமெனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

வேதாந்த ஜன்ய ஞானத்திற்கும் மூலாஞ்ஞான நிவர்த்தகத் தன்மையை ஆக்ஷேபிக்கின்ருன்.

அற்றேல் கடாதி ஞானம் போன்று பிரம்ம ஞானத்திற்கும் மூலாஞ் ஞானத்தை நிவர்த்திக்கும் தன்மை பொருத்தமன்ரும். நிவர்த்தகத் தன்மையில் அதனேடு சேர்ந்து நிற்றலைச் சகியாமை வடிவ விரோதம் ஏது வாகலின். காரியத்திற்கு உபாதானத்தோடுகூட அத்தகைய விரோத மின்மையின் எனின்.

அற்றன்று காரிய காரணங்கட்கு வேறிடத்து அத்தகைய விரோதம் காணப்படாவிடினும் ஏகவிஷயக ஞானுஞ் ஞானங்கட்கு அத்தகைய விரோதம் ஈண்டு இருத்தலினுலும் காரிய காரணங்களாகிய அக்கினி சம்யோகத்திற்கும் படத்திற்கும் அத்தகைய விரோதத்தைக் காண்டலினுலும் என்க.

அக்னி சம்யோகத்தினுல் அவயவங்களின் விபாகப் பிரக்கிரியையால் அசமவாயி காரண சம்யோக நாசத்தினுலேயே படத்திற்கு நாசமாம் அக்னி சம்யோகத்தாலன்ரும் என்று சொல்லற்க. வெந்த வஸ்திரத்தின் கண்ணும் பூர்வ அவஸ்தையின் அனுவிருத்தியைக் காண்டலினுல், உலக்கையால் பொடி பண்ணப்பட்ட கடம் போன்று அவயவ விபாகத்தைக் காணுமையின். ஆண்டு அவயவ விபாகாதியைக் கற்பித்தல் அப்பிராமாணிக மாதலின்.

ஆண்டு தந்து கட்கும் தகனம் உண்டாவதால் சமவாயி காரணத்தின் நாசத்தால் படத்தின் நாசமாம் என்பதும் பொருத்தமன்று.

அம்சுதந்து முதலியவைகளோடுகூட ஒரே காலத்தில் படத்திற்கு தாகங் காணப்படுவதால் கிரமத்தை கற்பித்தல் பொருந்தாமையின். எந்த துவியணுகத்தின் கீழ் அவயவ நாசமின்ருே ஆண்டு அவயவத்தின் கண் அக்கினி சம்யோகத்தாலேயே நாசங் கூறத்தக்கதாதலின்.

## 61. பிரம்மாகார விருத்தியின் விநாசக விசாரம்

அற்றேல் அஃதவ்வாருகுக. (பிரம்ம ஞானமே அந்தக்கரணவாயிலாக தனது உபாதான அஞ்ஞானத்தை நாசம் செய்வதாகுக) அப்படியாயினும் காரியத்தோடுகூட அஞ்ஞானத்தை நாசஞ்செய்கின்ற இந்த பிரம்ம ஞானம் எப்படி நசிக்கும். நாசஞ் செய்கின்றதாய் வேருென்று மின்மையினெனின்.

எப்படி தேற்ருங் கொட்டைப் பொடி, ஜலத்தோடு சேர்ந்து முன்பு ஜலத்தோடு சேர்ந்துள்ள மட்பொடிகளின் பிரிவைச் செய்து தனது பிரிவையும் செய்து கொள்ளுகின்றதோ, அப்படி ஆன்மாவின்கண் அத்தியஸ்தமாயுள்ள பிரம்ம ஞானமும் முன்பு அத்தியஸ்தமாயுள்ள சர்வப் பிரபஞ்சத்தையும் நிவர்த்தி செய்து தன்னையும் நிவர்த்தி செய்து கொள்ளுகிறது என சிலர் கூறுகின்றனர். வேறுசிலரோ அன்னியத்தை நிவர்த்தித்து தானும் நிவர்த்தியாவதில் தகிக்கப்பட்ட இரும்பால் குடிக்கப்பட்ட ஜலதிருஷ்டாந்தத்தை உதாகரிக்கின்றனர்.

வேறு சிலரோ ஈண்டு துரும்பின் கூட்டத்தை எரித்த நெருப்பை உதாகரணமாகக் கூறுகின்றனர்.

அவதாரிகை

அற்றேல் நெருப்பு கட்டையையெரித்துதானே அணைந்துபோவதுபோல, பிரம்மஞானத்திலுலேயே பிரம்மஞானம் நாசமாம் என்பது பொருத்துமன்று. கடாதியின் நாசத்தில் பிரதியோகியாகிய கடாதியினும் வேருக உலக்கையால் அடித்தல் முதலிய வேறு காரணத்தைக் காண்டலால் துவம்சத்திற்கு பிரதியோகியின் வேருன காரண ஜன்யத்தன்மை நியமமாதலின் என்று வினவுகின்ருன்.

துவம்சத்திற்குப் பிரதியோகியின் வேருன காரண ஜன்னியத்தன்மை நியமமாம் என்று சொல்லற்க.

அநுகூலதருக்க மின்மையினலும் விறகின்றிய நெருப்பின் நாசத்தில் வியபிசார முண்டாதலினலும் என்க.

சங்கை

துவம்சத்திற்கு பிரதியோகி மாத்திர ஜன்னியத்தன்மையை யுடன்படின் அதிப்பிரசங்கம் வருதலால் வேறு காரணம் அவசியமாய்க் கூறவேண்டும். விறகின்றிய நெருப்பு முதலியவற்றின் துவம்சத்திலும் காலம் அதிர்ஷ்டம் ஈசுரனதிச்சை முதலிய வேறு காரணங்களிருக்கின்றன வெனின்.

சமாதானம்

அதிப்பிரசங்கத்தை யறியாமையின்

சங்கை

கடாதிதுவம்சத்திற்கும் வேறு காரணத்தை அபேக்ஷியாத்தன்மையாம் என்பது அதிப்பிரசங்கமாமெனின்.

சமாதானம்

துவம்ச மாத்திரத்தில் வேறு காரணத்தை யபேக்ஷியாத் தன்மையைக் கூருமையின்.

கடத்துவம்சத் திருஷ்டாந்தத்தால் பிரம்ம ஞானத்துவம் சத்திற்கு வேறு காரணத்தின் அபேக்ஷையை சாதித்தலும் கூடாதாம்.

அத்திருஷ்டாந்தத்தால் உலக்கையினடியை யபேக்ஷித்தலையும் சாதித்தல் நேரு மாதலின்.

சங்கை

ஞானத்துவம்சத்தின் சமத்தன்மையால் கடஞானதித் துவம்சத்திற்கும் வேறு காரணத்தை அபேக்ஷியாமைப் பிராப்தியாமென்பது அதிப்பிரசங்க மாமெனின்

சமாதானம்

விறகோடு கூடிய நெருப்பின் நாசத்திற்கு நீர் தெளித்தல் முதலிய திருஷ்ட காரணத்தினபேக்ஷை யிருப்பினும் விறகின்றிய நெருப்பின் விநாசத்திற்கு அதனபேக்ஷையின்மை போன்றும் சாக்கிர ஞானத்துவம் சத்திற்கு விரோதி

யாகிய வேறு விசேஷ குணத்தின பேக்ஷையிருப்பினும் சுழுத்திக்குப் பூர்வ ஞானத்துவம்சத்திற்கு அதனபேக்ஷையின்மை போன்றும் மூலாஞானத்தை நிவர்த்தி செய்யாத ஞானத்துவம்சத்திற்கு வேறு காரணத்தின் அபேக்ஷையிருப்பினும் அதனை நிவர்த்தி செய்யும் ஞானத்துவம்சத்திற்கு அதனபேக்ஷையின்மை பொருந்துதலின் என்க.

சங்கை

வேறு காரணத்தை யபேக்ஷியாதாயின் தனது உத்பத்தியின் உத்தரக்ஷணத்திலேயே நாசமுண்டாம் என்பது அதிப்பிரசங்கமாமெனின்.

சமாதானம்

அஃதிஷ்டமாதலின் அதன் உற்பத்தியின் உத்தரக்ஷணத்திலேயே பிரம்மத்தின் கண் அத்தியஸ்தமான சர்வப் பிரபஞ்சத்திற்கும் நாசமுண்டாவதால் அதனுளடங்கிய அதற்கும் அப்போதே நாசத்தை அங்கீகரித்தலினாலும் விறகின்றிய நெருப்பின் விநாச திருஷ்டாந்தத்தால் பிரம்ம ஞானத்துவம்சத்திற்கும் காலம் அதிர்ஷ்டம் ஈஸ்வரனது இச்சை முதலிய வேறு காரண ஜன்னியத் தன்மையையுடன் படினும் விரோதமின்மையினாலும் என்க.

அவதாரிகை

அற்றேல் முதல் கணத்தில் பிரம்ம ஞானத்தினுத்பத்தி இரண்டாவது க்ஷணத்தில் காரியத்தோடுகூட அஞ்ஞானத்தின் நிவர்த்தி மூன்ருவது க்ஷணத்தில் பிரம்மஞானத்தின் நிவர்த்தியெனக் கிரமம் உடன்படும்போது பிரம்மஞான நாசத்திற்குப் பூருவக்ஷணத்தில் காலம் அதிர்ஷ்டம் முதலிய வையின்மையால் அவைகட்குப் பிரம்மஞான நாசத்தின் ஏதுத்தன்மையையுடன்படின் விரோதமின்மை எவ்வாருமெனின் அதற்குக் கூறுகின்ருர்.

சர்வப்பிரபஞ்சத்தின் நிவர்த்தியின் பின்பு ஏகசேஷமாகிய பிரம்மஞானத்திற்கு நிவர்த்தியாமென அங்கீகரியாமையின். ஒரே காலத்தில் சருவத்திற்கும் நாசமுண்டாகும் போது பூர்வக்ஷணத்தில் சித்து அவித்தைகளின் சம்பந்த வடிவ அல்லது வேறு திரவிய வடிவ காலத்திற்கும் ஈஸ்வர

னது பிரசாதவடிவ அல்லது அந்தக்கரணத்தின் குண விசேஷவடிவ அதிர்ஷ்டத்திற்கும் மற்றவைகட்கும் இருப்புண் மையால் விரோதமின்றென்க.

ஆண்டு ஞானத்தினும் வேறான காரணத்தை யபேக்ஷிக் கின் பிரம்ம ஞானத்திற்கு அமித்தியாத்தன்மைப் பிராப்தி யாம், ஞானமாத்திரநிவர்த்தியத்தன்மை மித்தியாத்தன்மை யென அங்கீகரித்திருத்தலின். என்று சொல்லற்க.

ஞானத்தோடு கூடாத சாமக்கிரியால் நிவர்த்திக்கத் தகாததாய் ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்கது அதன் பொரு ளாதலின் என்க.

அவதாரிகை

காரிய மாத்திரத்தில் காலம் அதிர்ஷ்டம் முதலியவை கட்கு காரணத் தன்மையை யங்கீகரித்து. பிரமஞானத்தின் துவம்சத்திலும் காலம் அதிர்ஷ்டம் முதலியவைகட்குக் காரணத் தன்மையையங்கீகரிக்கின் மூலாஞ்ஞானத்தின்துவம் சவடிவ மோக்ஷத்தின் கண்ணும் காலாதி கட்குக் காரணத் தன்மையாம். காரியத் தன்மை சமமாதலால் இவ்வாறாகவே மோக்ஷத்தின் பொருட்டு வேறு வழியில்லை என்னும் சுருதி க்கு விரோதமாமெனின் அதற்குக் கூறுகின்றார்.

வேறுவழியில்லை" என்னும் சுருதிக்கும் ஆண்டேதாற் பரிய மாதலின் ஆதலால் துரும்பின் கூட்டத்தை எரித்த நெருப்பின் நியாயம் பொருத்தமேயாமென்க.

அவதாரிகை

விருத்திவடிவ பிரம்மஞானத்திற்கு அவித்தையாதியின் நாசகத்தன்மை போன்றே தனது நாசகத் தன்மையுமுளது என்று கூறப்பட்டது இப்போது விருத்தி வடிவ பிரம்ம ஞானத்திற்கு அவித்தையாதியின் நாசகத்தன்மையாவது தனதுநாசகத் தன்மையாவது. இன்றும். மற்றோ அவ்விருத்தியி லாரூடமான சைதன்னியமே அவ்விருத்தியோடு கூட எல்லா வற்றையும் நாசஞ் செய்வதாம் என்னும் மதத்தைக் கூறுகின்றார்.

சில ஆசிரியரோ விருத்திவடிவப்பிரம்மஞானம் அஞ்ஞானத் தையும் அதன் காரியப் பிரபஞ்சத்தையும் நாசஞ்செய்வதின்

ரும். அஞ்ஞானத்திற்கு பிரகாசத்தால் நீங்குந்தன்மை நியமமாதலின். சடவடிவவிருத்தியால் நீங்குந்தன்மை பொருந்தாமையின், மற்ரே அவ்விருத்தியில் ஆரூடமான சைதன்னியப் பிரகாசமே அதனை நிவர்த்தி செய்வதாம்.

அவதாரிகை

அற்றேல் சைதன்னியத்திற்கு அஞ்ஞானுதியின் சாதகத்தன்மையுண்மையால் அதனை நாசஞ் செய்யுந் தன்மை எவ்வாருமெனின் அதற்குக் கூறுகின்ருர். சொருபத்தால் அச்சைதன்னியம் அஞ்ஞானுதிகட்கு சாக்ஷியாதலால் அதனை நாசஞ் செய்யுந் தன்மை யின்றேனும் அகண்டாகார விருத்தியில் ஆரூடமான அச்சைதன்னியத்திற்கு அதனை நாசஞ் செய்யுஞ் தன்மை பொருந்துதலின்.

திருணுதியை விளக்குகின்ற சூரியப் பிரகாசம் சூரியகாந்தக்கல்லில் ஆரூடமாகி திருணத்தைத் தகிக்கும். அந்த நியாயத்தை அதன் கண் பொருத்துக என்று பெரியோர்கள் கூறியிருத்தலின்.

இவ்வாருகவே எப்படி சொற்ப காஷ்டத்தைப் பற்றிக் கிராமம் நகரம் முதலியவற்றை தகிக்கின்றதாகி அக்கினி அந்த காஷ்டத்தையும் தகிக்கின்றதே யாமோ அப்படி, சரம விருத்தியை யாசிரயித்து சர்வப்பிரபஞ்சத்தையும் நாசஞ் செய்கின்றதாய் அகண்டசைதன்னியப் பிரகாசம் அதனை நிவர்த்தி செய்வதிலும் சமர்த்தமாகின்றது. ஆதலால் அதன் நாசத்தில் பொருந்தாமையாதொன்று மின்ரும். எனக் கூறுகின்றனர்.

அவதாரிகை

அஞ்ஞானத்தின் நாசமே பிரம்மஞான நாசத்தின் ஏதுவாமென்னும் மதத்தைத் தரிசிப்பிக்கின்ருர் - வேறுசிலரோ, பிரம்மஞானம் அஞ்ஞானத்தினையே நாசம் செய்வதாம் ஞானுஞ்ஞானங்கட்கே சாக்ஷாத்விரோதமாதலின். பிரபஞ்சத்திற்கோ உபாதான நாசத்தால் நாசமாம் ஆதலால் பிரபஞ்சத்தினுள்ளடங்கிய பிரமஞானத்திற்கும் அதனலேயே நாசமாம் பிரபஞ்சத்திற்கு ஞானநிவர்த்தியத்தன்மையையுடன் படாவிடின் மித்தியாத்தன்லமபொருந்தாது என்னற்க பிர

பஞ்ச நிவர்த்திக்கு சாக்ஷாத்ஞான ஜன்யத்தன்மையின்றே னும் ஞானஜன்ய அஞ்ஞான நாச ஜன்யத்தன்மை உண்மை யால். சாக்ஷாத்தாகவாவது பரம்பரையாகவாவது ஞானமாத் திர நிவர்த்தியத் தன்மை மித்தியாத்தன்மையாம் என அங்கீ கரித்தலின். இவ்வாருகவே தத்துவசாக்ஷாத்கார முதயமான பின்பும் சீவன் முத்தனுக்கு தேகாதி பிரதீதி பொருந்துகின் றது.

அவதாரிகை

அற்றேல் தத்துவ சாக்ஷாத் காரத்தால் அஞ்ஞானம் நாச மாகுங்கால் உபாதான மின்மையால் தேகாதிகட்கு இருப்பு சம்பவியாதபோது வித்தையுதயமாயின் பின் தேகாதியின் பிர தீதி எவ்வாறு பொருந்து மெனின் அதற்குக் கூறுகின்ருர்.

பிராரப்தகர்மமாகிய பிரதிபந்தத்தால் தத்துவ சாக்ஷாத் கார முதயமான பின்னும் பிராரப்தகரும அதன் காரிய தேகா திப் பிரதீதி தொடர்ந்திருத்தலால் உபாதான அவித்தையின் லேசத்தொடர்ச்சி பொருந்துதலின்,

அவதாரிகை

பூர்வமதத்தில் சீவன் முத்தியின் அசித்தியைக் கூறுகின் ருர்.

அஞ்ஞானம் போன்று பிரபஞ்சத்திற்கும் சாக்ஷாத் பிரம்ம ஞான நிவர்த்தித் தன்மையையுடன்படின் இஃது பொருந் தாது விரோதியாகிய பிரம்மசாக்ஷாத் கார மிருக்குங்கால் பிராரப்தகர்மத்திற்கு சுயமாகவே யிருப்பு சம்பவியாமையால் அவித்தை லேசத்தின் நிவர்த்தியைக் குறித்து பிரதிபந்தகத் தன்மை பொருந்தாமையின் எனக்கூறுகின்றனர்.

வேதந்த சித்தாந்த லேச சங்கிரகத்தில்
மூன்ருவது பரிச்சேதம் முற்றிற்று.

# வேதாந்த சித்தாந்த லேச சங்கிரகம்

## நான்காவது பரிச்சேதம்



### 62. அவித்தையின் லேச விசாரம்

அவதாரிகை

மூன்ருவது பரிச்சேதத்தில் மோக்ஷ சாதனமாகிய பிரஹ்ம ஞானம் சாதனத்தோடுகூட நிருபிக்கப்பட்டது. இப்போது அதன்பயன் வடிவ மோக்ஷம் நிருபிக்கப்படுகின்றது.

எந்த அவித்தையின் லேசாநுவிருத்தியால் ஜீவன்முக்தி யுண்டாமோ அந்த அவித்தையின் லேசமென்பது யாது.

ஆவரண விக்ஷேப சக்தியோடு கூடிய மூலாவித்தையின் பிராரப்தகர்ம வர்த்தமான தேகாதியின் அநுவிருத்திக்கு ஏதுவாகிய விக்ஷேப சக்தி அம்சம் அவித்தையின் லேசமா மெனச் சிலர் கூறுகின்றனர்.

வேறு சிலரோ கழுவிய பெருங்காயம் தங்கியபாத்திரத் தில் தொடர்ந்துள்ள பெருங்காய வாசனை போன்று அவித்தை யின் சம்ஸ்காரமாமெனக் கூறுகின்றனர்.

வெந்த வஸ்திர நியாயத்தால் தொடர்ந்துள்ள மூலாவித் தையே எனச் சிலர் கூறுகின்றனர்.

சர்வஞ்ஞான்ம ஆசிரியரோ விரோதியாகிய சாக்ஷாத் கார முதயமாகும்போது லேசத்தாலும் அவித்தையின் அநு விருத்தி சம்பவியாமையால் ஜீவன் முக்தியின்ரும்.

அவதாரிகை

அற்றேல் ஜீவன் முக்தியின்றேல் அவனுக்குப் பிராரப்த முள்ளவரை இருப்பாம் என்பது முதலிய ஜீவன் முக்தியை பிரதிபாதிக்கும் சாஸ்திரம் அப்பிரமாணமாகுமெனின் அதற் குக் கூறுகின்ருர்.

ஜீவன் முக்தியைக் கூறும் சாஸ்திரம் சிரவணாதி விதியின் அர்த்தவாத மாத்திரமாம் சாஸ்திரத்திற்குச் சீவன் முக்தியைப் பிரதிபாதித்தலின்கண் பிரயோஜனமின்மையின். ஆதலால் நிதித்தியாசனம் செய்தவனுக்கு பிரஹ்ம சாக்ஷாத்காரத்தின் உற்பத்தி மாத்திரத்தால் காரியத்தோடும் வாசனையோடுங்கூட அவித்தை நிவிர்த்தியாமெனவும் ஒரு பக்ஷத்தைக் கூறுகின்றனர்.

## 63. அவித்தை நிவர்த்தியின் சொரூப விசாரம்

இனி இவ்வவித்தையின் நிவர்த்தி யென்பது யாது. அதாவது ஆன்ம சொரூபமா அல்லது அதனினும் வேறு. முதற்பக்ஷம் சரியன்று. சாத்தியத்தன்மை பொருந்தாமையின் இரண்டாவது பக்ஷமும் சரியன்று. அஃது சத்தியமாயின் துவைதம் அடைவுறுதலின் அசத்தியமாயின் சாத்தியத்தன்மை பொருந்தாமையின் என்பது பொருள்.

### அவதாரிகை

அவற்றுள் அவித்தையின் நிவர்த்தி ஆன்ம சொரூபமாம் என்னும் பக்ஷத்தைச் சாதிக்கின்றார்.

அவித்தையின் நிவர்த்தி ஆன்ம சொரூபமேயாம் எனப் பிரஹ்ம சித்திக்காரர் கூறுகின்றனர். அஃது நித்திய சித்தமாவதால் ஞானம் வீணேயாம் என்று சொல்லற்க. ஞானமில்லையாயின் அனர்த்த ஏதுவான அவித்தையிருத்தலினால் அனர்த்தமுமிருக்குமாதலின் அனர்த்த நிவர்த்தியை உத்தேசித்து ஞானத்தைத் தேடுதல் பொருந்துதலினாலும் ※ எஃதிருப்பின் அடுத்தக்ஷணத்தில் எதற்கு இருப்போ எது இல்லையாயின் இன்மையோ அது அதனால் சாத்தியமாம் என்னும் லக்ஷனத்தை அநுசரித்து ஆன்ம சொருபமான அவித்தையின்

---

※ பிராயச்சித்தமிருக்குங்கால் அடுத்தக்ஷணத்தில் துக்கப்பிராகபாவத்தின் இருப்பாம் பிராயச்சித்தமில்லையாயின் துக்கமே உண்டாவதால் அடுத்தக்ஷணத்தில் துக்கப்பிராகபாவத்தின் அபாவமாம் இவ்வாறு துக்கப்பிராகபாவம் அனுதியாயினும் துக்கசாதன பாபத்துவம்சத்திற்போன்று பிராயச்சித்த சாததியத்தன்மை இவ் இலக்ஷணத்தால் சித்தித்தது.

நிவர்த்திக்கும் ஞான சாத்தியத்தன்மை பொருந்துதலினுலும் என்க.

கூறியலக்ஷணத்தைப் பிரகிருதத்தில் பொருத்துகின்ருர்.

ஞானமுளதாயின் அடுத்த க்ஷணத்தில் ஆன்மவடிவ அவித்தையின் நிவர்த்தியுளதாம். அஃதில்லையாயின் அதன் பிரதியோகி அவித்தைவடிவ அதனபாவமாம் எனக்கூறிய இலக்ஷணமிருத்தலின்.

அவதாரிகை

அவித்தையின் நிவர்த்தி ஆன்மாவினும் வேரும் என்னும் பக்ஷத்தை மதபேதத்தால் இரண்டுவிதமாகச் சாதிக்கின்ருர்.

அவித்தையின் நிவர்த்தி ஆன்மாவினும் வேறேயாம் அது சத்துமன்று. அத்துவிதத்திற்குக் குறைவு வருதலின் அசத்துமன்று. ஞான சாத்தியத்தன்மை பொருந்தாமையின் சத்த சத்துவடிவுமமன்று, விரோதமாதலின். அநிர்வாச்சியமு மன்று. உற்பத்தியினையுடைய அநிர்வாச்சியத்திற்கு அஞ் ஞான உபாதானத்தன்மை நியமமாதலால். முக்தியின்கண் ணும் அதன் உபாதான அஞ்ஞானத்தின் தொடர்ச்சியடை வுறுதலினுலும் ஞான நிவர்த்தியத்தன்மை யடைவுறுதலினு லும் என்க. ஆனுல் கூறியநான்கு பிரகாரத்தையும் கடந்த ஐந்தாவது பிரகாரமாமென ஆனந்த போதாசாரியர் கூறு கின்றனர்.

அவதாரிகை

அவித்தையின் நிவர்த்தி ஆன்மாவினும் வேறு என்னும் பக்ஷத்தில் மற்ருேர் மதத்தைத் தரிசிப்பிக்கின்ருர்.

அவித்தைபோன்று அதன் நிவர்த்தியும் அநிர்வாச்சியமே யாம் முக்தியில் அவித்தையின் நிவர்த்தி அநுவிருத்தியாயின் அதன் உபாதான அஞ்ஞானத்திற்கும் அநுவிருத்தி நியமமாத லால் மோக்ஷ மின்மை பிராப்தியாம் என்னற்க. அதன் (அவித்தையின் நிவர்த்தியின்) அநுவிருத்தியில் பிரமாண மின்மையின். உற்பத்திக்கு முதற்கண மாத்திரசம்பந்திபாவ விகாரத் தன்மைபோன்று நிவர்த்திக்கும் சரமக்ஷணமாத்திர சம்பந்திபாவ விகாரத்தன்மை பொருந்துதலின் என்க.

உற்பத்திக்கு க்ஷணிகபாவ விகாரத்தன்மையிற் போன்று நாசத்திற்கும் க்ஷணிகபாவ விகாரத்தன்மையில் பிரமாணம் சமமாமெனக் கூறுகின்ருர்.

இதனுலேயே அதாவது நிவர்த்திக்கும் க்ஷணிகத்தன்மை அங்கிகரித்தலினுலேயே எப்படி உற்பத்திக்கு முன்பும் பின்பும் உற்பத்தியாகும் உற்பன்னமாயிற்றென எதிர்கால இறந்தகாலத்தோடு வியவகரிக்கப்படுகின்ற உற்பத்திக்கு முதற்கணமாத்திரத்தில் உற்பத்தியாகின்றது என வர்த்தமான வியவகாரமோ. அப்படி நாசத்திற்கு முன்பும் பின்பும் நிவர்த்தியாகும் நிவர்த்தியாயிற்றென எதிர்கால இறந்தகாலத்தோடு வியவகரிக்கப்படுகின்ற நிவர்த்திக்கும் சரமசமய மாத்திரத்தில் நிவர்த்தியாகின்றது. நசிக்கின்றது. துவம்சமாகின்றது என நிகழ்கால வியவகாரமாம்.

அவதாரிகை

நிவர்த்திக்கு நிலேத்திருத்தலே அங்கீகரிக்கின் பாதகத்தைக் கூறுகின்ருர்.

நிவர்த்திக்கு அநுவிருத்தி உளதாயினே நீண்ட காலத்திற்குமுன்பு உடைபட்ட கடத்தின் கண்ணும் இப்போது கடம் நசிக்கின்றது என்பது முதலிய வியவகாரம் உண்டாக வேண்டும் விகுதிகளுக்கு பகுதிப்பொருளிலுள்ள வர்த்தமானத்தன்மை முதலிய அர்த்தத்தைக் கூறுந்தன்மையுண்மையின்

அவதாரிகை

விகுதிகட்கு பகுதிப் பொருளின்கண்ணுள்ளவர்த்தமானத்தன்மை முதலியவை பொருளன்ரும். மற்ருே அன்னியத்தின் கண்ணுள்ள வர்த்தமானத் தன்மை முதலியவையே பொருளாமென வினவுகின்ருன்.

அற்றேல் விகுதிகட்கு தம்மாற் சொல்லப்பட்ட எண்ணிக்கையின் ஆசிரயமான பகுதிப் பொருளின் கர்த்திரு கர்மங்களிலுள்ள வர்த்தமானத்தன்மை முதலிய அர்த்தத்தை கூறுந்தன்மை உளதாகுக. அல்லது தம்மாற் சொல்லப்பட்ட பகுதிப் பொருளின் அநுகூல வியாபாரத்தின் கண்ணுள்ள

வர்த்தமானத்தன்மை முதலிய அர்த்தத்தைக் கூறுந்தன்மை உளதாகுக.

இவ்வாருகவே நிவர்த்திக் கிரியையின் கர்த்தாவாகிய நெடுங்காலத்திற்கு முன்பு நாசமடைந்துள்ள கடத்திற்கும் அதன் கண்ணுள்ள நிவர்த்தி அநுகூலவியாபாரத்திற்கும் வர்த்தமானத்தன்மையின்மையின் கூறிய அதிப்பிரசங்கம் இன்ருமெனின்.

அற்றன்று முதற்பக்ஷத்தில், உற்பன்னமான கடத்திலும் உற்பத்தியாகின்றது எனவியவகாரம் அடைவுறுதலின் உற்பத்திக் கிரியையின் கருத்தாவாகிய கடத்திற்கு வர்த்தமானத் தன்மையுண்மையின்.

இரண்டாவது பக்ஷத்தில் பச்சவாதத்தால் சடமாக்கப் பட்டதாய் எழுச்சிக்கு அநுகூலமான பிரயத்தன முடைய தாயிருக்கின்ற தேகத்தின்கண் எழும்புதலின் றியபோதும் எழுந்திருக்கின்றது என வியவகாரம் அடைவுறுதலின் பகுதிப் பொருளாயுள்ள எழுச்சிக்கநுகூலமும் விகுதிப் பொருளுமாகிய பிரயத்தனவடிவ வியாபாரத்திற்கு வர்த்தமானத் தன்மையுண்மையின். ஆதலால் பகுதிப் பொருளின் கண்ணுள்ள வர்த்தமானத் தன்மை முதலியவையே விகுதியின் பொருளாம். ஆதலின் துவம்சத்திற்கு நிலைத்திருத்தலை உடன்படின் நீண்டகாலத்திற்கு முன்பு நிவர்த்தி யடைந்த கடத்தின் கண்ணும் நிவர்த்தியாகின்றது என்னும் வியவகாரம் நீக்க முடியாதாம் என்க.

### அவதாரிகை

நையாயிகனுக்குச் சம்மதமான துவம்சம் பிரத்தியக்ஷமா, அல்லது அனுமிக்கத்தக்கதா என்னும் விகற்பத்தை மனதில் வைத்துக்கொண்டு கிரமமாக அவற்றை நிராகரிப்பதற்கு அவனது மதத்தை அநுவதிக்கின்ருர்.

கடம் உலக்கை முதலியவற்ருல் தூள் செய்யப்பட்ட போது துவம்ச மெனப் பெயரிய ஒரபாவம் கடத்தைப் பிரதியோகியாக உடையதாய் நிலைத்திருப்பதாய் பூதலாதியை ஆசிரயித்ததாய் அங்கீகரிக்கப்படுமாயின் அப்போது கபால மாலை நீங்கிய காலத்திலும் அது நீங்காத காலத்தில் பாஜன

சட்டி முதலியவற்றின் கபாலத்தினும் வியாவிருத்த கபாலத்தின் ஆகாரவிசேஷதரிசனமின்றிய காலத்திலும் அவ்வபாவம் ஏன் பிரத்தியக்ஷமாவதில்லை.

கபாலத்தின் ஆகார விசேஷாதியால் கடாதித்துவம்சம் அநுமிக்கத் தக்கதாம் பிரத்தியக்ஷமன்றுமெனின்.

அப்படியானுல் அடிபடுங்காலத்திலுள்ள பிரதியோகியை ஆசிரயித்த துவம்சத்திற்கு உற்பத்திக்குப் போன்று பாவ விகாரத் தன்மையால் அநுமானம் சம்பவிக்கின்றதாகலின் அதனுல் பின்பு அநுவர்த்திக்கின்ற பிரதியோகியின் அதிகரணத்தை ஆசிரயித்த அபாவ வடிவ துவம்சம் சித்திப்பதின்றும்.

இப்பூதலத்தில் கடத்துவம்சமுளதென பூதலத்தில் துவம்சத்தின் அதிகரணத்தன்மை வியவகாரத்திற்கு இப்பூதலத்தில் கடம் உற்பன்னமாம் என்பது போன்று பாவ விகாரத்தோடு கூடிய பிரதியோகியினதிகரணத்துவ விஷயகத் தன்மை பொருந்துதலின்.

கடத்துவம்சத்தின் பின்பு பூதலத்தில் கடாபாவ வியவகாரத்திற்கு கடம் நீங்கியபின்பு அதனபாவ வியவகாரம் போன்று சமய விசேஷ சம்பந்தி அத்தியந்தாபாவ விஷயகத் தன்மை பொருந்துதலின் துவம்சவிஷயகத் தன்மை கற்பிக்கத் தகாததாலுமென்க.

விஞவுதல்

இவ்வாருகும்போது, (கடநாசத்தினுத்தரகாலத்திலுள்ள கடாபாவ வியவகாரத்திற்கு சாமயிக அத்தியந்தாபாவ விஷயகத் தன்மை பொருந்தும்போது) கட உற்பத்திக்கு முன்பு அதனபாவ வியவகாரமும் அத்தியந்தாபாவத்தால் சரிசார்த்தமாமாதலின் பிராகபாவமும் சித்தியாதெனின் அதுவும் இன்ருகுக.

இவ்வாருயின் பிராகபாவத்தி ஞதாரகாலம் பூர்வகாலம் துவம்சத்திஞதாரகாலம் உத்திரகாலம் என நிர்வசனம் சம்பவியாமையின் காலத்தில் முன்பின் என்பதுமுதலிய வியவகாரம் எதை விஷயமாக உடையதாம்.

விடை

கடாதிகளில் பிரதியோகித்துவாதி வியவகாரம் போன்று அகண்ட (ஓர் சொற்ப) தருமத்தை விஷயம் செய்வதாகுக.

அவதாரிகை

உனக்கும் அகண்ட உபாதியைக் கற்பித்தல் அவசியமா மெனக் கூறுகின்றார்.

அபாவ வடிவநிலையுள்ள துவம்சத்தை அங்கீகரிக்கினும் அவைகளில் துவம்சத்துவம் முதலிய அக்ண்ட தருமத்தை நீயும் கூறவேண்டியிருத்தலின்.

அவதாரிகை

எனது மதத்தில் சகண்டமாகவே துவம்சத்தன்மையினை நிர்வசனம் பண்ணுதல் சம்பவித்தலின் எனக்கு அநிர்வசனீய அகண்டோபாதியைக் கற்பித்தலின்று மென்னுங் கருத்தால் வினவுகின்றான்.

ஜன்னிய அபாவத்துவ வடிவ சகண்டமே துவம்சத்துவமாம் என்னற்க, துவம்சப் பிராகபாவ வடிவ கடத்திற்கு அதன் துவம்சத்தன்மை அடைவுறுதலின்.

ஜன்னியத்துவ விசிட்ட ஏழாவது பதார்த்த வடிவ அபாவத்தன்மை துவம்சத் தன்மையாமென விவக்ஷிதமா மென்னற்க கடத்திற்குப் பிராக பாவத்தைக் குறித்தும் துவம்சத் தன்மையின் அபாவம் பிராப்தியாவதால் கடகாலத்தில் பிராகபாவத்தினுத்தரகாலத்தன்மை வியவகாரத்திற்கு நிர்விஷயத்தன்மை அடைவுறுதலின் பிராகபாவத்தின் துவம்சம் பிரதியோகியினும் வேறுமென்று சொல்லற்க. அவ்வாறு யின் சமான நியாயத்தால் துவம்சத்தின் பிராகபாவமும் பிரதியோகியின் வேறும். இவ்வாறுகவே பிராகபாவத்துவம் சத்திற்கும் பிராகபாவம் வேறும் அதற்கும் ஒரு துவம்சமாம் அதற்கும் பிராகபாவம் வேறும். இவ்வாறு பிராமாணிகமற்றதும் முடிவற்றதுமாகிய துவம்சப் பிராக பாவங்களின் கற்பனை அடைவுறுதலின் ஆன்மாசிரயாதி தோஷமற்றதாய் அன்னியமாய் துவம்சத்தன்மை நிரூபிக்க முடியாது. இவ்வாறு பிராக பாவத்தன்மையும் நிரூபிக்க முடியாது. இஃது வேறிடத்தில் விஸ்தாரமாகக் கூறப் பெற்றுள்ளது என்க.

ஆதலால் முன்பு பிராகபாவ மின்றும் பின்பு துவம்சாபாவமுமின்றும் மத்தியில் கேவலம் சொற்பகாலம் அனிர்வசனீய உற்பத்தி ஸ்திதி துவம்ச வடிவபாவ விகாரமுடைய கடாதி அத்தியாசமாம். இவ்வாறுகவேஅவித்தையின் நிவர்த்தியும் பிரஹ்ம சாக்ஷாத்கார உற்பத்தியின் அனந்தரம் க்ஷணமிருப்பதாகிய ஒரு பாவ விகாரமாம். ஆதலின் அதற்கு முக்தியில் அநுவிருத்தியின்மையால் அதன் அநிர்வாச்சியத் தன்மையில் யாதொரு தோஷமு மின்றுமென அத்வைத வித்தியாசாரியர் கூறுகின்றனர்.

## 64. மோக்ஷத்திற்கு சுயம் புருஷார்த்தத்தன்மை விசாரம்

அற்றேல் இங்ஙனம் அவித்தையின் நிவர்த்திக்கு க்ஷணிகத்தன்மையாமேல் மோக்ஷம்ஸ்திர புருஷார்த்த மாகாதாமெனின்.

பிராந்தனுயிருக்கின்றுய் அவித்தையின் நிவர்த்தி சுயமே புருஷார்த்தமா மென்று கருதி அதற்கு ஞான சாத்தியத் தன்மை அங்கீகரிக்கப் படுகின்றதில்லை. அஃது சுகத்தினும் துக்காபாவத்தினும் வேறுதலின். மற்றுே அகண்டானந்தத்தை மறைக்கின்ற சம்சாரதுக்க ஏதுவான அவித்தைநாசமாகும் போது அகண்டானந்தத்தின் விளக்கமும் சம்சார துக்கத்தின் நாசமும் உண்டாகின்றதாதலின் அதன் உபயோகித் தன்மையால் அதற்குத்தத்துவ ஞான சாத்தியத்தன்மை அங்கீகரிக்கப்படுகின்றதென்க.

### அவதாரிகை

அவித்தையின் நிவர்த்தி போன்று துக்கநிவர்த்தியும் சுயமாகப் புருஷார்த்தமாகின்றதில்லை. ஆதலால் பிரஹ்மானந்தத்தின் விளக்க சாதனத் தன்மையாலேயே துக்க நிவர்த்திக்கு ஞான சாத்தியத் தன்மை அங்கீகரிக்கப்படுகின்றது என்னும் மதத்தைக் கூறுகின்றுர்.

சிற்சுகாசாரியரோ துக்காபாவமும்முத்தியில் சுயமாகப் புருஷார்த்தமன்று. யாண்டும் துக்காபாவத்திற்குச் சொருப சுகத்தின் அபிவியக்திப் பிரதிபந்தகாபாவத் தன்மையால்

சுகசேஷத் தன்மையுண்மையின் சுகத்திற்கே சுயமாகப் புருஷார்த்தத் தன்மையாம். பிற எல்லாவற்றிற்கும் அதன் சேஷத் தன்மையாமாதலின்; சுகசாதனத்தன்மை ஞானத்திற்கே பிரவர்த்தகத் தன்மை சம்பவிக்கும்போது துக்காபாவத்திற்கும் சுயமாகப் புருஷார்த்தத்தன்மையைக் கற்பித்து அதன் சாதனங்களில் பிரவர்த்தக ஞானத்தை சங்கிரகிக்கும் பொருட்டு இச்சையின் விஷயத்தன்மையைப் பிரவேசிப்பித்தலால் பெரிய சரீரமாயுள்ள இஷ்டசாதனத்தன்மையின் ஞானத்திற்குப் பிரவர்த்தகத்தன்மையைக் கற்பித்தல் பொருந்தாமையின்.

துக்காபாவமே சுயமாகப் புருஷார்த்தமாம் அதன் சேஷத்தன்மையால் சுகம் விரும்பத்தக்கதா மென விபரீதத்தின் அடைவுமின்றும்

வெகுகாலத்துக்கத்தால் சாதிக்கத்தகுந்ததும் க்ஷணிக சுகத்தை உண்டுபண்ணுவதுமாகிய நிந்தித கிராம்ய ஆலிங்கனுதி தருமாதியின்கண் பிரவிர்த்தியைக் காண்டலின் ஆண்டு க்ஷணிக சுககாலத்திலுள்ள துக்கா பாவம் புருஷார்த்தமாமேல் அதன் பொருட்டு வெகுகாலத்துக்காநுபவம் பொருந்தாமையின் ஆண்டு க்ஷணிக சுகத்திற்கு புருஷார்த்தத்தன்மை உடன்படினும் கூறிய தோஷம் சமானமா மென்னற்க. பாவவடிவ சுகத்தின் கண் உயர்வு தாழ்வுகள் அனுபவசித்தமாயிருத்தலால் க்ஷணிகமாயினும் உத்கிருஷ்ட சுகத்தின் பொருட்டு வெகு காலத்துக்கானுபவம் பொருந்துதலின். துக்காபாவத்திலோ உயர்வு தாழ்வுகள் சம்பவியாமையின் ஆதலால் முக்தியில் சம்சாரதுக்க நிவர்த்தியும் அவித்தையின் நிவர்த்தி போன்று சுகத்தின் சேஷமாதலின் அனவச்சின்ன ஆனந்தப்பிராப்தியே சுயமாகப் புருஷார்த்தமாமெனக் கூறுகின்றனர்.

## 65. சொரூபானந்த மோக்ஷத்திற்குப் பிராப்பியத் தன்மை விசாரம்.

அற்றேல் அனவச்சின்ன ஆனந்தம் பிரத்தியக் வடிவத்தால் எப்போதும் பிராப்தமேயாம் எனின்.

## சொரூபானந்த மோக்ஷத்திற்குப் பிராப்பியத்தன்மை விசாரம்

வாஸ்தவந்தான் அனவச்சின்ன ஆனந்தம் எப்போதும் பிராப்தமாயினும் அதனை மறைத்து அதன் விபரீத அர்த்தத்தைத் தோற்றுவிக்கின்ற அவித்தையால் சம்சாரதசையில் அசத்திற்குச் சமானமாக அடைவிக்கப்பட்டது ஆதலின் கிருதார்த்தத்தன்மையின்றும். அவ்வவித்தை நிவர்த்திக்கப் பட்டபோது சர்வ அனர்த்த விக்ஷேபங்களும் நீங்கிவிடுதலின் தனது கழுத்திலுள்ள மறக்கப்பட்ட சுவர்ணாபரணம்போன்று அடையப்படுகின்றது போன்று ஆகின்றது ஆதலின் அதனது பிராப்தவ்யத்தன்மை உபசாரத்தாலாம் எனச்சிலர் கூறு கின்றனர்.

வேறு சிலரோ சம்சாரதசையில் இல்லை விளங்கவில்லை என்னும் வியவகார யோக்கியத் தன்மை வடிவ அஞ்ஞான ஆவரணத்தின் அதீனமாயுள்ள, "எனக்கு நிரதிசயானந்த மில்லை" என்னும் ஞானம் சர்வசித்தமாயிருத்தலின் அதன் விஷயமாயுள்ள ஓர் பிரஹ்மானந்தத்தின் கற்பித அபாவம் அவித்தையுள்ளவரையும் தொடர்ந்திருக்கின்றது. அவித்தை நிவர்த்தியாகுங்கால் அதனை மூலமாகவுடையதாந்தன்மை யால் நிவர்த்தியாகின்றது. "ஆதலின் எது இருக்கும் போது அடுத்த க்ஷணத்தில்" என்பது முதலிய இலக்ஷணத்தை அநு சரித்து அதன் பிராப்பியத் தன்மை முக்கியமேயா மெனக் கூறுகின்றனர்.

### அவதாரிகை

பிரஹ்மானந்த சொரூப மாத்திரம் புருஷார்த்தமன்றும் மற்றோ அதன் அபரோக்ஷத்தன்மையாம் அதுவும் அவித்தை யின் நிவர்த்திவாயிலாக வித்தையால் சாத்தியமேயாம் அது வித்தையின் உற்பத்திக்கு முன்பு இன்றும் என்னும் மதத்தைக் கூறுகின்றார்.

வேறு சிலரோ அவேத்தியத்திற்கு புருஷார்த்தத்தன்மை யின்மையின் சம்சார தசையில் அனவச்சின்ன சுகம் உள தாயினும் அபரோக்ஷமாகாமையால் புருஷார்த்தமின்றும்.

### சங்கை

சொரூபஞானத்தால் அபரோக்ஷத்தன்மை சம்சார தசை யிலும் உளதேயாம் அதற்கு எப்போதும் சொரூப சுகத்தோடு

அபேதமிருத்தலின் விருத்திஞானத்தால் அபரோக்ஷத் தன்மையோ முக்தியிலு மின்ருமெனின்

சமாதானம்

தனது வியவகார அநுகூல சைதன்னிய அபேதமாத்திரம் அபரோக்ஷத்தன்மையன்ரும் கடவாச்சின்ன சைதன்னியத்திற்கு அபிவியக்தியாகுங்கால் அதன் அபின்னமாகிய கடத்திலுள்ள கந்தத்திற்கும் அபரோக்ஷத் தன்மையடைவுறுதலின். மற்ருே அனுவிருத அர்த்தத்திற்கு அதன் அபேதமாம் இவ்வாருகவே அனுவிருதத்தன்மைஅம்சம் தத்துவ சாக்ஷாத்காரமிருக்கும்போதுதான் சித்திக்கும் ஆதலின் நிரதிசய சுக அபரோக்ஷ வடிவ புருஷார்த்தத்திற்கு வித்தையால் பிராப்பியத்தன்மை பொருத்தமாமெனக் கூறுகின்றனர்.

வேறு சிலரோ வியவகார அநுகூல சைதன்னியத்தின் அபேத மாத்திரம் அபரோக்ஷமாகுக. அங்ஙனமாயினும் அஞ்ஞானத்தின் மகிமையால் ஜீவபேதம் போன்று சாக்ஷிக்கும் ஆனந்தத்திற்கும் உள்ள பேதமும் அத்தியஸ்தமாதலின் சம்சாரதசையில் ஓர் புருஷனுக்கு மற்ருேர் புருஷனது சைதன்னிய அபரோக்ஷமின்மை போன்று அனவச்சின்ன சுக அபரோக்ஷமுமின்ரும். அஞ்ஞானத்தின் நிவர்த்தி காலத்திலோ சிதாநந்தபேதம் நசித்துப் போதலால். அப்போது அபரோக்ஷமாம் ஆதலின் அதற்கு வித்தையால் சாத்தியத்தன்மையாமெனக் கூறுகின்றனர்.

## 66 முக்தனது சொரூபவிசாரம்

இனி வித்தை உதயமாகும்போது உபாதி நசித்துப் போதலால் ஜீவத் தன்மை அற்றவனுக்கு ஈஸ்வரத்தன்மை அடைவுண்டாகின்றதா, அல்லது சுத்த சைதன்னியமாத்திர வடிவத்தால் நிலைத்தல் உண்டாகின்றதா என விசாரிக்கத் தக்கது.

உத்தரம் சொல்லப்படுகின்றது.

ஏக ஜீவவாதத்தில் அவனது ஓர் அஞ்ஞானத்தால் கற்பிக்கப்பட்ட ஜீவேஸ்வரபேதம் முதலிய சர்வ பேதப்பிரபஞ்சமும் அவனுக்கு ஞானமுண்டாகும்போது நசித்துப்போதலால் நிர்விசேஷ சைதன்னிய வடிவத்தால் நிலைத்திருத்தலாம்.

அவதாரிகை

ஏகஜீவ வாதத்தில் அருசியை சூசிப்பிக்கின்றவராய் நாநாஜீவ வாதத்தை மேன்மைப் படுத்துகின்றார்.

அநேக ஜீவ வாதத்தை அங்கீகரித்து பந்தமோக்ஷ விய வஸ்தையை அங்கீகரிக்கினும் ஒருவனுக்கு ஞானம் உதய மாகும்போது அவனது அவித்தையால் செய்யப்பெற்ற பிர பஞ்சத்திற்கு லயம் உண்டாகினும் வேறு பத்தபுருஷரது அவித்தையால் செய்யப்பெற்ற ஜீவேஸ்வர விபாகம் முதலிய பிரபஞ்சம் தொடர்ந்திருக்கின்றது. அங்ஙனமாயினும் ஜீவன் போன்று ஈஸ்வரனும் பிரதிபிம்ப விசேஷமென்னும் பக்ஷத்தில் முக்தனுக்கு பிம்பவடிவ சுத்த சைதன்னிய ரூபத்தால் நிலைத் திருத்தலாம், அநேக உபாதிகளில் ஓர் சைதன்னியத்திற்கு பிரதிபிம்பம் உண்டாகும்போது ஓர் உபாதி லயமாகுங்கால் அதிலுள்ள பிரதிபிம்பத்திற்கு பிம்ப பாவத்தால் நிலைத்தல் உசித மாதலின். வேறு ஈஸ்வர வடிவ பிரதிபிம்பத் தன்மையின் அடைவு சம்பவியாமையின், அஃது சம்பவிக்கின் ஓர் போது ஜீவ வடிவ வேறு பிரதிபிம்பத் தன்மையின் அடை வையும் நீக்க முடியாமையால் அவச்சேத பக்ஷத்திற்போன்று முக்தனுக்கு மீண்டும் பந்தமடைவுறுதலின். இதனாலேயே அநேகஜீவ வாதத்தில் அவச்சேதபக்ஷம் ஆதரிக்கப்படுகின்ற தில்லை. எதன் அவச்சேதத்தால் முக்தியோ அதன் அவச் சேதத்தால் வேறு அந்தக்கரண சம்பந்தம் உண்டாகுங்கால் மீண்டும் பந்தம் அடைவுறுதலின்.

## 67. முக்தனுக்கு ஈஸ்வரப்பிராப்தியைக் கூறல்

பிரதிபிம்பம்ஜீவன், பிம்பஸ்தானத்திலுள்ளவன் ஈஸ் வரன் இரண்டிலும் தொடர்ந்துள்ளது சுத்த சேதனம் என் னும் பக்ஷத்திலோ முக்தனுக்கு எல்லோருக்கும் முக்தி யுண்டாகும்வரை சர்வஞ்ஞத்தன்மை சர்வகருத்திருத்தன்மை சர்வேஸ்வரத்தன்மை சத்திய காமத்தன்மை முதலிய குணங் களோடு கூடிய பரமேஸ்வரத்துவப் பிராப்தி அங்கீகரிக்கப் படுகின்றது எப்படி அநேக கண்ணாடிகளில் ஓர் முகத்திற்கு பிரதிபிம்பம் உண்டாகும்போது ஒரு கண்ணாடி நிவர்த்தி யாயின் அதிலுள்ள பிரதிபிம்பம் பிம்பத்தன்மையாய் நிலைக் கின்றது. முகமாத்திர வடிவத்தால் நிலைக்கின்றதில்லை. அப்போதும் முகத்தின்கண் வேறுகண்ணாடியின் சன்னி

தானத்தின் அதீனமான பிம்பத்தன்மை நீங்காமையின் அப்படி ஓர் பிரஹ்ம சைதன்னியத்திற்கு அநேக உபாதிகளில் பிரதிபிம்ப முண்டாகும்போது ஓர் பிரதிபிம்ப ஜீவனிடத்தில் ஞான முண்டாகும்போது அதனுல் அவ்வுபாதி லயமாகுங்கால் அதிலுள்ள பிரதிபிம்பத்திற்கு பிம்பத்தன்மையால் நிலைத் திருத்தல் அவசியமாதலின்,

முக்தனுக்கு அவித்தையின்மையால் சத்தியகாமத் தன்மை முதலிய குணவிசிட்ட சர்வேஸ்வரத்தன்மை பொருந் தாது என்னற்க. அவனுக்கு அவித்தையின்றேனும் அப்போது வேறுபத்த புருஷரது அவித்தையிருத்தலால். ஈஸ்வரனது ஈஸ்வரத்தன்மையும் சத்திய காமம் முதலிய குணசம்பந்த மும் தனதவித்தையாற் செய்யப்பட்டதன்றும். அவனுக்கு நிரஞ்சனத்தன்மையுண்மையால், மற்றோ. அவ்வெல்லாமும் பத்தபுருஷரது அவித்தையால் செய்யப்பட்டதேயாம் என அங்கீகரிக்கத்தக்கது.

அவதாரிகை

அற்றேல் நிர்க்குணப் பிரஹ்மவித்தையின் பயனுயுள்ள முக்தியின்கண்ணும் ஈஸ்வர சாயுச்சியத்தையுடன்படின் சகுணவித்தையின் பயனைப்பார்க்கிலும் விசேஷம் ஒன்று மின்மையால் சகுண நிர்க்குண வித்தைகட்குப்பயனுல் பேத மின்றும் என்னு மாசங்கையை நிராகரிக்கின்றூர்.

"இவ்வுலகில் புருஷன் எவ்வித குணமுடைய பிரஹ்மத் தின் உபாசனையை உடையவனுகின்றூனே அத்தகைய பிரஹ் மத்தையே இறந்த பின்னடைகின்றுன" "பிரஹ்மத்தை எப்படி உபாசிக்கின்றூனே" என்பது முதலிய சுருதி களில் சகுணவுபாசனைக்கும் ஈஸ்வரசாயுச்சியம் கேட்கப் படுவதால் முக்திக்கு சகுணவித்தையின் பயனேடு சமானத் தன்மையின் அடைவாம் என்னற்க. சகுண உபாசகருக்கு அகண்ட சாக்ஷாத்காரம் இன்மையால் அவித்தையின் நிவர்த்தி இன்றும். அதனை மூலமாகவுடைய அகங்காராதியின் லயமும் இன்றும். ஆவரணம் நிவர்த்தியாகாமையின் அகண் டானந்த விளக்கமும் இன்றும். "ஜகத் வியாபாரமின்றி பிரக ரணத்தாலும் சமீபத்தன்மையின்மையாலும் போகமாத்திர சாமிய லிங்கத்தாலும்" என்பது முதலிய சூத்திரத்தில் கூறிய நியாயத்தால் அவர்கட்கு பரமேஸ்வரரோடு போக சமத் தன்மை உளதேனும் சங்கற்பமாத்திரத்தால் தனது போகத்

திற்கு உபயோகமான திவ்விய தேகம் இந்திரியம் வனிதை முதலியவற்றை சிருஷ்டிக்கும் சாமர்த்தியம் இருந்த போதி லும் சர்வஜகத்தின் சிருஷ்டி ஸ்திதி சம்மாராதிகளில் சுதந் தரத்தன்மை வடிவ தடையற்ற ஐஸ்வரியம் இன்றும். எல்லாப் பிரகாரத்தாலும் ஈஸ்வரத்தன்மையை அடைந்துள்ள முக்தர் கட்கோ அவ் வெல்லாமுமாம் என இவ்வாறு மகத்தான விசேஷ மிருத்தலின்.

பரமேஸ்வரனுக்கு ரகுநாதன் முதலிய அவதாரத்தில் அஞ்ஞானம் துக்கசம்பந்த முதலியவை கேட்கப்படுவதால் முக்தருக்கு ஈஸ்வரத்தன்மை அடைவுறுங்கால் மீண்டும் பந்தத்தினடைவாம் என்று சொல்லற்க. அவருக்கு விப்பிர சாபம் வீணாகலாகாது என்பதாதியாக தன்னால் செய்யப்பட்ட மரியாதையைக் காப்பாற்றும் பொருட்டு ஒருவாறு பிருகு மகரிஷியின் சாபாதிகட்கு சத்தியத் தன்மையை அறிவிக்கும் பொருட்டு நடன்போன்று ஈஸ்வரனுக்கு அதன் அபினய மாத்திரத்தில் தற்பரமாதலின். அப்படிக்கின்றேல் அவருக்கு நித்திய முக்தத்தன்மை தடையற்ற சுதந்தரத் தன்மை சமானமும் உயர்வுமில்லாத தன்மை முதலியவற்றைக்கூறும் சுருதிகட்குவிரோதம் உண்டாம் ஆதலின். ஆதலால் எல்லோ ருக்கும் முக்தியுண்டாகும்வரை முக்தனுக்கு ஈஸ்வர சாயுச்சிய மாம் என பிம்ப ஈஸ்வர பாவத்தில் யாதொரு தோஷ முமின்றும்.

அற்றேல் பாதகம் இன்றேனும் சாதகப் பிரமாணமின்றி ஈஸ்வரத்தன்மையின் அடைவு அவனுக்கு எவ்வாறு சித்திக் கும் என்று சங்கித்து அதில்பிரமாணம் கூறுகின்றார்.

இப்பக்ஷமே சுருதி சூத்திர பாஷ்யாதிகட்குச் சம்மதமாம். அஃது எப்படி எனின் சமன்வய அத்தியாயத்தில் "தகரம் உத்தரங்களினால்" என்னும் அதிகரணத்தில் "இனி இந்த பிரமபுரத்தில் யாதொரு இந்த தகர புண்டரீக வீடுளதோ இதனுள் தகராகாசம் உளது" என்பதாதி சுருதியால் கூறப் பெற்ற தகராகாசம் பூதாகாசம் அன்று. ஜீவனும் அன்று. மற்றே பரமேஸ்வரனும் பின்னுள்ள வாக்கிய சேஷங்களால் "இதனுள் ஆகாசம் பூமி இரண்டும் நிலை பெற்றுள்ளன. இவ்வாகாசம் எவ்வளவோ அவ்வளவே இருதயத்துள்ளிருக் கும் ஆகாசமாம். இவ்வான்மா பாவமற்றது. ஜரையற்றது, மரணமற்றது. சோகமற்றது. பசி தாகமற்றது. சத்தியகாமன்

சத்திய சங்கற்பன்'' என்பதாதி சுருதியால் பிரதி பாதிக்கப் படுகின்ற ஆகாசம் பிருதிவி முதலியவற்றின் ஆதாரத்தன்மை வடிவ குணங்களாகிற ஏதுக்களால். இவ்வாறு நிர்ணயம் செய்து "உத்தரத்தால் எனின். ஆவிர்ப்பூத சொரூபம்" என்னும் வேறு சூத்திரத்தால் தகர வித்தையின் அநந்தரம் இந்திரப்பிரஜாபதி சம்வாதத்தில் யாதொரு ஆன்மா பாப மற்றது என்பதாதியால் பாபம் இல்லாமை முதலிய எட்டுக் குணங்களோடு கூடிய ஆன்மாவை உபதேசிக்கத்தக்கதாக ஆரம்பித்து நேத்திரத்தில் யாதொருபுருடன் காணப்படு கிறானே இது ஆன்மா என ஜாக்கிராவஸ்தையில் திருஷ்டா வாக நேத்திர சமீபத்திலுள்ளதாகவும் யாதொருஇது சொப்ப னத்தில் ஸ்திரீமுதலானவர் களால்பூஜிக்கப் படுகின்றதாய் சஞ்சரிக்கின்றதோ இது ஆன்மா என சொப்பனவஸ்தையை அடைந்ததாகவும் எப்போது இது தூக்க முற்றதாய் இந்திரி யங்கள் ஒடுங்கினதாய் பிரசன்ன முள்ளதாய் சொப்பனத்தை அறிகின்றதில்லையோ இது ஆன்மா என சுழுத்தி அவஸ் தையை அடைந்ததாகவும் இந்த ஆன்மா இந்த சரீரத்தில் நின்றும் எழும்பி தேவையான மார்க்கத்தை அடைந்துதம் வடிவத்தால் அடைகின்றான் அந்த உத்தம புருஷன் என மூன்றவஸ்தையை கடந்ததாகவும் ஜீவனை உபதேசித்தலால் ஜீவனிடத்தும் பாவம் இன்மை முதலிய எட்டுக்குணம் இருக்கின்றதாகலின் அது தகரா காசத்திற்கு பரமேஸ்வரத் தன்மையை நிச்சயம் செய்வதின்றாம்.

யாதொரு இது சொப்பனத்தில் என்பது முதலிய பரியாயங்களில் ஒவ்வொரு பரியாயங்களிலும் இதனையே மீண்டும் உனக்கு உபதேசிக்கின்றேன் ;எனக் கேட்கப்படுத லால் வெளிப்படையாயுள்ள சொப்பனாதி ஜீவலிங்கங்களா யுடைய இரண்டாவது முதலிய பரியாயங்களுக்கே ஜீவ விஷயகத்தன்மையாம் முதற் பரியாய மாத்திரத்திற்கு பிரஹ்மவிஷயகத்தன்மையாம். என சங்கைக்கு அவகாச மின்மையின் என்று சங்கித்து அவற்றுள் நான்காவது பரியா யத்தில் விசாரிக்கப்படுகின்ற வஸ்து சர்வபந்த விநிர் முக்தத் தன்மையால் ஆவிர்ப்பூத சொரூபனாகிய ஜீவன் பிரதிபாத்திய னாம். சாம்சாரிக அவஸ்த்தாவிசேஷத்தால் கலக்க முற்ற ஜீவனன்றாம். சம்சாரி ஜீவனிடத்தில் சத்திய சங்கற்பத் தன்மை முதலிய குணம் பாதிக்கப்படுவதால் மூன்றவஸ்தை

யைப் பிரதி பாதித்தலுக்கு அவ்வவஸ்தையிலுள்ள தோஷத்தைக் கூறுதலால் நான்காவது பரியாய உபதேசத்தின் சேஷத்தன்மை அடைவுறுதலின் என சமாதானம் செய்கின்றவராய் சூத்திரக்காரர் நான்காவது பரியாயத்தில் பிரதி பாதிக்கப்படுகின்ற முக்தனுக்கு ஈஸ்வரத்தன்மையின் அடைவை வெளிப்படையாகக் கூறியுள்ளார்.

முக்தனுக்கு ஈஸ்வரத்தன்மையின் அடைவின்றேல் முக்தனிடத்தும், சத்திய சங்கற்பத்தன்மை முதலியவை பொருந்தாமையானும் ஆரம்பத்தில் கேட்கப்பட்ட அஷ்ட குணத்திற்கு ஈஸ்வரனின் நின்றும் வேறிடத்தும் இருக்குமாயின் * செய்யப்பட்ட சங்கைக்குப் பரிகாரம் கிடைக்காமையானும் என்க, அந்தச் சூத்திரத்தில் ஜீவப்பிரஹ்மங்களின் அபேதம் வாஸ்தவமாதலால் அவித்தையால் தோற்றுவிக்கப் பட்டதாய் பாரமார்த்திக மற்றதாய் உள்ள ஜீவவடிவம் கர்த்திருத்தன்மை போக்திருத்தன்மை விருப்பு வெறுப்பு முதலிய தோஷத்தால் கலக்க முற்றதாய் அநேக அனர்த்த முடையதாகின்றது. அவ்வவித்தையின் நாசத்தால் அதன் விபரீதமான பாப மில்லாமை முதலிய குணமுடையதாய் பரமேஸ்வர வடிவத்தை வித்தையால் அடைகின்றது என பாஷியக் காரரும் வெளிப்படையாக முக்தனுக்கு சகுண ஈஸ்வரப் பிராப்தியைக் கூறியிருக்கின்றனர்.

அவிரோத அத்தியாயத்திலும் "எவனை இவ்வுலகில் நின்றும் மேல்உலகிற்குக் கொண்டுபோக இச்சிக்கின்றாரோ அவனை இவரே புண்ணிய கருமத்தைச் செய்விக்கின்றார் எவனைக் கீழ் உலகில்தள்ள இச்சிக்கின்றாரோ அவனை இவரே பாவ கருமத்தைச் செய்விக்கின்றார்" என்பது முதலிய சுருதியால் அவ்வக்கருமத்தைச் செய்தலாலும் செய்வித்தலாலும் உபகாரிய உபகாரகத்தன்மையால் அறியப்பட்ட ஜீவேஸ்வரருக்கு அம்சாம்சிபாவ வடிவ சம்பந்தத்தை நிரூபித்தற் பொருட்டாக ஆரம்பிக்கப்பட்ட "அம்சம் நாநாவியபதேசத்தால்'; என்னும் அதிகரணத்தில் ஜீவனுக்கு ஈஸ்வரனது அம்சத்தன்மையை உடன்படின் அவனது சம்சாரத்துக்க போகத்தால் ஈஸ்வரனுக்கும் துக்கம் உண்டாம் எப்படி

* சத்திய காமத்தன்மை முதலிய எட்டுக்குணமும் ஜீவனிடத்துமிருத்தலால் ஈஸ்வரனுக்கு அசாதாரண தருமமாகாமையால் எட்டுக்குணமும் ஈஸ்வரனை அறிவிக்கும் இலக்கணமாகாது என்னும யாதொரு சங்கையுண்டோ அச்சங்கைக்கு.

உலகில் கைகால் முதலிய ஓரவயவத்திலுள்ள துக்கத்தால் அவயவியாகிய தேவதத்தனுக்கும் துக்கம் உண்டாமோ அதுபோன்று. அதனால் ஈஸ்வர சாயுச்சியத்தை அடைந்த முக்தருக்கு மகத் தரமான துக்கம் பிராப்தியாகும். அவ்வீஸ்வரப பிராப்தியைப் பார்க்கிலும் முன்னுள்ள சம்சாரமே சிறப்பாம். ஆதலின் தத்துவ ஞானத்திற்கு அனர்த்தத் தன்மை பிராப்தியாம் என்னும் பாமதி யாதிகளில் வெளிப் படையாக்கப்பட்ட பிம்பப் பிரதிபிம்ப பாவத்தால் செய்யப் பெற்ற கலப்பின்மையைக் கிரகித்து சமாதானம் செய்யப் பெற்ற சங்கைக் கிரந்தத்தால் பாஷியக்காரர், முக்தனுக்கு ஈஸ்வரத்தன்மையின் அடைவை வெளிப்படை யாக்கினர்*

சாதன அத்தியாயத்திலும் "சந்தியில் சிருஷ்டியாம் கூறுகின்றது" என்னும் அதிகரணத்தில் சொப்பனப் பிரபஞ்சத்திற்கு மித்தியாத்தன்மை சாதிக்கப்பட்டபோது ஆண்டு மித்தையாயுள்ள சொப்பனப் பிரபஞ்சத்தில் ஜீவனுக்குக் கர்த்திருத்தன்மையை ஆசங்கித்து "பர அபித்தியானத்தால் மறைக்கப்பட்டது அதனால் இவனுக்கு பந்தமும் விபரியயமும் ஆம்" என்னும் சூத்திரத்தால் ஜீவனுக்கு ஈஸ்வர அபின்னத்தன்மையிருத்தலால் சத்திய சங்கற்பத் தன்மை இருந்தபோதிலும் அவித்தை தோஷத்தால் மறைக்கப்பட்டதாதலின் அவனுக்கு சொப்பனப் பிரபஞ்சத்தில் சிருஷ்டிக்குந் தன்மை சம்பவிக்கின்றதில்லை எனக் கூறுகின்ற சூத்திரக்காரரும் அது மறைக்கப்பட்டதாகி பரமாத்மாவை தியானம் செய்கின்றவனும் விசாரம் செய்கின்றவனும் அஞ்ஞான இருளற்றவனும் ஈஸ்வரப் பிரசாதத்தால் சித்தியடைந்தவனும் ஆகிய ஒருவனுக்கே திமிர தோஷத்தால் திரஸ்கரிக்கப்பட்ட கண்பார்வை ஔஷத வீரியத்தால் போன்று ஆவிர்ப்பவிக்கின்றது. சுபாவமாகவே எல்லா ஜந்துக்களுக்கும் இன்றும் என அச்சூத்திர அபிப்பிராயத்தை வர்ணிக்கின்ற பாஷியக்காரரும் முக்தனுக்கு சொப்பன சிருஷ்டியாதியில் உபயோகியான சத்திய சங்கற்பத்தன்மை முதலியவற்றின் அபிவியக்தியை அங்கீகரித்தலால் பரமேஸ்வரத்தன்மையின் அடைவை வெளிப்படுத்தினர்.

---

* அனர்த்தத்தன்மை பிராப்தியா மென்னும் சங்கைக் கிரந்ததால் முக்தனுக்கு ஈஸ்வரத்தன்மையின் அடைவை வெளிப்படையாக்கினர். என அன்வயஞ் செய்க.

பலாத்தி யாயத்தின் கண்ணும் "தனது வடிவத்தால் அடைகின்ருன்" என மோக்ஷ விஷயக சுருதியில் எவ்வடிவத்தால் அடைவு விவக்ஷிக்கப்பட்டது என அறியும் வேட்கை உண்டாக "பிரஹ்ம ருபத்தால் ஜைமினி உபன்யாசாதிகளால்" என்னும் சூத்திரத்தால் பாபமற்ற தன்மை முதலாக சத்திய சங்கற்பத்தன்மை ஈருக சர்வஞ்ஞத்தன்மை சர்வேஸ்வரத்தன்மை ஆதியுமாக யாதொரு பிரஹ்ம வடிவம் உண்டோ அவ்வடிவத்தால் அடைவாம். யாதொரு ஆன்மாபாவம் அற்றதோ என்பதாதி கூற்ருனும். அவன் ஆண்டு சிரித்து விளையாடி ஸ்திரீ யோடாவது வாகனங்களோடாவது ரமிக்கின்றவனுய் என்பதாதி ஐஸ்வரியத்தை அறிவிப்பதாலும் என்பது ஜைமினி மதமாம்.

"சைதன்னிய மாத்திரத்தினுல் அதன் ஆன்மகத்தன்மையால் என ஔடுலோமி" என்னும் பின்னுள்ள சூத்திரத்தால் ஏமைத்திரேயி இவ்வான்மா உள்ளற்றது. புறம்பற்றது சம்பூர்ணம் பிரக்ஞானகனமே" என்பதாதி சுருதியால் சைதன்னிய மாத்திரம் ஆன்ம சொரூப மென அறியப்படுதலின். சைதன்னிய மாத்திரத்தால் அடைவுஎன வேறு மதத்தையும் கூறி" இவ்வாருயினும் உபன்னியாசத்தால் பூர்வ பாவத்தில் நின்றும் அவிரோதம் பாதராயணர்" என்னும் சித்தாந்த சூத்திரத்தால் வஸ்து திருஷ்டியால் சைதன்னிய மாத்திரத்தன்மை இருப்பினும் முற்கூறிய உபன்யாசாதிகளால் அறியப்பட்ட மாயாமயக்குணக்கூட்டம் பக்த புருஷரது வியவகாரதிருஷ்டியால் சம்பவித்தலால் இரு சுருதிக்கும் விரோதமின்ரும் என அவிரோதத்தைக் கூறுகின்ற சூத்திரக்காரரும் இம் மூன்று சூத்திரத்தினையும் கூறிய அர்த்தத்தில் தாத்பரியம் உடையதாக வியாக்கியானம் செய்கின்ற பாஷியக்காரரும் முக்தனுக்கு ஈஸ்வரத்தன்மையின் அடைவை வெளிப்படையாகக் கருதி உள்ளார்கள்.

பாமதிகிரந்தம் முதலானவையும் சுருதியால் உபகரிக்கப்பட்ட இச் சூத்திர சமுதாயமும் பகவானுகிய பாஷியக்காரரது உதாகரித்த வசனக்கூட்டங்களும் அவ்வாறே நிகழ்கின்றன.

### அவதாரிகை

அற்றேல் நான்கு அத்தியாயத்திலும் உதாகரிக்கப்பட்ட சுருதி சூத்திரம் பாஷியம் முதலிய கிரந்த சமுதாயத்திற்கு

சர்வக்ஞான்ம முனிவரால் கூறப்பட்ட யுக்திகளால் பிரௌடி வாதத்தன்மை தோற்றுதலின் முக்தனுக்கு ஈஸ்வரத்தன்மையின் அடைவில் இச்சுருதி முதலியது எவ்வாறு பிரமாணமாம். எனின் அதற்குக் கூறுகின்றார்.

சுருதியால் உபகரிக்கப்பட்ட இவ்வளவு சூத்திர பாஷிய வசன சமுதாயத்திற்கு.

"சூத்திரக்காரர் இந்த ஜீவனுக்கு அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்ட ஐஸ்வரியம் தியானத்தால் வெளிப்படுகின்றது. என்று சொன்னர் என்பது யாதொன்றுண்டோ அது பிரௌடிவாதத்தால் சொல்லப்பட்டது கூறிய ஏதுவால்" என

சங்க்ஷேப சாரீரகத்தில் கூறப்பெற்ற ரீதியால் பிரௌடிவாதத்தன்மையைக் கூறுதல் பொருத்தமன்றாம்.

ஆதலால் முக்தருக்கு ஈஸ்வரத்தன்மையின் அடைவு அவசியம் அங்கீகரிக்கத் தக்கதாக இருத்தலால் பிரதிபிம்ப ஈஸ்வர வாதத்தில் இதன் அசம்பவமே தோஷமாம்.

கற்பதருக்காரரும் அதனைக் கூறியுள்ளார் மாயாப் பிரதிபிம்பராகிய பரமேஸ்வரனுக்கு முக்த புருஷரால் அடையப்படுந்தன்மையின்றாம் என ஏகஜீவ வாதத்திலும் பாரமார்த்திக ஜீவபேத வாதத்திலும் ஈஸ்வரத்தன்மையினடைவு சம்பவியாமையே தோஷமாம்.

சில துவைத வாதிகளால் பேதம் பாரமார்த்திகமாதலால் முக்தியில் ஜீவனுக்கு ஈஸ்வரத்தன்மையின்றேனும் ஆண்டும் ஈஸ்வரன் போன்று தனியாக பாபமில்லாமை முதலிய குணம் சம்பவித்தலால் அவிரோதமாம் என்று யாதொன்று சொல்லப்படுகின்றதோ அது துச்சமாம். அவ்வாறாயின் ஜீவனுக்குப் பாப மில்லாமை முதலிய குணம் இருக்கின்றதாதலின் அக்குணங்கட்கு பிரஹ்ம லிங்கத்தன்மையின்றாம் ஆதலால் சங்கையின் பரிகாரம் கிடைக்காமையால் "உத்தரத்தால் எனின் ஆவிர்ப்பூத சொரூபமோ" என்னும் சூத்திர விரோதம் வருதலின் "பிரஹ்ம ரூபத்தால் ஜைமினி" என்னும் சூத்திரத்தில் ஜீவனிடத்துள்ள பாபமில்லாமை முதலியவற்றிற்கும் உபன்னியாசாதிகளால் என்பதிலுள்ள ஆதி சப்தார்த்தத் தன்மையால் மற்றையருக்கும் சம்மதமாகிய புஜித்தல் விளையாடுதல் ரமித்தல் என்பதாதியாக சுருதியில் கூறப்பட்ட

புஜித்தல் முதலியவற்றிற்கும் பிரஹ்ம வடிவத்தன்மை கூற்றிற்கு விரோதம்வருதலாலும் என்க.

ஜீவப் பிரஹ்மங்களின் பேத பக்ஷத்தில் அக்குணங்கட்கு சத்தியத்தன்மையிருத்தலால் சைதன்னிய மாத்திரத்தால்" என்னும் சூத்திரத்திற் கூறிய முக்த ஜீவர்கட்கு சைதன்னிய மாத்திரத்தன்மையின்" இவ்வாருயினும்" என்னும் சித்தாந்த சூத்திரத்தில் அங்கீகாரத்திற்கு விரோதம் வருதலினுலும் "அடைந்து ஆவிர்ப்பாவம்"என்னும் அதிகரணத்திற்கு விரோதம் வருதலினுலும் என்க.

ஆண்டு 'தனது வடிவத்தால் அடைகின்ருன்" என்னும் சுருதியில் ஆகந்துகமாகிய ஓர்வடிவத்தால் அடைவு சொல்லப் படுகின்றதில்லை தனது வடிவத்தால் என்னும் சப்தத்திற்கு வியர்த்தத்தன்மை அடைவுறுதலின் ஆகந்துக எவ்வடிவத் தால்தான் அடைகின்ருனே அதற்குத் தன்னுடைய தென்னுந் தன்மை கூறத்தகாமையின் ஆதலால் ஆன்ம வாசக சுவ என்னும் சப்தத்தைக் கிரகித்தலால் நித்திய சித்தமாகிய தன் வடிவத்தாலேயே அடைவு விவக்ஷிக்கப்பட்டதாம். ஏதேனும் ஒரு தருமத்தாலன்றுஎன வியவஸ்தை செய்யப் பட்டுள்ளது.

மேலும் இந்தப் பாவமில்லாமை முதலியது ஜீவனுக்கு முக்தியில் ஆகந்துகமாமெனின்.

"அடைந்து ஆவிர்ப்பாவ" மென முக்தியில் ஆகந்துக வடிவத்தை நிஷேதித்தலாலும். "பரமான்மாவை தியானித்த லாலோ மறைக்கப்பட்டது;' "உத்தரத்தாலெனின் ஆவிர்ப் பூத சொரூபம்"என பாவமில்லாமை முதலியவற்றிற்கு பந்த காலத்தில் திரோபாவத்தையும் முக்திகாலத்தில் ஆவிர்ப் பாவத்தையும் பிரதி பாதித்தலோடு விரோதம் உண்டாம் ஆதலினுலும் நித்தியசித்தமாகக் கூறத்தக்கதாம். இவ்வாரு கவே பந்தத்திற்கு மித்தியாத்தன்மை நீக்க முடியாதாம். நித்திய சித்தமாகிய பாவமில்லாமையோ எப்போதும் பாவ மில்லாமையாம் வாஸ்தவமாக எப்போதும் பாவமற்றதின் கண் பாவசம்பந்தமாவது அதனை மூலமாகவுடைய கர்த் திருத்தன்மை போத்திருத்தன்மை சம்பந்தமாவது பாரமார்த் திகமாக சம்பவிக்கின்றதில்லை. இவ்வாருகவே ஜீவனுக்கு ஈஸ்வர அபேதமும் நீக்க முடியாதாம்.

சுருதியால் போதிக்கப்படுகின்ற அதன் அபேதவிரோதியாகிய பந்தத்திற்கு சத்தியத் தன்மையின்மையினாலும். இன்றேல் (பந்தத்திற்கு மித்தியாத்தன்மையை அங்கீகரித்தல்வாயிலாக சீவப்பிரம்மங்களுக்கு அபேதத்தை அங்கீகரியாவிடின்) சம்சாரியினிடத்தில் நித்திய சித்தமாகிய சத்திய சங்கற்பத்தின் திரோதான வசனம் பொருந்தாமையாலும் என்க. ஜீவனுக்கு சம்சாரதசையில் தொடர்ந்திருப்பதாய் சொற்ப அர்த்தத்தை விஷயம்செய்வதாய் ஓர் சத்தியசங்கற்பம் மறைக்கப்பட்டதாயுளதென வாதிகளாலும் அங்கீகரிக்கப் படுகின்றதில்லை. மற்றே ஈஸ்வரனுக்கு நித்தியசித்தமும் தடையற்றதும் ஆகிய யாதொரு சத்திய சங்கற்பத்தன்மையுண்டோ அதுவே ஜீவனுக்கு சம்சாரதசையில் ஈஸ்வர அபேதம் விளங்காமையால் தனதென்னுந் தன்மையால் விளங்காததாய் அவனைக்குறித்து மறைக்கப்பட்டதாகவே சமர்த்தனம் செய்யத்தக்கது. என சுற்றிச்சுற்றி சுங்கஞ்சாவடியில் விடிந்தகதை போலாம்.

அவதாரிகை

ஜீவப் பிரஹ்மங்களின் அபேத அடைவின் பயத்தால் ஜீவனிடத்தில் வேருகவே பாவம் இல்லாமை முதலியவற்றை அங்கீகரித்து அதற்கு வாஸ்தவ பந்த அவிரோதத்தை வினவுகின்றன்.

அற்றேல் பாவமற்ற தன்மை பாவத்தின் அபாவமன்றும் மற்றே பாவ ஏதுவானகர்மத்தை அநுஷ்டிக்கினும் பாவ உற்பத்தியின் பிரதி பந்தக சக்தி சம்பந்தமாம். ஆதலின் அதற்கு நித்திய சித்தத்தன்மையால் பந்தத்திற்கு மித்தியாத்தன்மைப்பிராப்தி இன்றும். இவ்வாறு சத்திய சங்கற்பத்தன்மையும் சத்திவடிவத்தால் நிருபிக்கத்தக்கதாம். இவ்வாருகவே ஈஸ்வர அபேதப் பிராப்தி இன்றும் எனின்.

அற்றன்று இவ்வாறு சப்தார்த்தத்தை கற்பிப்பதில் பிரமாண மின்மையின். பாவவுற்பத்தியில் பிரதிபந்தகமான சத்தி சமுசாரத்தில் சுழலுங்காலத்தில் பாவத்தின் அனுற்பத்தியின் பொருட்டு கற்பிக்கத்தக்கதன்றும். அப்போது அதன் உற்பத்தி இஷ்டமாதலின். வித்தை உதயமாகத் தொடங்கிறே வித்தையின் மகாத்மியத்தாலேயே பற்றின்மை "அதனை அறியின் பின்முன்னுள்ள பாவங்கட்கு பற்றின்மை

யும் அழிவுமாம் அதனைக் கூறுதலால்'' என்னும் சூத்திரத்தால் தரிசிப்பிக்கப்பட்டது. அதனாலேயே முக்தியின் கண்ணும் பற்றின்மை பொருந்துகின்றது ஆதலின் சத்தியின் கற்பனை வீணேயாம். ஆதலால் உதாகரிக்கப்பட்ட சுருதி சூத்திரங்களை அனுசரித்தவர்களால் முக்த ஜீவர்கட்கு எல்லோருக்கும் முக்தியுண்டாகும் வரை வாஸ்தவ சைதன்னிய மாத்திரத்தன்மையின் அவிரோதியாய பக்த புருஷரது அவித்தையால் ஆக்கப்பெற்ற தடையற்ற ஐஸ்வரியம் அதனனுகூலமான குணசமுதாய விசிட்ட நிரதிசயானந்த விளக்கத்தால் மேம்பட்ட சர்வான்மக பரமேஸ்வரத் தன்மையின் அடைவு ஆதரிக்கத்தக்கதாமெனச் சித்தித்தது.

நான்காவது பரிச்சேதம் முற்றிற்று.

நூல் முற்றுப்பெற்றது

சுபம்.

சிவமயம்

# பிழை திருத்தம்

| பக்கம். | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 7 | 22 | என்ஞும் | என்னும் |
| 20 | 6 | கிருத்தியம்தன்மை | கிருத்தியத்தன்மை |
| 22 | 8 | த பரிய | தாற்பரிய |
| 24 | 25 | மீப்பூதங் | மிப்பூதங் |
| 27 | 11 | விலக்கத்தின் | விலக்கணத்தின் |
| 29 | 5 | தார்த்த | பதார்த்த |
| 36 | 14 | பெயரிதாய் | பெயரியதாய் |
| 42 | 36 | ஹேதுவாய் | ஹேதுவாய |
| 45 | 33 | வர்ணஙக | வர்ணங்க |
| 52 | 20 | சொர்ப்பன | சொப்பன |
| 53 | 18 | பயன்ளு | பயன்களு |
| 56 | 20 | நாசமடைத்த | நாசமடைந்த |
| 61 | 3 | சர்வஞ்க | சருவஞ்ஞ |
| 67 | 12 | அதிரிக்கமாய் | அதிரிக்தமாய் |
| 72 | 23 | அருகியால் | அருசியால் |
| 78 | 7 | பிரமத்தின் | பிறமதத்தின் |
| 81 | 10 | அஞுசரித்து | அனுசரித்து |
| 81 | 27 | நாக்ஷணத்தில் | நாசக்ஷணத்தில் |
| 84 | 25 | காலமூண்டோ | காலமுண்டோ |
| 87 | 27 | சம்பிவியாது | சம்பவியாது |
| 90 | 9 | படடது | பட்டது |
| 94 | 27 | சாஷிக்கு | சாக்ஷிக்கு |
| 95 | 32 | அயோக்கிய தன்மை | அயோக்கியத் தன்மை |
| 100 | 23 | பிம்மிக்க | பிம்பிக்க |
| 107 | 2 | அகங்காரதி | அகங்காராதி |
| 108 | 18 | அதமாகார | அகமாகார |
| 115 | 5 | கரியின் | கரியின் |




| பக்கம். | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 115 | 31 | சாமாக்கிரி | சாமக்கிரி |
| 116 | 9 | சாமாக்கிரி | சாமக்கிரி |
| 116 | 10 | சாமாக்கிரி | சாமக்கிரி |
| 121 | 18 | இரஜம் | இரஜதம் |
| 127 | 3 | இரசனேந்திர | இரசனேந்திரிய |
| 132 | 29 | தாதானமிய | தாதான்மிய |
| 139 | 3 | ஆசிரிய | ஆசிரய |
| 139 | 6 | ஆசிரிய | ஆசிரய |
| 139 | 16 | ஆசிரிய | ஆசிரய |
| 142 | 24 | வறறை | வற்றை |
| 150 | 30 | விரோத | விரோதம் |
| 155 | 35 | உபதேசி | உபதேசாதி |
| 162 | 18 | பொன்னுந்தின் | பொன்னுளுந்தின் |
| 167 | 3 | ஆசிரியி | ஆசிரயி |
| 169 | 23 | ஆசிரியி | ஆசிரயி |
| 169 | 34 | பூர் | பூர்வ |
| 171 | 7 | உத்ர | உத்தர |
| 173 | 10 | பெருதல் | பெறுதல் |
| 173 | 35 | யாகத்தித் | யாகத்தின் |
| 178 | 26 | தன்மையைப் | தன்மை |
| 185 | 22 | தாதான்ய | தாதான்மிய |
| 190 | 28 | சாமார்த்திய | சாமர்த்திய |
| 192 | 2 | அள்ரும் | அன்ரும் |
| 194 | 15 | சுளின் | களின் |
| 200 | 12 | அகங்காரதி | அகங்காராதி |
| 208 | 7 | கற்பனே | கற்பக |
| 215 | 29 | தக்கதாய | தக்கதாய் |
| 219 | 27 | தாதானமிய | தாதான்மிய |
| 231 | 23 | பண்டுகின்ற | பண்ணுகின்ற |
| 240 | 35 | ரூபங்களின்றும் | ரூபங்களினின்றும் |
| 244 | 10 | சர்வாபேஷை | சர்வாபேக்ஷை |
| 244 | 36 | சிரவணுகி | சிரவணுதி |
| 246 | 18 | பிரத்தியகாண்மா | பிரத்தியகான்மா |
| 248 | 1 | இரண்டாம் | மூன்ரும் |

| பக்கம். | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 249 | 3 | பிராப்தியின்ரும் | O |
| 250 | 1 | இரண்டாம் | மூன்ரும் |
| 250 | 11 | சிறவணமன்னம் | சிரவணமனனம் |
| 250 | 23 | தரிசிபிக்கி | தரிசிப்பிக்கி |
| 253 | 13 | அத்தியாயன | அத்தியயன |
| 253 | 28 | மாமதலின் | மாதலின் |
| 253 | 29 | அவனக்கு | அவனுக்கு |
| 255 | 8 | வேதாந்தாந்த | வேதாந்த |
| 268 | 25 | பரகரணை | பலகரணை |

## இப்புத்தகமும் பஞ்சதசியும்

சென்னை வீர—சுப்பையா சுவாமிகள் மடத்திலும்
வியாசர்பாடி சிவப்பிரகாச சுவாமிகள் மடத்திலும்
திருவாரூர் தெக்ஷிணமூர்த்தி மடத்திலும்
தஞ்சாவூர் பால்சாமி மடத்திலும்
வேதாரண்யம் சாதுக்கள் மடத்திலும் கிடைக்கும்.

முத்தமிழ்ச் செல்வி அச்சகம் 1/65, பிராட்டவே, சென்னை—1.

| பக்கம். | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 115 | 31 | சாமாக்கிரி | சாமக்கிரி |
| 116 | 9 | சாமாக்கிரி | சாமக்கிரி |
| 116 | 10 | சாமாக்கிரி | சாமக்கிரி |
| 121 | 18 | இரஜம் | இரஜதம் |
| 127 | 3 | இரசனேந்திர | இரசனேந்திரிய |
| 132 | 29 | தாதானமிய | தாதான்மிய |
| 139 | 3 | ஆசிரிய | ஆசிரய |
| 139 | 6 | ஆசிரிய | ஆசிரய |
| 139 | 16 | ஆசிரிய | ஆசிரய |
| 142 | 24 | வறறை | வற்றை |
| 150 | 30 | விரோத | விரோதம் |
| 155 | 35 | உபதேசி | உபதேசாதி |
| 162 | 18 | பொன்னுந்தின் | பொன்னுளுந்தின் |
| 167 | 3 | ஆசிரியி | ஆசிரயி |
| 169 | 23 | ஆசிரியி | ஆசிரயி |
| 169 | 34 | பூர் | பூர்வ |
| 171 | 7 | உத்ர | உத்தர |
| 173 | 10 | பெருதல் | பெறுதல் |
| 173 | 35 | யாகத்தித் | யாகத்தின் |
| 178 | 26 | தன்மையைப் | தன்மை |
| 185 | 22 | தாதான்ய | தாதான்மிய |
| 190 | 28 | சாமார்த்திய | சாமர்த்திய |
| 192 | 2 | அள்ரும் | அன்ரும் |
| 194 | 15 | சுளின் | களின் |
| 200 | 12 | அகங்காரதி | அகங்காராதி |
| 208 | 7 | கற்பனே | கற்பக |
| 215 | 29 | தக்கதாய | தக்கதாய் |
| 219 | 27 | தாதானமிய | தாதான்மிய |
| 231 | 23 | பண்டுகின்ற | பண்ணுகின்ற |
| 240 | 35 | ருபங்களின்றும் | ருபங்களினின்றும் |
| 244 | 10 | சர்வாபேஷை | சர்வாபேக்ஷை |
| 244 | 36 | சிரவணுகி | சிரவணாதி |
| 246 | 18 | பிரத்தியகாண்மா | பிரத்தியகான்மா |
| 248 | 1 | இரண்டாம் | மூன்ரும் |

| பக்கம். | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 249 | 3 | பிராப்தியின்ரும் | O |
| 250 | 1 | இரணடாம் | மூன்ரும் |
| 250 | 11 | சிறவணமன்னம் | சிரவணமனனம் |
| 250 | 23 | தரிசிபிக்கி | தரிசிப்பிக்கி |
| 253 | 13 | அத்தியாயன | அத்தியயன |
| 253 | 28 | மாமதலின் | மாதலின் |
| 253 | 29 | அவனக்கு | அவனுக்கு |
| 255 | 8 | வேதாந்தாந்த | வேதாந்த |
| 268 | 25 | பரகரணே | பலகரணே |

## இப்புத்தகமும் பஞ்சதசியும்

சென்னே வீர—சுப்பையா சுவாமிகள் மடத்திலும்
வியாசர்பாடி சிவப்பிரகாச சுவாமிகள் மடத்திலும்
திருவாரூர் தெக்ஷிணமூர்த்தி மடத்திலும்
தஞ்சாவூர் பால்சாமி மடத்திலும்
வேதாரண்யம் சாதுக்கள் மடத்திலும் கிடைக்கும்.

முத்தமிழ்ச் செல்வி அச்சகம் 1/65, பிராட்டவே, சென்னை—1.